வாழ்க்கையாத் தொடங்கிய இல்லறம் வாணிகமாய் மாறுகின்றது ; காதலாய்த் தொடங்கிய உறவு காசு நாட்டமாய் மாறுகின்றது ; இத்தகைய வாழ்க்கையில் தொடக்கத்திலாவது ஒருவகையில் நல்ல அடிப்படை அமைந்திருக்கின்றது ; பிறகு மெல்ல மெல்லப் பொருள் பற்றிய போராட்டம் அதைக் கெடுத்துவிடுகின்றது. ஆனால், தொடங்கு முன்பே கெட்டுப்போன வாழ்க்கையே உலகத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றது. காதலராய் மணந்து கொள்வோர் மிகச் சிலரே ; பட்டும் பொன்னும் பணமும் மிகுந்தவராயிருப்பதை அறிந்து அவற்றின் காரணமாக விருப்பம் கொண்டு மணந்துகொள்வோரே மிகப்பலர். வாழ்க்கையாக இல்லறம் தொடங்குவோர் மிகச் சிலரே ; இவ்வளவு சொத்து எழுதிவைத்தால் வாழ்வேன் என்று வாணிகமாகவே தொடங்குவோர் மிகப்பலர். அவர்கள் வாழ்க்கையில் எதனைக் காண்பது ? பொருட்போரின் களிநடம் காணலாம்; அன்பைக் காண முடியாது ; அமைதியைக் காண முடியாது ; இன்பத்தையும் காண முடியாது.

காதலரின் அன்பு வாழ்க்கைக்குப் பொருள் ஒரு சிறந்த கருவியாகும். பொருள் இல்லாதவர்க்கு இந்த உலக வாழ்வு இல்லை என்பதைத் திருவள்ளுவர் அறத்துப்பாலிலும் நினைவூட்டுகின்றார். பொருட்பாலிலும் 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்தில் வலியுறுத்துகின்றார். அறத்துப்பாலில் அருளைச் சிறப்பிக்க வந்த இடத்தில் உவமையாக வைத்துப் பொருட்சிறப்பைக் கூறுகின்றார். பொருட்பாலில், அந்த அருளும் பொருளால் வளர்வது என்கின்றார் ; அருள் என்னும் குழந்தையை—அன்பு பெற்ற அந்தக் குழந்தையை—பொருள் செவிலித்தாயாக இருந்து வளர்த்தால்தான் வளரும் என்கின்றார் :

அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. (247)

அருள்என்னும் அன்பின் குழவி பொருள்என்னும்
செல்வச் செவிலியால் உண்டு. (757)

இவ்வாறு கூறியபின் அறமும் இன்பமுமாகிய வாழ்க்கைப் பகுதிகளுக்குப் பொருள் கட்டாயம் வேண்டும் என்று தெளிவிக்கின்றார் ; பொருள் பெற்றவர்களுக்கே அறவாழ்க்கையும் எளிது, காதலாகிய இன்ப வாழ்க்கையும் எளிது என்கின்றார்.

அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறன்அறிந்து
தீதின்றி வந்த பொருள். (754)

ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு. (760)

திருவள்ளுவர் பொருட்பாலில் கூறுவது நல்லநாட்டின் வாழ்க்கையே ஆகும். ஒரு நாட்டின் வாழ்க்கை அந்த நாட்டுப் பொருள்வளத்தையே பெரும்பாலும் அடிப்படையாகக் கொண்டிருப்பதால், பொருளாலேயே அதைச் சுட்டிக்கூறியுள்ளார். அறம் பொருள் இன்பம் என முன்னோர் வகுத்த முறையிலும் இதுவே காணப்படும். நாட்டுவாழ்க்கை என்றோ அரசியல் என்றோகூறின், அது யாரோ சிலருடைய பொறுப்பு என்று பலரும் ஒதுங்குவர். அரசியல் அல்லது நாட்டு வாழ்க்கை என்பது சிலருடைய நேர்ப்பொறுப்பில் உள்ளது உண்மைதான். ஆனால், அதனால் மற்றவர்களுக்குப் பொறுப்பில்லை என்று சொல்ல முடியாது. மற்றவர்களுக்கு நேர்ப் பொறுப்பு இல்லையானல் மறைமுகப் பொறுப்பு உண்டு. இருவகைப் பொறுப்பையும் ஒட்டிய நாட்டு வாழ்க்கையாகிய அரசியல் நடைபெறுகின்றது. பொருள் என்று குறிக்கும்போதுதான் இந்த உண்மை தெளிவாகின்றது.



அரசியலில் வெளிப்படையாக நேர்ப்பொறுப்பு ஏற்று நடத்துவோர் அடிக்கடி நாடி அமைப்பது பொருள்தான். மற்றவர்கள் உழவும் தொழிலும் செய்து நாடி நிற்பதும் பொருள் தான். ஆகவே. வயிறு உள்ள வரையில் பொருள் நாட்டம் இருப்பது இயற்கை ; அதனால் மக்கள் எல்லோருக்கும் நாட்டு வாழ்க்கையில் பொறுப்பு உண்டு. மனம் என்பது ஒன்று உள்ள வரையில், மனச்சான்று இருந்தே தீரும் ; அறத்தின் ஆட்சியிலிருந்து ஒருவரும் விலகமுடியாது. அதுபோலவே, வயிறு உள்ள வரையில் பொருள் தேடும் வாழ்க்கை இருந்தே தீரும் ; அரசியலிலிருந்து ஒருவரும் விலகமுடியாது. ஆகையால் வீட்டு வாழ்க்கைக்கு அடிப்படையானது பொருள்நல்கும் நாட்டு வாழ்க்கை என்பது பெரிய உண்மையாகும்.

## ஆட்சித் தலைமை

திருவள்ளுவரின் பொருட்பாலில் மூன்று பகுதிகள் அமைந்துள்ளன. முதல் பகுதி அரசியல் ; இரண்டாம் பகுதி அரசின் உறுப்புகளைக் கூறும் அங்கவியல் ; மூன்றாவது சொல்லாமல் ஒழிந்த பகுதிகளைக் கூறும் ஒழிபியல்.

இவற்றுள் அரசியலில் அவர் ஆளும் தலைவனைப்பற்றிக் கூறுகின்றார். ஆளும் தலைவன் யார் ? மன்னன், வேந்தன், அரசன், இறைவன் என்று பல பெயர்களால் கூறப்படும் ஒருவன். திருவள்ளுவர் வாழ்ந்த காலம் உலகெங்கும் முடியாட்சி இருந்துவந்த காலம் ; அவர் அப்போது தமிழ்நாட்டில் கண்டதும் முடியாட்சி ஆகும். நாம் வாழும் காலமோ உலகெங்கும் குடியாட்சி பரவி வரும் காலம். ஆகவே, திருவள்ளுவர், வேந்தன், மன்னன், அரசன், இறைவன் என்று ஒருவனைப் பற்றிக் கூறும் பகுதிகள் நம் காலத்துக்கும் பொருந்துமா ? அவற்றை நாம் கற்பதால் பயன் என்ன ? நம்

காலத்தில் நாம் கற்கவேண்டியவை, பாராளுமன்றத்தைப் பற்றியும் அமைச்சரைப் பற்றியும் அல்லவோ ? இவற்றை எல்லாம் ஆராயாமல் திருவள்ளுவரின் பொருட்பாலை—சிறப்பாக அரசியலைக் கற்பதால் பயன் விளையுமோ ? அது நம் காலத்து ஆட்சிமுறைக்கு வழிகாட்டுமோ ? இவ்வாறு ஆராய்ந்து அறியும் வேட்கையோடு திருக்குறளைக் கற்க வேண்டும். இல்லையேல் திருவள்ளுவரின் அரசியலைக் கற்பதைவிட, பழங்கால வரலாற்று நூல்களைப் படிப்பதே நலம்.

உழவு பழங்காலத்திலும் இருந்தது ; இன்றும் இருக்கின்றது ; எதிர்காலத்திலும் இருக்கும். பழங்காலத்தில் ஏரும் எருதும் கொண்டு சிறுசிறு நிலப்பகுதிகளை உழுது எருஇட்டு, களைகட்டு, நீர்பாய்ச்சி, காவல்காத்து, அறுவடை செய்து வந்தார்கள். இதற்கு உரிய கருவிகள் எல்லாம் கையால் செய்யப்பட்ட கலப்பை அரிவாள் முதலிய எளிய கருவிகளே. எருவும் அங்கங்கே சேர்த்துவைத்த அழுகல் பொருள்களும் அழுக்குப் பொருள்களுமே ஆகும். நீர் பாய்ச்சுவதும் ஏற்றம் அல்லது கபிலை முதலிய எளிய கருவிகள் கொண்டே ஆகும். இந்த நிலைமை இன்றும் இருந்து வருகின்றது. இதனோடு புது முறையும் புகுந்து வாழ்ந்து வருகின்றது. அது என்ன? விஞ்ஞான முன்னேற்றத்தால் அரிய பெரிய கருவிகள் வந்து விட்டன. பரப்பான பெருநிலங்களை யெல்லாம் நொடிப் பொழுதில் யந்திரங்களைக் கொண்டு உழுகின்றார்கள் தொழிற்சாலைகளில் உண்டாக்கப்பட்ட செயற்கை எருவை வாங்கி இடுகின்றார்கள்; மின்வலியால் இயங்கும் யந்திரங்களைக் கொண்டு நீர்பாய்ச்சுகிறார்கள்; யந்திரங்களைக் கொண்டே அறுவடையும் செய்கின்றார்கள். எதிர்காலத்தில் பழைய கலப்பைக்கும் ஏற்றத்திற்கும் அறிவாளுக்கும் இடம் இல்லாமல் எங்கும் இந்த யந்திரங்களே வேலை செய்யும். ஆனால் உழவுத் தொழிலுக்கு அடிப்படையான



தேவைகளும் முறைகளும் அன்றும் இன்றும் ஒரே தன்மையாக உள்ளன. நாளையும் அவ்வாறே இருக்கும். செழிப்பான மண், பயிருக்கு ஏற்ற பருவம், வேண்டிய ஒளியும் காற்றும் நீரும், வித்துகளைக் காக்கும் முறை, விளையும் கதிர்கள் காய்கள் முதலியவை, அறுவடைக்கு உரிய பக்குவம் முதலியவற்றில் மாறுதல் ஒன்றும் காணோம். இவை என்றும் ஒரே வகையாக இருப்பவை,

அரசியலும் அதே நிலைமை உடையது. முடியாட்சி அகன்று குடியாட்சி வந்தாலும், அடிப்படையான தேவை களும் முறைகளும் மாறுவதில்லை. அன்று மன்னன் இருந் தான்; வழி வழியாக ஆளும் உரிமை அந்த மன்னர்குடிக்கு இருந்தது ; அவன் அற[illegible]நெறியில் ஆட்சிபுரிந்தபோது செங் கோலனாய் நெடிது வா[illegible]ான்; இல்லையேல் கொடுங்கோல னாய்க் கடிதில் அழிந்தான். அவனுக்கு அமைச்சர்கள் துணைபுரிந்தார்கள், அவர்கள் அவனுடைய மனம் அறிந்து பழகினார்கள். இது பழங்காலத்து முடியாட்சி முறை.

குடியாட்சி முறையில் அரச குடும்பம் என்ற ஒன்று இல்லை ; இருந்தாலும் அதற்கும் மற்றக் குடும்பங்களுக்கும் வேறுபாடு இல்லை ; மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மன்றம் அமைப்பார்கள் ; அந்த மன்றத்தார் தம் தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள்; அந்தத் தலைவர் ஆட்சிக் குழுவை (அமைச்சர் குழுவை) அமைத்துக் கொள்வார் ; ஆட்சிபொது நன்மைக்கு ஏற்றதாக இருந்தால் அவர்களுக்கு ஆட்சி உரிமை நெடுங்காலம் நிற்கும் ; இல்லையேல் ஆட்சிஉரிமை இழந்து வெளியேற வேண்டிவரும். இதுவே குடியாட்சி முறை.

இருவகை ஆட்சியிலும் அடிப்படைகள் ஒத்திருக்கின்றன. பொதுமக்களின் நன்மையைக் கருதி ஆளுதல், ஒற்றுமையை

வளர்த்தல், பகையை ஒடுக்குதல், பசியும் பிணியும் நாட்டில் பரவாதபடி காத்தல், நீர்வளம் நிலவளம் தொழில்வளம் ஆகியவற்றைப் பெருக்குதல், எல்லோர்க்கும் ஒத்த உரிமை வழங்கி நடுநிலைமை தவறாமல் முறைசெய்தல் முதலான அடிப்படைகள் முடியாட்சிக்கும் வேண்டியவை குடியாட்சிக்கும் வேண்டியவை. திருவள்ளுவர் இத்தகைய அடிப்படைகளையே விளக்கிச் செல்கின்றார்.

திருவள்ளுவர் மக்களின் நல்வாழ்வைக் குறிக்கோளாகக் கொண்டு பொருட்பால் எழுதியவர் ஆகையால், அவர் இந்த அடிப்படைகளிலேயே கருத்தைச் செலுத்தி ஆராய்ந்து கூறியுள்ளார். அவர் தமிழ்நாட்டு மூவேந்தர்களின் மரபுகளையோ கொடி பூ முதலியவற்றையோ கூறவில்லை; குறுநிலை மன்னர்களின் மரபுகளையும் கூறவில்லை; அரசர்களின் பிறந்த நாள் விழாவையும் பிற விழாக்களையும் கூறவில்லை; முடி சூட்டும் சிறப்பையும் கூறவில்லை; இறந்தபின் அடக்கம் செய்யும் வழக்கத்தையும் அதன் பிறகு உடனே மகனோ மற்றொருவனோ கட்டிலேறும் வாழ்வையும் கூறவில்லை! வேந்தனுக்கு வேண்டிய வீரத்தையும் அறமுறையையும் கூறினாரே அல்லாமல், அவன்கையில் ஏந்தியவாளையும் செங்கோலையும் புகழ்ந்து வருணிக்கவில்லை. அரசனுடைய ஆட்சிக்கு உட்பட்ட நாடு எவ்வாறு விளங்க வேண்டும் என்று கூறினாரே அல்லாமல், அரசன் வாழும் அரண்மனை எவ்வாறு புனையப் பெறவேண்டும் என்று கூறவில்லை. ஆட்சிமுறைக்கு உறுதுணையாகும் சுற்றமும் நட்பும் பற்றிக் கூறினாரே அல்லாமல், அரச குடும்பத்தில் பெண்கொண்டும் கொடுத்தும் சுற்றத்தாரானவர்களைப் பற்றியும் மற்றத் தனித் தொடர்புகளைப் பற்றியும் கூறவில்லை. மக்களின் வாழ்க்கையை விளக்கி வழிகாட்டப் புகுந்த பெரியோர் ஆதலின் அவர் பொருட்பாலில் விளக்கியுள்ள அரசியல்



கருத்துகள் எந்த ஆட்சிமுறைக்கும் அடிப்படையாக வேண்டிய கருத்துகளாக விளங்குகின்றன; காலங்கடந்து ஒளிர்கின்றன. முடியாட்சிக் காலத்தில் மன்னர்கள் போற்றத்தக்க உண்மைகளாக இருந்தமை போலவே, குடியாட்சிக் காலத்திலும் மன்றத் தலைவர்களும் மற்ற உறுப்பினர்களும் போற்றத்தக்க உண்மைகளாக இருக்கின்றன; இனி வருங் காலத்திலும் என்றென்றும் போற்றத்தக்க வாய்மொழிகளாக விளங்கும்.

இன்று உழவுத் தொழிலில் பழங்காலத்து ஏரும் ஏற்றமும் ஒரு பக்கம் விளங்க, மற்றொரு பக்கம் உழும் யந்திரமும் நீரிறைக்கும் யந்திரமும் விளங்கவில்லையா? நாம் பழங்காலக் கருவிகளையும் விஞ்ஞானக் கருவிகளையும் ஒருசேரக் காணவில்லையா? அதனால்தான் இருவகைக் கருவிகளுக்கும் அடிப்படையான தேவைகளும் முறைகளும் பொதுவாக இருக்கின்றன என்னும் உண்மையையும் நாம் உணர்ந்து தெளிகின்றோம். அதுபோலவே, திருவள்ளுவர் வாழ்ந்த காலத்தில் பழங்காலத்து முடியாட்சி ஒருபக்கம் மதுரை புகார் வஞ்சி முதலான பெரு நகரங்களில் விளங்க, மற்றொரு பக்கம் குடியாட்சி ஊர்தோறும் மன்றங்களில் விளங்கியிருந்தது. பெரு நகரங்களில் வேந்தர்கள் ஆண்டுவந்தபோதிலும், நாடு முழுதும் அவன் ஆணைக்கு உட்பட்ட ஊர்மன்றங்கள் (பஞ்சாயத்துகள்) இருந்துவந்தன. அந்த ஊர் மன்றங்களுக்கும் வேந்தர்களுக்கும் நேர்த்தொடர்பு ஒன்றும் இல்லை. வேந்தர்களின் கொடிகள் மன்றங்களில் பறக்கும். வேந்தர்களின் பெயர்கள் மக்கள் உள்ளத்தில் வாழும். அவ்வளவே அல்லாமல், அந்தந்த ஊரை உரிமையோடு ஆண்டுவந்தவை அந்தந்தஊர் மன்றங்களே. ஊர்மன்றங்களை அமைக்கும் உரிமையும் அந்தந்த ஊர்மக்களையே சார்ந்திருந்தது. ஊரின் காவல், வழக்கு,

விழா, வரிமுதலிய எல்லாவற்றையும் அந்தந்த மன்றத்தாரே கவனித்து ஆண்டுவந்தார்கள். இவ்வாறு ஊர்தோறும் குடியாட்சியும் தலைநகரங்களில் முடியாட்சியும் இருந்தகாலத்தில் திருவள்ளுவர் வாழ்ந்தவர் ஆகையால், இருவகை ஆட்சிக்கும் பொதுவான அடிப்படைகள் இன்ன இன்ன என்று அவருக்குத் தெளிவாக விளங்கின. அவற்றை மட்டுமே எக்காலத்துக்கும் பயன்படுமாறு நூல்வடிவு கொடுத்து வாழவைத்துள்ளார்.

குடியாட்சி முறை அமைந்த ஊராட்சியையும் முடியாட்சிமுறை அமைந்த நாட்[illegible]ட்சியையும் திருவள்ளுவர் ஆராய்ந்து பொதுவான அ[illegible]படைகளையே கூறுகின்றார் என்பது கண்டோம். முடியாட்சியின் தலைவனைப் பற்றிக் கூற நேர்ந்தபோதும், அவர் மிகச் சிறந்த அரசனுடைய இயல்புகளையே கூறுகின்றார். மிகச் சிறந்த அரசன் என்பவன் மரபின்வழி வந்தவன், தேர்தலின் வழியாகத் தேர்ந்தெடுக்கப்படாதவன் என்னும் வேறுபாடுகள் இருந்தாலும், சிறந்த குடியாட்சித் தலைவனுக்கும் அவனுக்கும் ஆட்சி வகையில் வேறுபாடு இருக்க முடியாது அன்றோ? ஒரு நாட்டில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நாட்டுத்தலைவன், எவ்வாறு செம்மையாகக் குடிமக்களின் கருத்திற்கு இணங்க நன்மை விளைய ஆட்சி புரிவானோ, அவ்வாறே, மிக நல்ல செங்கோல் மன்னனும் குடிமக்களின் நன்மையையே குறிக்கோளாகக் கொண்டு தன்னலம் இன்றி ஆட்சி புரிதல் உண்டு என்பதை வரலாறுகளில் கண்டு தெளிகின்றோம். மன்னவன் மிகச் சிறந்தவனாக விளங்கும்போது அவன் முடியாட்சி முறையான் என்பதையே மறந்துவிடுகின்றோம். ஆகையால், திருவள்ளுவர் கூறும் மன்னனின் இயல்புகள் குடியாட்சித் தலைவனுக்கு மிகவும் பொருந்துகின்றன.



குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. (544)

இந்தக் குறளில் மன்னன் குடிகளைத் தழுவி அவர்களின் கருத்திற்கு இசைய ஆட்சிபுரியும் குடியாட்சித் தலைவனாகவே விளங்குதல் காணலாம்.

ஆயினும், அங்கங்கே ஆட்சித் தலைவனுடைய இயல்புகளை எடுத்துச்சொல்லும்போது அவனுக்கு ஏதாவது ஒரு பெயர் கொடுத்துச் சுட்டிக் கூற வேண்டும் அன்றோ! அத்தகைய இடங்களில் இறை, அரசு, வேந்து, மன்னன் முதலான சில சொற்களால் சுட்டுகின்றார். இந்தச் சொற்களைக் கண்டதும், முடியாட்சி என்றும், அரசர் குடியில் பிறந்தவன் என்றும், குடி[illegible]ட்சி முறைக்கு மாறுபட்டவன் என்றும் விட்டுச் செல்வதா[illegible] பயனில்லை. நாட்டை ஆளும் தலைவனுக்கு ஏதேனும் ஒரு பெயர் கூற வேண்டுமே என்ற அளவிலேயே அந்தப் பெயர்கள் அங்கே உள்ளன. திருவள்ளுவர் உயர்ந்த அரசியல் கருத்துகள் உடையவர். நிலனாள்பவன் (383), கோலோடு நின்றான் (552), காவலன் (560) முதலான பொதுச் சொற்களையும் அவர் ஆண்டிருக்கின்றார். ஆதலின் அரசு, இறை, வேந்தன், மன்னன் என்னும் சொற்களைக் காணுமிடங்களில் இந்தக் காலத்திற்கு ஏற்ப, ஆட்சித் தலைவன் என்று பொருள் கொண்டு கற்பதே பயன் தருவதாகும்.

திருவள்ளுவர் முப்பால் எழுதி அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற பாகுபாடும் செய்து, பத்துப் பத்துக் குறள்களை ஒவ்வோர் அதிகாரமாக வகுத்து, அதிகாரங்களுக்கு ஏற்ற தலைப்புகளும் இட்டு நூலை இயற்றியுள்ளார். பின்வந்த அறிஞர்கள் திருக்குறளை ஓதிஓதிப் பால் தோறும் உட்பிரிவுகளை அமைத்துள்ளார்கள். அவர்கள்

பொருட்பாலில் வகுத்த உட்பிரிவுகள் மூன்று; அரசியல் அங்கவியல், ஒழிபியல் என்பன; பரிமேலழகர் உரையால் இதனை அறியலாம் :

**அரசியல் ஐயைந்து அமைச்சியல் ஈரைந்து**
**உருவவல் லரணிரண்டொன்று ஒண்கூழ்—இருவியல்**
**திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்று**
**எண்பொருள் ஏழாம் இவை**

என்று போக்கியார் என்னும் புலவர் பெயரால் உள்ள பழைய வெண்பா ஒன்றில் இந்தப் பாகுபாடுகள் இல்லை. இதன்படி, பொருட்பால் ஏழு பகுதிகளை உடையது: அரசியல் 25, அமைச்சியல் 10, அரண் 2, கூழ் 1, படை 2, நட்பு 17, குடி 13 ஆக எழுபது அதிகாரங்களை ஏழு பகுதி களாகப் பிரிக்கலாம். இது மிகப் பொருந்துவதாகவே உள்ளது. பொருட்பாலின் முதல் குறளிலேயே இந்தப் பாகுபாட்டிற்கு அடிப்படையும் காணப்படுகின்றது:

**படைகுடி கூழ் அமைச்சு நட்பரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு. (381)**

இதில் உள்ளவாறு அரசாங்கம் (அரசின் அங்கம்) என்பதன் அமைச்சு, அரண், கூழ், படை, நட்பு, குடி என்னும் ஆறு அங்கங்களையும் தனித்தனியே வகுத்து, இந்த ஆறனையும் உடைய ஆட்சித்தலைவனைப் பற்றித் தனியே சில அதிகாரங் களில் கூறி ஏழு வகையாகப் பாகுபாடு செய்தல் திருக் குறளின் அமைப்பு முறைக்கு ஏற்றதாக உள்ளது.

அரசனது இயல்பு கூறும் அரசியலையே மிக விரிவாக இருபத்தைந்து அதிகாரங்களால் கூறி முதலில் வைத்துள் ளார். இந்தப் பகுதியில் தான் இறைவேந்து முதலான சொற் கள் பல முறை பயின்றுள்ளன. இந்த இருபத்தைந்து



அதிகாரங்களில் நாற்பத்தாறு முறை ஆட்சித்தலைவனை இப் பெயர்களால் சுட்டிக் கூறியுள்ளார்.

அடுத்த அமைச்சியலில் உள்ள பத்து அதிகாரங்களில் ஆட்சித் தலைவனைப் பெயரால் சுட்டும் இடம் ஒன்றே. அதற்கடுத்த அரணியலில் உள்ள இரண்டு அதிகாரங்களில் மூன்று இடத்தில் சுட்டியுள்ளார். அடுத்த கூழியலில் உள்ள ஓர் அதிகாரத்தில் ஓர் இடத்தில் வேந்தனைச் சுட்டியுள்ளார். படையியலில் உள்ள இரண்டு அதிகாரத்தில் இருமுறை கூறி யுள்ளார். அதற்கடுத்த பதினேழு அதிகாரங்களைக் கொண்ட நட்பியலில் பெரியாரைப் பிழையாமை என்ற ஓர் அதிகாரத் தில் இருமுறை மட்டுமே சுட்டியுள்ளார். ஏழாம் இயலாகிய குடியியலில் பதின்மூன்று அதிகாரங்கள் இருந்தும் ஓர் இடத் திலும் வேந்தனைக் சுட்டவில்லை.

அரசியலில் இருபத்தைந்து அதிகாரங்களில் நாற்பத்தாறு முறை ஆட்சித்தலைவனைச் சுட்டிக் கூறும் ஆசிரியர் மற்ற ஆறு இயல்களில் உள்ள நாற்பத்தைந்து அதிகாரங்களில் ஒன்பது முறையே குறிப்பிட்டுள்ளார். அரசியலில் அரசன் அல்லது ஆட்சித் தலைவனைப்பற்றிப் பலமுறையும் கூற வேண்டியது பொருத்தமே. குடியியலில் அவனைப்பற்றி ஒன்றும் கூறாமல் விட்டதும் பொருத்தமேயாகும். ஆகவே இன்றியமையாத சில இடங்களில் மட்டுமே வேந்தன் மன்னன் முதலான சொற்களை ஆண்டிருக்கின்றார் என்பதும், எக் காலத்துக்கும் எல்லா நாடுகளுக்கும் பொதுவான ஆட்சிப் பகுதிகளையே பொருட்பாலில் கூறியிருக்கின்றார் என்பதும் தெளிவாகின்றன.

இந்தக் கருத்தோடு அரசியலைக் கற்கும்போது நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் ஆட்சித் தலைமைக்கு வேண்டிய

தகுதி பெற வேண்டும் என்ற எண்ணம் பிறக்கின்றது. குடியாட்சி சீராக நடைபெற வேண்டுமானால் அத்தகைய நல்ல நிலைமை வேண்டும் அன்றோ? ஆட்சித் தலைமை என்றால் நாட்டை ஆளும் பாராளுமன்றத்தின் தலைமையும் அமைச்சர் குழுவின் தலைமையும் மட்டும் அல்ல. பாராளு மன்றம், நாடு முழுமைக்கும் ஆன பெரிய மன்றம். அதற்கு உறுப்பினர்களை அனுப்புவதற்கு அடுத்த மாவட்ட (ஜில்லா) மன்றங்களும் கோட்ட (தாலுக்கா) மன்றங்களும் அவற்றிற்கு அடிப்படையான ஊர்மன்றங்களும் (பஞ்சாயத்துகள்) வேண்டும். அந்தந்த மாவட்டங்களை மாவட்ட மன்றங் களே ஆளவேண்டும்; கோட்டங்களைக் கோட்ட மன்றங்களே ஆள வேண்டும்; அந்தந்த ஊர்களை ஊர்மன்றங்களே ஆள வேண்டும்; இந்த முறை இன்று இல்லை. அதனால் குடியாட்சி பெரிதும் பெயரளவிலே நின்று பயன் தராமல் போகின்றது. ஆனால் உண்மையான குடியாட்சி முறையை மனத்தில் வைத்துக் கொண்டு திருக்குறளைக் கற்கவேண்டும். அப்போது ஆட்சித் தலைவன் என்பவன் நாட்டுத் தலை நகரத்தில் உள்ளவன் (வேந்தன், அல்லது நாட்டுத் தலைவன் அல்லது முதலமைச்சன்) ஒருவன் மட்டும் அல்லன் என்பதும், மாவட்ட மன்றங்களை ஆள்வோரும் கோட்ட மன்றங்களை ஆள்வோரும் ஊர்மன்றங்களை ஆள்வோரும் ஆகிய பலரும் ஆட்சித்தலைவர் என்று சுட்டப்படும் தகுதி உடைவர்களே என்பதும் தெளிவாகும். ஊர்களின் தொகை நூறாயிரக் கணக்காக இருப்பின் ஆட்சித் தலைவர்களின் தொகையும் அவ்வளவாகவே இருக்கும். அதிலும், குடியாட்சி முறைப்படி சில ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்தல் நடந்து தலைவர்கள் மாறுவார்களானால் ஆட்சித்தலைவர்களாக இருந்தவர்களும் இருக்கின்றவர்களும், இருக்கக் கூடியவர்களுமாகப் பல நூறாயிரம்மக்கள் இருப்பார்கள். இருக்கக்கூடிய தலைவர்கள் என்ற முறையில் ஊர்களில் உள்ள ஒவ்வொருவரும் ஆட்சித் தலைமைக்கு உரிய தகுதி பெற்றாக வேண்டும். ஆகவே குடியாட்சி திருத்தமாக அமைந்த நாட்டில் தலைமைப் பதவிக்குத் தகுதியாகக் கல்வியும் பண்பும் திறனும் அமையப் பெற்றவர்கள் மிகப் பலராக இருப்பார்கள். ஆகையால் திருவள்ளுவரின் அரசியலில் அரசனுக்கு (ஆட்சித் தலை வனுக்கு) உரியவை என்று கூறும் இயல்புகள் நாட்டு மக்கள் பலர்க்கு வேண்டிய நல்ல இயல்புகளாான உள்ளன. இன்னொரு வகையாக நோக்கினால் நாட்டு மக்களுள் நல்ல இயல்பும் திறனும் கல்வியும் உள்ள பலர்க்கும் ஆட்சித் தலைமை கிடைக்கக் கூடிய வாய்ப்பு அமைந்த அரசியல் முறையே குடியாட்சி முறை அன்றோ?



கல்வி வேண்டும், கேள்வி வேண்டும், அறிவு வேண்டும், குற்றம் கடிந்த வாழ்வு வேண்டும், பெரியாரைத் துணைக் கொள்ள வேண்டும், சிற்றினம் சேராமல் வாழ வேண்டும். தெரிந்து (ஆராய்ந்து) செய்யும் இயல்பு வேண்டும், வலியும் காலமும் இடமும் அறிந்து வினை செய்யும் திறம் வேண்டும். தெரிந்து தெளியும் ஆற்றல் வேண்டும், தெரிந்து வினையை ஆளும் வன்மை வேண்டும். சுற்றம் தழுவவேண்டும், பொச் சாப்பு (சோர்வு) இல்லாமல் கடமைகளைச் செய்ய வேண்டும். செங்கோன்மை (நேர்மை) வேண்டும், கொடுங்கோன்மையை வெறுக்க வேண்டும், வெருவந்த (பிறர் அஞ்சி நடுங்கும் செயல்கள்) செய்யாமை வேண்டும், கண்ணோட்டம் வேண் டும், ஒற்று ஆளும் முறை வேண்டும், ஊக்கம் வேண்டும், சோம்பலை ஒழிக்கவேண்டும், முயற்சி வேண்டும், இடுக்கணை (துன்பத்தைப்) பொருட்படுத்தாத உறுதி வேண்டும்: இவைகளே அரசியலில் ஆட்சித்தலைவர்க்குத் திருவள்ளு வர் கூறும் இயல்புகள். இவை நன்மக்கள் எல்லேருக்கும் வேண்டும் பண்புகளே அல்லவோ?

அன்றியும், அரசியல் என்பது யாரோ ஒரு சிலரது பொறுப்பு என்னும் கருத்தே பொய்யாகிவருகின்றது. வரி செலுத்துவோர் அனைவரும் அரசியலைத் தாங்குவோரே ஆதலின், அரசியலில் பொறுப்பு உடையவரே ஆவர். வரி செலுத்தாதவர் யார் என்பதை ஆராய்ந்தால் ஒருவருமே இல்லை என்பது தெரியவரும். நிலம் இல்லாதவரும் உணவுப் பொருள் வாங்குவதன் வாயிலாக உழவனுக்குப் பணம் தர அந்த உழவன் வரி செலுத்த, இவ்வாறு (நேர்முகமாக இல்லை எனினும்) மறைமுகமாக வரி செலுத்துகின்றனர். வாணிகம் செய்யாதவரும் வணிகரிடம் பொருள் வாங்குவதன் வாயிலாகப் பணம் தந்து, அந்தப் பணத்தில் ஒரு சிறு பகுதியை விற்பனை வரி, வருமான வரி, சுங்கம் முதலியவற்றிற்குச் சேரச் செய்கின்றனர். குடியிருப்போரும் தொழில் செய்வோரும் இவ்வாறே ஒவ்வொருவகையில் வரிசெலுத்துகின்றனர். ஆகவே இவர்கள் எல்லோரும் அரசியல் தொடர்பு இல்லாதவர் என்று விலகமுடியாது. வயதுவந்த எல்லோருக்கும் வாக்குரிமை இருப்பதால், அரசியல் நடத்துவோரைத்தேர்ந்தெடுக்கும் பொறுப்பு அவர்கள் எல்லோருக்கும் நேர்முகமாக இருக்கின்றது. இவை எல்லாம் ஒரு புறம் நிற்க, அரசாங்கத்தைப் பற்றி எண்ணாமலும் பேசாமலும் ஒருவரும் இருப்பதில்லை. இந்த எண்ணமும் பேச்சும் ஓரளவு ஆற்றலோடு மெல்ல மெல்லப் பரவி அரசாங்கத்தை ஆக்கவோ அழிக்கவோ பயன்படுகின்றன என்பதை மறுக்கமுடியுமோ ? ஆகவே, வாக்குரிமை அளித்தல், வாழ்க்கை நடத்தல், பொருள் வாங்குதல், பேசுதல், எண்ணுதல் ஆகிய எல்லாவற்றின் வாயிலாகவும் நேர்முகமாகவும் மறைமுகமாகவும் எல்லோரும் அரசியலில் தொடர்புகொண்டுள்ளானர் ; பொருட்பாலில் இடம் பெற்றுள்ளனர்.



திருவள்ளுவர், நாடாளும் வேந்தனுக்கு உரிய இயல்புகளைக் கூறத்தொடங்கியபோது, ஊராளும் மன்றத்தலைவர்களையும் கருத்தில் கொண்டுள்ளார். அதனால்அவர்களுக்கும் ஆட்சித் தலைமைக்கும் வேண்டிய பொது இயல்புகளைக் கூறியுள்ளார். வேந்தன் என்றும் மன்னவன் என்றும் ஒருவனைச் சுட்டிச் செல்கின்ற இடங்களை அடுத்தே பலரைச் சுட்டிச் செல்லுதல் காணலாம்.

**தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்**
**செற்றார் செயக்கிடந்த தில். (446)**

**இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**
**கெடுப்பார் இலானும் கெடும். (448)**

என்று மன்னனைச் சுட்டிக் கூறியவர்,

**இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே**
**கெடுக்கும் தகைமை யவர் ? (447)**

**முதலிலார்க்கு ஊதியம் இல்லை : மதலையாம்**
**சார்பிலார்க்கு இல்லை நிலை. (449)**

என்று அடுத்தார் போல் ஆள்வார் என்றும், சார்பிலார் என்றும் பலரைக் கருத்தில் கொண்டு கூறியுள்ளார்.

இறைமாட்சியில் ஆட்சித்தலைவனுக்குக் கல்விவேண்டும் என்று கூறி, அந்தக் கல்வியின் தன்மையை அடுத்த அதிகாரத்தில் கூறும்போது,

**இவ்விரண்டும், கண்என்ப வாழும் உயிர்க்கு. (392)**

**மாந்தர்க்குக் கற்றனைத்து ஊறும் அறிவு. (396)**

என்னும் அடிகளில் வாழும் உயிர்க்கு என்றும், மாந்தர்க்கு என்றும் மக்கள் பலர்க்கும் பொதுவாகக் கூறியுள்ளார். இவ்வாறே பொருட்பால் முழுவதும் மக்கள் பலருக்கும்

பொருந்தக் கூடிய நல்லியல்புகளைக் கூறிச் செல்வதைக் காணலாம்.

நாட்டாட்சியும் ஊராட்சியும் தவிர, இன்னொரு வகையாலும் பொருட்பால்—சிறப்பாக அரசியல்—எல்லோருக்கும் வேண்டியதாக உள்ளது. நாட்டை ஆள்வதும் வீட்டை ஆள்வதும் போலவே, எல்லோருக்கும் ஆளும் தலைமை ஒவ்வொரு வகையில் உள்ளது. வாணிகத் துறையில் அவரவர் செய்யும் தொழிலுக்கு அவரவரே தலைவராக இருந்து ஆட்சி புரிய வேண்டியிருக்கின்றது. தொழில் நிலையத்திற்கும் ஒவ்வொருவர் தலைவராக இருந்து ஆளவேண்டியிருக்கின்றது. கல்வி நிலையம், கலைக்கழகம், அறநிலையம் முதலியவற்றிற்கும் இவ்வாறே ஆட்சித்தலைவர் வேண்டும். இவைபோலவே உழவுப் பண்ணைகளுக்கும் வேண்டும். இவையெல்லாம் ஒரு புறம்நிற்க, ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஆட்சித்தலைமையும் அமைச்சும் வேண்டியனவாக உள்ளன. குடும்பத்தில் சில வகையில் (வெளிக்கடமைகளில், கணவன் ஆட்சித் தலைவனாக இருக்கவேண்டியுள்ளது; அவற்றைப் பொறுத்த வரையில் மனைவி அமைச்சுத் தொண்டு ஆற்றுகின்றாள். இன்றும் சில வகையில் (வீட்டுப் பொறுப்புகளில்) மனைவி தலைமை தாங்கி ஆட்சிபுரிய வேண்டியிருக்கின்றது; அவற்றில் கணவன் அமைச்சனாக இருந்து துணைசெய்கின்றான். இவ்வாறே நோக்கினால், ஒவ்வொரு குடும்பத்திலும் பொருட்பாலும் அதற்கேற்ற அரசியலும் இருக்கக் காண்கின்றோம்; குடும்பத்தாராகிய கணவனும் மனைவியும் சிலவகையில் ஆட்சித் தலைமைக்கு உரிய இயல்புகளைப் பெற்று ஆட்சி நடத்தக் காண்கின்றோம். ஆகவே அரசியல் அமைச்சியல் முதலியவற்றில் திருவள்ளுவர் கூறியுள்ளவை வாழும் மக்கள் எல்லோருக்கும் வேண்டியனவாக இருக்கின்றன. அதனால்தான்



திருவள்ளுவர் அரசனுக்கு என்று கூறத் தொடங்கிய கல்வி முதலியவற்றை 'வாழும் உயிர்க்கு' என்றும், 'மாந்தர்க்கு' என்றும் பலர்க்கும் பொதுவாக்கிக் கூறியுள்ளார்.

### இறைமாட்சி

ஆளும் தலைவனுக்கு உரிய இயல்புகள் பல. அவன் அறநெறியிலிருந்து தவறாமல் ஒழுகவேண்டும்; அறமல்லாத தீநெறியை நீக்கவேண்டும்; வீரம் வழுவாத மானம் உடையவனாக இருக்கவேண்டும்:

**அறன்இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா**
**மானம் உடையது அரசு. (384)**

ஆளும் தலைவன் குடிகளுக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டியவன். அவன் ஒருவன் கெட்ட வழியில் நடந்தால், மற்றவர்களுக்கு அதுவே தூண்டுகோலாகும். அவன் தலைவனாக இருப்பதால் அவனுடைய ஒழுக்கம் பற்றிய செய்திகள் நாடெங்கும் பரவுதல் எளிது. ஆகவே அவனுக்கு அறநெறி கட்டாயம் வேண்டும் என்று திருவள்ளுவர் வற்புறுத்துகின்றார். மானம் வேண்டும் என்று கூறும்போது தலைவனுடைய தனிவாழ்க்கை பற்றிய மான உணர்ச்சியைக் குறிப்பிடவில்லை. அதனால்தான் 'மறன் இழுக்கா மானம்' என்று வீரத்திற்கு ஏற்புடைய மானத்தைக் குறித்தார். நாட்டின் மானமே தன் மானமாகக் கொண்டு அவன் வாழ்க்கை நடத்தவேண்டும். நாட்டிற்கு உண்டாகும் சிறுமை தன் சிறுமை என்றும், அதன் பெருமை தன் பெருமை என்றும் வாழ வேண்டும். தன் தனி மானத்தை நாட்டு வாழ்க்கையில் புகுத்தி நாட்டு மக்களுக்குப் போர் முதலிய தொல்லைகளை விளைக்கக்கூடாது. தன்னைக் குறைகூறினால் பொறுத்து, நாட்டைக் குறைகூறினால் புறக்கணிக்காத

மானம்வேண்டும். தனிவாழ்க்கையில் தன் பகைவனாக உள்ளவனைப் பொருட்படுத்தாமல், நாட்டின் பகைவனாக உள்ளவனை அடக்கவும் திருத்தவும் முயலவேண்டும்.

பொருளாதாரத் துறையில் தலைவனுக்கு உரிய கடமைகள் சில உண்டு. பொருள் வரும் வழிகளைப் பெருக்கவேண்டும்; வந்த வருவாயைத் திரட்டிச் சேர்க்கவேண்டும்; சேர்த்த பொருளை அழிவுபடாமல் காக்கவேண்டும்; பிறகு அவற்றைச் செலவுக்கு உரிய துறைகளில் இவ்வளவு இவ்வளவு என்று வகுத்துச் செலவு செய்யவேண்டும். இவ்வாறு வருவாய் பெருக்கும் துறையிலும் வரவு செலவுத் திட்டத்திலும் (*budget*) வல்லவனாக விளங்க வேண்டும்:

**இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்லது அரசு. (385)**

நாட்டுத்தலைவன் என்ற எண்ணத்தால் செருக்குக் கொள்ளாமல், வேண்டியவர்கள் வந்து காண எளிமை உடையவனாக இருக்க வேண்டும்; அதிகாரி என்ற காரணத்தால் கடுஞ்சொல் கையாளாமல் இன்சொல் கூறிப் பழக வேண்டும்; விரும்பினவர்களுக்கு உதவிசெய்து காக்கும் கடமையை மேற்கொள்ள வேண்டும். இவ்வாறு ஆட்சிபுரிந்தால் அவனுடைய புகழும் செல்வாக்கும் மேன்மேலும் வளரும்:

**காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்**
**மீக்கூறும் மன்னன் நிலம். (386)**

**இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்**
**தான்கண் டனைத்திவ் வுலகு. (387)**

தலைவன் எல்லோரிடமும் இன்சொல் உடையவனாக இருக்கவேண்டும்; ஆனால் பிறர் எல்லாரும் தலைவனிடம் இன்சொல்லே கூறி அன்பாக ஒழுகுவர் என்று எதிர்பார்க்க முடியாது. ஆட்சிமுறை என்ற ஒன்றை ஏற்ற பிறகு, அது



பலருடைய வாழ்க்கையின் பொறுப்பு ஆகையால், குறை கூறப்படுதல் எளிது. அவ்வாறு தலைவனைக் குறைகூறுவோர் இன்சொல்லாலே குறை கூறுவது அருமை, கொடுஞ் சொல்லே விரைவில் பயன்விளைவிக்கும் என்ற நம்பிக்கையால் அவர்கள் செவி பொறுக்க முடியாத கொடுஞ்சொற்களைக் கூறலாம். ஆயினும் அவற்றைப் பொறுத்துக்கொண்டு தன் கடமையை வெறுப்பில்லாமல் செய்யும் ஆற்றல் உடையவனே தலைமைக்குத் தகுதியுடையவன். அவனையே உலகமெல்லாம் தலைவனாகப் போற்றும்.

**செவிகைப்பச் சொல்பொறுக்கும் பண்புடை வேந்தன்**
**கவிகைக்கீழ்த் தங்கும் உலகு. (389)**

**கல்வி கேள்வி அறிவுடைமை**

கண்ட நூல்களை எல்லாம் கற்பதால் பயனில்லை. கற்கத் தகுந்த நூல்கள், கற்கத் தகாத நூல்கள், இன்றியமையாத நூல்கள், வேண்டாத நூல்கள் என்ற பாகுபாடு வேண்டும். இல்லையானால், காலமும் முயற்சியும் வீணாவது தவிர, தவறான கல்வியாலும் சுமையான கல்வியாலும் வாழ்க்கை கெடும். ஆகையால் கற்கவேண்டிய நல்ல நூல்கள் என்று தேர்ந்தெடுத்துக்கொண்டு அவற்றைக் கற்கவேண்டும். அவற்றையும் மேற்போக்காக நுனிப்புல் மேயாமல் ஆழ்ந்து கற்கவேண்டும்; பழுதறக் கற்க வேண்டும். கற்கும்போதே, வாழ்க்கையோடு ஒட்டி எண்ணி எண்ணிக் கற்கவேண்டும். பொழுதுபோக்குக்காக, வேடிக்கைக்காக, நூல்களைக் கற்பது வீண்முயற்சி. ஆகையால், கற்றபின் வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு ஆராய்ந்து கற்க வேண்டும். அப்போதுதான் கற்ற கல்விக்குத் தக்கவாறு நல்ல நெறியில் நிற்க முடியும்:

**கற்க கசடறக் கற்பவை; கற்றபின்**
**நிற்க அதற்குத் தக. (391)**

முகத்தில் உள்ள இரண்டு கண்களும் இப்போது நிகழ்கின்றவைகளையும் இங்கே உள்ளவைகளையும் மட்டும் காண முடியும், இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் காண இந்தக் கண்கள் பயன்படா. இந்த இடம் தவிர, மற்ற நாடுகளை இங்கிருந்தே காண்பதற்கும்இந்தக் கண்கள் பயன்படா. எல்லாக் காலங்களையும் எல்லா நாடுகளையும் ஆராய்ந்து காண்பதற்குப் பயன்படும் கண் கல்விக்கண்ணே. ஆகையால், கற்றோரே கண்ணுடையவர்கள் என்று கொள்ளவேண்டும். கல்வி கற்க உதவாதபோது, முகத்தில் உள்ள கண்கள் புண்களைப் போல் துன்பம் தருவதற்கு உள்ளனவே அல்லாமல், அவற்றால் வேறு பயன் இல்லை:

**எண்என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்என்ப வாழும் உயிர்க்கு. (362)**

**கண்ணுடையர் என்பவர் கற்றோர் ; முகத்திரண்டு**
**புண்ணுடையர் கல்லா தவர். (393)**

மணலில் தோண்டிய கேணி தோண்டத் தோண்ட நீர் ஊறும். கற்கக் கற்க, கல்வியின் அளவுக்கு ஏற்றபடி மக்களுக்கு அறிவு வளரும். ஆகையால் மேன்மேலும் கற்க வேண்டும். கேணியில் மணலடியில் நீர் உள்ளது. ஆயினும் தோண்ட வேண்டும். அறிவும் மக்களுக்கு இயல்பாக அமைந்துள்ளது. ஆயினும் கற்க வேண்டும். கற்றால்தான் அந்த அறிவு வெளிப்படும். (இக்காலத்து உள நூலாரும் அறிவு வெளியே இருந்து உள்ளே புகுத்தப்படுவது அன்று என்றும், உள்ளே இருந்து விளக்கிக் கொணரப்படுவது என்றும் கூறுவர்):

**தொட்டனைத்து ஊறும் மணல்கேணி ; மாந்தர்க்குக்**
**கற்றனைத்து ஊறும் அறிவு. (396)**



கல்லாதவனுக்கு உலகத்தில் உள்ள தொடர்பு பிறப்பால் ஏற்படும் தொடர்பே. பிறந்த ஊரும் பிறந்த நாடும் மட்டுமே அவனுக்குத் தொடர்பு உடைய இடங்கள். ஆனால் கற்றவனுக்குப் பிறப்பால் அமைந்த தொடர்போடு கல்வியறிவால் பெறும் தொடர்பும் உள்ளது. அவன் கற்ற கல்வியின் பெருமையால் மற்ற ஊர்களும் அவனைப் போற்றும் ; மற்ற நாடுகளும் அவனை நாடும். ஆகையால் வெளிநாடுகளும் வெளியூர்களும் அவனுக்குத் தொடர்பு உடைய இடங்களே ஆகும். உலகம் இவ்வாறு கல்விக்குப் பரந்த இடம் அளிப்பது கண்டும் சிலர் கல்வியில் முயற்சி இல்லாமல் இருக்கின்றார்கள்; சாகும் வரையில் கல்வி பெறாமலே இருந்து சாகின்றார்கள் ; இது வீணான வாழ்வு :

**யாதானும் நாடாமல்; ஊராமல்; என்ஒருவன்**
**சாந்துணையும் கல்லாத வாறு ? (397)**

செல்வத்தைவிடக் கல்வியே விரும்பத்தக்கது. அதனால் தான் கற்றவர்கள் மேன் மேலும் கல்வியையே விரும்புகின்றார்கள். செல்வம் சேர்ப்பதிலும் காப்பதிலும் பெருந்துன்பம் உள்ளது. இழந்துவிடும் துன்பமும் உள்ளது. இழக்காமல் வைத்திருந்தாலும், பலருடைய பகைக்கு ஆளாக வேண்டியுள்ளது. கல்வி அப்படிப்பட்டது அன்று. கல்வியால், கற்றோரும் இன்புறுகின்றார்கள் ; அவர்கள் வாயிலாக மற்றவர்களும் இன்புறுகின்றார்கள். அன்றியும் மற்றத் துறைகளில் உலகத்தாரின் இன்பத்துக்காக உழைப்பவர்கள் துன்பப்படவேண்டியுள்ளது. கல்வி என்னும் ஒரு துறையில்தான் தாம் இன்புறுவதே உலகத்தாரின் இன்பமாகவும் அமைந்திருக்கின்றது. ஆகையால் கற்றவர்கள் மேன்மேலும் கல்வியைப் போற்றுகின்றார்கள். செல்வத்திற்கு இந்தப்பெருமை

இல்லை. கல்விபோல் அழிவில்லாமல் நிலைக்கக் கூடிய தன்மையும் அதற்கு இல்லை ; கொடுக்கக் கொடுக்கக் குறை யாமல் வளரும் சிறப்பும் அதற்கும் இல்லை :

**தாம்இன்புறுவது உலகின் புறக்கண்டு<br>காமுறுவர் கற்றறிந் தார்.** (399)

**கேடில் விழுச்செல்வம் கல்வி ; ஒருவற்கு<br>மாடல்ல மற்றை யவை.** (400)

கல்வியில்லாதவர், கூட்டத்தில் ஒரு கருத்தைச் சொல்ல முடியாது. சொல்லுவதற்கு முயற்சி செய்வதை விடச் சொல்லாமல் இருப்பதே நல்லது. தப்பித் தவறிச் சொல்லிய போதிலும், அதில் அறிவுப் பகுதி இருக்காது ; அறிவான பகுதி ஒருகால் இருந்தாலும் அதனை அறிஞர் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் :

**அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய<br>நூலின்றிக் கோட்டி கொளல்.** (401)

**கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்<br>சொல்லா திருக்கப் பெறின்.** (403)

**கல்லாதான் ஒட்பம் கழியநன்று ஆயினும்<br>கொள்ளார் அறிவுடை யார்.** (404)

நூல்கள் பல கற்று அறிவு பெறாதவன் நல்ல தோற்றத் தோடு அழகாக விளங்கலாம் ; ஆனால் அது மண்பாவை அழகாகத் தோன்றுவது போன்றதே. அதனால் ஒருபயனும் இல்லை ; அதற்கு ஒரு சிறப்பும் இல்லை :

**நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்<br>மண்மாண் புனைபாவை அற்று.** (407)

கல்லாதவரிடத்தில் செல்வம் இருக்கலாம் ; அதனாலும் பயன் இல்லை. அந்தச் செல்வத்தால் அவருக்குத் துன்பம்



வளரும் ; தீமையும் உண்டாகும். பசி குறைதல், உறக்கம் நீங்குதல், கவலை மிகுதல், பகை பெருகுதல், பொறாமை வளர்தல் முதலிய பல தீமை அதனால் விளையும். அதைவிட, கற்றவரான நல்லவரிடத்தில் உள்ள வறுமையே மேலானது. ஏன் என்றால், அந்த வறுமை கற்றவரைக் கெடுப்பதில்லை. செல்வமோ கல்லாதவரைக் கெடுத்துவிடுகின்றது. ஆகை யால் கல்லாதவராக வாழ்வது எவ்வகையிலும் துன்பமே :

**நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே<br>கல்லார்கண் பட்ட திரு.** (408)

செல்வம் வாய்ப்பது நல்வினையால்தான் என்று பலரும் எண்ணுகின்றார்கள். தீவினையும் செல்வத்தைக் கொண்டு வந்துசேர்க்கும். அந்தச் செல்வத்தின் வாயிலாகப் பகை பழி கவலை நோய் முதலியவற்றை விளைக்கும் என்பது உண்மை. செல்வம் பெற்ற அளவிலேயே இன்பம் என்றும் நல்வினை யால் நேர்ந்தது என்றும் எண்ணி மயங்குதலும், வறுமை உற்ற அளவிலேயே துன்பம் என்றும் தீவினையால் விளைந்தது என்றும் எண்ணி மயங்குதலும் தவறு. அவரவர் கற்ற கல்வியறிவால் வாழ்க்கையை அமைத்துக்கொள்ளும் வகையைக் கொண்டே இன்ப துன்பத்தை அளந்தறிய முடியும்.

நல்ல நூல்களைத் தான் கற்காவிட்டாலும், கற்றவர்கள் சொல்லும் பொருள்களைக் கேட்டாவது உணர வேண்டும். துன்பத்தால் தளர்ச்சி வந்தபோது முன் கேட்டறிந்த அறிவு ஒருவனுக்கு ஊன்றுகோல் போல் துணைநிற்கும் :

**கற்றிலன் ஆயினும் கேட்க ; அஃதொருவற்கு<br>ஒற்கத்தின் ஊற்றாம் துணை.** (414)

கற்றவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் சொல் வதைக் கேட்பதைவிட, கற்றவர்களில் ஒழுக்கம் உடையவர்

களின் வாயில் பிறக்கும் நல்ல சொற்களைக் கேட்பதே சிறந்தது. ஒழுக்கமில்லாதவர்கள் கூறும் சொற்களால் நன்மை விளையாமல் தீமையும் விளையும். ஒழுக்கம் உடையவர் களின் சொற்கள் வழுக்கும் சேற்று நிலத்தில் ஊன்று கோல் போல் வாழ்க்கையில் உதவும் :

**இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே**
**ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல். (415)**

நிறைந்த கேள்வி உடையவர்கள் தவறாக உணர்ந்தாலும் அறிவில்லாத சொற்களைப் பேசமாட்டார்கள். அதுபோலவே பணிவான நல்ல மொழிகளைப் பேசும் பண்பு எல்லோருக்கும் அமைந்துவிடாது ; நுட்பமான நூற் பொருள்களை எல்லாம் கேட்டறிந்தவர்களுக்கே அந்தப் பண்பு அமையும். ஆகவே கேள்வியால் செவி பண்பட்டவர்களுக்கே, வாயும் பண்பட்டுப் பணிவான மொழிகளில் பயிலும் :

**பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்**
**துணர்ந்து**
**ஈண்டிய கேள்வி யவர். (417)**

**நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய**
**வாயினர் ஆதல் அரிது. (419)**

அழிவு வராமல் காத்துக் கொள்ளும் தற்காப்பு அமைப் புக்கு அரண் என்பது பெயர். ஆனால், புறத்தே கல்லாலும் மண்ணாலும் அமைந்த அரணில் பகைவர் புகுந்து அழிக்க முடியும். அகத்தே உள்ள அறிவும் அரண்தான். அந்த அரணில் எந்தப் பகைவரும் புகுந்து அழிக்க முடியாது ஆகவே, அறிவுதான் அழிவு வராமல் காப்பாற்றும் கருவி யாகும் :

**அறிவற்றம் காக்கும் கருவி ; செறுவார்க்கும்**
**உள்ளழிக்க லாகா அரண். (421)**



மனம்போன போக்கில் வாழ்ந்தால் வாழ்க்கை கெடும். ஆகவே தக்க வழி அறிந்து மனத்தைத் திருத்திச்செலுத்த வேண்டும். அவ்வாறு தீமையிலிருந்து தடுத்து நன்மையில் செலுத்த வல்லது அறிவே ஆகும் :

**சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ**
**நன்றின்பால் உய்ப்பது அறிவு. (422)**

யார் யாரிடம் என்ன பொருள் பற்றிக் கேட்டாலும் கேட்டதை அப்படியே ஏற்றுக்கொள்ளாமல் அதிலுள்ள மெய்ப்பொருளைக் காண்பது எதுவோ அதுவே அறிவு. அந்த அறிவு இருந்தால், தான் கூறும்பொருளை எளிமையாக்கிக் கேட்போருக்கு விளங்கும்படி கூறலாம் ; மற்றவர்கள் கூறு வதில் உள்ள நுண்ணிய பொருளையும் உணரலாம்.

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு. (423)**

**எண்பொருள் ஆகச் செலச் சொல்லித் தான் பிறர்வாய்**
**நுண்பொருள் காண்பது அறிவு. (427)**

உலகம் எவ்வாறு செல்கின்றதோ அவ்வாறு உலகத் தோடு ஒட்டி ஒழுக வேண்டும். எதிர்காலம் இவ்வாறு இருக் கும் என்று முன்னதாகவே எண்ணி உணர வேண்டும் ; அஞ்சத் தகுந்ததற்கு அஞ்சி வாழ வேண்டும். இவை எல்லாவற்றிற்கும் பயன்படுவதே அறிவு. அந்த அறிவு பெற்றவர்கள் வேறொரு செல்வமும் இல்லாவிட்டாலும் எல் லாம் உடையவர்களே. அறிவு இல்லாதவர்கள் எவ்வளவு செல்வம் பெற்றிருந்தாலும் ஒன்றும் இல்லாதவர்களே :

**எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு**
**அவ்வது உறைவது அறிவு. (426)**

**அறிவுடையார் ஆவது அறிவார் ; அறிவிலார்**
**அஃதறி கல்லா தவர். (427)**

**அஞ்சுவது அஞ்சாமை பேதைமை ; அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்.** **(428)**

**அறிவுடையார் எல்லாம் உடையார் ; அறிவிலார்
என்உடைய ரேனும் இலர்** **(430)**

இந்தக் குறள்மொழிகளில் அறிவைப் பற்றித் திருவள்
ளுவர் கொண்ட கருத்துகள் தெளிவாக விளங்குகின்றன.
தன்னைத் தான் அழித்துக்கொள்கிறவன் அறிவு உடையவன்
அல்லன் ; ஏன் எனில், பகைவராலும் அழிக்க முடியாத
கோட்டையாக இருப்பதே அறிவு. மனம்போன போக்கெல்
லாம் போய் அலைகின்றவன் அறிஞன் அல்லன் ; ஏன் எனில்,
தீமை நன்மை அறிந்து தடுத்தும் விடுத்தும் மனத்தைச்
செலுத்துவதே அறிவு. உலகம் பொல்லாதது என்று பழித்
துக்கொண்டு அஞ்சி ஒதுங்கியிருப்பவன் அறிஞன் அல்லன் ;
ஏன் எனில், உலகப் போக்கை உணர்ந்து ஒட்டி நடப்பதே
அறிவு. கற்றதைக் கற்றவாறே ஒப்புவிப்பவன் அறிஞன் அல்
லன் ; கற்றவற்றை உணர்ந்து தெளிந்து பிறர்மனத்தில் எளி
தில் பதியுமாறு எளிய பொருளாக்கிக் கூறுவதே அறிவின்
பயன். பிறர் சொல்வன எல்லாம் அவ்வாறே கேட்டு நம்பு
வோன் அறிஞன் அல்லன் ; ஏன் எனில், கேட்டவற்றை எல்
லாம் ஆராய்ந்து உண்மை காண்பதே அறிவு. காலம் மாறு
வதை அறிந்து தக்க மாறுதல்களைச் செய்யாதவன் அறிஞன்
அல்லன் ; ஏன் எனில், எதிர்கால நிலைமையை உணர்ந்து
அதற்கு ஏற்றவாறு வாழ்க்கையை அமைத்துத் தற்காப்புத்
தேடிக்கொள்வதே அறிவின் பயன். நான் எதற்கும் அஞ்
சேன் என்று கண்மூடி வாழ்ந்து துன்பவலையில் வீழ்ந்து
வருந்துவோன் அறிஞன் அல்லன் ; ஏன் எனில், தீமை என்றும்
பொல்லாதது என்றும் பழி என்றும் அறிந்து அஞ்சித்தகாதன
செய்யாமல் வாழ்வதே அறிவின் பயன்.



## குற்றங் கடிதல்

தலைவன் என்ற காரணத்தால் தன்னிடம் வந்துள்ள
பொருளின்மேல் பற்றுக் கொள்ளக் கூடாது ; செலவிட
வேண்டிய வழியில் அதைக் செலவு செய்யவேண்டும். தான்
தலைவன் என்ற செருக்கை ஒழித்து வணக்கம் உடைய
வனாக ஒழுக வேண்டும் ; சொன்ன சொல்லை முடித்தே
தீர்வேன் என்று குறுகிய மான உணர்ச்சி கொண்டு பிடிவாத
மாகப் பொது நன்மைக்கு இடையூறான செயல்களைச்
செய்யக் கூடாது. தன் நிலைமைக்குத் தகுதியல்லாத வரம்பு
கடந்த மகிழ்ச்சியில் ஈடுபடக் கூடாது. பொருள்களின்மேல்
பற்றுள்ளம், சிறப்பில்லாத குறுகிய மான உணர்ச்சி, தகாத
மகிழ்ச்சி ஆகிய இவை தலைவனுக்குக் குற்றங்களாகும் :

**இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு** **(432)**

செய்த குற்றம்சிறியதே ஆனாலும், அதைப் பெரிய
குற்றமாகக் கருதி மனம் வருந்துவது சான்றோர் பண்பு. மற்ற
வர்கள், செய்த குற்றத்தைப் பற்றிக் கவலை இல்லாமல்
மறந்து திரிவார்கள். ஆனால் சான்றோர், மனச்சான்று பண்
பட்டவர்கள் ஆகையால், அவ்வாறு மறப்பதில்லை. அந்த
மனச்சான்றே பழிக்கு நாணும் தன்மை உடையது. அதனால்
குற்றம் வராமல் காக்கும் ஆற்றல் வளரும். குற்றம் வராமல்
காத்துக்கொண்டால், வாழ்க்கைக்குத் தீங்கு நேராது.
பகைவர்கள் வாழ்க்கையைக் கெடுக்க வல்லவர்கள் அல்லர் ;
உண்மையில் இத்தகைய குற்றமே வாழ்க்கையைக் கெடுக்க
வல்ல பகையாகும். ஆகையால் குற்றம் வருவதற்கு முன்பே
காத்துக் கொள்ள வேண்டும் ; தவறினால், அழிவது உறுதி.

அழியும்போது தீயை அடுத்து நின்ற வைக்கோல்போர் போல அழிய நேரும் ;

**தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பழி நாணு வார். (433)**

**குற்றமே காக்க பொருளாகக் ; குற்றமே**
**அற்றம் தரூஉம் பகை. (434)**

**வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்**
**வைத்தூறு போலக் கெடும். (435)**

தலைவன் என்பவன் மற்றவர்களின் குற்றங்களை ஆராயும் பொறுப்பான கடமை உடையவன். அந்தக் கடமையைச் செம்மையாகச் செய்ய வேண்டுமானால், தான் முன்னே குற்றம் செய்யாமல் காத்துக் கொள்ள வேண்டும். தன் குற்றத்தைக் கண்டு நீக்குவது அரிய செயல்தான். ஆனால் முறை செய்யவேண்டிய தலைவன் அந்தத் தகுதிபெற்றே தீரவேண்டும். மற்றவர்களின் குற்றங்களை ஆராய்வதே ஒரு குற்றமாகும். தலைவன் தூயவனாக இருந்தால் இந்தக் குற்றம் அவனைச் சாராது; கடமையைச் செய்வதாக முடியும் :

**தன் குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்**
**என்குற்றம் ஆகும் இறைக்கு ? (436)**

(கலை ஆராய்ச்சியாளரும் இந்த முறையைக் கடைப் பிடிக்க வேண்டும். மற்றவர்களின் குணம் குற்றங்களை நாடுகின்ற கடமை அவர்களுக்கு உள்ளது. அந்தக் கடமை யைச் செய்வதற்குமுன் தம் குற்றங்களை நாடி நீக்கிக்கொள்ள வேண்டும். இல்லையானால், மற்றவர்கள் குறை கூறுவதற்குத் தாம் ஆளாக நேரும் ; கடமையையும் செய்யமுடியாது.)

ஒருவன் எவ்வளவு உயர்ந்த நிலையில் நின்றாலும், தன் உயர்வைத்தானே வியந்து மதித்துக் கொள்ளக்கூடாது. அது



தன் அறிவுக்கண்ணை மறைக்கக்கூடியது. அவ்வாறு மறைத் தால் உண்மை விளங்காமல் போகும் ; பல தவறுகள் செய்து அழிவு தேடிக்கொள்ள நேரும். தான் செய்யும் செயல் களிலும் நல்ல நோக்கம் இருக்குமாறு கவனித்துக்கொள்ள வேண்டும். நன்மை தராத செயல்களை மனத்தாலும் விரும் பாமல் விடவேண்டும். தான் எண்ணியும் பிறரிடம் சொல்லி யும் உறுதி பூண்ட செயல்களே ஆனாலும் அவற்றைக் கை விட வேண்டும். இவ்வாறு தன்னைத்தானே மதித்தாலும், நல்ல நோக்கம் அற்றசெயலை நாடுதலும் ஆகிய குற்றங் களைக் கடியவேண்டும் :

**வியவற்க எஞ்ஞான்றும் தன்னை ; நயவற்க**
**நன்றி பயவா வினை. (439)**

## பெரியாரைத் துணைக்கோடல்

அறத்தின் பெருமையை உணர்ந்தவர்களாகவும் தன்னை விட அனுபவம் முதிர்ந்தவர்களாகவும் உள்ள பெரியவர் களின் துணை வேண்டும். அவர்களுடைய துணையை முறை அறிந்து கொள்ள வேண்டும். வந்த துன்பத்தை நீக்கும் ஆற்றல் அவர்களுக்கு உண்டு ; இனித் துன்பம் வராமல் காக்கும் ஆற்றலும் அவர்களுக்கு உண்டு. ஆகையால் அவர் களுடைய துணையைப் போற்ற வேண்டும் :

**அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை**
**திறன் அறிந்து தேர்ந்துகொளல். (441)**

**உற்றநோய் நீக்கி உறாஅமை முன்காக்கும்**
**பெற்றியார்ப் பேணிக் கொளல். (442)**

தலைவன் எல்லாவற்றையும் தானே கண்டு ஆராய முடி யாது. ஆராய்ந்து கூற வல்ல பெரியவர்களை அவன் நாடி,

அவர்களின் ஆராய்ச்சியைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். ஆகையால், அவர்கள் அவனுக்குக் கண்போன்றவர்கள்; அவ்வாறு தக்க பெரியோர்களிடத்தில் கலந்து ஒழுக வல்ல தலைவனுக்கு ஒரு தீங்கும் வராது. அவனுடைய பகைவர்களும் அவனுக்கு ஒன்றும் செய்ய முடியாது.

> சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
> சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். (445)

> தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்
> செற்றார் செயக்கிடந்தது இல். (446)

அறிவால் ஆராய்ந்து கூறவல்லவர்கள் பலவகைப்படுவார்கள். சிலர் தலைவன்மேல் கொண்ட அன்பினால் நன்மையை மட்டுமே கண்டு கூறவல்லவர்கள் ; அவர்களுடைய ஆராய்ச்சி குறை உடையது ; ஆகையால் பயன் தராது. சிலர் தலைவனிடம் உள்ள அஞ்சுதலால் தீமையைக் கண்டாலும் எடுத்துக்கூற மாட்டார்கள் ; அவர்களால் தலைவன் திருந்த முடியாது ; அதனால் அவர்களுடைய துணை இருந்தும் பயன் இல்லை. இன்னும் சிலர் தலைவனிடம் நன்மை இருந்தாலும் மறைத்துத் தீமையை மட்டுமே பெருக்கிக்கூறுவார்கள் ; அவர்களாலும் பயன் இல்லை. (இக்காலத்தில் உலகத்தில் உள்ள எல்லாப் பாராளுமன்றங்களிலும் எதிர்க்கட்சியில் இருப்பவர்களுக்கு இதுவே கடமையாக இருக்கின்றது. இந்த முறைபொய்க்குப் பொய்யே மருந்தாக ஆள்வோரின் பொய்க்கு எதிர்போரின் பொய்யே வளர்வதாக இருப்பதால், இதிலும் உண்மை இல்லை.) வேறு சிலர், தலைவன் யார் என்ற கவலையே இல்லாமல் பொது நன்மையே கருத்தில் கொண்டு, நன்மை தீமைகளை நடுநிலையிலிருந்து எடுத்துக்கூறி, தவறுகண்டபோது கடிந்து திருத்த முயல்வார்கள். அத்தகைய பெரியவர்களின் துணை இருந்தால், அந்தத் தலைவனைக் கெடுக்க வல்ல பகைவர்



ஒருவரும் இல்லை. அவ்வாறு இடித்துக் கூறித் திருத்தும் பெரியவர்களின் துணை இல்லாத தலைவன் கெடுவான் : அவனுக்குத் தீமை செய்யப் பகைவர் இல்லாவிட்டாலும் அவன் எளிதில் கெடுவான் :

> இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
> கெடுக்குந் தகைமை யவர் ? (447)

> இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
> கெடுப்பார் இலானும் கெடும். (448)

இங்கிலாந்து முதலிய சில நாடுகளில் அறிஞர்களின் பேச்சுரிமைக்கும் எழுத்துரிமைக்கும் ஒரு சிறிது தடை இல்லாமல் இருப்பதும், சில நாடுகளில் பேரறிஞர்க்கு வாழ இடமில்லாமல் நாடு கடத்தும் நிலை இருப்பதும் இங்கு ஆராயத் தக்கவை. இரண்டாம் உலகப்போர் நடந்த காலத்தில், பெர்னாட் ஷா, எச். ஜி. வெல்ஸ் என்னும் அறிஞர் இருவரும் இங்கிலாந்தில் இருந்துகொண்டே அரசாங்கத்தின் பலவகை முயற்சியைக் குறைகூறியும் அமைச்சர் குழுவைக் கடிந்தும் எழுதினர் ; பேசினர் ; ஆயினும் அரசாங்கம் அவர்களைத் தண்டிக்கவில்லை ; தடுக்கவில்லை ; தலையிடவும் இல்லை. அதற்கு மாறாக, மற்ற நாடுகளில் தடுக்கப்பட்ட அறிஞர்களுக்கும் நாடு கடத்தப்பட்ட சான்றோர்களுக்கும் இங்கிலாந்து புகலிடமாக விளங்கிவந்துள்ளது. உலகத்தைக் காக்க வல்ல பெருநூல்கள் எழுதிய அறிஞர்கள் பலர் பிற நாடுகளின் தடைகளுக்கு ஆளாயினர் ! அதனால் தான் உலகத்து வல்லரசுகள் மண்ணாய் மறைந்தன ; மறைந்து வருகின்றன. பொதுநன்மையை நாடும் சான்றோர்களின் அறிவுக்குத் தடை ஏற்படுத்துவது பெருங்குற்றம் என்பதை உலகம் உணர வேண்டும். மிகப்பழங் காலத்திலேயே திருவள்ளுவர் இந்த உண்மையை உணர்ந்து, அவர்களின் துணை

தலைவனுக்குக் கட்டாயம் வேண்டும் என வற்புறுத்தியுள்ளார்.

**சிற்றினம் சேராமை**

பெருந்தன்மை அற்றவர்களோடு-கீழ்மக்களோடு-சேராமல் வாழ வேண்டும். அவர்களைத் திருத்த வேண்டும் என்ற நல்ல நோக்கம் இருந்தாலும் அவர்களோடு சேர்ந்து பழகக் கூடாது. சேர்ந்துபழகாமல் அவர்களைத் திருத்த முயற்சி செய்வதே நல்லது. ஏன் ? சேர்ந்த நிலத்தின் தன்மைக்கு ஏற்றபடி நீருக்கு நிறமும் சுவையும் ஏற்படுவது போல், சேர்ந்த இனத்தின் இயல்புக்கு ஏற்றவாறு சேர்ந்தவர்களின் அறிவும் மாறிவிடும். ஆகையால் சிற்றினத்தோடு சேர்ந்தால் அறிவு கெடும். நம் மனம் தூய்மையாக இருந்தால் அறிவு கெடுவதற்கு வழி இல்லையே என்று கூறலாம். மனத்திற்கு ஏற்றவாறு அறிவு இருப்பது போல் தோன்றலாம்; அது உண்மை அன்று; சேர்ந்த இனத்திற்கு ஏற்றவாறு அறிவு அமைகின்றது. தவிர, உலகத்தார் எதைக் கண்டு ஒருவனை இன்ன தன்மை உடையவன் என்று சொல்கின்றார்கள் : ஒருவனுடைய உணர்ச்சியை வளர்க்கின்ற மனத்தைப்பார்த்துச் சொல்லாமல், இனத்தைப் பார்த்தே சொல்கின்றார்கள் :

**நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு**
**இனத்தியல்பது ஆகும் அறிவு. (452)**

**மனத்துளது போலக் காட்டி ஒருவற்கு**
**இனத்துளது ஆகும் அறிவு. (454)**

**மனத்தானாம் மாந்தர்க்கு உணர்ச்சி; இனத்தானாம்**
**இன்னான் எனப்படும் சொல். (453)**

மனத்தூய்மை ஒன்று இருந்தால் போதுமே, நாம் சேரும் இனம் எப்படி இருந்தால் என்ன என்று புறக்கணிக்கலாம். அதுவும் பரபரப்பு மிகுந்த இந்த நாளில், செய்யும்



பொது வேலையைத் திறமையாகச் செய்தால் போதும், மனம் இப்படி இனம் இப்படி என்று உலகத்தார்க்குத் தெரியாது என்று கவலைப்படாமலும் இருக்கலாம். ஆனால், புகழில் இருவகை உண்டு; அண்மைப் புகழ், சேய்மைப் புகழ் என்பன. வாழும் இடத்திலும் பழகும் இடத்திலும் நெருங்கிப் பயில்கின்றவர்கள் மட்டும் உண்மை உணர்ந்து புகழ்வது அண்மைப் புகழ்; வெளியூராரும் வெளிநாட்டாரும் முன்பின் தெரியாதவர்களாக இருந்தும் ஒன்றும் அறியாமல் பிறர் சொல்லக்கேட்டுக் கண்மூடிப் புகழ்வது சேய்மைப் புகழ். அண்மைப் புகழ்தான் உண்மையானது; நிலைத்து நிற்பது. சேய்மைப் புகழில் போலித்தன்மை உண்டு; நிலைபேறு அதற்கு இல்லை. இனத்தூய்மையால் தான் அண்மைப்புகழ் (இன்னான் எனப்படும் சொல்) பெற முடியும். இனத்தூய்மை இல்லாமல், (பத்திரிகை முதலியவைகளின் துணையால்) சேய்மைப் புகழை எளிதில் பெற முடியும். ஆனால் அது ஏமாற்றமே; பயனற்றதே; புகழ் பழியாக மாறுவதும், மறைந்தே போவதும் நேர்ந்தாலும் நேரும். தவிர அந்தப் புகழில் உண்மையும் இல்லை; அன்பும் இல்லை. ஆகையால் அண்மைப் புகழை நாடி நற்செயல் செய்ய விரும்புகின்றவர்களுக்கு மனத்தூய்மை வேண்டும்; செயல்தூய்மை மனத்தூய்மை இந்த இரண்டும் இனத்தூய்மை இருந்தால்தான் கிட்டும். மனத்தூய்மை மட்டும் உடையவர்களுக்குப் பிற்காலத்தில் நன்மை விளையும்; ஆனால் இனத்தூய்மை இருந்தால் இப்போதே எல்லாச் செயலும் நன்மையாகும் :

**மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்**
**இனந்தூய்மை தூவா வரும். (455)**

**மனந்தூயார்க்கு எச்சம்நன் றாகும்; இனந்தூயார்க்கு**
**இல்லைநன் றாகா வினை. (456)**

### தெரிந்து செயல்வகை

செய்யத் துணிவதற்குமுன் அதைப் பற்றி நன்றாக எண்ணிப்பார்த்துத் துணியவேண்டும். துணிந்து தொடங்கி விடலாம், பிறகு எண்ணிக்கொள்ளலாம் என்று செய்வது குற்றமாகும். இன்ன வகையால் செய்தால் இதை முடிக்க லாம் என்று வழியோடு செய்யாத முயற்சி வீணாகும் ; பலர் துணையாக நின்று காப்பாற்றினாலும் அந்த முயற்சி பயன் அளிக்காது. ஆகையால் எல்லாம் முன்னமே நன்றாக எண்ணிப்பார்த்து வழியோடு முயற்சி செய்யவேண்டும் :

**எண்ணித் துணிக கருமம் ; துணிந்தபின்**
**எண்ணுவம் என்பது இழுக்கு. (467)**

**ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று**
**போற்றினும் பொத்துப் படும். (468)**

நல்ல செயலாக இருந்தாலும் ஆராய்ந்து செய்யவேண் டும். ''என் மனச்சான்று நல்லது என்று சொல்கின்றது. ஆகையால் கவலை இல்லாமல் செய்வேன்'' என்ற துணிவு தவறானது. யாருடைய நன்மையைக் கருதி ஒரு செயல் செய்ய வேண்டுமோ, அவருடைய பண்பை ஆராய்ந்தறிந்து அவர்க்குப் பொருந்தும்படியாகச் செய்யவேண்டும் ; இல்லை யானால் நன்மை செய்வதும் தவறாக முடியும்.

**நன்றாற்ற லுள்ளும் தவறுண்டு அவரவர்**
**பண்பறிந்து ஆற்றாக் கடை. (469)**

இந்த உண்மை உணராத காரணத்தால்தான் பலர் நற்செயல் செய்தும் துன்பத்திற்கும் பழிக்கும் ஆளாகின்றார் கள். 'சொல்லுக சொல்லிற் பயனுடைய' என்று வற்புறுத் தும் திருவள்ளுவர், செயலிலும் பயனுடைய செயலையே செய்யவேண்டும் என்று இங்குக் கூறுகின்றார் ; பயனில்லாத



பயன் விளைக்காத செயலைச் செய்துவிட்டு, ''என் கடமை யைச் செய்துவிட்டேன்'' என்று மகிழ்வது கூடாது. ஆராயா மல் இவ்வாறு செய்து முடிப்பது தீங்கும் உண்டாக்கும் ; ஆகையால் அதைத் தவறு என்று குறிக்கின்றார்.

### வலி காலம் இடம் அறிதல்

வலியறிதல், காலமறிதல், இடனறிதல் என்று மூன்று அதிகாரங்களில் திருவள்ளுவர் கூறுவன படையெடுத்துப் போர் செய்யும் முடிவேந்தனுடைய முயற்சியைப் பற்றியே கூறுவனபோல் உள்ளன. ஒருபகுதி அவ்வாறு அமைந்திருப் பது உண்மையே ஆகும். ஆட்சித்தலைவனுக்கு அந்தக்காலத் தில் போர்செய்தல் பெரியகடமையாக—வினையாக—இருந்து வந்தது, அதனால் போரில் வெல்வதற்கு வேண்டிய வகையில் அறியத்தக்கவை வலிமை, காலம், இடம் என்று கூறுகின்றார். இது ஒருபகுதி. மற்றொரு பகுதியில் பொருளைச் செலவு செய் யும் முறை முதலியன பற்றிக் கூறுகின்றார். எனினும் இந்தப் பகுதியைக் காலத்திற்கு ஏற்றவாறு பயன்படுத்திக்கொள்ள லாம். போர் இன்னும் உலகத்தில் செல்வாக்குடன் இருக் கின்றதே, ஆதலின் திருவள்ளுவரின் காலத்துப்பொருளையே காணலாமே என்று தயங்கலாம். உலகத்தை இன்னும் போர்த் தொல்லை விடவில்லை எனினும், அறிஞர்கள் விழித் தெழுந்து போரைப் பழிக்கும் காலம் இது ; வேறு வழி இல்லையே என்று வல்லரசுகள் போர்த் தொடங்கி நடத்தும் நிலையிலும், எல்லா நாட்டிலும் மக்கள் போரைப் பழித்தும் வெறுத்தும் அஞ்சியும் நடுங்கும் காலம் இது; இவ்வாறு இன்று போர் பொதுமக்களின் போற்றுதலும் அறிஞர்களின் ஆதரவும் இல்லாமல், வல்லரசுகள் சிக்கிக்கொள்ளும் வலை யாக இருக்கின்றது. திருவள்ளுவர் காலத்தில் போர் என்பது பொது மக்கள் விருப்பத்தோடும் மகிழ்ச்சியோடும் மேற்

கொண்ட கடமையாக இருந்தது; அறிஞர்கள் ஊக்கத்தோடு புகழ்ந்து பாடினார்கள்; வாழ்த்தினார்கள்; அரசர்கள் அறத்தை நிலை நாட்டுவதற்குரிய நெறியான செயலாக முறையோடு போர் நடத்தினார்கள். தவிர, இப்போது போர் முறையும் அடியோடு மாறிவிட்டது. ஒருவன் ஒருவனை அடுதலும் தொலைதலும் அந்தக் காலத்து முறை; ஒத்த படை எடுத்து ஒத்த ஆண்மை உடையவனோடு அவன் முனைந்து வந்தபோது குறித்த ஒரு களத்தில் போர் நிகழ்த்துவது அந்தக் காலத்துமுறை. இக்காலத்துப் போரோ முறையற்றது, நெறியற்றது, வரம்பற்றது. கையில் கொண்ட குண்டின் ஆற்றலுக்கு ஏற்றவாறு ஒருவன் நூறு பேரைக் கொல்லலாம்; நூறாயிரம் பேரையும் கொல்லலாம்; கோடிக் கணக்கானவரையும் கொன்று குவிக்கலாம். கொல்வதற்கென்று தனிப் போர்க்களமும் குறித்த நேரமும் இல்லை. கண்ட இடமெல்லாம் குண்டு வீசலாம். நினைத்த நேரமெல்லாம் குண்டு வீசலாம்; பெரும்பாலும் தற்காப்பற்ற இடத்தையெல்லாம் எளிதில் அழிப்பதும், ஏமாந்து சோர்ந்து நிற்கும் நேரத்தில் திடீரெனப் புகுந்து குண்டு வீசி அழிப்பதும் வழக்கம். ஒத்த படை உடையவர்களைக் கண்டால் அஞ்சி ஒதுங்கித் தற்காப்புத் தேடிக் கொள்வதும், மெலியாரைக் கண்டால் வலிமைக் காட்டிக் சுட்டுக் கொல்வதும் வழக்கம். போர்க்கு என்று வந்தவர்களைத் தேடிக் கொல்லாமல், பதுங்கி நிற்கும் பொது மக்களையும் ஓடி ஒளியும் பெண்களையும் ஆடி மகிழும் குழந்தைகளையும் அல்லல்படும் நோயாளிகளையும் இருக்கும் இடம் தேடி, சந்தை, கோயில், பள்ளிக்கூடம், மருத்துவ நிலையம் என்று தெளிந்து குண்டுவீசிக் கொல்வதை இந்தக் காலத்துப் போரில் காணலாம். கொல்பவர் கொல்லப் படுவோரைக்



கண்ணால் பார்ப்பதில்லை. இவருக்கும் அவருக்கும் பகையும் இல்லை, காழ்ப்பும் இல்லை. சொல்கின்றவர்கள் யாரோ அனுப்பிய கூலியாட்கள். கொல்லப்படுகின்றவர்கள் இரவும் பகலும் அஞ்சி நடுங்கி உயிர்வாழும் மக்கள். ஆகையால், அக்காலத்துப் போர் முறைக்கு எழுதிய கருத்துக்களை அவ்வாறே இக்காலத்துக் கொடுங்கொலைக்குப் பயன்படுத்தல் பொருந்தாது. அன்றியும். திருவள்ளுவர் இன்று இருந்து அரசியல் கூறுவாரானால், இத்தகைய போரை ஒழிக்கப் பெருநூல் எழுதிப் பாடுபடுவார்; அறமும் இன்பமும் எழுதுவதையும் ஒத்திவைப்பார்; ஆகையால் வலியறிதல் காலமறிதல் இடனறிதல் ஆகிய இப்பகுதிகளை இக்காலத்து அரசியலுக்கு ஏற்பப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறு பயன்படக் கூடிய முறையிலேயே திருவள்ளுவரும் எழுதியுள்ளார்.

உலகில் சிறந்த சான்றோர் எழுதிய நூல்களை இவ்வாறு பயன்படுத்தும் முறை புதுமை அன்று. பகவத் கீதைக்கு இவ்வாறு அறிஞர் பலர் பொருள் கண்ட முயற்சியே எடுத்துக்காட்டாகும். நாட்டுப்பற்றோடு நல்லுணர்வை ஊட்ட விரும்பிய திலகர் கீதைக்கு விளக்கம் கண்டபோது, இந்திய நாட்டு விடுதலைக்கும் வீரவாழ்வுக்கும் உரிய நூலாகப் பயன்படுமாறு முயன்றார். அறநெறியே உயிராகப்போற்றிய காந்தியடிகள், கீதைக்கு விளக்கம் கண்டபோது பற்றற்ற தொண்டு வாழ்க்கையே அடிப்படையாக விளங்குமாறு எழுதினார்; பற்றின்றி வாழும்நெறி என்று பொருள்படும் அனாசக்தியோகம் என்னும் தொடரையே தம் விளக்கத்திற்குப் பெயராகவும் அமைத்தார். அருச்சுனன் கண்ணன் என வரும் பெயர்களை வரலாற்றுப் பெயர்களாகக் கொள்ளாமல் கற்பனையாகக் கொண்டார்; அறத்திற்கும் அறமல்லாததற்கும் நடக்கும் வாழ்க்கைப் போரையே அந்த நூலில்

விளக்கினார் ; போர்ச் செயல் மலிந்த பின்னணி உடைய
அந்த நூலைக் கொண்டே இன்னா செய்யாமை (அகிம்சை)
என்னும் அறத்தைத் தெளிவாக்கினார்.

திருவள்ளுவருடைய அரசியலில் சில அதிகாரங்களில்
சிற்சில குறளுக்கே அவ்வாறு பொருள் கண்டு பயன்படுத்த
வேண்டியிருக்கின்றது. மற்றவை திருவள்ளுவரின் காலம்
கடந்த பரந்த நோக்கத்தைக் காட்டி, போரற்ற காலத்
திற்கும் பயன்படக் கூடியவைகளாக உள்ளன. இப்போது
கருதப்படும் இந்த வலியறிதல் காலமறிதல் இடனறிதல்
என்னும் அதிகாரங்களில் உள்ள முப்பது குறளில் ஆறு குறளே
போரைப்பற்றி ஒரு சிறிது அறிவிக்கின்றன. மற்றவை எல்
லாம் போர்ச் செயலுக்கும் மற்றெந்த அரசியல் செயலுக்கும்
பொதுவாகவே அமைந்துள்ளன. ஆகவே, அந்த ஆறு குற
ளுக்கும் கீதையில் காந்தியடிகள் கண்டதுபோல் பொருள்
காண வேண்டும். உருவகமாக அல்லது பிறிதுமொழி
தலாகப் பொருள் காண்பதிலும் ஒரு தனிச் சிறப்பு உள்ளது.
அந்தப் பொருள் தெளிவாக நெஞ்சில் பதிகின்றது ; நினைவில்
நீங்காமல் நிற்கின்றது ; பழமொழிகளில் கொள்ளும் பொரு
ளுக்கு உள்ள தனிச்சிறப்பு இது தானே ? காலம் வாய்த்த
போதே கடமையைச் செய்து முடிக்கவேண்டும் என்று
நேராக உணர்த்துவதை விட, 'காற்றுள்ளபோதே தூற்றிக்
கொள்ள வேண்டும்' என்று பிறிதுமொழிதலாக உணர்த்தி
னால் தெளிவும் ஆழமும் உடையதாய்க் கேட்போர்க்குப்
பயன்படவில்லையா? ஆதலால் போருக்கு உரிய சொற்களைக்
கொண்ட ஒரு சில குறளுக்கும் இவ்வாறு பொருள் காண்பது
மிக்க பயன் உடையதாகவே இருக்கின்றது. திருவள்ளுவரும்
வேறு எந்தப்பகுதியிலும் இல்லாத அளவிற்கு இந்தப்பகுதி
யில் பிறிது மொழிதலாகக் கருத்துகளை அமைத்துள்ளார்.



அந்த அமைப்பை எண்ண எண்ணத் திருவள்ளுவரின்
அறநெஞ்சம் புலனாகின்றது. வலியறிதலில் இருமுறையும்
(475, 476), இடனறிதலில் மும்முறையும் (495, 496, 500)
பிறிதுமொழிதல் அமைத்துள்ளார். இவை அல்லாமல்
உவமைகளும் உருவகங்களும் பல உள்ளன. இவற்றை
ஆராய்ந்தால், போர் அறநெறி இழந்து கெட்டு வருதலையும்,
பொதுநன்மைக்குப் பயன்படாமல் பொது அழிவுக்குப்பயன்
பட்டு வருதலையும் திருவள்ளுவரே உணர்ந்து உணர்ந்து
போரை வெளிப்படையாகக் கூறாமல் விட்டார் என்று எண்
ணத் தோன்றுகின்றது ; எதிர்காலத்தில் அறிஞர்களாலும்
பொதுமக்களாலும் போர் வெறுக்கப்படும் என்று உணர்ந்து,
போரற்ற காலத்திற்குப் பயன்படுமாறு எழுதினார் என்று
கருத இடந்தருகின்றது ; அரசியல் எனின், புறத்திணை
எனின், போர் ஒன்றே குறிப்பிடத் தகுந்தது என்னும்
அறியாமை நீங்கி, அரசாங்கத்தின் மற்றச் செயல்களைப்
போற்றுமாறு, வலியறிதல் முதலியவற்றைப் பொதுச் சொற்
களால் எழுதினார் என்றும், கருத இடம் இருக்கின்றது.

இக்காலத்துக் குடியாட்சி முறைக்குப் பொருந்த
அரசாங்கம் தொடங்கும் எல்லாச் செயல்களுக்கும் வலியறிதல்,
காலமறிதல், இடமறிதல் இம்மூன்றும் வேண்டும். செய்வ
தற்கு உரிய வலிமையையும் செய்வதற்கு ஏற்ற காலமும் தக்க
இடமும் அறியாமல் ஒரு செயலும் செய்ய முடியாது. ஆகை
யால் பொதுவாக எல்லாச் செயலுக்கும் உரியவைகளாகக்
கொள்ளல் பொருந்தும் ; சிறப்பாகக் கொள்ளத்தகுந்த
துறை ஒன்று இக்காலத்து அரசியலில் உள்ளது. அதாவது :
பாராளுமன்றத்து நடவடிக்கை. ஒரு புதிய திட்டத்தை
அரசாங்கம் நடத்த வேண்டுமானால், முதலில் அதை
பாராளு மன்றத்திற்குக் கொண்டுபோய்க் கூறி விளக்க
வேண்டும். பாராளுமன்றத்தில் அந்தத் திட்டத்திற்குத்

துணை நிற்பவர்களும் இருப்பார்கள் ; எதிர்ப்பாளர்களும் இருப்பார்கள். பெரும்பாலோரின் போற்றுதல் கிடைத்தால் தான் அதற்கு வெற்றி கிடைக்கும் ; வெற்றி பெற்று நிறைவேறிய பிறகுதான் அந்தப் புதுத் திட்டம் நடைமுறைக்கு வரக்கூடியதாகும். ஆகவே இக்காலத்தில் அமைச்சர் குழுவின் தலைவர் அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பை ஆராய்ந்தால், அது ஒருவகைக் கருத்துப் போர் முறையாக இருக்கின்றது. செய்யும் ஒவ்வொன்றும் பாராளுமன்றத்தாரின் கருத்துப்போரில் வெற்றிபெற வேண்டும் ; அதாவது பெரும்பாலோரின் ஆதரவைப் பெற வேண்டும் : எதிர்ப்பைக் குறைக்க வேண்டும். இந்தக் கருத்துப்போர் நிகழாத நாடு இப்போது இல்லை. ஆகையால் இந்த அதிகாரங்களை இதற்கு உரிய முறையில் பொருள் கண்டு தெளியலாம். முதலமைச்சராகிய ஆட்சித் தலைவர், செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் வலிமை அறிந்து, காலம் அறிந்து, இடம் அறிந்து ஒழுக வேண்டும் என்று பொருள் உணரலாம் ; இதனோடு மற்ற வாழ்க்கைத் துறைகளுக்கும் பொருந்தப் பொதுப் பொருளும் கொள்ளலாம்.

ஒரு புதிய திட்டத்தைக்கொண்டு வருவதனால் அதன் வலிமையும், கொண்டுவரும் தலைவருடைய (முதலமைச்சருடைய) வலிமையும், எதிர்க்கட்சித் தலைவருடைய வலிமையும் தமக்கும் அவருக்கும் துணையானவர்களின் வலிமையும் சீர்தூக்கி அதைச் செய்ய முற்பட வேண்டும். தம்மால் எவ்வளவு முடியும் என்பதையும் அதற்கு எவ்வளவு ஆற்றல் வேண்டும் என்பதையும் அறிந்து அதுவே நோக்கமாக உறுதியுடன் இருந்து செய்ய வல்லவர்க்கு முடியாதது ஒன்றும் இல்லை. தம்முடைய வலிமையை அளந்தறியாமல் ஊக்கமே காரணமாகத் தொடங்கினால், அதை முடிக்காமல் இடை நடுவே சோர்ந்து கெடவேண்டி வரும் :



வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல். (471)

ஒல்வது அறிவது அறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல். (472)

உடைத்தம் வலி அறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முறிந்தார் பலர். (473)

எதிர்க்கட்சியாரோடு பொருந்தியமுறையில் நடக்காமல், தன் வலிமையையும் அளந்தறியாமல், தன்னைப் பெருமைகளாக வியந்துகொண்டு செய்பவன் விரைவில் கெடுவான் :

அமைந்தாங்கு ஒழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும். (474)

கனம் இல்லாத மயில்பீலி ஏற்றிய வண்டியே ஆனாலும், அதையும் அளவு மீறி மிகுதியாக ஏற்றினால், வண்டியின் அச்சு முறியும். அது போல், தான் வலியவனே ஆனாலும், எதிர்ப்பவர் எளியவரே ஆனாலும், பலரோடு பகைத்துக் கொண்டால் அழிவு நேரும் :

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின். (475)

ஒரு மரத்தின் நுனிக்கொம்பில் ஏறியவர் ஊக்கத்தினால் அதையும் கடந்து மேலும் ஏறுவாரானால், உயிருக்கு இறுதியாக முடியும். அதுபோல், தன்னால் முடிந்த அளவோடு நின்று செயலாற்றாமல் ஊக்க மிகுதியால் அளவு கடந்து சென்றால், எடுத்த செயல் முடியாமல் அழிவுதான் நேரும் :

நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்து ஊக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். (476)

வருவாயின் அளவு அறிந்தே செலவு செய்ய வேண்டும் என்பதையும் திருவள்ளுவர் வலியறிதலில் கூறுகின்றார்.

பொருள் வரும் வழி சிறியதாக இருந்தாலும் கவலை இல்லை ; பொருள் போகும் வழி அதைவிடப் பெருகாமல் இருக்க வேண்டும். தன்னிடம் உள்ள பொருளின் அளவு அறிந்து அதற்கு ஏற்றவாறு வாழ்க்கையை அளவுபடுத்திக் கொள்ளாவிட்டால், அந்த வாழ்க்கை உள்ளது போல் தோன்றி இல்லாமல் கெடும். தன் செல்வத்தின் அளவை அறியாமல் ஒப்பரவு (உபகாரம் செய்தலை) மேற்கொண்டால், அந்த ஒப்பரவுக்கும் இடம் இல்லாமல் விரைவில் வளம் கெடும் :

ஆகாறு அளவிட்டிது ஆயினும் கேடில்லை
போகாறு அகலாக் கடை. (478)

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். (479)

உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும். (480)

செயலாற்றுவதற்கு வலியறிதல் போலவே காலமறிதலும் வேண்டும். கூகை (கோட்டான்) வலிமை மிக்கது. ஆனாலும், பகலில் அதைக் காக்கை வென்றுவிடும். அது போல் எதிர்ப்பவருடைய மாறுபாட்டை வெல்ல வேண்டுமானால், அதற்குத் தக்க காலம் வேண்டும். ஊக்கம் உடையவன் காலம் வரும் வரையில் அமைதியாக ஒடுங்கியிருப்பது நல்லது ; அது போர்செய்யும் ஆட்டுக்கிடாய் பாய்வதற்காகப் பின்வாங்குவது போன்றது :

பகல்வெல்லும் கூகையைக் காக்கை; இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. (481)

ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து. (486)



கிடைப்பதற்கு அறிய காலம் வந்து வாய்க்குமானால் அப்போதே செய்வதற்கு அரிய செயல்களைச் செய்து முடித்துக்கொள்ள வெண்டும். (பாராளுமன்றம் தம் சார்பாக இருக்கும் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தக்க செயல்களைச் செய்து முடித்துக்கொள்ள வேண்டும்.) அமைதியாகக் காலத்தை எதிர்பார்த்திருக்கும்போது, மீனைக் குத்துவதற்காகக் காத்திருக்கும் கொக்கைப் போல் காத்திருக்க வேண்டும். காலம் வாய்த்த உடனே அந்தக் கொக்கு மீனைக் குத்துமாறு போல விரைந்து செயல் செய்து முடிக்க வேண்டும்.

எய்தற்கு அரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற்கு அரிய செயல். (489)

கொக்கொக்க கூம்பும் பருவத்து ; மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து. (490)

இவ்வாறே இடமறிந்து செய்யும் திறமையும் வேண்டும். ஆழமான நீர்நிலையில் முதலை மற்ற விலங்குகளை எல்லாம் வெல்லும் ; ஆனால் நீரைவிட்டு நீங்குமானால் அதை மற்றவை வென்றுவிடும். நிலத்தில் ஓடும் தேர் கடலில் ஓடாது ; கடலில் ஓடும் கப்பலும் நிலத்தில் ஓட முடியாது. போர்க்களத்தில் வேல்வீரரைத் தாக்கிக் கொம்பில் கோத்துத் திரியும் போர்க்களிறாக இருந்தாலும், கால் ஆழ்ந்து போகின்ற சேற்று நிலத்தில் அகப்பட்டுக்கொண்டால், நரியும் அதைக் கொன்றுவிடும். ஆகையால் எதிர்க்கின்றவரை வெல்ல வேண்டுமானால், அதற்குத் தக்க இடத்தை நாட வேண்டும். இடத்தோடு பொருந்தி எண்ணத்தக்க வழிகளை எண்ணிச் செய்வதானால், வெற்றிபெறுவதற்கு அஞ்சாமை தவிர வேறு துணையே வேண்டா. ஆகவே, எண்ணியதை முடிப்பதற்கு ஏற்ற இடம், தக்க வழி, அஞ்சாமை ஆகிய இவை போதும் :

நெடும்புனலுள் வெல்லும் முதலை; அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. (495)

கடல்ஓடா கால்வல் நெடுந்தேர் ; கடல்ஓடும்
நாவாயும் ஓடா நிலத்து. (496)

காலாழ் களரின் நரியடும் கண்அஞ்சா
வேலாள் முகத்த களிறு. (500)

அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தால் செயின். (497)

பிறருக்குக் கேடு சூழக்கூடாது என்று அறத்துப்பாலில் ஓதியவர், பொருட்பாலில் இவ்வாறு பிறர்கெடுவதற்கு ஏற்ற காலத்தைப் பார்த்துக் காத்திருக்க வேண்டும் என்றும், பிறரை வெல்லுவதற்கு ஏற்ற இடத்தைப் பார்த்திருக்க வேண்டும் என்றும் கூறுவது பொருந்துமா என்று கேட்க லாம். திருவள்ளுவர் அறத்துப்பாலில் ஓதியது, தன் நன்மை யைக் கருதிப் பிறருக்குத் தீங்கு செய்யக் கூடாது என்பதே ஆகும். ஆனால் இங்கே அரசியலில் அவர் கூறுவது தனி வாழ்க்கையைப் பற்றி அன்று. பொது நன்மைக்காகப் பொறுப்பு மேற்கொண்டு தலைவனாய் ஆட்சிபுரிகின்றவன், பலருடைய வாழ்வைக் கருத்தில்கொண்டு, அவர்களுக்கு இடையூறு செய்யும் சிலருக்குத் தோல்வி உண்டாக்குவது கடமையாகின்றது. எல்லோரையும் மகிழ்விப்பது முடியுமா னால் அவ்வாறே எல்லாரும் விரும்புமாறு ஆட்சி செய்யலாம். ஆனால் கருத்துவேறுபாடும் எதிர்ப்பும் இருப்பது இயற்கை. அவற்றைக் கண்டு தயங்கினால், தலைவன் செயலற்று நிற்க வேண்டும். அதைவிட ஆட்சியுரிமையைக் கைவிட்டு ஒதுங்கு வதே தகுதி. ஆகையால் எதிர்க்கும் சிலருடைய இடையூற்றை வென்று கடந்து போக முயற்சி செய்ய வேண்டும் ; காலமும் இடமும் அறிந்து தக்கசெயல் ஆற்றவேண்டும் என்கின்றார் திருவள்ளுவர்.



## தெரிந்து தெளிதல்

தலைவன் எல்லாக் கடமைகளையும் தானே செய்ய முடியாது. ஆகையால், தனக்குத் துணையாகப் பலரை ஏற் படுத்திக் கொள்ளவேண்டும். அவ்வாறு நியமிப்பதற்கு முன் அவர்கள் தக்கவர்களா அல்லரா என்று ஆராய்ந்து அறிய வேண்டும். அதுவே தெரிந்து தெளிதல் என்பது.

இவ்வாறு ஒருவனை ஆராயும்போது, என்ன என்ன அறியவேண்டும் ? அவன் அறத்தில். நம்பிக்கை உடையவனா? உறுதிஉடையவனா? பொருள்வகையில் எவ்வாறு நடப்பான்? பிறர்பொருளாயினும் கவரும் ஆசை உடையவனா? பொருளே பெரியது என்று கருதி அறத்தைப் புறக்கணித்து வாழக் கூடியவனா ? தகாத வழியில் வரினும் பொருளை விரும்பி ஏற்கக் கூடியவனா? இன்ப வாழ்வே விழைந்து கடமைகளை மறப்பவனா ? இன்பத்திற்காகப் பிறர்க்கு அடிமையாகக் கூடியவனா ? தகாத இன்பத்தை வெறுத்து உறுதியாய் நிற்க வல்லவனா ? தன் உயிர்க்காக அஞ்சி ஓடி நெருக்கடியில் கை விடக்கூடியவனா ? உயிர்க்காக அஞ்சாமல் உதவி செய்யக்கூடி யவனா ? தன்ஒருவனுடைய உயிர் வாழ்க்கைக்காகப் பிறர்க்கு இன்னல்விளைக்கக்கூடியவனா ? சாவுக்கு அஞ்சுகின்றவன் அற நெறியில் நிற்க முடியாது என்று சொல்வதால், சாவுக்கு அஞ் சாத உறுதி உடையவனாக விளங்குவானா ? இவ்வாறு அறம், பொருள், இன்பம், உயிரச்சம் ஆகிய நான்கு வகையாலும் ஆராய்ந்த பிறகே தெளிந்து துணையாகக் கொள்ள வேண்டும்.

அறம் பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறம் தெரிந்து தேறப் படும். (501)

ஒருவனுடைய அறிவை ஆராயும் போது அடிப்படையான ஓர் உண்மையை மறக்கக் கூடாது. எல்லாம் அறிந்தவரும் ஏதும் அறியாதவரும் இந்த உலகத்தில் இல்லை. அதனால்

சிறந்த அறிஞரிடத்திலும் சிறிது அறியாமை இருப்பது இயல்பு :

அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.
(503)

இந்த உண்மை விளங்கினால் ஒருவனை ஆராய்வது எளிதாகும். அவன் எவ்வெவ்வகையில் அறியாமை உடையவன் என்பதையும், எவ்வெவ்வகையில் அறிவுதெளிந்தவன் என்பதையும் ஆராயலாம். இல்லையானால், வெறுப்பின் காரணமாக ஒருவனிடம் அறியாமையே கண்டு, அறிவுப்பகுதியைக் காணாமல், ''அவனுக்கு ஒன்றுமே தெரியாது'' என்று ஒதுக்க நேரும். வெறுப்பு இல்லாமல், அன்பு வளர்ந்த இடமாக இருந்தாலோ, அவனுடைய அறிவுப்பகுதியை மட்டும் கண்டு அறியாமையைக் காணாமல் ஆராய்ச்சியில் குறையுறவேண்டி வரும் ; பிறகு அவனைத் தேர்ந்தெடுத்தால், அதனால் தலைவனுக்கே அறியாமை வந்து சேரும் ; தலைவன் தன் பொறுப்பும் கடமையும் உணராத அறியாமையாக முடியும் :

காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை எல்லாம் தரும்.
(507)

ஒருவனை நல்லவனா கெட்டவனா என்றும் ஆராய்ந்து காண வேண்டும். ஆனால் அவ்வாறு காணும்போது, முழுதும் நல்லகுணங்களே இருக்க வேண்டும் என்றும், சிறிதும் குற்றம் இருக்கக்கூடாது என்றும் ஆராய்வதால் பயனில்லை. ஏன் எனில், உலகத்தில் குணமே நிறைந்து குற்றம் சிறிதும் இல்லாதவர்களையும் காண முடியாது. குற்றமே வடிவாய்க்குணம் சிறிதும் இல்லாதவர்களையும் காண முடியாது. குணமும் குற்றமும் எல்லோரிடமும் கலந்தே நிற்கின்றன. ஆகையால்



இரண்டையும் ஆராய்ந்து, குணம் மிகுந்திருந்தால் கொள்ள வேண்டும் ; குற்றம் மிகுந்திருந்தால் தள்ள வேண்டும் ;

குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.
(504)

ஆனால், மனத்தின் இயல்போ மாறானது ; ஒருவனிடத்தில் குணம்கண்ட மனம் அவனிடத்தில் குற்றத்தைக்காணாது; குற்றத்தைக் கண்டபின் அதையே காண்பதும் தூற்றுவதும் அல்லாமல்குணத்தைக் காணாது இப்படி ஒன்றைக் கண்டால் மற்றொன்றைக் காணாத குறைபாடு இருப்பதால்தான் உலகத்தில் வீரவழிபாடுமலிந்துவிட்டது ; எதிலும் எவரிடத்திலும் உண்மை விளங்குவது அரிதாகி விட்டது ; (இலக்கிய ஆராய்ச்சி முதலியவற்றிற்கும் இந்த உண்மை பொருந்தும்.) ஒரு சாரார் ஒருவரைப் போற்றினால் அவரையே மற்றொரு சாரார் தூற்றுகின்றார்கள்: ஒருசாரார் தாழ்த்தும்ஒருவரையே மற்றொரு சாரார் உயர்த்துகின்றார்கள். ஆகையால் இந்த ஒருவிதி செய்து கொள்ள வேண்டும். ஒவ்வொருவரிடமும் குணம் குற்றம் இரண்டும் இருக்கும் ; ஆகையால், குணம் நாடும்போதே குற்றமும் உடன் ஆராய வேண்டும். மற்றொரு வழியும் உண்டு ; அதாவது, அவருடைய இயல்பு இன்னது என்று ஆராய்வதை விட்டு, அவர் செய்த செயல்கள் இவை இவை என்று ஆராயவேண்டும். அந்தச் செயல்களால் அவருடைய பண்பு விளங்குவது உறுதி. ஏன் என்றால், ஒருவருடைய பெருமையையோ சிறுமையையோ அவர் செய்யும் செயல்களே கட்டளைக்கல் (பொன் உரைக்கும் கல்) போல் மதிப்பிட்டுக் காட்டமுடியும் :

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.
(505)

## தெரிந்து வினையாடல்

தலைவனால் தேர்ந்தெடுத்து நியமிக்கப்படுகின்றவன் எப்படி இருக்க வேண்டும் ? அவன் கண்மூடியாகவும் இருக்கக் கூடாது ; தன்விருப்பம்போல் செய்கின்றவனாகவும் இருக்கக் கூடாது. அவனை ஆளும் தலைவன், அவனுடைய கடமையில் அடிக்கடி தலையிட்டு அவனை ஐயுறவும் கூடாது ; எல்லாப் பொறுப்பையும் அவனிடம் ஒப்படைத்துவிட்டுக் கவலையில்லாமல் இருக்கவும் கூடாது.

அவன் தானாகவே நன்மை தீமைகளை ஆராய்ந்து நன்மையை விரும்பிச் செய்யும் தன்மை உடையவனாக இருக்க வேண்டும் ; பொருள் வரும் வழிகளைப் பெருக்கி வளம்படுத்தி இடையூறுகளைத் தானே ஆராய வல்லவனாக இருக்கவேண்டும். தலைவனிடத்தில் அன்பும், அவன் கருத்தை அறியும் அறிவும், செயல்செய்யும்போது தெளிவும், பிறர் பொருள்மேல் அவா இல்லாமையும் ஆகிய நான்கு பண்புகளும் நன்றாக அமைந்திருக்க வேண்டும். அப்படிப் பட்டவனையே செயலுக்குத் தக்கவன் என்று தெளிய வேண்டும்:

**நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த**
**தன்மையான் ஆளப்படும். (511)**

**வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை**
**ஆராய்வான் செய்க வினை. (512)**

**அன்பறிவு தேற்றம் அவாஇன்மை இந்நான்கும்**
**நன்குடையான் கட்டே தெளிவு. (513)**

எவ்வளவோ வகைகளால் ஆராய்ந்து தெளிந்தாலும் செயலை ஒப்படைத்தபின் அதைச் செய்யும்போது வேறு வகையாக மாறுகின்ற மக்கள் பலர் உண்டு. ஆகையால் தெளிந்த பிறகும் தலைவன் விழிப்பாக இருக்க வேண்டும்.

**எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையால்**
**வேறாகும் மாந்தர் பலர். (514)**



வழி அறிந்து, இடையூறுகளைப் பொறுத்து, திறமையோடு செய்ய வல்லவனை ஏற்படுத்தவேண்டுமே அல்லாமல், நம்மிடம் அன்பு மிக்கவன் என்ற காரணத்தால் ஒருவனைச் செயலுக்கு உரியவனாக ஏவக் கூடாது.

**அறிந்தாற்றிச் செய்கிற்பார்க்கு அல்லால் வினைதான்**
**சிறந்தான்என்று ஏவற்பாற்று அன்று. (515)**

ஒருவனை ஒரு செயலுக்கு உரியவன் என்று ஆராய்ந்து ஏற்படுத்திய பிறகு, அவனை அதற்கு உரியவனாகவே கருதி அதனால் உயருமாறு செய்ய வேண்டும். அப்போதுதான் அந்தச் செயலைத் தானே செய்து முடிக்கும் விருப்பமும் கொள்வான் ; ஆற்றலும் பெறுவான், அவ்வாறு அல்லாமல், மற்றவர்கள் அவன்மேல் பொறாமையால் சொல்வதைக் கேட்டு அவனுடைய உரிமையான உறவை மாறுபடக் கருதினால், திரு நீங்கும் (செல்வாக்கு நீங்கிவிடும் ; தலைமை அகலும்.) அது கருதி, ஆட்சிமுறையில் பொறுப்பெல்லாம் பிறர்மேல் விட்டுவிட்டுக் கவலை இல்லாமல் இருக்கவும் கூடாது ; பொதுக்கடமையைச் செய்கின்றவன் தவறு இழைக்காமல் இருந்தால் உலகம் கெடாது. ஆகையால் அதை நாள்தோறும் தலைவன் ஆராய்ந்து வரவேண்டும்.

**வினைக்குரிமை நாடிய பின்றை அவனை**
**அதற்குரியன் ஆகச் செயல். (518)**

**வினைக்கண் வினைஉடையான் கேண்மைவேறாக**
**நினைப்பானை நீங்கும் திரு. (519)**

**நாள்தோறும் நாடுக மன்னன் ; வினைசெய்வான்**
**கோடாமை கோடாது உலகு. (520)**

## சுற்றந்தழால்

தனிவாழ்க்கையில் சுற்றத்தார் அமைவது போல், பொதுவாழ்க்கையிலும் சுற்றத்தார் அமைவது உண்டு. தன்

செய்கின்றவர்கள் வேறு ;
ஏவலுக்கு இயைந்து தொழில் பழகுகின்றவர்
தன்னோடு பல காரணங்களால் நெருங்கிப் பழகுகின்றவர்
கள் வேறு. இவ்வாறு பொதுவாழ்க்கையில் வேண்டும்.
களையே அரசியலில் சுற்றம் என்று கொள்ள ஆட்சித்
அவர்கள் எல்லோரையும் தழுவி அன்பாக நடப்பது
தலைவனுடைய கடமையாகும்.

சுற்றம் என்பது பெண்கொள்ளல் கொடுத்தல் பற்றியும்
பிறப்பின் தொடர்பாலும் ஏற்படும் சுற்றம் மட்டும்
அன்று. அவர்களுக்குள்ளும் உண்மையான அன்புடையவர்
கள் ஒரு சிலர் உண்டு. ஆனால் பொது வாழ்க்கையில் பழகி
அன்பு கொண்டவர்களே பெரும்பாலும் உண்மைச் சுற்றமாக
விளங்குவார்கள். அவர்களே பதவி செல்வாக்கு முதலியவை
நீங்கிய காலத்திலும் பழைய அன்பைப் பாராட்டுவார்கள் :
செல்வாக்கில் இருந்த காலத்தில் பெற்ற உதவியைப் பின்
னரும் நினைந்து அன்புகொள்வார்கள். மற்றப் போலிச் சுற்
றத்தாரோ, பணம் உள்ள வரையில் சூழ்ந்து போற்றியிருந்து,
வறுமை வந்தபோது நெருங்காமல் தொலைவில் நின்றுஎள்ளி
ஒதுக்குவாரார்கள். நாட்டுப்புறங்களில் இரத்தத் தொடர்புள்ள
சுற்றத்தார் ஒருவரோடு ஒருவர் பகைகொண்டு சேடு சூழ்வ
தைக் காணலாம். தொழில் தொடர்பான சுற்றத்தாரும் நாட்
டுப்புறங்களில் காணலாம். உழவர், வணிகர், தச்சர் முதலா
னோர் தமக்குள் கொள்ளல் கொடுத்தல் உறவு இல்லாமலிருந்
தும், ஒருவரை ஒருவர் அண்ணன் தம்பி மாமன் மைத்
துனன் என்று உறவுமுறை கொண்டு அளவளாவுதலும்
உண்டு ; துன்பம் வந்தபோது உள்ளம் உருகி வருந்துவதும்
ஒருவர்க்கு ஒருவர் இயன்ற உதவி செய்வதும் அங்கு உண்டு.
அத்தகையவர்களே பொது வாழ்க்கையில் சுற்றமாகக்
கூறத் தக்கவர்கள். அவர்களிடத்தில் தான் செல்வாக்குக்



குறைந்த காலத்திலும் பழைய அன்பைப் போற்றும் பண்பு
உண்டு :

பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே உள. (521)

அன்பு நீங்காத சுற்றம் ஒருவனுக்கு வாய்க்குமானால்,
அவனுக்கு வளர்ச்சி குன்றாத நன்மைகள் பலவும் உண்டா
கும். அப்படிப்பட்ட சுற்றத்தாரோடு கலந்து பழகி அள
வளாவுவது நல்லது ; இல்லையானால் ஒருவனுடைய
வாழ்க்கை நிரம்பாது ; கரையில்லாத குளத்தில் நீர் நிறைவது
போல் பயனற்றுப் போகும் :

விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவும் தரும். (522)

அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. (523)

பதவியும் செல்வாக்கும் பெற்றபோது உண்மை
அன்புடைய சுற்றத்தாரை மறக்காமல், அவர்களைத் தழுவி
வாழவேண்டும். அதற்கு உரிய வழியில், பொருள் கொடுத்து
உதவியும் இன்சொல் கூறியும் வாழ்ந்தால், சுற்றத்தார்மேன்
மேலும் சூழ்ந்து தொடர்பு கொள்வார்கள். காக்கையின்
வாழ்க்கையில் இது இயற்கைப் பண்பாக அமைந்துள்ளது.
ஒரு காக்கை இரை கண்டபோது மறைக்காமல் தன் இனத்
தைக் கூவி அழைத்து உண்கின்றது. சுற்றத்தால் விளையும்
நன்மைகளும் அத்தன்மை உடையவர்களுக்கே அமையும் ;

சுற்றத்தால் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன். (524)

கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தால் சுற்றப் படும். (525)

காக்கை கரவா கரைந்துண்ணும்; ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள. (527)

## பொச்சாவாமை

தன் கடமைகளை மறக்காமல் போற்றிச் செய்யும் வழக்கம் வேண்டும். கடமைகளை மறந்து சோர்வுறுகின்றவர்கள் புகழ் பெற முடியாது ; இது உலகமெல்லாம் அறிஞர்கள் கண்டு அறிவித்த உண்மை. மனத்தில் அச்சம் கொண்டவர்களுக்கு அரண் எவ்வளவு வலிமையாக அமைந்தாலும் பயன் இல்லாதது போல், கடமையைச் செய்ய மறக்கின்றவர்களுக்கு எவ்வளவு சிறப்பு அமைந்தாலும் நல்வாழ்வு இல்லை.

பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை; அதுஉலகத்து
எப்பால் நூலோர்க்கும் துணிவு. (533)

அச்சம் உடையார்க்கு அரண்இல்லை; ஆங்கில்லை
பொச்சாப்பு உடையார்க்கு நன்கு. (534)

உலகத்தில் பெரிய பெரிய கலைஞர்களும் கவிஞர்களும் வாழ்க்கையில் தோல்வியுற்றிருக்கின்றார்கள். அவர்களுக்குக் கலையறிவும் புலமையும் சிறப்புற அமைந்திருந்தும் அல்லல் பட்டுக் கவலையுற்று மடிந்திருக்கின்றார்கள். உலகத்தை ஆட்டிவைத்த பெரும் பேச்சாளர்களும் அவ்வாறு அழிந்திருக்கின்றார்கள். அதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் என்ன என்று நடுநிலையில் நின்று ஆராய்ந்தால் விளங்கும் உண்மை இதுதான் ; அவர்கள் உணர்ச்சிவயமாக இருந்து உலகத்தில் இயங்கினார்களே அல்லாமல் அறிவுகொண்டு மனத்தைத் திருத்தி ஆளவில்லை. மனத்தைச் சென்ற இடத்தில் எல்லாம் செல்லவிட்டு, தம் தம் கடமையாகிய உலகவாழ்க்கையின் பங்கைப் புறக்கணித்த குறையே வீழ்ச்சிக்குக் காரணம் ஆகும், இவ்வாறே எந்தத் துறையில் எவ்வளவு சிறந்தவர்களாக இருந்தாலும் கடமையை மறந்து வாழ்கின்றவர்களுக்கு உய்வு இல்லை ; பொதுவாழ்க்கையாகிய அரசியலில் இது மறுக்க



முடியாத உண்மையாகும். ஆகையால், ஒருவர் மகிழ்ச்சியுற்றுப் பதவிச்செருக்கால் கடமையை மறந்திருக்கும்போது முற்காலத்தில் இவ்வாறு கடமையை மறந்து புறக்கணித்த காரணத்தால் அழிந்தவர்களை நினைக்க வேண்டும்; அந்த நினைப்பால் மனம் திருந்திக் கடமைகளைப் போற்றிச் செய்ய வேண்டும் :

இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாம்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. (539)

## செங்கோன்மை

குடிகளைத் தழுவிச் செங்கோல் செலுத்த வேண்டும் ; அவ்வாறு ஆட்சிபுரிகின்ற தலைவனை உலகம் விடாமல் பொருந்தி நிற்கும். உலகம் விரும்புமாறு செங்கோல் செலுத்துவதே தலைவனுக்கு நன்மை. அவனுக்கு வெற்றி தருவது அவன் கையில் உள்ள வேல் என்று பலர் எண்ணுகின்றார்கள் ; அது தவறு. அவன் ஏந்தியகோல்-செங்கோல் தான்-உண்மையாக வெற்றி தருவது. (அதாவது, வீரத்தாலும் போர்ச் செயலாலும் தலைவன் வெற்றியோடு வாழ்வதாகத் தோன்றினாலும், உண்மையில் நேர்மையான ஆட்சி முறையால் தான் அவன் சிறப்போடு வாழ முடிகின்றது.) நாட்டைக் காக்கும் தலைவனுடைய வாழ்வைக் காப்பாற்றுவது வேறு எது ? அவனுடைய ஆட்சி கோணாமல் நேர்மையாக நடைபெறும் முறைதான் அவனைக் காப்பாற்றுகின்றது :

குடிதழீஇக் கோல்ஓச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. (544)

வேல்அன்று வென்றி தருவது; மன்னவன்
கோல்; அதூஉம் கோடாது எனின். (546)

இறைகாக்கும் வையகம் எல்லாம்; அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். (547)

நேர்மையாக ஆட்சி புரிதல் என்பது எளிய கடமை அன்று ; குடிகளைக் காப்பாற்றி முறை செய்யும்போது, அவர்களில் சிலரிடத்தில் குற்றம் கண்டால் தண்டிக்க வேண்டும் ; குற்றவாளிகள் சிலரைத் தண்டித்தால் அல்லாமல், மக்கள் பலரைக் காப்பாற்ற முடியாது. அருள் வடிவாக இருந்து எல்லோரிடமும் அன்பு செலுத்த வந்தவன் சிலருக்குத் தண்டனை என்ற வகையில் துன்பம் செய்யும்போது மனம் அமைதியுறாது. ஆயினும் பலருடைய நன்மைக்காக ஒரு சிலர்க்குத் துன்பமும் செய்ய வேண்டும். இந்த உண்மையைத் திருவள்ளுவர் எடுத்துக் கூறும்போது, அறத்துப்பாலில் ஓதிய அன்புடைமை நினைவுக்கு வருகின்றது. தனக்குத் துன்பம் செய்தவர்களுக்கும் தீமை செய்யாதிருப்பதே தலையான அறிவு என்றும், மறந்தும் மற்றவனுக்குக் கேடு சூழக் கூடாது என்றும் தீவினையச்சத்தில் கூறியவை நினைவுக்கு வருகின்றன. வாழ்க்கைச் சிறப்புக்குக் காரணமான செல்வநிலையைப் பெறுவதாக இருந்தாலும் பிறருக்கு இன்னா செய்யாமல் வாழ்வதே தூயவர் துணிவு என்றும், செற்றங்கொண்டு துன்பம் செய்தவனுக்கும் அதற்கு ஈடாகத் தீமை செய்யாமல் வாழ்வதே சான்றோர் கொள்கை என்றும், இன்னா செய்தவர்களைத் தண்டிக்கும் முறை அவர்கள் தாமே நாணும்படியாகப் பதிலுக்கு நன்மை செய்வதே என்றும், மற்ற உயிரின் துன்பத்தை தன் துன்பம் போல் போற்றுவதே அறிவின் பயன் என்றும் பலமுறை இன்னா செய்யாமையை வற்புறுத்தியது நினைவுக்கு வருகின்றது. தண்டனை முறைகளில் கொலை தண்டனையும் ஒன்று ; குற்றவாளிகளுள் மிகப்பொல்லாதவர்களாகிய ஒரு சிலரைக் கொலைத் தண்டனை தந்து ஒழிக்க வேண்டும் என்று எழுதும்போது, அறத்துப்பாலில் கொல்லாமையில் எழுதியுள்ள கருத்துகளும் நினைவுக்கு வருகின்றன ; தன் உயிர் நீங்குவதானாலும் சரி, தான் மற்ற உயிரைப் போக்கும் செயலைச் செய்யக் கூடாது என்றும், எவ்வளவு பெரிய நன்மை



உண்டாவதானாலும் கொலையால் பெறும் நன்மை கீழ்ப்பட்டதே என்றும் கூறிய கருத்துகளையும் மறக்க முடியாது. திருவள்ளுவரின் அறவடிவாய மனச்சான்று கொலை என்றதும் தயங்கி நின்று உண்மையைத் தெளிவாக உணர்ந்து உணர்த்துகின்றது.

அறத்துப்பாலில் தீவினையச்சமும் இன்னா செய்யாமையும் ஓதியது தனிவாழ்க்கை என்னும் முறையிலாகும். தனி ஒருவன் தன் வாழ்க்கை கெடுவதனாலும் பிறருக்குத் தீமை செய்யாமல் வாழ வேண்டும் என்பதே அறம். ஆனால் அவனே பொதுவாழ்க்கையில், பலரைக் காக்கும் கடமையை மேற்கொண்ட போது, பொதுவாழ்க்கை கெடுவதானாலும் ஒரு சிலர்க்குத் துன்பம் செய்யக்கூடாது என்று நிற்பது அறியாமை ; அறியாமை மட்டும் அன்று, கடமை செய்யத் தவறிய குற்றமுமாகும். ஆகவே பொதுவாழ்க்கை கெடாமல் ஓங்க வேண்டும் என்பதையே குறிக்கோளாகக் கொண்டு குற்றவாளிகளைத் தண்டிக்கவேண்டும். அவ்வாறு தண்டிப்பது பழி அன்று ; தலைவனுடைய தொழில் ஆகும். கொலைத் தண்டனை விதிப்பதும் அவ்வாறே கடமையாகும் ; அது பயிரைக் காப்பாற்றக் களையைப் பிடுங்கி எறியும் உழவனுடைய தொழில் போன்றது :

குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்
வடுஅன்று வேந்தன் தொழில். (549)

கொலையின் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். (550)

கொலைத் தண்டனையை இப்போது பல நாடுகள் ஒழித்து வருகின்றன. ஒருவனைக் கொன்று தண்டிப்பதால், அவன்

வாழ்க்கை ஒழிக்க முடிகின்றதே அல்லாமல் அவனைத்திருத்த முடிவதில்லை. ஆகையால் அவனுக்கும் பல ஆண்டு சிறைத் தண்டனை விதித்துத் திருத்த முயல்வதே அரசாங்கத்தின் கடமை என்று அறிஞர் பலர் கருதுகின்றார்கள். தவிர, கொலைத்தண்டனை நாகரிகம் இல்லாத பழங்காலத்தில் ஏற்பட்டது, மக்களின் நாகரிக உணர்ச்சிக்கே மாறுப்பட்டது என்று காரணங்களும் கூறுகின்றார்கள். ஆனால் இதற்கு மாறாகக் கருதுகின்ற அறிஞர்களும் சிலர் இருக்கின்றார்கள். அவர்களுள் எச். ஜி. வெல்ஸ் என்பவரும் ஒருவர். குற்ற வாளிகளுள் திருந்தக் கூடியவர்கள் சிலர் என்றும், திருந்த முடியாதவர்கள் சிலர் என்றும் திருந்த முடியாதவர் களை எத்தனை ஆண்டுகள் சிறையில் வைத்துக் காத்தாலும் பயன் விளையாது என்றும், சிறைவாழ்வால் அவர்களிடம் எஞ்சியுள்ள மக்கட் பண்பும் கெட்டுவிடுகின்றது என்றும் சிறையில் வைத்து அவர்களுடைய மனத்தை முற்றிலும் கெடுத்து உயிரைக் காப்பாற்றுவதைவிட அவர்களுடைய உயிரைப் போக்கிவிடுவதே நன்மை என்றும், சிறைத்தண்டனையால் தண்டிக்கப்பட்டவர்கள் கெடுவதோடு அவர்களைக் காவல் காக்கும் மக்களும் பண்பு இழந்து கெடவேண்டி நேர்கின்றது என்றும், கொலைத் தண்டனையால் குற்றவாளிகள் ஒழிந்தாலும் காவலாளிகள் கெடாமலிருக்க முடிகின்றது என்றும் பற்பல காரணம் காட்டுகின்றார்கள். திருவள்ளுவருடைய கருத்தையும், பயிர் வாழக் களை போக்குதல் போன்றது என்ற உவமையையும் ஆராய்ந்தால் அவரும் இவ்வாறே கருதி எழுதியுள்ளார் எனக் கொள்ள இடம் இருக்கின்றது, ஆயினும் எதிர்காலத்தில் கொலைத்தண்டனை ஒழிந்து மிகப் பொல்லாதவர்களை நாடு கடத்தி ஒரு தீவில் விடும் முறையே நிலவக் கூடும்.



பொது வாழ்வின் நன்மையைக் கருதிக் குற்றவாளிகள் சிலரைத் தண்டித்தல் தலைவனுடைய கடமை. ஆனால் அவனே தன் கடமையையும் பொறுப்பையும் மறந்து, ஆற்றலையும் அதிகாரத்தையுமே நினைந்து, பலரையும் வருத்தத் தொடங்கிக் கொடுமை செய்தால், அவன் கொலை யாளிகளைவிடக் கொடியவன் ஆவான் :

**கொலைமேற் கொண்டாரின் கொடிதே அலைமேற்**
**கொண்டு**
**அல்லவை செய்தொழுகும் வேந்து. (551)**

இப்படிப்பட்ட கொடிய தலைவன் நெடுங்காலம் தான் நினைத்தபடியே எல்லோரையும் துன்புறுத்திக்கொண்டிருக்க முடியாது. அவனால், அல்லல்படுகின்ற மக்கள் பல நாளும் பொறுக்க முடியாமல் அழுது அழுது விடுகின்ற கண்ணீர் வீண்போகாது. அந்தக் கண்ணீருக்கு அளவற்ற ஆற்றல் உண்டு ; அந்தக் கண்ணீர்தான் கொடுங்கோலனுடைய செல்வ வாழ்வை அழிக்கக் கூடிய பெரும்படை ஆகும் :

**அல்லல்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே**
**செல்வத்தைத் தேய்க்கும் படை. (555)**

''கொடியவனுடைய வல்லமையும் போர்க்கருவிகளும் படை களும் துணைகளும் எவ்வளவு ! திக்கற்றுத் துன்பப்படும் ஏழை மக்களின் வலிமை அவற்றிற்குமுன் நிற்க முடியுமா ?'' என்று கேட்கலாம். இந்த ஏழை மக்கள் அவனை எதிர்த்துப் போர் செய்ய மாட்டார்கள். ஆனால் போரால் உண்டாகும் அழிவைவிடப் பொல்லாத அழிவை அவர்களுடைய கண்ணீர் உண்டாக்கிவிடும். இதற்கு நேர்க்காரணமாகக் கண்ணீரைக் கூற முடியாவிட்டாலும், அடிப்படைக் காரணம் அதுதான். கண்ணீர் எப்படி அழிக்கின்றது என்பதை வெளிப்படையாகக் காண முடியாவிட்டாலும் அதனால்

என்ன என்ன விளைந்து எப்படி எப்படி அவனுடைய அதிகாரக் கொடுமை அழிகின்றது என்பதை ஆராய்ந்து அறியலாம். இந்த உண்மையை விளக்க வரலாறுகள் உள்ளன. போர்க்கருவிகளால் உடலை அழிக்க முடியும்; அரணை அழிக்க முடியும். ஆனால் கண்ணீரால் எத்தனையோ பெரிய மாறுதல்கள் விளையும்; கொடியவனுக்குத் துணையாக இருந்தவர்கள் எல்லோரும் பகைவர்களாக மாறுவார்கள்; அவனுக்கு அடங்கியிருந்தவர்களே அவனை அடக்கக் கிளம்புவார்கள்; இவ்வாறு பலருடைய மனத்திலும் அவனை அழிக்கும் ஆற்றலை வளர்ப்பது எது? திக்கற்றவர்களின் கண்ணீர்தான். அதனால்தான் திருவள்ளுவர் கொடுங்கோலனுடைய அளவற்ற செல்வத்தையும் அதன் வாயிலாகப் பெற்ற ஆற்றலையும் ஒருபால் நிறுத்தி, மெலிந்து துன்புறுகின்றவர்களின் கண்ணீரை மற்றொருபால் நிறுத்தி, வலியவனின் ஆற்றலை மெலியவரின் கண்ணீர் வெல்லும் என்று கூறினார். அந்த வெற்றியைச் சிறப்பிக்கவே போர் செய்து வெல்லும் என்று கூறாமல், இருந்த இடத்திலிருந்தே அமைதியாக மெல்ல நிகழ்த்தும் ஒரு சிறு தொழில் போல் 'தேய்க்கும்' என்று நுட்பமாக விளக்கினார். இத்தகைய திக்கற்றவர்களின் கண்ணீரைக் காற்றில் உலர்ந்து போகும் எளிமையுடையது எனக் கருதுவது அறியாமை என்று புலப்படுத்த விரும்பி அதையே படை என்று உணரச் செய்தார். உண்மையாகப் படை வைத்துக்கொண்டு தற்காப்புச் செய்து கொள்ளும் கொடுங்கோலனுடைய ஆற்றலை அந்தப் படையில் காட்டாமல் அதை வெறுஞ் செல்வம் என்று சொல்லிக் கழித்தார். வலிமையும் இழந்து படையும் இல்லாமல் வாடும் மக்களின் கண்ணீரின் ஆற்றலை உணர்த்துவதற்காக அதையே படை என்று குறிப்பிட்டார்.



இரக்கம் கொண்டு குற்றவாளிகளைத் தண்டிக்காமல் விடுவது தவறு; செருக்குக் கொண்டு எல்லோரையும் துன்புறுத்துவதோ மிகப் பெரிய தவறு. ஆகவே குற்றம் செய்தவர்களைப் பற்றி நன்றாகக் கேட்டறிந்து, நடுநிலையில் நின்று ஆராய்ந்து தண்டிக்க வேண்டும். அவ்வாறு தண்டிக்கும் முறையால் அந்தக் குற்றவாளிகள் மறுபடியும் அத்தகைய குற்றம் செய்யாமல் திருந்தும்படியாகத் தண்டிக்கவேண்டும்; குற்றத்திற்கு ஏற்ற தண்டனையாகவே விதிக்க வேண்டும். தண்டனை விதிக்கும்போது அளவு கடந்து தண்டிப்பவர் போல் தொடங்கி அளவு மீறாமல் நிற்க வேண்டும். அதுதான் நெடுங்காலம் ஆக்கத்தோடு இருப்பதற்கு வழியாகும்.

**தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்**
**ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து. (561)**

**கடிதோச்சி மெல்ல எறிக் நெடிதாக்கம்**
**நீங்காமை வேண்டுபவர். (562)**

பொதுவாழ்விற்கு உரிய இந்தக் கடமையில் தான் மட்டும் எண்ணிப்பார்த்து முடிவுக்கு வருவதைவிட, தன்னைச்சார்ந்தவர்களோடு கலந்து எண்ணிப்பார்ப்பது சிறந்தது; அவர்களோடு ஆராய்ந்து எண்ணித் தண்டனை விதிக்காமல், தான் தனியாகச் சினங்கொண்டு சீறித் தண்டிக்கக்கூடாது; அவ்வாறு தனியே வெகுண்டு தண்டிப்பதால் செல்வாக்குப் படிப்படியாகச் சுருங்கிப்போகும்:

**இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்**
**சீறின் சிறுகும் திரு. (568)**

பொது நன்மையைப் பற்றிய கருத்து இல்லாமல், சார்ந்தவர்களோடு கலந்து ஆராயாமல், பிறர்மேல் தன் சினத்தைக் காட்டி அல்லல்படுத்திச் செருக்கோடு செயலாற்றுகின்ற கொடியவனுடைய ஆட்சி முறையிலும் அவனுக்குத் துணை

யாக ஒரு கூட்டம் சேரும்; அந்தக் கூட்டம் கல்வியறிவில்லாத கீழ்மக்களின் கூட்டமாக இருக்கும். கொடுங்கோலன் இந்தக் கூட்டத்தைத் தன் பக்கம் துணை சேர்த்துக் கவர்ச்சியாக வைத்துக்கொண்டிருக்க முடியும். ஆனால் இது பயனற்ற கூட்டம்; நிலத்திற்கு வீண் சுமையான ஒரு கூட்டம். இதனால் ஒரு முன்னேற்றமும் அடைய முடியாது:

> **கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் ; அதுவல்லது**
> **இல்லை நிலக்குப் பொறை. (570)**

கல்வியறிவில்லாத மக்கள் எளிதில் ஒற்றுமைப்பட முடியும். அறநெறி அவர்களுடைய உள்ளத்தைக் கவராது. அதனால் கொடுங்கோலனுடைய கொடிய செயல்களை அவர்கள் ஒருமுகமாகப் போற்றித் துணை நிற்பார்கள். அதனால் தான் திருவள்ளுவர் 'கல்லார்ப் பிணிக்கும்' என்றுபிணித்தல் என்னும் சொல்லால் விளக்கியுள்ளார். உலகத்தில் குடியாட்சி முறை சீர்பெற அமையும் நாள் வரையிலும் அரசியலில் அறிஞர்கள் பெரும்பாலோராக வருவது அருமையே. தப்பித் தவறி ஒருவர்இருவர் வரினும் அவர்களும் கல்வியறிவில்லாத மக்களின் மனம் மகிழுமாறு நடந்து உயர்ந்த நெறியை மறக்க நேர்கின்றது. இதை மாற்றவேண்டி அறிஞர்கள் செய்யும் முயற்சியும் பயன் அளிப்பதில்லை. பெரும்பாலான மக்கள் கற்றுத் தெளிந்தவர்களாக வாழும் காலம் வந்தால் இந்தக் குறை தீர்ந்து குடியாட்சி முறை சீராக அமையும்.

**கண்ணோட்டம்**

பழகியவரிடத்தில் நெகிழ்ந்து நடக்கும் பண்பு கண்ணோட்டம் என்பதாகும். அந்தப் பண்பு மக்களின் வாழ்க்கைக்கு அடிப்படையாக இருப்பது மட்டும் அல்லாமல் மிகச் சிறந்த அழகாகவும் விளங்குகின்றது. அந்தப் பண்பு



இருப்பதால்தான் உலகியல் நடைபெறுகின்றது. இவ்வாறு பழகியவரிடத்தில் நெகிழ்ந்து ஒழுகும் பண்பு இல்லையானால், ஒருவரை ஒருவர் சீறுவதும், சிதைப்பதுமே வாழ்க்கையாக இருக்கும்; புலியும் மற்ற கொடிய விலங்குகளும் வாழும் காடுபோல நாடும் மாறித்தோன்றும். ஆகையால் உலகத்தில் சமுதாய அமைப்பிற்குக் கண்ணோட்டம் அடிப்படையாக இருக்கின்றது:

> **கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை**
> **உண்மையான் உண்டிவ் வுலகு. (571)**

ஒருவரை ஒருவர் பார்க்கும் பார்வையிலே உள்ளத்தின் நெகிழ்ச்சி புலப்படும். அந்தக் கண் பார்வையால்தான் அன்பு கொண்டு பழக முடிகின்றது. மக்களுக்குப் பிறவியிலேயே இந்தக் கண்ணோட்டம் அமைந்திருக்கின்றது. அதனாலேயே மக்கள் நூற்றுக்கணக்காகவும் நூறாயிரக்கணக்காகவும் சேர்ந்து பழகவும் கூடி வாழவும் முடிகின்றது. பகையும் பூசலும் பெருக்குவது மக்களுக்கு இயற்கையான பண்பு அன்று; யாரோ சிலர் தன்னலம் கொண்டு தலைமைபெற்று மற்றவர்களை ஏய்த்துத் தூண்டுவதால் பகையும் போரும் அவ்வப்போது ஏற்படுகின்றன. தன்னலம் உடையவர்களுக்குத் தலைமை இல்லாமல் செய்ய வல்ல அறிவும் ஆற்றலும் மக்களுக்கு ஏற்பட்டுவிடுமானால், போருக்கு வழியில்லாமல் போகும். போருக்கு ஆள் திரட்ட ஒரு தலைவன் முயன்றால் மக்கள் எல்லோரும் ஒற்றுமையாக இருந்து போர் செய்ய மறுத்துவிடுவார்கள் தலைவன் வற்புறுத்தினால் அவனுடைய தலைமையை ஒழித்து, போர்வேண்டா என்று அமைதிநாடும் ஒருவனையே தலைவனாக்கிக் கொள்வார்கள். நாட்டுப் பற்று சமயப்பற்று என்று பலவாறு நல்ல பெயர்களைச் சொல்லி வெறியூட்டுகின்ற உணர்ச்சியாளர்களுக்கும்

தந்திரக்காரர்களுக்கும் மக்கள் இரையாகாமல் விழித்துக் கொள்வார்கள். ஒருவேளை போர்க்கருவிகளைக் கையில் எடுக்க நேர்ந்தாலும், தம்மைப்போல வாழும் மக்களைக் கொல்லாமல், தம்மைக் கருவிகளாக்கி மந்தைகளாக்கி வெறியூட்டிக் கண்ணோட்டத்திற்கு இடம் இல்லாமல் கெடுத்து அழிவு வேலை செய்கின்ற கொடுங்கோலர்களையும் வஞ்சகர்களையும் ஒழிப்பதற்கே அந்தக் கொலைக்கருவி களைப் பயன்படுத்துவார்கள். ஆகையால் எப்படியும் மக்கட் பண்மை அழிக்க முடியாது. மக்கள் வாழ்க்கை இந்த அடிப்படை கொண்டே அமைந்திருக்கிறது. புலி முதலிய கொடிய விலங்குகளின் வாழ்க்கை இப்படி இல்லை. ஒன்றை ஒன்று காணும்போதே உறுமுவதும் வலியவிலங்குகளைக் கண்டால் ஓடிஒளிவதும் வலிமை குறைந்த விலங்குகளைக் கண்டால் துரத்திக்கொள்வதும் அவற்றின் இயற்கை. தம் வயிற்றில் பிறந்த குட்டிகளையும் வளர்ந்த பிறகு உறுமுவதும் பகைப்பதும் அவற்றின் வாழ்க்கையில் காணலாம். அதனால் பத்துப் பதினைந்தாகவோ, நூறு இருநூறாகவோ கூடி வாழும் தன்மை அவற்றிற்கு இல்லை. தம் இனத்தையும் போற்றுவதில்லை; பிற இனத்தையோ அழிக்காமல் விடுவதில்லை. அதன் பயனாக இந்தக்கொடிய விலங்குகள் வளர்ந்து பெருகாமல் வர வரக் குன்றியும் குறைந்தும் வருகின்றன. ஆனால் மான் முயல் முதலான மற்றத் தீமை அற்ற உயிர்கள் எவ்வளவோ அழிவுகளுக்கு இடையிலும் பெருகி வாழ்ந்து வருகின்றன; இருபது முப்பதாக கூடி வாழ்கின்றன; கவலையில்லாமல் காற்றிலும் ஒளியிலும் கலந்து விளையாடி வாழ்கின்றன; புலிகளைப் போல் குகைகளிலும் கற்பாறைகளிடையிலும் ஒதுங்கிப் பதுங்கிப் பகலில் வெளிவர அஞ்சி அடைப்பட்டுக் கிடப்பதில்லை; வெட்டவெளியில் வாழ்ந்து மகிழ்கின்றன, மக்கள் வாழ்க்கையும் இப்படிப்பட்டதுதான் பிறரோடு பழகிப் பழகி கண்ணோட்டம் உடையவர்களாய் இயைந்து வாழ்வதே



மக்கட்பண்பு. அதனால்தான் நூறாயிரக்கணக்காகக் கூடி வாழ்வதும் பெரிய பெரிய சமுதாயம் அமைத்து வாழ்வதும் இயல்வனவாக உள்ளன. தந்திரமும் தன்னலமும் உடைய சிலர் சூழும் கேடுகளுக்கு ஒவ்வொரு வேளையில் இரையாகிப் போர் முதலியவற்றால் மக்கள் அழிவுற்றாலும், அந்தப் பண்பு அழிவுப்படவில்லை; சமுதாய அமைப்பும் குலைய வில்லை இவ்வளவு சிறந்த மக்கட் பண்பைத் திருவள்ளுவர் மிகச் சிறந்த அழகு (கழி பெருங்காரிகை) என்கின்றார். கண்ணோட்டம் இருப்பதால் உலகியல் அழியாமல் இருக்கின்றது என்றும், அப்பண்பு இல்லாதவர்களால் பூமிக்குப் பாரமே அன்றி வேறு பயன் இல்லை என்றும் கூறுகின்றார். இவ்வளவு சிறப்புடைய உள்ள நெகழ்ச்சி கண்ணில் புலனாவதால் கண்ணைச் சிறப்பித்து, அந்தக் கண்ணோட்டமே கண்ணுக்கு அணிகலன் என்றும், அது இல்லாத கண்நோய் தரும் புண்ணே என்றும், அவ்வாறு பயனற்ற கண்ணை உடையவர்கள் உணர்ச்சியற்ற கணுவை உடைய மரம் போன்றவர்கள் என்றும் கூறுகின்றார்:

> **கண்ணோட்டத்து உள்ளது உலகியல்; அஃதிலார்**
> **உண்மை நிலக்குப் பொறை (572)**

> **கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்; அஃதின்றேல்**
> **புண்என்று உணரப் படும். (575)**

> **மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு**
> **இயைந்துகண் ணோடா தவர். (576)**

இவ்வளவும் கூறிய திருவள்ளுவர், ஆட்சிப் பொறுப்பு ஏற்றுள்ள தலைவன் கண்ணோட்டம் உடையவனாக இருக்க முடியுமா என்பதைத் தெளிவிக்கின்றார்: பொதுக்கடமை

களைத் தான் மேற்கொண்டிருக்கும்போது, பழகியவர்களும்
சிலவேளைகளில் இடையூறு செய்ய முற்படுவர். அவர்கள்
மேல் சினங்கொண்டு மாறுபடலாம் என்று தோன்றும்.
ஆனால் பழகியவர்களாக இருப்பாதல் இயல்பாக உள்ளம்
நெகிழ்ந்து நிற்கும். இடையூறு செய்கின்றவர்களிடத்திலும்
கண்ணோட்டம் உடையவனாக இருக்கலாம்; ஆனால் தான்
மேற்கொண்டுள்ள கடமை கெடாதவாறு காத்துக்கொள்ள
வேண்டும். அவ்வாறு நடக்கவல்லவர்களுக்கு இந்த உலகம்
உரிமையானதாகும். சில வேளைகளில் இடையூறு செய்
கின்றவர்கள் அளவு மீறிச்செல்வார்கள்; தன் அதிகாரத்தைக்
கொண்டு தலைவன் அவர்களைத் தண்டிக்கவும் முடியும்.
ஆனால் அப்போதும் பழகியவர்கள் என்ற காரணத்தால்
பொறுமை மேற்கொண்டு கண்ணோட்டம் உடையவனாக
இருப்பதே சிறந்த பண்பு ஆகும்:

**கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு**
**உரிமை உடைத்திவ் வுலகு.** **(578)**

**ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்**
**பொறுத்தாற்றும் பண்பே தலை.** **(579)**

ஒரு சிலர் மற்றவர்களுக்குத் தீங்கு செய்தால் அந்தக்
குற்றவாளிகளைத் தண்டிக்கவேண்டும் என்று செங்கோன்மை
யில் கூறினார். இங்குக் கூறுவது, தலைவனுக்கே இடையூறு
செய்கின்றவர்களைப் பற்றியாகும். அவ்வாறு தனக்கு இடை
யூறு செய்கின்றவர்கள் பழகியவர்களாக இருந்தால், தான்
தலைவன் என்ற உயர்நிலையில் இருந்தாலும், பொறுத்துக்
கண்ணோடுவது நல்லது என்று திருவள்ளுவர் கூறுகின்றார்.
பொதுக்கடமைகளை மேற்கொண்டு செய்யும்போது,
தன்னைப் போன்ற அறிவும் ஆற்றலும் உடைய சிலர்க்குப்
பொறாமை ஏற்படுவதும், அதனால் அவர்கள் இடையூறு



செய்ய முனைவதும் இயற்கை. அப்போதெல்லாம் தலைவன்
சினங்கொண்டு தண்டிக்க முயல்வது கூடாது; தன் பொதுக்
கடமைகெடாதவாறு காத்துக்கொள்வது மட்டும் போதும்.
நாளடைவில் இடையூறு செய்கின்றவர்கள் பொறாமை மாறி
அன்பு கொண்டு திருந்தக்கூடும். ஏன் என்றால் அவர்களின்
பொறாமைக்குக் காரணம் தன் செல்வாக்கும் உயர்நிலையுமே
ஆகும். தனிப்பட்ட முறையில் தன்மேல் அவர்களுக்குப் பகை
யும் காழ்ப்பும் இல்லை. தானும் அந்தத் தலைமைப் பொறுப்
பைத் தன் நன்மைக்குப் பயன்படுத்தாமல் பொது நன்மைக்
குப் பயன்படுத்திச் செருக்கு இல்லாமல் வாழ்ந்தால், இடை
யூறு செய்கின்றவர்கள் தம் தவறு உணர்ந்து அன்புகொள்
ளத் தலைப்படுவார்கள். ஆகையால் அவர்களிடத்தில் கண்
ணோட்டம் கொள்வதே தலையான பண்பாகும். ஒருவேளை
அவர்களில் சிலர் திருந்தாமல், மேன்மேலும் பொறாமையே
கொண்டு, அன்பு துறந்து, தன் உயிருக்கே தீங்கு செய்
வார்களானால், அப்போதும் கண்ணோட்டமே சிறந்தது
என்கின்றார் திருவள்ளுவர். நாகரிகப் பண்பாடு உடையவர்
கள் தமக்கு நஞ்சு இடுவதைக் கண்ணால் கண்டு கண்ணோட்
டத்தால் மறுக்க முடியாமல் அதை உண்டு அமைதியுறு
வார்கள் என்கின்றார்:

**பெயக்கண்டு நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்.** **(580)**

இப்படி அமைதி அடைவதை நல்லது என்று மட்டும்
திருவள்ளுவர் கூறவில்லை; விரும்பத் தகுந்த நாகரிகம்
உடையவர்களின் செயல் என்று கூறுகின்றார். திருவள்ளுவர்
நாகரிகம் என்ற சொல்லைக் குறிப்பிடும்போது மனப் பண்
பாட்டையே கருதுகின்றார்; உண்பதிலும் உடுப்பதிலும்
உறையுள் அமைப்பதிலும் பிறவற்றிலும் பெற்றுள்ள மாறு

தல்களையே முன்னேற்றம் என்று எண்ணி, அவற்றையே
நாகரிகம் என்று பெரும்பாலோர் போற்றுகின்றார்கள்.
ஆனால் திருவள்ளுவரும் மற்றச் சான்றோர்களும் புறவாழ்
வில் நிகழும் மாறுதல்களை நாகரிகமாகக் கருதவில்லை. அக
வாழ்வில் ஏற்படும் நல்ல பண்புகளையே—நெஞ்சின் உயர்
நிலைகளையே-அவர்கள் நாகரிகத்தின் கூறுகளாகக் கொள்கி
ன்றார்கள். திருவள்ளுவரின் கருத்துப்படி உயர்வகையான
மாடி வீடுகளில் வாழ்வதும் நாகரிகம் அன்று ; தாம் மாடி
வீட்டில் வாழ்ந்தாலும் பொத்தல் குடிசைகளில் உள்ள
மக்களோடு பழகி பழகிய காரணத்தால் கண்ணோட்டம்
உடையவர்களாக வாழ்வதே நாகரிகம். பகட்டான ஆடை
அணிகளை அணிந்து ஒய்யாரமாகத் திரிவதுநாகரிகம் அன்று.
தம்மொடு பழகியவர்கள் கந்தலுடுத்துக் கிடந்தாலும் அவர்
களைத் தம் போல் மதித்து நெஞ்சம் நெகிழ்வதே நாகரிகம்.
அறுசுவை உணவு உண்டு களிப்பது நாகரிகம் அன்று ; தம்
மொடு பயின்றவர்கள் உப்பில்லாக் கூழ் குடிப்பவர்களாயினும்
அவர்களைத் தம் போல் மதித்து உள்ளம் உருகி இயைவதே
நாகரிகம். இந்தப் பண்பு எல்லா மக்களிடத்திலும் ஓரளவு
அமைந்திருக்கின்றது. ஆனால் புறவாழ்க்கையின் போக்கு
இந்த நெஞ்சப் பண்பாகிய நாகரிகத்தை வளர வொட்டாமல்
நெருக்கி அடக்குகின்றது.

எடுத்துக்காட்டாக, ஒருவர் தம் நண்பர் வீட்டில் உணவு
உண்ணச் செல்கின்றார் என்று வைத்துக்கொள்ளலாம்.
உணவு உண்ணும்போது உணவில் கல் அகப்படுகின்றது.
அந்தக் கல் பற்களுக்கிடையில் சிக்சிக்கறிக்கின்றது. அந்தச்
சிறுஒலி நண்பருடைய துணைவியார் செவியில் விழுகின்றது.
"என்ன அது ? கல் இருந்ததோ ?" என்று அம்மையார் கேட்
கின்றார். "இல்லை, இல்லை" என்கின்றது உண்கின்ற
வருடைய வாய் இது தான் நாகரிகம். "அய்யோ ! நன்றாகக்



கல் பொறுக்காமல் சமைத்துவிட்டோமே! அவர் உண்ணும்
போது கல் இருந்ததே" என்று அந்த அம்மையாரின் மனம்
நொந்து "கல் இருந்ததோ" என்று கேட்கின்றது. "அந்த
மனம் ஏன் நோகவேண்டும் ? அது நோகாமல் நாம் நடந்து
கொள்ளத் தவறினோமே" என்று உண்கின்றவரின் மனம்
வருந்துகின்றது. அதனால்தான் கல் இருந்தும், "இல்லை,
இல்லை" என்று அவருடைய வாய் பொய் சொல்கிறது.
அந்த அன்புமனம் வருந்தாதிருக்கச் செய்ய வேண்டும் என்று
அவர் முயல்கிறார். பிறர் வருந்தாமலிருக்க வேண்டும் என்று
தம் வருத்தத்தை இவ்வாறு மறைப்பதுதான் நாகரிகம்.
இதுவே வளர்ந்து முதிர்ந்த நாகரிகமாக நிற்கும் போது,
பிறர் வருந்தாமல் வாழட்டும் என்று அதற்காக அவர்கள்
இட்ட நஞ்சும் உண்டு, தம் உயிர் வேதனை தெரியாமல்
அவர்கள் வாழட்டும் என்று அமைதியும் பூண்கின்றார்கள்.
அவர்களிடம் வெறுப்பும் சினமும் கொள்ளாமல் அவர்களைத்
தண்டிக்காமல் இருக்கும் பண்பு, அவர்களை விட்டுத்
துறக்காமல் மேலும் அவர்களோடு பழகும் பழக்கம், அவர்
கள் தம்மைக் கொல்லச் சூழ்ந்து நஞ்சு இடுவதைக் கண்டும்
பொறுத்திருக்கும், பொறுமை அதை எடுத்து உண்ணத்
துணியும் துணிவு, துணிந்து உண்டபின்னும் தம் உயிர் வேத
னையை அவர்களுக்குப் புலப்படுத்தி அதனால் அவர்கள்
வருந்தும்படியாகச் செய்யக்கூடாது என்று தம் துன்பத்தைத்
தமக்குள் அடக்கிக்கொண்டு அமையும் அமைதி இவற்றை
ஒவ்வொன்றாக எண்ணிப் பார்க்கப்பார்க்க, மனப்பண்பாடு
என்னும் நாகரிகத்தைப் படிப்படியாக அளந்தறிவது போல்
தோன்றுகிறது ; கண்ணோட்டமே அதை அளந்தறியும்
கருவியாகவும் விளங்குகின்றது.

## ஒற்றாடல்

ஆட்சி புரியும் தலைவனுக்கு எல்லாவற்றையும் அறிந்து முறை செய்வதற்கு இரண்டு துணை வேண்டும் : ஒன்று அங்கங்கே என்ன என்ன நிகழ்கின்றன என்பதை உள்ளவாறு அறிவிக்கும் ஒன்று (வேவு பார்த்தல்); மற்றொன்று. நிகழ்கின்றவற்றை அறிந்த பிறகு எதற்கு என்ன செய்ய வேண்டும் என்று கடமையைத் தெளிவாக்கும் நீதி நூல் (சட்ட நூல்). இந்த இரண்டனையும் தலைவன் தன் கண்ணாகப் போற்ற வேண்டும் :

> ஒற்றும் உரைசான்ற நூலும் இவைஇரண்டும்
> தெற்றென்க மன்னவன் கண். (581)

ஆட்சி புரியும்போது, மக்கள் தம் குறைகளை எழுதி அனுப்பியபின் (விண்ணப்பங்கள் அனுப்பியபின்) அவற்றை ஆராய்ந்து தக்கவை செய்தல் உண்டு ; அல்லது , மக்கள் தெரிவிக்காமலே, தலைவனே ஒற்றர்களின் வாயிலாக (வேவு காரர்களின் வாயிலாக) அங்கங்கே அவரவர்களின் வாழ்வில் நடப்பன அறிந்து அவற்றிற்கு ஏற்றபடி தக்கவை செய்தலும் உண்டு. இந்த இருமுறைகளில், விண்ணப்பங்களால் தெரிந்த பிறகு ஆராய்வது நல்ல ஆட்சிமுறை அன்று தலைவனே ஒற்றர்களின் வாயிலாகக் குறைகளை அறிந்து தக்கவை செய்வது நல்ல ஆட்சிமுறை ஆகும். அதுவே கடமையும் ஆகும். குடிமக்கள் ஆள்வோரைத் தேடி அலையக்கூடாது. ஆள்வோர் குடிமக்களை நாடிக் கடமையைச் செய்ய வேண்டும். ஆகையால் எல்லாரிடத்திலும் நிகழ்கின்ற எல்லாவற்றையும் ஒற்றர்களால் விரைந்து அறிவது தலைவனுடைய கடமையாகும் :

> எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
> வல்அறிதல் வேந்தன் தொழில். (582)



இவ்வாறு ஆள்வைத்து ஆராயும்போது எல்லாரையும் ஆராய வேண்டும். வேண்டியவர் வேண்டாதவர் என்ற வேறுபாடு இல்லாமல், நெருங்கியுள்ளவர் அல்லாதவர் என்ற வேறுபாடும் இல்லாமல், எல்லாரையும் ஆராய வேண்டும். தம் குறையைச் சொல்ல தயங்கியிருப்பவர்களும் உண்டு. தலைவன் நமக்கு வேண்டியவன் என்று கடமையை மறந்து தீமை செய்கின்றவர்களும் உண்டு. ஆகையால் நன்மை செய்வதானாலும் தீமை செய்வதானாலும் எல்லோரையும் ஆராய வேண்டும். பொது ஊழியம் செய்கின்றவர்கள், சுற்றமாக சூழ்ந்திருக்கின்றவர்கள், பகைவர்கள் ஆகிய எல்லாரையும் ஆராய வேண்டும்.

> வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
> அனைவரையும் ஆராய்வது ஒற்று. (584)

கண்டவர் ஐயுறாத வடிவத்தை உடையவனாக, அவர் ஐயுற்று வெகுண்டபோதும் அஞ்சாமைக்கொண்டு, யார் என்ன செய்தாலும் எவ்விடத்தும் தன் மனக்கருத்தை வெளியிடாமல் காக்க வல்லவனாக இருப்பவனே ஒற்றன் ஆவான். மக்கள் மறையச் செய்த செயல்களையும் எவ்வாறாவது கேட்டறியக் கூடிய வல்லமை உடையவனாய் கேட்டறிந்தவைகளை ஐயமறத் தெளிந்து உணர்த்தக் கூடியவனாய் அவன் தொழிலாற்ற வேண்டும் :

> கடாஅ உருவொடு கண்அஞ்சாது யாண்டும்
> உகாஅமை வல்லதே ஒற்று. (585)

> மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
> ஐயப்பா டில்லதே ஒற்று. (587)

இவ்வாறு ஓர் ஒற்றன் அறிவித்த ஒரு செய்தியை அவ்வாறே உண்மை என்று நம்பிவிடாமல், மற்றோர் ஒற்றனை அனுப்பி

அறிந்து இருவர் கூறும் செய்திகளையும் ஒப்பிட்டு நோக்கி உணர வேண்டும். இவ்வாறு செய்யும்போது, ஓர் ஒற்றனுக்கு மற்றோர் ஒற்றன் யார் என்று தெரியாதபடி ஆள வேண்டும். எத்தகைய செய்தி ஆனாலும், மூன்று ஒற்றர்கள் கூறுவன ஒத்திருந்தால் உண்மை என்று தெளியப்படும் :

ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல். (588)

ஒற்றொற்று உணராமை ஆள்க; உடன் மூவர்
சொல்தொக்க தேறப் படும். (589)

ஊக்க முடைமை

ஊக்கம் உடைமையே நிலையான உடைமை. ஏன் என்றால் அது மனத்தில் உள்ள செல்வமாகும். பொருள் உடைமை நிலைத்தது அன்று அது உடம்பை விட்டு வேறாக இருப்பது. ஆகையால் அழியக் கூடியது. நிலைத்த செல்வமான ஊக்கத்தைத் தம்மிடம் கொண்டவர்கள் பெற்ற நன்மை போய்விட்டதே என்று எப்போதும் வருந்த மாட்டார்கள்; ஊக்கம் கொண்டு உழைத்து மீண்டும் அதை அடையப் பாடுபடுவார்கள். சோர்வற்ற ஊக்கம் உடையவனிடத்தில் நன்மை தானே வழி கேட்டுக்கொண்டு போய்ச் சேரும். ஒரு பொய்கையில் நீரின் ஆழத்திற்கு ஏற்றவாறு நீர்ப்பூக்களின் தாள்கள் நீள்வது போல், மக்களுடைய உள்ளத்தின் ஊக்கத்திற்கு ஏற்றவாறு அவர்களுடைய வாழ்க்கை உயரும் :

உள்ளம் உடைமை உடைமை; பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். (592)

ஆக்கம் இழந்தேம்என்று அல்லாவர் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார். (593)



ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையா னுழை (594)

வெள்ளத் தனைய மலர்நீட்டம் ; மாந்தர்தம்
உள்ளத்து அனையது உயர்வு. (595)

ஒருவனுக்கு வலிமை எது என்றல் ஊக்க மிகுதியே. அந்த ஊக்கம் மிகுதி இல்லாதவர் மக்கள் அல்லர் ; மரங்களே. வடிவால் மக்களைப் போல் இருப்பதுதான் அந்த ஊக்கமற்ற மரங்களுக்கும் மண்ணில் நிற்கும் மற்ற மரங்களுக்கும் வேறுபாடு ஆகும் :

உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கை ; அஃதில்லார்
மரம் ; மக்கள் ஆதலே வேறு. (600)

உடனே செய்து முடிக்காமல் காலம் நீட்டித்துச் செய்யும் தன்மையும், மறதியும், சோம்பலும், அளவு மிகுந்த தூக்கமும் ஆகிய இந்த நான்கும் கேட்டைத் தரும் ; கெட்டுப் போகின்றவர்கள் ஏற விரும்பும் மரக்கலங்களாக இவை உள்ளன.

நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன். (605)

சோம்பலை விரும்பிச் சிறந்த முயற்சியைக் கைவிட்டவர்களை மற்றவர்கள் கடிந்து கூறுவார்கள் ; எள்ளி இகழ்வார்கள் ; அவர்கள் இந்தச் சொற்களைக் கேட்டுக்கொண்டு வாழ நேரும் :

இடிபுரிந்து எள்ளும்சொல் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர். (607)

எந்தச் செயலாக இருந்தாலும் செய்ய முடியாதது என்று சோர்வடையக் கூடாது ; முயற்சி இருந்தால், அதைச் செய்து முடிப்பதற்கு வேண்டிய ஆற்றல் தானே வரும் ; அந்த ஆற்றலை முயற்சியே தரும். செயலைத் தொடங்கி ஒரு

இடைநடுவே சிலர் சோர்ந்து விட்டுவிடு
பகுதியைச் செய்து இடைநடுவே சிலர் சோர்ந்து விட்டுவிடு கைவிடுகின்றது.
கின்றார்கள். அத்தகையவர்களை உலகமும் கைவிடுகின்றது.
ஆகையால் எடுத்த வேலையைக் குறையாக விடக் கூடாது ;

அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும் ;
பெருமை முயற்சி தரும். (613)

வினைக்கண் வினைகெடல் ஓம்பல் ; வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு. (615)

பிறர்க்கு உதவியாக வாழும் வாழ்க்கையே மேம்பட்ட வாழ்க்கை ; முயற்சியாகிய உயர்ந்தபண்பு உடையவர்களுக்கே அந்த மேம்பட்ட வாழ்க்கை அமையும். தன்னலத்தோடு தன் இன்பத்தை விரும்பாமல் செயல் செய்து முடிப்பதை விரும்புகிறவன் எவனோ அவனே சுற்றத்தாரின் துன்பத்தைப் போக்கித் தாங்கும் தூண் போல் நிற்பான் :

தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு. (613)

இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண். (615)

முயற்சி பொருள்வளத்தைப் பெருக்கும் ; முயற்சி இல்லாவிட்டால், வளம் எல்லாம் வறண்டு வறுமை அடையச் செய்யும். நல்வினை இல்லாத காரணத்தால் முயற்சியில் தோல்வியுற்றால், அதனால் யாருக்கும் பழி இல்லை. ஆனால் அறியத்தக்க வழிகளை அறிந்து முயற்சி செய்யாமலிருப்பது பழியாகும். ஊழ்வினையால் கருதிய பயனை அடைய முடியமல் போனாலும், உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலியையாவது முயற்சி தரும். ஊழ்வினை முயற்சிக்குத் தடையாக நின்றாலும் , சோர்வடையாமல் குறையில்லாமல் முயற்சி செய்யவல்லவர்கள் அந்த ஊழ்வினையையும் வெல்ல முடியும்.



முயற்சி திருவினை ஆக்கும் ; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். (616)

பொறின்மை யார்க்கும் பழிஅன்று ; அறிவறிந்து
ஆள்வினை, இன்மை பழி. (618)

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். (619)

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர். (620)

இடுக்கண் அழியாமை

துன்பம் வரும்போது சோர்ந்து அழியாமல் உள்ளத்தில் மகிழ வேண்டும். வந்த துன்பத்தை வெல்வதற்கு அதைப் போல் சிறந்த வழி இல்லை:

இடுக்கண் வருங்கால் நகுக; அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல் (621)

துன்பம் வரும்போது இவ்வாறு உள்ளத்தில் மகிழ வேண்டுமானால், மன உறுதி வேண்டும் ; அறிவுத் தெளிவு வேண்டும், உறுதியும் தெளிவும் உடைய மக்கள் மிகச்சிலரே மற்றவர்கள் என்ன செய்வார்கள் ? அவர்களை எண்ணினால் இரக்கமே தோன்றுகின்றது. அவர்கள் தமக்கு வரும் துன்பத்தை மறப்பதற்குக் கள்ளையும் சூதையும் பொது மகளிரையும் நாடுகின்றார்கள். மன உறுதியும் அறிவுத் தெளிவும் இல்லாத காரணத்தால்தான் அவற்றை நாடிக் கெடுகின்றார்கள்' துன்பத்தை மறக்கலாம் என்று அவற்றில் ஈடுப்பட்டு மீளாத் துன்பத்தில் சிக்குண்டு எந்நாளும் வருந்துகின்றார்கள். ''அய்யோ! இந்த உலகத்தில் இவர்கள் மனத்தில் உறுதியும் தெளிவும் இல்லாமல் கெடுகின்றார்களே!'' என்று இரக்கம் தோன்றுகின்றது.

ஆனால் அத்தகையவர்களுக்கு அரசியலில்—பொதுவாழ்வில்—பொறுப்பு இருக்கக்கூடாது என்று வலியுறுத்துவதற்காகவே பொருட்பாலில் வரைவின்மகளிர் கள்ளுண்ணாமை சூது என்னும் அதிகாரங்களில் அவற்றைக் கடிந்துரைக்கின்றார். இங்கே, அரசியலில் தலைவனின் இயல்பைக்கூறுகின்ற திருவள்ளுவர், மனஉறுதியும் அறிவுத் தெளிவும் உடைய தலைவனைப் பற்றியே கூறுகின்றார். ஆகையால் அவன் செயலாற்றும் போது இடுக்கண் வந்தால், உள்ளத்தால் மகிழும் ஆற்றல் பெற்றிருக்க வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார். அதற்கு வேண்டிய தெளிந்த அறிவு பெற்றவனாகவும் அவன் இருக்க வேண்டும் என்று குறிக்கின்றார். வெள்ளம் போல் எல்லையற்ற துன்பம் வந்தாலும், அறிவுடையவன் உள்ளத்தால் நினைத்த அளவில் அவ்வளவு துன்பமும் கெடும் என்கிறார் :

**வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்**
**உள்ளத்தின் உள்ளக் கெடும். (622)**

பொதுக்கடமையில் முதல் பங்குக்கே தலைமை என்று பெயர். பொறுப்பு மிகுதி ஆக ஆக சுமையும் மிகுதியாகும். கடமையும் மிக ஒழுங்காகச் செய்ய நேரும். இந்த உண்மையை உணர்ந்தவர்கள் பெரிய பொறுப்பு வாய்த்த போது அதைப் பெற்றோம் என்று பெருமகிழ்ச்சி கொண்டு அது தம்மை விட்டுப் போகாதிருக்கக் கவலைப்பட மாட்டார்கள். நமக்கு அந்தப் பொறுப்பு வாய்த்தது ; அது உள்ள வரையில், நம்மால் இயன்றவரையில் நம் கடமையை செய்வோம் என்று பற்றின்றிக் கடமையைச் செய்வார்கள் ; அதனால் அது நீங்கியபோது, இழந்துவிட்டோமே என்று அல்லலும் படமாட்டார்கள். இன்பம் வந்தபோது கடமையைச் செய்வதோடு நின்று இன்பத்தை விரும்பாமல் வாழ்ந்தால்



துன்பம் வந்தபோதும் கடமையைச் செய்துகொண்டு துன்புறாமல் இருக்க முடியும் :

**அற்றேம் என்று அல்லல் படுபவோ பெற்றேம் என்று**
**ஓம்புதல் தேற்றா தவர்? (626)**

**இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்**
**துன்பம் உறுதல் இலன். (629)**

இந்த உடம்பு மற்றவர்களுக்கு நன்மை செய்து தான் துன்பம் அடையத்தக்கது. ஆகையால் துன்பத்திற்கு இலக்கானது என்று தெளியவேண்டும். இந்தத் தெளிவு இருப்பதால் அறிவுடைய மேலோர் துன்பம் வந்தபோது கலங்குவதில்லை. அவ்வாறு தனக்கென இன்பம் விரும்பாமல் துன்பம் இயல்பு என்று தெளிந்திருக்கின்றவன் எப்போதும் துன்பம் அடைவதில்லை. இன்பம் துன்பம் என்று பகுத்துணர்வதையும் விட்டு, வரும் துன்பத்தையே இன்பமாகக் கொண்டு கடமையைச் செய்துவந்தால், தன் பகைவரும் விரும்பத்தகுந்த சிறப்பு ஏற்படும் :

**இலக்கம் உடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்**
**கையாறாக் கொள்ளாதாம் மேல். (627)**

**இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்**
**துன்பம் உறுதல் இலன். (628)**

**இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்**
**ஒன்னார் விழையும் சிறப்பு. (630)**

### அமைச்சு

தலைவனுக்குத் தக்க வழிகளை ஆராய்ந்து கூறும் அமைச்சன் வேண்டும். அமைச்சன் எத்தகையவனாக இருக்கவேண்டும் ?

அறம் அறிந்து, கல்வியால் நிறைந்து, அமைந்த சொல் உடையவனாய், எக்காலத்திலும் செயல் ஆற்றும் திறம்

அறிந்தவனாய் இருக்க வேண்டும். இயற்கையான அறிவு நுட்பம் வேண்டும் ; நூல்களைக் கற்றறிந்த செயற்கை அறிவும் வேண்டும் ; இருவகை அறிவும் பெற்றவர்களுக்கு மிக அரியது, முடியாதது என்று முன்னிற்கும் செயல் இல்லை ; எல்லாவற்றையும் எளிதில் முடிக்கும் திறமை அமைந்து விடும். நூல்களைக் கற்ற அறிவுமட்டும் போதாது. நூலறிவால் செயல் ஆற்றும் திறங்களை எல்லாம் அறிந்த போதிலும், உலகத்தின் இயல்பை அறிந்து அதற்குப் பொருந்துமாறு செய்ய வேண்டும் :

அறன் அறிந்து ஆன்றமைந்த சொல்லான் எஞ்ஞான்றும்
திறன் அறிந்தான் தேர்ச்சித் துணை. (635)

மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
யாஉள முன்நிற் பவை? (636)

செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல். (637)

**சொல்வன்மை**

நல்ல சொல்லால் நன்மை உண்டாகும் ; தீய சொல்லால் தீமை உண்டாகும். ஆக்கமும் கேடும் சொல்லால் வருவன வாக இருப்பதால், பேசும்போது சொல்லை ஆளுவதில் விழிப்பாக இருக்க வேண்டும் ; சோர்ந்திருந்து கேட்டுக்கு இடந்தரக் கூடாது :

ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு. (642)

பேசும்போது கேட்டவர்களைப் பிணித்துக் கவரக்கூடிய தன்மையை நாட வேண்டும் ; கேளாதவர்களும் கேட்க வேண்டும் என விரும்பக் கூடியதாகச் சொல்ல வேண்டும் ; அதுதான் சிறந்த சொல்வன்மை யாகும். அத்தகைய



சொல்வன்மை உடையவனாய், சோர்வு இல்லாதவனாய் அவையோர்க்கு அஞ்சாதவனாய் இருந்தால், அவனோடுமாறு பாடு கொண்டு வெல்ல யாராலும் முடியாது. சொல்வதை ஒழுங்குபடக் கோத்து இனிமையாகச் சொல்ல வல்லவர்கள் வாய்த்தால், உலகம் அவர்கள் ஏவும் தொழிலை விரைந்து கேட்டு நடக்கும் :

கேட்டார்ப் பிணிக்கும் தகைஅவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல். (644)

சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது. (647)

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். (648)

மணிக்கணக்காகப் பலவகை ஆற்றல் தோன்ற விரிவாகப் பேசுவதே பேச்சுத்திறமை என்று நினைக்கின்றார்கள்; அது தவறு. உலகத்தில் மிகப் பெரிய செயல் செய்தவர்கள் எல்லோரும் பெரும் பேச்சாளர் அல்லர் ; பெரும் பேச்சு வேறு, சொல்வன்மை வேறு. பயனற்ற பெரும் பேச்சு வீண் முயற்சியே தவிர நன்மை சிறிதும் விளைக்காது. ஆகையால் குற்றமற்ற சில சொற்களை சொல்லிப் பயன் பெறும் வழியைத் தெளிய வேண்டும். இந்தத் தெளிவு இல்லாதவர் களே பல சொற்களைச் சொல்ல விரும்புவார்கள் :

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர். (649)

கல்வி என்பது கற்றவர் மட்டும் பயன்பெறுவதற்காக அன்று ; மற்றவர்களுக்கும் எடுத்துச்சொல்லி உணர்த்தத் தக்கதாகும். 'தாம் இன்புறுவது உலகு இன்புறக்' காண வேண்டும் என்பதே உண்மையாகக் கற்றவர்களின் நோக்கம்.

ஆகவே கற்றதைப் பிறர்க்கு உணர்த்தும் திறமைவேண்டும்.
இது எவ்வாறு வரும்? கற்கும்போது தெளிவாகக் கற்று
உணர்ந்தால், அந்தத் தெளிவு நெஞ்சில் இருந்தால், அது
வேண்டியபோது வெளியிடக் கூடிய கல்வியாகும். உள்ளத்
தின் தெளிவு எப்போதும் உரைப்பதில் புலனாகும். எண்ணத்
தெரிந்தவர்களுக்குப் பேசவும் தெரியும். எண்ணத்தில் குறை
இருந்தால்தான், உள்ளத்தில் தெளிவு இல்லாமலிருந்தால்
தான், பிறர்க்கு உணர்த்தமுடியாத நிலை இருக்கும்.
ஆகையால் எண்ணிக் கற்கவேண்டும். தெளிவாகக் கற்று
உணர வேண்டும்; அப்போது தாம் கற்றதைப் பிறர் உணரு
மாறு விரித்துச் சொல்லமுடியும்; அவ்வாறு சொல்லமுடியா
விட்டால், கொத்துக் கொத்தாகப் பூத்த பிறகும் மணம்
கமழாத மலர்களைப் போல் அவர்கள் பயனற்றவர்களே:

இணர்ஊழ்த்தும் நாற மலர் அனையர் கற்றது
உணர விரித்துரையா தார். (650)

**வினை செயல்வகை**

செய்யும் செயல் புகழும் நன்மையும் தருமா என்று
ஆராய்ந்து செய்ய வேண்டும். புகழும் நன்மையும் பயக்காத
செயலை என்றும் செய்யாமல் விடவேண்டும். எவ்வளவு
துன்பம் படுவதாக இருந்தாலும், தெளிந்த அறிவுடையவர்
கள் இழிவு தரும் செயல்களைச் செய்யமாட்டார்கள்.
"என்ன செய்தோம்!" என்று பிறகு வருந்த வேண்டிய
செயலை முன்னமே ஆராய்ந்து செய்யாமல் ஒழிக்க
வேண்டும்; ஒருவேளை தவறிச் செய்தாலும், மீண்டும்
அத்தகைய செயல்களில் ஈடுபடாமல் காத்துக்கொள்வது
நல்லது:

என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை. (652)



இடுக்கட் படினும் இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். (654)

எற்றென்று இரங்குவ செய்யற்க: செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று. (655)

சிலவேளைகளில் நல்ல நோக்கம்கொண்டு தகாதசெய
லைச் செய்ய நேர்வது உண்டு; ஒருவகையில் நன்மை
விளைவதைக் கருதிக் குற்றமான செயலைச் செய்ய நேர்வ
தும் உண்டு. அப்போது அதனால் விளையும் நன்மையைக்
கருதி அதைச் செய்வது கடமையா? அல்லது, குற்றத்தைக்
கருதிக் கைவிடுவது கடமையா? வெவ்வேறு வகையாகக்
கருதுகின்றவர்கள் உண்டு. திருவள்ளுவர் கருத்து மிகத்
தெளிவானது. பொதுக்கடமை சீர்பெற வேண்டும் என்பதை
யும், பிறர் நலத்தைப்போற்றவேண்டும் என்பதையும்,
தன்னலத்தைப் பெரிதாகக்கொள்ளக்கூடாது என்பதையும்
மறக்காதவர்கள் ஒரு முடிவுக்கு வருதல் மிகமிக எளிது.
திருவள்ளுவர் ஓர் எடுத்துக்காட்டைக் கூறி வழி வகுக்கின்
றார். பெற்ற தாய் பசியோடு வருந்துகின்றாள். அவள்
பசியைத் தீர்ப்பதற்காகப் பழியான ஒரு செயலை (லஞ்சம்
வாங்குவது முதலியவற்றுள் ஒன்றைச்) செய்யலாம் என்று
தோன்றுகின்றது. ஆனால் அந்தச் செயல் பொதுக்கடமைக்கு
இழுக்கானது; பிறர் நன்மைக்கு இடையூறானது; ஆகையால்
சான்றோர் பழிப்பார்கள். அதைச் செய்வதா? செய்யாமல்
விடுவதா? மனச்சான்றையே கேட்க வேண்டும். செய்ய
வேண்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் தன் தாய்
பசி தீர்ந்து வாழ வேண்டும் என்ற நோக்கம் இருக்கின்றது;
அது நல்லதே ஆனாலும் தன்னலம்தான். செய்ய வேண்டா
என்ற எண்ணத்தின் அடிப்படையில் பொதுக்கடமைக்கு
இழுக்கு என்றும் பிறர் நன்மைக்கு இடையூறு என்றும்

அஞ்சும் பரந்த நோக்கம் இருக்கின்றது. ஆகையால் அதைச் செய்யாமல் விடுவதே நல்லது என்று திருவள்ளுவர் தெளிவிக்கின்றார். பழியைச் சேர்த்துக்கொண்டு அடையும் ஆக்கத்தைவிட, அதைப் பொருட்படுத்தாமல் சான்றோர் அடையும் பொல்லாத வறுமையே மேலானது என்கின்றார் :

ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. (656)

மழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை. (657)

எதையாவது எப்படியாவது செய்து முடிக்க வேண்டும் என்று கருதிச் சிலர் செயலாற்றிவருகின்றார்கள். பொருள் துறையில் இப்படிச் செய்தால்தான் வெற்றி பெறமுடியும் என்று அவர்கள் நம்புகின்றார்கள். ஆனால் திருவள்ளுவர் அந்த வெற்றி போலி வெற்றியே என்றும், முதலில் வெற்றி போல் தோன்றி முடிவில் துன்பம் தரும் என்றும் எடுத்துரைக்கின்றார்.

சான்றோர் விலக்கிய செயல்களை விட்டொழிக்காமல் செய்கின்றவர்களுக்கு, அவை விரும்பியபடி நிறைவேறினாலும், பிறகு துன்பத்தையே கொடுக்கும். ஒருவன் மற்றவர்களை வருத்தி அழவைத்துக் கைப்பற்றிய பொருள்கள் எல்லாம் அவனை அழவைத்துவிட்டுப் போய்விடும். ஆனால் நல்ல நெறியில் வந்த பொருள்களை அவன் இழந்துவிட்டாலும், அவை பிறகு பயன் தரும் :

கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும். (658)

அழக்கொண்ட எல்லாம் அழப்போம் ; இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை. (659)



இவ்வாறு நன்மையான நெறியில் ஒருசெயலை ஆராய்ந்து செய்கின்றவர்களுக்கு வேறு என்ன வேண்டும்? மனத்திட்பம்—மன உறுதி—வேண்டும். ஒரு செயலைச் செய்து முடிக்கும் உறுதி எது என்றால் மன உறுதிதான் ; மற்றவை அல்ல. இடையூறுகளை முன்னமே ஆராய்ந்து நீக்க வேண்டும் ; ஆனால் செயலாற்றும்போது இடையூறு வந்தால் அதற்குத் தளராமல் மன உறுதியோடு செய்ய வேண்டும். இந்த இரண்டுமே வினை முடிக்கும் வழி என்று சொல்வார்கள் :

வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற. (661)

ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறென்பர் ஆய்ந்தவர் கோள் (662)

இதைச் செய்வேன், இவ்வாறு செய்வேன் என்று சொல்வது யாருக்கும் எளிதே ஆகும். ஆனால் சொல்லிய வாறு செய்வது அருமை. ஆகையால் வாயால் சொல்லிக் கொண்டிருப்பதை விட்டு, உள்ளத்தில் திட்பமாக எண்ணிச் செய்வது கடமை. எண்ணுகின்றவர் செயல் ஆற்றும் போது உறுதியாக இருந்தால், எண்ணியதை எண்ணியவாறே அடைவார்கள். அவ்வாறு உறுதியுடன் செயல் ஆற்றும்போதும், இன்பம் தரும் அந்தச் செயல் முடிவதற்காகத் துன்பம் மிகுதியாக நேர்ந்தாலும் துணிவோடு செய்ய வேண்டும். இத்தகைய வினைத்திட்பத்தை விரும்பிப் போற்றாதவர்கள் வேறு துறையில் எவ்வளவு உறுதி உடையவர்களாக இருந்தாலும் பயன் இல்லை ; அவர்களை உலகம் விரும்பாது :

சொல்லுதல் யார்க்கும் எளிய ; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல். (664)

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின். (666)

துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. (669)

எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டாது உலகு. (670)

நன்றாக ஆராய வேண்டும்; அந்த ஆராய்ச்சி துணிவு கொள்வதில் முடிய வேண்டும்; துணிவு கொண்ட பிறகு செயலாற்றும்போது காலம் நீட்டித்தால் அது குற்றமாகும். ஆனால் மெல்லக் காலம் பார்த்துச் செய்ய வேண்டிய சில செயல்கள் உண்டு! அவற்றை மட்டும் நீட்டித்துச் செய்யலாம். மற்றச் செயல்களைச் செய்யும்போது காலம் நீட்டித்தல் கூடாது.

சூழ்ச்சி முடிவு துணிவெய்தல்; அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது. (671)

தூங்குக தூங்கிச் செயற்பால; தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. (672)

ஒரு செயல் செய்தால் தன்னைச் சார்ந்தவர்களுக்கு நன்மை உண்டாகும். மற்றொரு செயல் செய்தால் பகைவராக உள்ளவர்களின் பகையைப் போக்கித் தன்னோடு சேர்த்துக்கொள்ள முடியும். இந்த இரண்டு செயலும் செய்ய வேண்டியது கடமையே ஆகும். ஆனால் எதை விரைந்து முன்னே செய்ய வேண்டும்? பகைவரைச் சேர்த்துக் கொள்ளும் செயலையே விரைந்து செய்யவேண்டும். ஏன்? உண்மை நண்பர்கள் காலநீட்டிப்பால் மனம் வருந்த மாட்டார்கள்; அன்பு மாற மாட்டார்கள். ஆனால், மற்றவர்கள் அந்த நேரத்திலேயே தன்போக்கை எதிர்பார்த்துக்கொண்டிருப்பார்கள்; ஆகையால் அந்த வாய்ப்பை இழந்து விடாமல், அவர்களைச் சேர்த்துக்கொள்வது கடமையாகும்:

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல். (679)



## தூது

தலைவனிடத்தில் அன்பும், அவனைப் பற்றித் தெளிந்து அவனுடைய கொள்கையை அறியும் ஆற்றலும், சொல்ல வேண்டியதை ஆராய்ந்து சொல்லும் வல்லமையும் ஆகிய இந்த மூன்றும் தூது செல்வார்க்கு இன்றியமையாத பண்புகள்; இந்த மூன்றும் உள்ளவர்களே தலைவனுடைய நம்பிக்கைக்கு உரியவர்கள்; பொதுவாழ்க்கையில் பொறுப்பு ஏற்கத் தக்கவர்கள். இந்தச் சிறப்பியல்புகளோடு அவர்களுக்கு மற்றப் பொதுப்பண்புகளும் வேண்டும்; இயற்கை அறிவு, கண்டவர் விரும்பும் தோற்றம், பலமுறை ஆராய்ந்து கற்ற கல்வி ஆகிய பண்புகளை உடையவர்கள் தூது செல்லத் தக்கவர்கள். அவர்கள் தூது செல்லும்போது, பலவற்றையும் தொகுத்துக் கூற வேண்டும்; கடுஞ்சொற்களை நீக்க வேண்டும்; கேட்பவர் மகிழுமாறு இனிய முறையில் சொல்ல வேண்டும்; இவ்வாறு சொல்லித் தலைவனுக்கு நன்மை பயக்கும் நோக்கம் கொள்ள வேண்டும். சொல்லும் திறமையிலேயே காலமும் முயற்சியும் செலவிட்டுக் கடமையை மறக்கக் கூடாது):

அன்பறிவு ஆராய்ந்து சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று. (682)

அறிவுஉரு ஆராய்ந்து கல்விஇம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு. (684)

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது. (685)

## மன்னரைச் சேர்ந்தொழுகல்

திருவள்ளுவர் எக்காலத்திற்கும் உரிய பொதுவான உண்மைகளையே கூறியபோதிலும் அவருடைய காலத்து மக்களுக்கு விளங்குமாறு அக்காலத்துச் சொற்களை

ஆண்டிருக்கின்றார். ஆதலின்; உண்மைகளைக் கற்க முயலும் போது, சில இடங்களில் அக்காலத்துச் சொல்லை விட்டு இக்காலத்துச் சொல்லைப் பயன்படுத்தினால் கருத்து நன்கு விளங்கும். 'தலைவன் நேரில் வந்தான்' என்பது அக்காலத் தார்க்கு விளங்கியது. 'தலைவன் வண்டியில் வந்தான்' என்பதே இக்காலத்தார்க்கு விளங்குவது. அது போலவே, 'மன்னன்' இன்னும் முடியாட்சிக் காலத்துச் சொல் இக்காலத் துக்கு உண்மையை விளக்கத் தடையாய் நிற்பது; ஆட்சித் தலைவன் என்று வழங்குவதே இன்று பொருந்துவது. ஆகையால் மன்னரைச் சேர்ந்தொழுகல் என்பதற்குத் 'தலைவரைச் சேர்ந்தொழுகல், தலைவரைப் பொருந்தி நடக்கும் முறை' எனக் கொள்வதே தக்க வழி.

இறைமாட்சியில் தலைவனுடைய இயல்பைச் சொல்லும் போது, வந்து காண்பதற்கு எளியவனாய் இருக்கவேண்டும் என்றும், யாரிடத்தும் கடுஞ்சொல் கூறாமல் இன்சொல் பயில வேண்டும் என்றும் திருவள்ளுவர் கூறியுள்ளார். செங்கோன்மையில் ஆளும்முறைபற்றிக் கூறும்போதும், முறைநாடிவருகின்றவர்களுக்கு எளிய செவ்வி உடையவனாக இருக்கவேண்டும் என்று கூறியுள்ளார். இவ்வாறு எளிய வனாய் இனியவனாய் ஒரு தலைவன் நடந்துகொண்டால், அவனை வந்து காண்போர் அளவற்றவராய்ப் பெருகி விடுவார்கள். அதனால் அவர்களைக் கண்டு இன்சொல் கூறிப் பழகுவதிலேயே தலைவனுடைய காலமெல்லாம் செலவாகும். மற்றப் பல கடமைகளை ஆராய்ந்து திறமையோடு செய்வதற்கு வேண்டிய ஒய்வும் அமைதியும் வாய்ப்பும் இல்லாத நெருக்கடி நேரும். ஆயினும், அதைத் தடுத்துக் குறைத்துக்கொள்ள வேண்டும் என்றோ, எளியனாய் இனியவனாய் நடக்கக்கூடாது என்றோ தலைவனுக்குக் கூறவில்லை; தலைவனுடைய பண்புகளாகக் கூறவேண்டிய வற்றை முன்னே கூறியவர். அவனைச் சார்ந்து பழகுகின்ற



வர்களுக்கே சில கடமைகளை இங்கு வற்புறுத்துகின்றார்.

தலைவனைச் சார்ந்து நடக்கின்றவர்கள் அவனிடத்தில் அளவோடு பழக வேண்டும்; அவனை விட்டு மிக நீங்கியும் இருக்கக் கூடாது; மிக நெருங்கியும் இருக்கக் கூடாது; தீயில் குளிர்காய்கின்றவர்கள் மிக நீங்கினால் குளிரும் போகாது. மிக நெருங்கினால் சூடும் தாங்காது என்று உணர்ந்து அளவறிந்து இருப்பது போல், தலைவனிடம் பழக வேண்டும். 'இந்தத் தலைவர் எம்மைவிட வயதில் சிறியவர், எமக்கு இன்ன முறையில் உறவினர்' என்று தலைமைப் பதவியை மதிக்காமல் நடக்கக் கூடாது; பதவிக்கு உரிய பெருமையைப் போற்றி நடக்க வேண்டும். நமக்கு வேண்டியவர் அல்லரோ? நம்மிடத்தில் அவர் தனி அன்பு கொண்டவர் என்று எண்ணி, தலைவனுக்கு வெறுப்பு உண்டாகுமாறு தலைமைப் பதவிக்குப் பொருந் தாத செயல்களைச் செய்யக் கூடாது. 'தலைவனுக்கு நாம் பழையவர்கள், நெடுங்காலமாகத் தெரிந்வர்கள்' என்று கருதித் தகுதியல்லாத தவற்றைச் செய்யக் கூடாது; உரிமை பற்றி அவ்வாறு செய்வது தீங்கு உண்டாக்கும்:

அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழு குவார். (691)

இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோடு ஒழுகப் படும். (698)

கொளப்பட்டோம் என்றெண்ணிக் கொள்ளாத
செய்யார்
துளக்கற்ற காட்சி யவர். (699)

பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும். (700)

தலைவனோடு பேசுகின்ற வாய்ப்பை நன்றாகப் பயன் படுத்திக்கொள்ள வேண்டுமானால், அவனுடைய குறிப்பை

அறிந்து, பேசுவதற்கு ஏற்ற காலத்தையும், ஆராயவேண்டும். காலம் வாய்த்தபோது அவனுக்கு வெறுப்பு இல்லாதசெய்திகளையும் விருப்பமான செய்திகளையும் அவனுடைய மனம் விரும்பும்படியாக எடுத்துச்சொல்ல வேண்டும். விருப்பமானவற்றைச் சொல்லுவதோடு பயனில்லாதவைகளை அவனாகக் கேட்டபோதிலும் எப்போதும் சொல்லாமல் விடவேண்டும் :

**குறிப்பறிந்து காலம் கருதி வெறுப்பில**
**வேண்டுப வேட்பச் சொலல். (696)**

**வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்**
**கேட்பினும் சொல்லா விடல். (697)**

பெரியோர்கள் காணும்படியாக ஒருவனோடு செவியில் நெருங்கிப் பேசுவதும், ஒருவனுடன் சேர்ந்து சிரிப்பதும் செய்யாமல் ஒழுக வேண்டும். அவர்கள் ஏதாவது மறை (ரகசியம்) பேசும் போது, எதையும் ஓர்ந்து செவி கொடுத்துக் கேட்கக்கூடாது ; 'அப்புறம் என்ன ?' என்று தொடர்ந்து சொல்லும்போது தான் கேட்க வேண்டும் :

**செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்**
**ஆன்ற பெரியா ரகத்து. (694)**

**எப்பொருளும் ஓரார் தொடரார்மற்று அப்பொருளை**
**விட்டக்கால் கேட்க மறை. (695)**

குறிப்பறிதல்

தலைவனோடு பேசவும் பழகவும் முயல்கின்றவர்களுக்கு இது கட்டாயம் வேண்டும். அன்றியும், பொதுவாக உலகத்தில் பிறரோடு பழகுகின்றவர்களுக்குக் குறிப்பறிதல் வேண்டும். பேசுகின்ற பேச்சும் செய்கின்ற செயலும் பிறரிடத்தில்



எவ்வாறு பயன் தரும் என்று ஆராய வேண்டுமானால், பிறருடைய உள்ளக் கருத்தை உணர வேண்டும். அது ஒரு தனித்திறமை யாகும். உணர்ச்சி வயமாக வாழ்க்கையைக் கழிக்கின்றவர்களுக்கும் அது இயலாது ; அவர்கள் பெரும்பாலும் தம் உணர்ச்சியைப் பிறரிடம் கொட்ட விரைவார்களே அல்லாமல் பிறர் உள்ளம் எவ்வாறு இருக்கின்றது என்பதை எண்ண மாட்டார்கள். ஆனால் சிலர் மிக வல்லவர்களாய்ப்பயன் பெற்று வாழ்வதற்கெல்லாம் காரணம், அவர்கள் எப்பொழுதும் பிறர் உள்ளத்தை ஆராய்ந்து உணர்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருப்பதுதான். அப்படிப்பட்டவர்களையே உலகமும் போற்றுகின்றது. ஆகையால், வாயால் சொல்லாமலே, முகத்தாலும் கண்ணாலும் உள்ளத்தின் குறிப்பை ஐயப்படாமல் உணர வல்லவனைத் திருவள்ளுவர் புகழ்கின்றார். அவன் இந்த உலகத்திற்கே அணிகலன் என்றும், தெய்வம் போன்றவன் என்றும் கூறுகின்றார் :

**கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்**
**மாறாநீர் வையக்கு அணி. (701)**

**ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்**
**தெய்வத்தோடு ஒப்பக் கொளல். (702)**

உள்ளக் குறிப்பை எவ்வாறு அறிவது ? உள்ளக் குறிப்பு வெளிப்படும் இடம் முகம் ஆகையால், முகத்தை நோக்கியே உணர வேண்டும். தன்னை அடுத்த பொருளைக்காட்டுகின்ற பளிங்கு போல், ஒருவனுடைய நெஞ்சில் மிகுந்திருக்கும் குறிப்பை அவனுடைய முகம் காட்டும். உள்ளம் உவகை உற்றாலும் காய்தல் உற்றாலும் (விரும்பினாலும் வெறுத்தாலும்) அந்த உணர்ச்சியை மற்ற உறுப்புகள் முன்னே உணர்த்துவதில்லை ; முகமே முன்னே உணர்த்துகின்றது.

முகத்தைவிட அறிவு மிகுந்தது வேறொன்று உண்டோ? முகத்தை நோக்கினால் எல்லாம் உணரலாம் :

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம் (706)

முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ? உவப்பினும்
காயினும் தான்முந் துறும். (707)

முகம் என்று பொதுவாகக் கூறினாலும், கண்ணிலேயே அந்த உள்ளக்குறிப்பு நன்றாக வெளிப்படுகின்றது. அதனால் கண்பார்வையின் வேறுபாட்டை உணரவல்லவர்களாக இருக்தால், மற்றவர்களின் கண்ணே அவர்களின் உள்ளத்தில் உள்ள பகையையும் நட்பையும் சொல்லிவிடும். நுண்ணறிவு உடையவர்களுக்கு அளக்கும் கோலாக இருப்பதும் அவர்களுடைய கண்ணே ; வேறு கருவி அன்று :

பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின். (709)

நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்
கண் அல்லது இல்லை பிற. (710)

அவையறிதல்

ஒரு பொருளை எடுத்துச் சொல்வதானால் யாருக்குச் சொல்கின்றோம் என்று ஆராயாமல் பேசுவது கூடாது. அதனால் ஒரு பயனும் இல்லை. ஆகையால், சொல்லும் சொற்களின் தொகுதியை அறிந்த தூயவர்கள், மன்றத்தில் (அல்லது கூட்டத்தில்) உள்ளவர்களின் தன்மையை அறிந்து கொண்டு அதற்கு ஏற்றபடி ஆராய்ந்து சொல்ல வேண்டும். அதுவே எல்லாச் சொற்களையும் பயன்படுத்த அறிந்தவர்களின் கடமையாகும், சொற்களை வழங்கும் முறையை



அறிந்தவர்களுக்கும் ஒரு கடமை உண்டு ; அதாவது, அவர்கள் மன்றத்தில் (அல்லது ஒரு கூட்டத்தில்) உள்ளவர்களின் செவ்வியை (பொருத்தமான நேரத்தை) ஆராய்ந்து நன்றாக உணர்ந்த பிறகே பேச வேண்டும் :

அவைஅறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகை அறிந்த தூய்மை யவர். (711)

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடை தெரிந்த நன்மை யவர். (712)

அறிவு மிக்கவர்களின் முன் தாமும் அறிவு மிகுந்தவர்களாகப் பேச வேண்டும். அறிவு குறைந்தவர்களின் முன் தாம் ஒன்றும் அறியாதவர்கள் போல் இருக்க வேண்டும். தம்மைவிட அறிவு முதிர்ந்தவர்களின் கூட்டத்தில் முந்திக்கொள்ளாமல் அடக்கமாக இருக்க வேண்டும் ; அது நல்ல இயல்பு என்று கூறப்பட்டவைகளுள் மிக நல்ல இயல்பாகும் :

ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் ; வெளியார்முன்
வான்சுதை வண்ணம் கொளல். (714)

நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு. (715)

கற்றவர்கள் தம்மைப்போல் கற்றவர்களின் கூட்டத்தில் பேசுவது மிகவும் பயனளிக்க வல்லது. குற்றம் நீங்கச் சொற்களை ஆராய வல்ல அறிஞர்களின் கூட்டத்தில் கற்றறிந்தவர்களின் கல்வி விளக்கம் பெறும். சொல்வதை நுட்பமாக உணர வல்லவர்களின் முன் பேசுவது, தானே வளரும் பயிர் உள்ள பாத்தியில் நீர் சொரிவதைப்போன்றது அதனால் அந்தக் கல்வி மேன்மேலும் வளர்ந்தோங்கும் :

கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லா ரகத்து. (717)

உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று. (718)

மன்றத்திலும் மற்றக்கூட்டத்திலும் அஞ்சாமல் பேசுவது ஒரு தனித்திறமையாகும். போர்க்களத்தில் அஞ்சாமல் போர் செய்யும் திறமையைவிட, அவைக்களத்தில் அஞ்சாமல் பேசும் திறமை சிறந்தது. பகைவர்களை எதிர்த்துப் போர்க்களத்தில் சாகத்துணிந்தவர்கள் பலர் உலகத்தில் இருக்கின்றார்கள். ஆனால் அறிஞர்களின் கூட்டத்தில் அஞ்சாமல் ஒன்றைச்சொல்லவல்லவர்கள் சிலரே. அவ்வாறு அஞ்சாமல் பேசிமறுமொழிசொல்லும் வல்லமை பெறுவதற்காகக் கற்க வேண்டிய முறைப்படி கற்கவேண்டிய அளவு அறிந்து நூல்களைக் கற்க வேண்டும். அவ்வாறு நூல்களைக் கற்ற பிறகும் நுண்ணிய அறிவுடையவர்களின் கூட்டத்தில் பேச அஞ்சினால், அந்தக் கல்வியால் பயன் இல்லை. அஞ்சாமை இல்லாதவர்களுக்கு வாளோடு தொடர்பு இல்லாதது போல், இவர்களுக்கும் நூலோடு தொடர்பு இல்லை. பகைவர்களின் எதிரே போர்க்களத்தில் நிற்கும் பேடியின் கையில் அகப்பட்ட கூரியவாளும், அவைக்களத்தில் அஞ்சுகின்றவன் கற்ற நூலும் ஒரே வகை. நல்ல நூலைக் கற்றறிந்தும் அந்த நூலால் பயன்பெருக்காமல் இவ்வாறு நல்லவர்களின் கூட்டத்தைக் கண்டு அஞ்சுகின்றவர்கள், கல்லாதவர்களை விடத் தாழ்ந்தவர்களே ஆவார்கள் :

பகையகத்துச் சாவார் எளியர் ; அரியர்
அவையகத்து அஞ்சா தவர். (723)

ஆற்றின் அளவறிந்து கற்க அவைஅஞ்சா
மாற்றம் கொடுத்தற் பொருட்டு. (725)

வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை அஞ்சு பவர்க்கு ? (726)



பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சு மவன்கற்ற நூல். (727)

கல்லா தவரின் கடைஎன்ப கற்றறிந்தும்
நல்லார் அவை அஞ்சு வார். (729)

நாடு

வாழும் மக்களுக்கு வேண்டிய உணவு உடை முதலிய எல்லாவற்றையும் தருவதாகவும் கவலையற்று அமைதியாக வாழ்ந்து இன்புறுவதற்கு ஏற்றதாகவும் நாடு இருக்கவேண் டும். இல்லையானால் அந்த நாட்டில் நல்லரசு அமையாது ; மக்கள் கூடி வாழும் வாழ்க்கை நிரம்பாது. ஆகையால் நாட்டின் இயல்பைத் திருவள்ளுவர் தனியே ஓர் அதிகாரத்தில் கூறுகின்றார்.

குறையாத விளைபொருள் வேண்டும் ; அவற்றை எல்லோரும் பெற்று நுகரச் செய்யுமாறு அறத்தைப் போற்றும் அறவோர் வேண்டும் ; தாழ்வு இல்லாத செல்வம் உடையவர்கள் வேண்டும் :

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு. (731)

செல்வர் வேண்டும் என்று திருவள்ளுவர் கூறியிருப்பது முடி யாட்சி முறைக்கு ஏற்றவாறுசெல்வர் சிலரையே குறிப்பதாக இருந்தாலும், இக்காலத்துக்குக் குடியாட்சி முறைக்கு ஏற்ப எல்லா மக்களையும் குறிப்பதாக நாட்டிற்குப் பொதுவாகவே கொள்ளலாம். குடியாட்சிமுறையில், நாட்டின் செல்வநிலை எத்தகையது என்று கருதப்படுதலே தவிர, நாட்டில் உள்ள செல்வர் எத்தனைபேர் என்று ஆராயப்படுவது இல்லை. அன்றியும், செல்வர் சிலர் என்ற அளவிலேயே வறியவர்

பலர் இருக்க நேரும் ; அத்தகைய நாடு சிறந்த நாடு அன்று.
வறுமை என்பது எந்த மூலை முடுக்கிலும் இல்லாமல் எல்லா
ரும் செல்வராக விளங்கும் நாடே நல்ல நாடு. ''வண்மை
இல்லை ஓர் வறுமை இன்மையால்'' என்றும், ''கொள்வார்
இலாமையின் கொடுப்பாரும் இல்லை'' என்றும், ''எல்லாரும்
எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தல்'' என்றும் புலவர்
கண்ட நல்ல கனவிற்கு ஏற்ப, நாட்டுமக்கள் எல்லோரும்
தாழ்விலாச் செல்வராக இருப்பதாகக் கொள்ளுதல் பொருந்
தும். ''தாழ்விலா'' என்ற அடையும் இந்தக் கனவிற்கு ஏற்ற
கருத்தைப் பயப்பதாகக் கொள்ளலாம். ஒரு சிலர் செல்வராக
விளங்கி மற்றப் பெரும்பாலோரைச் சுரண்டி அதனால் தம்
செல்வத்தைப் மேன்மேலும் பெருக்கிக்கொள்ளும் வாழ்வு
குறை உடைய வாழ்வுதான் ; தாழ்வுடைய வாழ்வுதான்.
வறியவர் பெரும்பாலோராக உள்ள நாட்டில் பொருள் குவி
த்து வைத்திருக்கின்றவர்களைச் 'செல்வர்' என்ற சொல்லால்
குறிப்பதும் பொருந்தவில்லை. அவர்களிடம் உள்ள பொருள்
மற்றவர்களிடமிருந்து வந்து சேர்ந்துள்ள தொகுதியே
அல்லாமல், நாட்டின் பெருமைக்கு ஏற்ற செல்வமாகக்
கொள்ளத் தகாது. ஒரு மாந்தோப்பில் எல்லா மாமரங்களி
லும் மிகுதியாகக் காய்த்துக் கனிந்திருந்தால் அந்த மாந்
தோப்பை வளமான தோப்பு என்று கூறலாம். ஆயிரம்
மாமரங்கள் உடைய அந்தத் தோப்பில் மரத்திற்கு நாலை
ந்து கனிகளே கிடைத்து, அவற்றை எல்லாம் அறுத்து
இரண்டு மரங்களின் அடியில் கொட்டிக் குவித்து வைத்திருந்
தால், அந்தத் தோப்பை வளமானது என்று கூறமுடியுமா ?
அந்த இரண்டு மரங்களின் கீழே நாலாயிரம் கனிகள் சேர்ந்து
குவிந்திருப்பதைக் கண்டு, ''என்ன வளமான தோப்பு!'
என்று வியப்பது அறியாமையே. மற்ற மரங்களையும் பார்த்து



அவைகள் ஒவ்வொன்றிலும் நூறு நூறாகக் கனிகள் இருந்
தால், ''வளமான தோப்பு'' என்று அதை வாயாரப் புகழ
லாம் ; இல்லையானால், அந்தத் தோப்பைப் போற்றுவதிலும்
பயன் இல்லை ; அந்த இரண்டு மரங்களைப் பார்த்து வியப்
பதிலும் பயன் இல்லை, வாணிகக்காரணத்தால் குவித்துக்
கொட்டப் பட்டுள்ள மாங்கனிகளே தவிர, அந்த இரண்டு
மரங்களுக்குப் பெருமைதரும் கனிகள் அல்ல என்று உணர
வேண்டும். ஒரு நாட்டின் செல்வ நிலையையும் அவ்வாறே
ஆராய்ந்து போற்ற வேண்டும். வறியவர் பலரிடமிருந்து
ஒரு சிலரிடம் குவிந்துள்ள செல்வம் தாழ்வுடைய செல்வமே
ஆகும். எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தும்
காட்சியே தாழ்விலாச் செல்வக் காட்சியாகும்.

நாட்டில் இருக்கத் தகாதவை சில உண்டு. நல்லநாட்டில்
அவை இடம் பெறக் கூடாது. அவை, மிக்க பசி, தீராத நோய்,
அழிக்கும் பகை என்பன. பசி வேண்டும் ; பசித்தால் தான்
புசிக்க வேண்டும்; ஆகையால் உழைத்து உடல்நலம் காக்கும்
அளவுக்குப் பசி வேண்டும் ; ஆனால் வறுமைத் தொல்லை
யால், உணவுப்பொருள் போதாதகுறையால் வரும் பசிக்
கொடுமை—வறுமையால் பட்டினி இருந்து இருந்து மிகுகின்ற
பொல்லாத பசி—ஒருநாட்டில் இருக்கக்கூடாது. அதனால்
தான் பழங்காலத்துப் புலவர்கள் ஒரு நாட்டைச் சிறப்பிக்கும்
போது, அதன் மாட மாளிகைகளை வருணித்து மயங்கி
நிற்காமல், ''பசிஎனல் அறியாப்பணைபயில் இருக்கை''
என்றுபசி அற்ற நாட்டையே வளமான நாடாகப் போற்றிப்
புகழ்ந்துவந்தனர். அடுத்தது. நோய் ; நோய் உடலுக்கு
இயற்கை ; முதுமையாலும் தளர்ச்சியாலும் சிறு சிறு நோய்
கள் வந்து உடல் அழிவது இயற்கை ; அவற்றைப் போக்கும்
வழியும், 'மருந்து' என்னும் பகுதியில் கூறப்படுகின்றது.

ஆனால் இளமையிலேயே நோய்கள் வருவதும், அவைகள் ஓயாமல் வருத்துவதும், தீராமல் நிற்பதும், தொத்து நோய்களாகப் பரவுவதும் நாட்டின் பெருமைக்குக் குறைவாகும். அடுத்தது ; பகை, கருத்து வேறுபட்டாலும் உரிமைப் போராட்டத்தாலும் எதிர்ப்பு இருப்பது இயற்கை ; அத்தகைய எதிர்ப்பினால் அறிவு வளர்ச்சியும் உண்டு. அரசியல் முற்போக்கும் உண்டு ; ஆனால் கருத்து வேறுபாடும் உரிமைப் போராட்டமும் ஒருவரை ஒருவர் திருத்தி ஆக்கவேலை செய்விக்கும் அளவில் நிற்காமல், ஒருவரை ஒருவர் கெடுக்கும் அழிவு வேலைக்குத் திருப்புமானால், அது நாட்டிற்கு இழுக்காகும். ஆகையால், மிக்க பசி, தீராநோய், அழிக்கும்பகை இம் மூன்றும் சேராமல் இயல்வதே நாடு ஆகும் :

**உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
**சேராது இயல்வது நாடு.** (734)

நாட்டில் அழிவுவேலை செய்யும் பகை எழுந்தால், பலவகைக் கட்சிகள் வளரும் ; கட்சியாளர் தம் தம் கட்சியை வலுப்படுத்தி எதிர்க் கட்சியை அழிக்க முயல்வார்களே அல்லாமல், நாட்டின் பொதுநன்மையைக் கவனிக்க மாட்டார்கள். வெளிப்படையாக எதிர்ப்பவர்கள் இவ்வாறு செய்வார்கள். சிலர் தந்திரத்தையே கையாண்டு, உடனிருந்தே கெடுதி செய்யும் உட்பகையாக மாறுவார்கள். இன்னும் சிலர் வாணிகம் கைத்தொழில் முதலிய துறைகளைக் கைப்பற்றியும் நிலப் பரப்புகளை வைத்துக்கொண்டும் செல்வாக்குப் பெற்று அரசாங்கத்தை அலைத்துத் தொல்லை கொடுக்கும் கூட்டமாக நிற்பார்கள் ; எந்த முற்போக்கான செயலுக்கும் இடையூறு செய்துகொண்டு, அரசாங்கம் முன்னேறாதபடி பிற்போக்கிலேயே இருக்கச் செய்வார்கள். ஆகையால், பலவகைக்



கட்சிகளும், உட்பகையும், அரசாங்கத்தை ஆட்டி அலைக்கும் கூட்டத்தாரும் இல்லாத நாடே நல்ல நாடு :

**பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்**
**கொல்குறும்பும் இல்லது நாடு.** (735)

சில நாடுகள் இயற்கைவளம் உடையவை; சில நாடுகள் இயற்கைவளம் இல்லாதவை. இயற்கைவளம் உடைய நாடுகளில் மக்கள் வருந்தாமல் பயன்பெற முடியும். மற்ற நாடுகளில் பாடுபட்டு வருந்தினால் தான் ஓரளவு பயன் கிடைக்கும். அப்படிப்பட்ட நாடு, நல்ல நாடு அன்று. மக்கள் நாடிப் பாடு படாமலே வளம் தருகின்ற நாடே நாடு என்று போற்றத்தக்கது. அப்படிப்பட்ட இயற்கை வளமும் மற்றச் சீரும் அமைந்தபோதிலும், நல்ல அரசாட்சி அமையவில்லையானால், பயன் இல்லை. ஆகையால் நல்ல நாட்டிற்கு இயற்கைவளமும் மற்றச் சீரும் போல அரசாட்சியின் செம்மையும் வேண்டும் :

**நாடென்ப நாடா வளத்தன ; நாடல்ல**
**நாட வளம்தரும் நாடு.** (739)

**ஆங்கமைவு எய்தியக் கண்ணும் பயம்இன்றே**
**வேந்தமைவு இல்லாத நாடு.** (740)

திருவள்ளுவர் நாட்டைப்பற்றி மேலும் கூறும்போது, கேடில்லாத (கேடு அறியாத) நாடாக இருக்க வேண்டும் (736) என்கின்றார். பகைவரால் அழிக்க முடியாததாகப் பழங்காலத்தில் நாடு அமைத்து வந்தார்கள். அதற்காகவே நீர் அரண் நில அரண், மலை அரண், காட்டு அரண் என்னும் இயற்கை அரணும் செயற்கை அரணும் நாட்டைச் சுற்றி அமையச் செய்தார்கள். அவற்றால்பகைவர் நாட்டினுள்புகுந்து அழிக்க முடியாதபடி காத்துக்கொள்ள முடியும். ஆனால், இந்தக் காலத்தில் பகைவர்களுக்கு நிலப்படை மட்டும் அல்லாமல்,

நீர்ப்படையும் உள்ளது ; நெடுந்தொலைவிலிருந்து வானத்
திலேயேவந்து மேலிருந்தே குண்டு எறிந்து அழிவுபடுத்தும்
வானப்படையும் உள்ளது. நொடிப்பொழுதில் பல ஊர்
களையும் நகரங்களையும் பெருநிலப் பரப்பையும் சேர்த்து
ஒருங்கே அழித்துப் பாழாக்க வல்ல அணுக்குண்டுகள்
தோன்றியபிறகு, இத்தகைய அரணால் பயன் இல்லை என்பது
புலனாகிவிட்டது. வளமான மருத நிலங்களும் பசும்புல்
காணாத கொடிய பாலையாக மாறக் கூடிய அளவுக்கு
அணுக்குண்டின் அழிவு வேலை ஆற்றல் மிக்கதாக இருக்கின்
றது. ஆகையால், கேடு அறியாத நாடு, கெட்டகாலத்திலும்
வளம் குன்றாதநாடு என்று இக்காலத்தில் ஒருநாட்டை
அமைத்து கொள்வது அரிதாகிவிட்டது. உலகமெல்லாம்
ஒன்றுபட்டுப் போர்க்கருவிகளை ஒழிப்பது ஒன்றே இன்று
எல்லா நாடுகளுக்கும் வேண்டிய அரணாக உள்ளது ; அந்த
நாள் வரும் வரையில், தற்காப்புத் தேடிக்கொள்ளாமல்,
போர்க்கருவிகளைப் படைக்காமல், போர்ப் பயிற்சியும்
பெறாமல், போர் செய்ய வரும் நாடுகளையும் எதிர்க்காமல்
வாழ வல்ல நாடு ஒன்றுதான் அழிவுபடாமல் இருக்க
முடியும். ஆகவே நில அரண் முதலிய ஒருவகை அரணும்
தேடிக்கொள்ளாமல் இருக்கும் நாடு அழிவிற்குத் தப்பினாலும்
தப்பக்கூடும் ; மற்ற நாடுகள் போர்ப்பயிற்சி பெற்றுஎதிரிகளை
எதிர்க்கத்தெரிந்த காரணத்தாலேயே, போரின் அழிவுகளுக்கு
இரையாவது உறுதியாக உள்ளது. ஆகவே, இன்று கருத
வேண்டிய அரண் அறிவாகிய அரண், எதிர்ப்பின்மையாகிய
அரண், தற்காப்பு இன்மையாகிய அரண் முதலியனவே
ஆகும். அறிவைச் ‘செறுவார்க்கும் உள் அழிக்க லாகா
அரண்’ என்றுதிருவள்ளுவர் கூறியிருக்கின்றார் ; அது போன்ற
மற்றக்கருத்துக்களையும் அறத்துப்பாலில் விளக்கியிருக்கின்
றார். அவற்றை ஆராய்ந்தால் ஓர் உண்மை புலனாகின்றது ;



மக்கள் தொடக்கத்தில் தம் தம் உடல்வலிமையையே
தற்காப்புக்கு உரியதாகக் கொண்டார்கள் ; பிறகு கல் கொம்பு
முதலியவைகளைத் தற்காப்புக்குத் தேடினார்கள்; அதன்பின்,
இரும்பு முதலியவற்றால் செய்த வாள் வேல் முதலிய
கருவிகளைத் தேடினார்கள் ; அதற்கும் பிறகு மதில்சுவர்
முதலியவற்றை அமைத்து அரண் என்றார்கள் ; அதற்குப்
பின், யானை குதிரை முதலியவற்றையும் துணைக்குச் சேர்த்
துக்கொண்டார்கள் ; வாள்வேல் முதலியவற்றின் இடத்தில்
துப்பாக்கியும் பீரங்கியும் வந்தன ; யானை குதிரை முதலிய
வற்றின் இடத்தில் டாங்கி, நீர்மூழ்கி, விமானம் முதலியவை
வந்தன ; வெடி மருந்துகளோடு, நச்சுப்புகை வளர்ந்தது ;
மற்றக் குண்டுகளோடு அணுக்குண்டும் வளர்ந்தது ; ஒரு சிறிய
இடத்தில்களம் அமைத்துப் போர் செய்வதுபோய், உலக
மெல்லாம் போர்க்களமாகப் போர் செய்யும் முறை வந்தது.
யாரிடமிருந்து யாரைக் காப்பாற்றுவது, எங்கிருந்து எப்பகுதி
யைக் காப்பாற்றுவது, எதனால் எவ்வாறு காப்பாற்றுவது
என்பன அறியமுடியாத நிலை வந்துள்ளது ; அரண் என்பது
எது என்றே தெரியாத நிலைவந்துள்ளது. உடல்வலிமையை
நம்பித் தொடங்கிய முயற்சி, புறத்தே உள்ள சுவரையும்
இரும்புக் கருவிகளையும் நம்பும் முயற்சியாய், அணுக்குண்டு
வரையில் வளர்ந்து வளர்ந்து, இறுதியில் புறத்தில் உள்ள
எதையும் நம்பக் கூடாமல், அகத்தில் உள்ள நட்பையும்
அன்பையும் அறிவையும் நம்ப வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு
ள்ளது. நட்பால் எதிர்ப்பின்மை, அன்பால் தற்காப்பின்மை,
அறிவால் அழிவின்மை என்று அரண் தேடிக்கொண்டு,

**செயற்கரிய யாஉள நட்பின் ? அதுபோல்**
**வினைக்கரிய யாஉள காப்பு?** (781)

புறத்துறுப்பு எல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு? (79)

அறிவற்றம் காக்கும் கருவி; செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண். (421)

என்னும் வாய்மொழிகளைப் போற்றி நடக்க வேண்டிய நிலைமை வந்துள்ளது; இதை வல்லரசுகள் உணர நாள் ஆகலாம். ஆனால் உலகத்தில் உள்ள எல்லா அறிஞரும் உணர்ந்து விட்டார்கள். இன்னொரு வகையாக நோக்கினால், அறத்தை ஒருவாறு புறக்கணித்துப் பொருளிலேயே பொருளுக்குத் தற்காப்புத் தேட உலகம் முயன்று முயன்று தோற்றுவிட்டது. பொருளுக்கு (அரசியல் வாழ்வுக்குக்) காப்புச் செய்ய வல்லது அறமே என்னும் உண்மையை உலகம் உணர வேண்டிய நிலைமை வந்துவிட்டது.

## பொருள் செயல்வகை

மதிப்பு இல்லாதவர்களையும் மதிக்கத் தக்கவராகச் செய்யும் சிறப்பு உடையது பொருள். ஆகையால் அந்தப் பொருளைவிட ஈட்டத் தகுந்த பொருள் வேறு இல்லை. பொருள் இல்லாதவர்களை எல்லாரும் இகழ்வார்கள்; பொருளுடைய செல்வரை எல்லாரும் சிறப்புச் செய்வார்கள்:

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள். (751)

இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு. (752)

உடைமை இருவகைப்படும். அவை தனியுடைமை, பொதுவுடைமை என்பன. முடியாட்சிக் காலத்தில் தனியுடைமைப் பகுதி மிகுதியாக இருக்கும்; பொதுவுடைமைப்



பகுதி குறைவாக இருக்கும். முடியாட்சியில் நிலம், வீடு முதலிய பலவும் தனியுடைமையாக விளங்கும்; தெரு, மன்றம், கோயில், குளம் முதலியவை பொதுவுடைமையாக விளங்கும். குடியாட்சியில் கோயில் குளம் முதலியவை போலவே, நிலம், வீடு முதலியவைகளும் பொதுவுடைமை யாக விளங்குதல் உண்டு: ஆனால் அப்போதும் தனியுடை மைப் பகுதி ஓரளவு உண்டு. ஒருவருடைய இல்லாழ்க்கையும் அதன் தொடர்பானவைகளும் தனியுடைமைப் பகுதியாக விளங்கும்; அவ்வாறே சமய வாழ்க்கையும் அதன் தொடர் பானவைகளும் தனியுடைமைப் பகுதியாக விளங்கும்; இவை என்றைக்கும் பொதுவுடைமைப்பகுதியாக ஆக முடியாதவை. இன்று வாழ்க்கைத் துறைகளில் பலபொதுவுடைமையாகி நிற்கின்றன. பழங்காலத்தில் தெருவிளக்கும் வீட்டுவிளக்கும் தனியுடைமைப்பகுதிகள். இன்று மின்சரர நலன் பரவிய இடங்களில், எல்லா விளக்குகளுக்கும் அடிப்படையான மின்சாரம் பொதுவுடைமையாக இருக்கின்றது. நகரங்களில் எல்லா வீடுகளுக்கும் வரும் குழாய்த் தண்ணீர் பொதுவுடை மையாக இருக்கிறது. எல்லாருக்கும் உரிய தபால், தந்தி, வானொலி முதலியவை பொதுவுடைமையாக உள்ளன. ரயில் கல்விநிலையம் முதலியவற்றின் அடிப்படையும் பொதுவுடைமையாகவே உள்ளது. இவற்றை எனக்குத்தான் அல்லது எமக்குத்தான் என்று ஒருவரோ ஒரு சிலரோ உரிமைகொண்டாடிப் பிறர்க்கு மறுக்கமுடியாது. இதுதான் காலப்போக்கில் நம்மை அறியாமல் நேர்ந்துள்ள மாறுதல். எல்லாம் அரசாங்கத்தின் செல்வம்; ஆகவே, அரசங்கத்தின் உறுப்பினராகிய குடிமக்கள் எல்லோருக்கும் அதை அனுப விக்க உரிமை உண்டு ;இதுவே இந்த மாறுதலின் அடிப்படை. செல்வ அரசாங்கத்தின் உரிமை என்று கொண்டு

குடியாட்சியில் மக்கள் பொறுப்பு ஏற்கின்றார்கள். இந்நிலை
யில் பொருள் இல்லாதவர் என்று சிலரைச் சொல்ல|முடியாது;
உடையவர் என்று சிலரைச் சொல்ல முடியாது ; உடலாலோ
மூளையாலோ உழைக்கும் தொழிலே பொருளாகக் கொள்ளப்
படும். தொழில் உடையவர் பொருளுடையவராகக் கருதப்
படுவார்கள் ; தொழில் இல்லாதவர் பொருள் இல்லாதவரா
கக் கருதப்படுவார்கள். தொழில் இல்லாதவரை எல்லாரும்
எள்ளுவார்கள் ; தொழில் உடையவரை எல்லாரும் சிறப்புச்
செய்வார்கள். இந்தக் குறள் மொழிகளுக்கு எதிர்காலத்தில்
இத்தகைய பொருளே கொள்ளப்படும்.

ஆராய்ந்து பார்த்தால் இதில் ஒன்றும் புதுமை இல்லை.
தொடக்கத்தில் இந்த நிலைமை இருந்தது. பணம் என்ற
ஒன்று தோன்றாத பழங்காலத்தில், உழைத்துத் தொழில்
செய்தவர்களிடத்திலேயே காய், கனி, கிழங்கு, நெல் வரகு,
உப்பு, உடை முதலிய எல்லாம் இருந்தன. இந்த உணவுப்
பொருள்களும் உடை முதலிய பொருள்களுமே அந்தக்
காலத்தில் பொருள் என்று போற்றப்பட்டன. மிகுதியாக
உழைத்துத் தொழில் செய்தவர்களிடம் உணவுப்பொருளும்
மற்றப்பொருளும் மிகுதியாக இருந்தன ; அதனால் அவர்கள்
செல்வர் என்று போற்றப்பட்டார்கள். அளவோடு உழைத்த
வர்களிடம் அளவாகப் பொருள் சேர்ந்திருந்தது ; அவர்கள்
பிறரிடம் இரந்து கேட்காமல் வாழ்ந்தார்கள். உழைக்க
வாய்ப்பு இல்லாமையால் தொழிலின்றி இருந்தவர்களிடம்
உணவுப்பொருள் முதலியவை இல்லாமையால் அவர்கள்
இரந்து உணவுப்பெற்று வாழ்ந்தார்கள், அவர்களைச்செல்வர்
வெறுக்காமல் உதவி செய்தார்கள் ; அவ்வாறு உதவி செய்
வதை அறமாகவும் கொண்டார்கள் ; அந்தக்காலத்தில் உண
வுப்பொருள் முதலியவை வைத்திருந்தவர்களுக்கு மதிப்பு



இருந்தது ; இல்லாதவர்களை எல்லாரும் இகழும் நிலைமை
இருந்தது, இது உழைப்பே பொருளாக இருந்த காலம்.

பண்டமாற்று வாழ்க்கைக்கு வேண்டியதாக இருந்தது
ஒரு பொருளைக் கொடுத்து மற்றொரு பொருளை மக்கள்
பெற்று வந்தார்கள். அதாவது, தம்முடைய உழைப்பின்
பயனில் சிறு பகுதியை மற்றவர்களுக்குக் கொடுத்து அவர்
களுடைய உழைப்பின் பயனில் ஓரளவைத் தாம் பெற்று
வந்தார்கள். ஆகவே உழைப்பே மாறி மாறிப் பயன் அளித்
தது எனலாம். ஆனால், பண்டமாற்று மெல்ல மெல்லப்பண
மாற்றுக்கு இடம் கொடுத்த பிறகு, உழைப்பின் மதிப்பு
மாறியது. பணத்தைப் பொருளுக்கும் பொருளைப் பணத்
துக்குமாக மாற்றுவதில் சிலர் வல்லவர் ஆனார்கள். இவ்
வாறு மாற்றுவதன் வாயிலாக, கொள்வதை மிகுதியாகக்
கொண்டு, கொடுப்பதைக் குறைவாகக் கொடுக்கக் கற்றுக்
கொண்டார்கள். ஆகவே, கொள்வதில் கொண்ட மிகுதிப்
பொருளும், கொடுப்பதில் காத்த எஞ்சிய பொருளுமாக
இருவகையிலும் பொருள் சேர்க்கக் கற்றார்கள். உழைத்த
வர்களுடைய உழைப்பின் பயனை எளிய முறையில் பெற்றார்
கள் ; பணமாற்று இவர்களைப் பொருளுடையவர்களாகச்
செய்தது. இவர்களே வணிகர் (வியாபாரிகள்) எனப்பட்டவர்.
திருவள்ளுவர் காலத்தில் பண்டமாற்றே வாணிகமாகச்
செழித்திருந்தது ; இந்தப்பணமாற்று வாணிகம் (வியாபாரம்)
அப்போது வளர்ச்சி பெறவில்லை. அதனால் அவர் நடு
நிலைமை உடைய பண்டமாற்றை மட்டும் ஒரே ஓர் இடத்
தில்—நடுநிலைமை என்ற அதிகாரத்தின் இறுதியில் - சுட்டி
யுள்ளார்.

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின். (120)

பிறர் பொருளையும் தம் பொருள்போல் போற்றிப் பண்ட மாற்றுச் செய்தலே வாணிகம் செய்வார்க்கு வேண்டிய நடுவு நிலைமை என்று கூறியுள்ளார். அப்போதும் நடுவுநிலைமையை விளக்குவதுதான் அவர்நோக்கமே அல்லாமல் வாணிகத்தை விளக்குவது அன்று. வாணிகத்தைப்பற்றித் தம் நூலில் வேறு எங்கும் அவர் கூறவில்லை. அரசாட்சி முறை பற்றி விளக்கிப்பொருளின் திறத்தை எல்லாம் கூறுகின்ற ஆசிரியர் வாணிகத்தைப்ற்றிப் பொருட்பாலில் கூறாதது வியப்பாகத்தோன்றும். உண்மை என்ன எனில் வாணிகம் ஒருநாட்டின் வாழ்விற்கு இன்றியமையாத சிறப்புடையது அன்று ; மற்ற அறங்களைப் போற்றி மக்கள் வாழ்வார்களானால் : பண்ட மாற்று என்பது தானாகவே நடைபெறக்கூடியதாகும். மற்ற அறங்கள் வீழ்ச்சி அடையும் காலத்தில் தான் பணமாற்று என்பது தலையெடுக்கும் ; அப்போது, உழைத்துத்தொழில் செய்தவர்களிடத்தில் உணவுப்பொருள் முதலியவைசேர்வதில்லை. பணமாற்றுச் செய்கின்றவர்களிடத்தில் உணவுப்பொருள் முதலியவை சேர்ந்துவிடும். உழைத்துத் தொழில் செய்து விளைபொருள் உண்டாக்குகின்றவர்களுக்கு மதிப்பு இருக்காது ; பணமாற்றுச் செய்து பணம் சேர்க்கின்றவர்களுக்கே மதிப்பு இருக்கும். உழைக்கின்றவர்களுக்கு அரசாங்கத்தில் செல்வாக்கு இருக்காது ; உழைப்பில்லாமல் பணமாற்றுச்செய்கின்றவர்களே அரசாங்கத்தை ஆட்டிவைப்பார்கள். இது அறம் பிறழ்ந்த வாழ்வே ஆகும். உடல் வன்மையை நம்பித் தொடங்கிய தற்காப்புமுறை அணுக்குண்டு வரையில், வளர்ந்து மீண்டும் உடலினிடமே முடிந்து உள்ளத்துப்பண்புகளையே அரணாகத் தேடும் நிலை வரவில்லையா? அதுபோல். உழைப்பே பொருளாக இருந்த நிலைமைபோய், பண்டமாற்று மெல்லப் பணமாற்றாய்ப் பெருகும் வரையில் வளர்ந்து.



மீண்டும் உழைப்பே பொருளாகும் காலம்வரும். ஆகையால், பொருள்செயல்வகை என்ற அதிகாரத்தில் திருவள்ளுவர் கூறும் கருத்துகளைக் கற்றுத் தெளிய வேண்டுமானால், உழைப்பையே பொருளாகக் கருதும் கருத்து வேண்டும். இல்லையேல், எப்படியாவது பணம் சேர்த்தவர்களுக்கே உலகத்தில் மதிப்பு உண்டு என்று பொருள் படும் ; அறம் ஓதிய திருவள்ளுவரே இவ்வாறு பொருளைப் பெரிதாகப் போற்றுகின்றாரே என்று முரண்பாடு தோன்றும். அது தவறு ; உழைத்து அறநெறியில் வந்த பொருளைப் பற்றியே அவர் இங்குக் கூறுகின்றார்.

திருவள்ளுவர் பொருட்பாலில் பொருள் செயல்வகை ஓதும்போது அறத்தை நன்கு வற்புறுத்துகின்றார். செய்யும் திறம் அறிந்து தீமை இல்லாத வழியில் சேர்த்த பொருளாக இருக்க வேண்டும் ; அந்தப் பொருள் அறம் பயக்கக் கூடியதாகவும் இன்பம் பயக்கக்கூடியதாகவும் இருக்க வேண்டும் ; அருளோடும் அன்போடும் வந்த பொருளாக இருக்க வேண்டும் ; அருள் இல்லாமல் அன்பு இல்லாமல் பொருள் சேர்ப்பது கூடாது ; அவ்வாறு சேரும் பொருளை ஏற்றுக்கொள்ளாமல் தள்ளிவிட வேண்டும் என்று வற்புறுத்துகின்றார் :

அறன்ஈனும் இன்பமும் ஈனும்திறன் அறிந்து
தீதின்றி வந்த பொருள். (754)

அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம்
புல்லார் புரள விடல் (755)

பொருள் ஈட்டும் துறையிலே தூய்மைவேண்டும் என்று வற்புறுத்துவதற்காகவே, திருவள்ளுவர், இந்த அதிகாரத்தில் மட்டும் அல்லாமல், வினைத்தூய்மையிலும் இந்தக் கருத்தை வலியுறுத்தியுள்ளார். பெற்ற தாய் பசித்

துன்பத்தால் வாடுவதாக இருந்தாலும் சான்றோர் பழிக்கும் செயலைச் செய்யக்கூடாது என்றும், பழியை மேற்கொண்டு ஆக்கம் பெறுவதைவிட வறுமையே உயர்ந்தது என்றும், பிறர் வருந்தும்படியாக ஈட்டியபொருள் எல்லாம் ஈட்டியவரே வருந்தும்படியாகப் போய்விடும் என்றும், தீவினையால் பொருள் செய்து காத்தல் பச்சை மண்கலத்துள் நீர்பெய்து வைப்பது போன்றதே என்றும் விளக்கியுள்ளார்.

அருள்நெறியை மறவாமல் பொருளை ஈட்ட வேண்டும் என்றவர், அந்தப் பொருள் அருளை வளர்க்கப் பயன்பட வேண்டும் என்றும் கூறுகின்றார். அன்பு என்னும் பண்பினிடம் பிறந்துவாழ்வது அருள் என்றும், ஆகையால் அன்பு தாய் என்றும், அருள் குழந்தை என்றும், அத்தகைய குழந்தையைச் செவிலித்தாய் போல் காப்பாற்றி வளர்ப்பது பொருள் என்றும் கூறுகின்றார் :

அருள்என்னும் அன்பீன் குழவி பொருள்என்னும்
செல்வச் செவிலியால் உண்டு. (757)

ஒரு நாட்டில் உழைத்துத் தொழில் செய்கின்றவர்கள் பெருகிப் பொருள்வளத்தை மிகுதிப்படுத்தினால், பகைவர்கள் எதிர்க்கவும் முன்வர மாட்டார்கள் ; செருக்கு அடங்குவார்கள். ஆகையால், பகைவருடைய செருக்கை அறுக்கும் கூர்மையான கருவி பொருள் தான் !

செய்க பொருளைச் ; செறுநர் செருக்கறுக்கும்
எஃகுஅதனின் கூரியது இல். (759)

படை

தனக்குத் தீங்கு செய்தவர்களைப் பொறுக்க வேண்டும் என்று தனி ஒருவனுக்குக் கூறி, தீங்கு செய்தவர்களைத்



தண்டிக்க வேண்டும் என்று ஆட்சித் தலைவனுக்குத் திரு வள்ளுவர் பொதுக்கடமையை வற்புறுத்தியுள்ளார் அல் லரோ ? ஆகையால், பலருக்கு இன்னல் இழைக்கும் கூட்டம் ஒன்று உலகத்தில் இருக்கின்றவரையில், அதை அடக்கு வதற்காகப் படை என்று ஒன்று இருந்தே தீரும். அந்தப் படையைப் போற்றிப் பயன்படுத்துவது தலைவனுடைய கடமையாக இருக்கும். அந்தப் படை முடியாட்சிக் காலத் தில் பெரும்பாலும் வெளிநாட்டோடு போர் செய்வதற்கே பயன்பட்டது. குடியாட்சி முறை பல நடுகளிலும் செம்மை யாக அமைந்து விட்டால், உள்நாட்டுக் கலகங்களையும் குழப்பங்களையும் அடக்குவதற்கே பயன்படும்.

படை என்பது தனக்கு உரிய உறுப்புகள் எல்லாம் அமைந்ததாகவும், இடையூறுகளுக்கு அஞ்சாததாகவும், எடுத்த கடமையில் வெற்றிபெற்றுத் தருவதாகவும் இருக்க வேண்டும். அத்தகைய படையே தலைவனுடைய செல்வங் களில் சிறந்த செல்வமாகும். எமனே சினம்கொண்டு வந்த தாலும் ஒற்றுமையாய்க் கூடி எதிர்நின்று வெல்லக் கூடிய ஆற்றல் அந்தப் படைக்கு இருக்க வேண்டும். நிலைத்த வீரர் கள் மிகப்பலர் இருந்தாலும் அந்தப் படைக்குத் தக்க தலை வர்களும் இருந்து வழிகாட்டி நடத்த வேண்டும். தலைமக்கள் இல்லாதபோது அந்தப் படை ஆற்றலோடு நிற்காது :

உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையுள் எல்லாம் தலை. (761)

கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. (765)

நிலைமக்கள் சால உடைத் தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல். (770)

இந்தப் படையில் உள்ள வீரர் ஒவ்வொருவரும் அரும் பெருஞ் செயல்களைச் செய்ய ஆவல் கொள்ள வேண்டும்; சிறுசிறு செயல்களைச் செய்து வெற்றி பெற்று மகிழ்வதை விட, பெரியகடமையைச் செய்யமுயன்று தோற்றுவிடுவதே நல்லது என்று எண்ண வேண்டும். காட்டில் ஓடும் முயலைக் குறி தப்பாமல் எய்து கொன்ற அம்பை ஏந்துவதை விட, வெட்ட வெளியில் நின்ற யானைமேல் எரிந்து அது தப்பி ஓடுமாறு விட்டுத் தவறிய வேலை ஏந்துவதே நல்லது என்னும் எண்ணம் கொள்ள வேண்டும் :

**கான முயல்எய்த அம்பினில் யானை**<br>**பிழைத்தவேல் ஏந்தல் இனிது** (772)

பகைவரை அஞ்சாமல் தாக்கி அடக்கும் ஆற்றலைப் பெரிய ஆண்மை என்றுசொல்வார்கள். ஆனால் அதே பகைவர்க்கு ஒரு துன்பம் வந்தபோதும் இரக்கம் கொண்டு உதவி செய்வதே அந்த ஆண்மைக்குச் சிறப்புச் செய்வதாகும். பகைவரை அழிப்பதே நோக்கம் அன்று; அவர்களுடைய தீமையை அடக்கி ஒழித்தால் போதும்; ஆகவே, அவர்களுக்குத் துன்பம் வந்தபோது இரக்கம் கொள்ளும் தன்மை சிறந்த தன்மையாகும் :

**பேராண்மை என்ப தறுகண்; ஒன்று உற்றக்கால்**<br>**ஊராண்மை மற்றதன் எஃகு.** (773)

ஏதேனும் சிறந்த செயலைக் செய்து அதனால் தான் துண்புறுவதையே வீரன் கடமையாகக் கொள்வான். அவ்வாறு அமையாத நாளை எல்லாம் எண்ணிப் பயன்படாமல் இழுக்கிய நாளாகவே அவன் கருதி வருந்துவான். (விழுப்புண்படுதல் இக்காலத்துப் போர் முறைக்கும் காவல்முறைக்கும் ஏலாதது. ஆகையால், சிறந்த செயல் செய்து துன்புறுதல்



என்று கொள்வதும் பொருந்தும்.) இவ்வாறு சிறப்புடைய செயலைச் செய்து புகழ்பெறுவதையே வீரர்கள் விரும்புவார்கள்; உயிர்வாழ்க்கையையும் பொருட்படுத்த மாட்டார்கள்; இத்தகையவர்கள் வீரர் என முன்வருவது (கழல் கட்டுவது) அழகுடையதாகும். தலைவர்களுடைய கண்களில் கண்ணீர் மிகுமாறு அவர்கள் அரும்பெருஞ் செயல்களைச் செய்து சாகத் துணிவார்கள்; அத்தகைய சாவு இரந்தாவது பெற்றுக்கொள்ளக்கூடிய பெருமை உடையதாகும் :

**விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்**<br>**வைக்கும்தன் நாளை எடுத்து.** (776)

**சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்**<br>**கழல்யாப்புக் காரிகை நீர்த்து.** (777)

**புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு**<br>**இரந்துகோள் தக்கது உடைத்து.** (780)

## நட்பு

நல்லறிவுடையவர் நட்பு, பிறை நிறைவது போல் நாள்தோறும் வளர்ந்துவரும்; அறிவில்லாதவர் நட்பு நிறைமதி குறைவது போல நாள்தோறும் குறைந்துபோகும். இடத்தின் தொடர்பும் பழக்கமும் இல்லாமலும் நட்பு அமையும்; உணர்ச்சி ஒத்திருந்தால் போதும்; அந்த ஒன்றே நட்புக்கு வேண்டிய உரிமையைத் தரும். முகம் மட்டும் மலருமாறு பழகுவது நட்பு ஆகாது. அன்பினால் நெஞ்சமும் மலருமாறு பழகுவதே நட்பாகும். நட்புக் கொள்வது ஒருவரோடு ஒருவர் சிரித்து நகையாடுவதற்காக அன்று; தகாதன செய்து வரம்பு மீறும்போது முந்திச்சென்று கண்டிப்பதற்காகவே ஆகும். அழிவு தரும் கெட்ட வழியிலிருந்து

நீக்கி நல்ல வழியில் செலுத்தி, எதிர்பாராத கேடு வந்த போது உடனிருந்து துன்பத்தை அனுபவிப்பது நட்பாகும். நண்பனுக்குத் துன்பம் வந்தபோது உதவி செய்து துன்பத் தைத் தீர்ப்பது நட்பாகும். துன்பம் வந்த அப்பொழுதே அவன் கேளாமலே விரைந்துசென்று அந்த உதவியைச் செய்ய வேண்டும்; கூட்டத்தில் ஆடை குலைந்தவனுக்குக் கை அப்போதே விரைந்து சென்று மானம் காப்பதுபோல் உதவி செய்ய வேண்டும்:

**நிறைநீர நீரவர் கேண்மை பிறை; மதிப்**
**பின்நீர பேதையார் நட்பு. (782)**

**புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சிதான்**
**நட்பாம் கிழமை தரும். (785)**

**முகம்நக நட்பது நட்பன்று; நெஞ்சத்து**
**அகம்நக நட்பது நட்பு. (786)**

**நகுதற் பொருட்டன்று நட்டல்; மிகுதிக்கண்**
**மேற்சென்று இடித்தற் பொருட்டு. (784)**

**அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்**
**அல்லல் உழப்பதாம் நட்பு. (787)**

**உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு (788)**

நட்பு என்பது பொழுதுபோக்கிற்காகவே என்று சிலர் கருதுகிறார்கள். ஆகவே, ஆடல் பாடல் கேளிக்கைகளுக் காகச் செல்லும்போது துணையாக வர வல்லவர்களையும், உண்பதும் தின்பதும் குடிப்பதுமாகிய சிறு செயல்களுக்குத் துணையாக இருக்க வல்லவர்களையும், புலன்களுக்கு அடி மைப்பட்டுச் செய்யும் குற்றங்களுக்குத் துணையாய் நடக்க வல்லவர்களையுமே நண்பர்கள் என்று அவர்கள் கொள்கின் றார்கள். அது நட்பு என்று போற்றத்தக்கது அன்று எனக்



கடிய வேண்டும். மக்களின் வாழ்க்கை சீர்கெட்டு இருக்கும் போது, உயர்ந்த கடமையும் பொழுது போக்கிற்குப் பலி யாகும்; சிறந்த கலையும் பொழுதுபோக்கிற்குப் பலியாகும்; தூய நட்பும் பொழுது போக்கிற்குப் பலியாகும். சீர்கெட்ட காலத்தில் நட்பு அவ்வாறு பயன் குன்றுவதைக் கண்டு அதுவே அதன் இயல்பு எனக் கொள்வது பொருந்தாது. உள்ளம் கலங்காமல் முகம் நக நட்டலையும், நகுதற் பொருட்டு நட்டலையும் திருவள்ளுவர் கடிகின்றார்; பொழுது போக்கிற்குத் துணையாக இருந்து கெடுக்காமல், வாழ்க்கைக் குத் துணையாக இருந்து திருத்த வல்லவர்களையே நண்பர் கள் என்று கூறுகின்றார்.

நட்பு நெஞ்சத்தில் ஊறியதாக இருக்க வேண்டும். உணர்வின் ஒற்றுமையால் பிறப்பதாக இருக்கவேண்டும் என்ற ஆசிரியர், அதற்குப் புறத்தே புனைதல் இருக்கக் கூடாது என்று கடிக்கின்றார்; ''இவர் எமக்கு இவ்வளவு அன்புடையவர்; யாமும் இவரிடம் இவ்வளவு அன்பு கொண்டிருக்கிறோம், என்று நண்பர்கள் ஒருவரை ஒருவர் புனைந்து பேசினலும், நட்புச் சிறப்பிழந்துவிடும்:

**இனையர் இவர்எமக்கு இன்னம்யாம் என்று**
**புனையினும் புல்லென்னும் நட்பு. (790)**

நல்ல பண்புடையவரின் நட்பைத் திருவள்ளுவர் கூறும் போது மிகச் சிறந்த உவமையைக் கொண்டு விளக்கு கின்றார். நல்ல நூல் கற்கக் கற்க மேன்மேலும் இனிமை தருவது போல், பண்புடையவரின் தொடர்பு பழகப் பழக மேன்மேலும் இன்பம் தரும் என்கின்றார்:

**நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்**
**பண்புடை யாளர் தொடர்பு. (783)**

இந்த உவமை நட்பின் பெருமையை விளக்குவதோடு நிற்கமால், இலக்கியக்கலையின் சிறப்பையும் விளக்குகின்றது. நல்ல நூல் முதல்முறை கற்கும்போது தரும் இன்பத்தை விட, பலமுறை கற்கக் கற்கச் சிறந்த இன்பம் தரும் என்னும் உண்மையையும், வாழ்க்கையில் நல்ல நண்பர் செய்யும் நன்மைகளை நல்ல நூலும் செய்ய வல்லது என்னும் உண்மையையும் புலப்படுத்துகின்றது. அறிவிலும் நெஞ்சத்திலும் தெளிவையும் அன்பையும் வளர்க்கும் நூல் போல் நண்பருடைய தொடர்பு அறிவையும் நெஞ்சத்தையும் பண்படுத்த வல்லதாக இருக்க வேண்டும் என்பது திருவள்ளுவர் கருத்து.

நட்புக்கொள்வதற்குமுன் நன்றாக ஆராய வேண்டும். ஏன் எனில், நட்புச் செய்த பிறகு, விடுதலை இல்லை ஆகையால் ஆராயாமல் நட்புச் செய்தலைப் போல் கெடுதியானது வேறொன்றும் இல்லை. நண்பருடைய நல்ல பண்புகளைப் பலமுறையும் ஆராய்ந்து கொள்ளாவிட்டால் அந்த நட்பு இறுதியாகச் சாவதற்குக் காரணமான துயரத்தைத் தரும். சிலர் நன்மை உள்ள போது மட்டும் நெருங்கிப் பழகிக் கேடு வருங் காலத்தில் கைவிடுவார்கள். அவர்களுடைய நட்பைச் சாகுந் தறுவாயில் நினைத்தாலும், நினைத்த மனத்தையும் அது சுடும். ஆகையால், குற்றமற்றவர்களின் நட்பையே கொள்ள வேண்டும்; ஒத்த பண்பு இல்லாதவர்களின் நட்பை அவர்கள் விரும்பியதைக் கொடுத்தாவது கைவிட வேண்டும்;

நாடாது நட்டலின் கேடில்லை ; நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. (791)

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாம் துயரம் தரும். (792)



கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினும் உள்ளம் சுடும். (799)

மருவுக மாசற்றார் கேண்மை ; ஒன்று ஈத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு. (800)

நட்பு மேன்மேலும் வளர்ந்து நிலைக்க வேண்டுமானால், உரிமையுணர்வு வேண்டும். நட்பிற்கு உறுப்பாக இருப்பது நண்பர் உரிமையோடு நடக்கும் தன்மையே ஆகும்; அதற்கு இயைந்தவராய் இனிது இருப்பதே சான்றோர் கடமையாகும். நண்பர் வருந்தத் தக்கவற்றைச் செய்வாரானால், அதற்குக் காரணம் அறியாமை மட்டும் அன்று; மிக்க உரிமையும் காரணம் என்று உணர வேண்டும். அன்பின் வழியில் வளர்ந்த நட்பை உடையவர், தம் நண்பர் அழிவுவேலையே செய்வாரானாலும், அவரிடத்தில் கொண்ட பழைய அன்பு நீங்காமல் வாழ்வார்:

நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை ; மற்றதற்கு
உப்பாதல் சான்றோர் கடன். (802)

பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின். (805)

அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர். (807)

ஆனால், உரிமை பற்றிய அன்பு இல்லாமல், வேண்டுமென்றே தீங்கு செய்வார்களானால், அப்படிப்பட்டவர்களின் நட்பை ஒழிக்க வேண்டும்; உள்ளன்பு இல்லாமல் பயன் கருதி மேலுக்கு உறவாடுவார்களானால், அவர்களுடைய நட்பையும் விட வேண்டும்.

அன்பு மிகுதியால் அப்படியே பருகுகின்றவர்களைப் போல் உருக்கம் உடையவர்களாய்ப் பழகினாலும், நல்ல

பண்பு இல்லாதவர்களின் நட்பு வளர்வதைவிடத் தேய்வது நல்லது. தமக்கு ஏதாவது பயன் உள்ளபோது மட்டும் பழகி, பயன் இல்லாதபோது விட்டு நீங்குகின்றவர்களின் நட்பைப் பெற்றால் வரும் நன்மையும் இல்லை ; இழந்தால் வரும் கெடுதியும் இல்லை. நட்பைப் பொருட்படுத்தாமல் கிடைக்கும் பயனை அளந்து பார்க்கும் நண்பரும், காதல் கொள்ளாமல் பெரும் பொருளையே கொள்ளும் பொதுமகளிரும், பிறர் நன்மையைக் கருதாமல் அவருடைய பொருளைக் கவரும் கள்வரும், ஒரே தன்மை உடையவர்கள் ; ஆகையால் அந்தத் தீய நட்பு விரும்பத் தகாதது ;

**பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை**
**பெருகலின் குன்றல் இனிது.** **(811)**

**உறின்நட்டு அறின்ஒருஉம் ஒப்பிலார் கேண்மை**
**பெறினும் இழப்பினும் என் ?** **(812)**

**உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது**
**கொள்வாரும் கள்வரும் நேர்.** **(813)**

அறிவில்லாதவனுடன் மிக நெருங்கிப் பழகும் நட்பை விட அறிவுடையவரின் பகையே கோடி மடங்கு மேலானது. ஏன் என்றால் அறிவுடையவர் பகையாக இருந்தாலும் தீங்கு நேராது ; ஆனால் அறிவில்லாதவனுடைய நட்பு எல்லாத் தீங்கும் உண்டாக்க வல்லது. அறிவும் பண்பும் இல்லாமல் நகையாடுவதற்கு மட்டும் உரியவர்களின் நட்பை விடப் பகைவரால் பத்துக்கோடி துன்பமே மேலாகும். செய்யக்கூடிய கடமையையும் செய்ய முடியாமல் கெடுக்க வல்லவர்களின் நட்பைச் சோர விட வேண்டும் ; அதைப் பற்றி அவர்களிடமும் சொல்லாமல் விட வேண்டும் ; சொல்வதானால், அந்த நோக்கத்தையும் கெடுத்துவிடுவார்கள் :



**பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்**
**ஏதின்மை கோடி உறும்** **(816)**

**நகைவகையர் ஆகிய நட்பின் பகைவரால்**
**பத்தடுத்த கோடி உறும்.** **(817)**

**ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை**
**சொல்லாடார் சோர விடல்.** **(818)**

சிலர் உள் ஒன்று புறம் ஒன்றாக நடிப்பதும் உலகத்தில் உண்டு. அவர்களிடம் நட்புக் கொள்வதும் தீங்கே. செயல் வேறாகவும் சொல் வேறாகவும் உள்ளவர்களின் நட்பு, நனவில் துன்பம் தருவதோடு அல்லாமல் கனவிலும் துன்பம் தருவதாகும். தனியே வீட்டிலிருக்கும்போது நட்புக் கொண்டு, பழகி, பலரோடு மன்றத்தில் இருக்கும்போது பழி கூறுகின்றவர்களின் நட்பைச் சிறிதும் நெருங்காமல் நீக்கிவிட வேண்டும்.

**கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு**
**சொல்வேறு பட்டார் தொடர்பு.** **(819)**

**எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ**
**மன்றில் பழிப்பார் தொடர்பு.** **(820)**

சிலருடைய மனம் இயல்பாகவே நல்வழியில் நிலைபெறாமல் அலையும். அவர்கள் உறவு போல் இருந்து உறவுகொள்ளாதவராய் வாழ்வார்கள். அவர்களுடைய நட்பு, நிறை இல்லாத பொதுமகளிருடைய மனம்போல வேறுபடும் :

**இனம்போன்று இனமல்லார் கேண்மை மகளிர்**
**மனம்போல வேறு படும்.** **(822)**

திருவள்ளுவர் பொதுவாக மகளிர் என்று குறித்தாலும், வேறுபடும் மனம் என்று கூறியுள்ளமையால், நிறையில்லாத மனம் என்றும், பொதுமகளிரின் மனம் என்றும்

கொள்ள வேண்டும். (நாய் நன்றி மறந்து கடிப்பது போல் என்று கூறின், வெறி பிடித்த நாய் என்று கொள்வது போல் இங்குப் பொருள் கொள்ள வேண்டும். இவ்வாறு தெளிவாகப் பண்பு விளங்காத இடத்தில், ஒருமை மகளிரே போல (974) என்றும், இருமனப் பெண்டிர் (920) என்றும் அவரே தெளிவாக்குதலும் காணலாம். இங்கே இருவகை யாக வேறுபடும் மனம் உடைய வாழ்வுக்கு உவமையாக அமைவதால் இருமனப் பெண்டிர் என்று கொள்ள வேண்டும்).

நல்ல பண்பு இல்லாதவர்கள் பல நல்ல நூல்களைக் கற்றாலும் நல்ல மனம் உடையவர்களாக மாறுவதில்லை. ஆகையால் கல்வி மட்டும் இருந்து நல்ல மனம் இல்லாதவர் களுடன் நட்புக் கொள்ளலாகாது. சிலர் முகமலர்ந்து சிரித்து மனத்தால் பொல்லாத வஞ்சகர்களாக இருப்பார் கள். சிலர் இனிய சொற்களையே பேசி மனத்தால் பொருந் தாமலே நடப்பார்கள். இவர்களை நம்பித் தெளியக் கூடாது. பகைவர்கள் சொல்லால் வணக்கம் உடையவர்களாக இருப் பதையும் நம்பக் கூடாது. வில்லின் வணக்கம் அம்பு எய் வதற்காக வளைந்து தீமை குறிப்பது போல் இதுவும் தீங்கு பயக்கும் என்று விட வேண்டும். சிலர் தொழுவார்கள் ; அழுவார்கள் ; ஆனால் உள்ளத்தில் பகையும் வஞ்சமும் வாழும். அவர்கள் தொழுத கையினுள் கொலைக்கருவி மறைந்திருக்கும் ; அவர்கள் அழுத கண்ணீரும் அவ்வாறே தீமையை மறைத்துவைத்திருக்கும். இப்படிப்பட்ட பகை வர்கள் நண்பர்களாக நெருங்கும் காலம் வந்தால், முகத் தளவில் நட்புச்செய்து உள்ளத்தில் நட்புக் கொள்ளாமல் நீக்கிவிடவேண்டும் :

**பலநல்ல கற்றக் கடைத்தும் மனம்நல்லர்**
**ஆகுதல் மாணார்க்கு அரிது. (823)**



**முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா**
**வஞ்சரை அஞ்சப் படும். (824)**

**மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்**
**சொல்லினால் தேறற்பாற்று அன்று. (825)**

**சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்**
**தீங்கு குறித்தமை யான். (827)**

**தொழுதகை யுள்ளும் படைஒடுங்கும் ; ஒன்னார்**
**அழுதகண் ணீரும் அனைத்து. (828)**

**பகைநட்பாம் காலம் வருங்கால் முகம் நட்டு**
**அகநட்பு ஒரீஇ விடல். (830)**

## பேதைமை

தீமையைக் கொண்டு நன்மையைப் போக விடுவது, தகாதவைகளைச் செய்ய நாணாமலிருப்பது, தக்க கடமைகள் என்ன என்று ஆராயாமலிருப்பது, யாரிடத்திலும் அன்பு இல்லாமல் நடப்பது, போற்றத்தக்கது யாதொன்றையும் போற்றாமல் விடுவது இவைகளைப் பேதமை (அறியாமை) என்று கூற வேண்டும். தன் ஒழுக்கத்திற்குத் தகாத ஒன்றில் அன்பு செலுத்துவது பேதைமையில் பெரிய பேதைமையாகும். அறிவில்லாதவன் மட்டும் பேதை அல்லன் ; பல நூல்களை ஓதியும் உணர்ந்திருந்தும் பிறர்க்கு எடுத்துச்சொல்லியும் தான் மட்டும் கற்ற அறிவுக்கு ஏற்ப அடங்கி ஒழுகாதவனும் பேதையே ஆவான் ; உண்மையை ஆராய்ந்தால் அவனைப் போன்ற பேதையார் உலகத்தில் வேறு யாரும் இல்லை :

**பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதம்கொண்டு**
**ஊதியம் போக விடல். (831)**

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். (833)

பேதைமையுள் எல்லாம் பேதையை காதன்மை
கையல்ல தன்கட் செயல். (832)

ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தான்அடங்காப்
பேதையின் பேதையார் இல். (834)

பேதையின் கையில் ஒரு பொருள் கிடைக்கப் பெற்றால், அவன் நிலைமை, முன்னமே பித்தனாக உள்ளவன் அதன் மேல் கள்ளுண்டு மயங்கியது போல் ஆகும். பேதை பெரிய செல்வம் பெறுவானானால், அவனோடு தொடர்பு இல்லாதவர்கள் இன்பம் அடைவார்கள்; ஆனால் அவனைச் சார்ந்தவர்கள் பசித் துன்பத்தால் வாடுவார்கள்; அவனுடைய பேதைமையால் அந்தச் செல்வம் இவ்வாறு தகாத வழியில் செலவாகும் :

மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன்று உடைமை பெறின். (838)

ஏதிலார் ஆரத் தமர்பசிப்பார் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை. (837)

செல்வம் என்று இங்கே குறிக்கப்படுவது வெறும் பொருட் செல்வம் மட்டும் அன்று; பொதுவாழ்வில் பெறும், பதவிகளும் மற்ற நல்ல வாய்ப்புகளும் செல்வம் என்று கூறுவதில் அடங்கும். ஆகவே, பேதைக்குப் பெரிய பதவிவந்தால், அயலார் இன்பம் அடைய, சார்ந்தவர்கள் வாடி மெலிவார்கள் என்று பொருள் கொள்ளலாம்; மற்ற வாய்ப்புகளையும் இவ்வாறே பேதை பயன்படுத்தத் தெரியாமல் வீணாக்குவான் என்று கொள்ளலாம்



## புல்லறிவாண்மை

ஒருவனுக்குச் செல்வம் முதலியன இல்லாத குறையைப் பெரிய குறையாக உலகத்தார் கருத மாட்டார்கள்; ஆனால் அறிவில்லாத குறையே வறுமையிலும் பெரிய வறுமையாகும். ஆயினும் அறிவில்லாதவன் இந்தக் குறையை உணர்வதில்லை. 'நமக்குச் சிறந்த அறிவு உள்ளது' என்று தன்னைத் தானே மதிக்கும் செருக்கு அவனிடம் இருக்கின்றது; அதுதான் புல்லறிவாகும் :

அறிவின்மை இன்மையுள் இன்மை ; பிறதின்மை
இன்மையா வையாது உலகு. (841)

வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு. (844)

அறிவில்லாதவன் மனம் மகிழ்ந்து ஒரு பொருளைப் பிறர்க்குக் கொடுப்பது அருமை; ஒருவேளை கொடுப்பானேயானால், அது வேறொன்றும் இல்லை. பொருளைப் பெறுகின்றவனுடைய நல்வினை என்றே கூறவேண்டும். பிறர்க்கு உதவியாக வாழ்வது இப்படி இருக்க, அறிவில்லாதவன் தனக்கு நன்மையாக வாழ்க்கையை நடத்துவதும் இல்லை. அவன் தனக்குத் தானே செய்துகொள்ளும் துன்பத்தை அவனுடைய பகைவராலும் செய்ய முடியாது. அறிஞர் தனக்கு நல்வழி சொன்னாலும் அவருடைய ஏவலின்படி செய்ய மாட்டான்; தானாகவும் செய்யத் தகுந்தது இது என்று தெளிய மாட்டான்; அவனுடைய உயிர் உடம்பிலிருந்து நீங்கும் வரையில் அவன் உலகத்திற்கு ஒரு நோய் ஆவான். உலகத்தில் சான்றோர் உண்டு என்று சொல்கின்ற உண்மையையும் அவன் இல்லை என்று சொல்வான்; அதனால் அவன் உவகத்தில் ஒரு பேயாகக் கருதப்படுவான் ;

அறிவிலான் நெஞ்சுவந்து ஈதல் பிறிதுயாதும்
இல்லை பெறுவான் தவம். (842)

அறிவிலார் தாம்தம்மை பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது. (843)

ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய். (848)

உலகத்தார் உண்டென்பது இல்என்பான் வையத்து
அலகையா வைக்கப் படும். (850)

## இகல்

தொடர்பு உடையவரிடத்தில் நட்பு நிலைத்தால் ஒற்றுமையும் ஆக்க வேலையும் பெருகும். வெறுப்பு மிகுந்தால் மாறுபாடும் அழிவு வேலையும் பெருகும். மாறுபாட்டிற்குக் காரணமான வெறுப்பு எண்ணத்தளவில் நிற்பதாகும்; அதுவே இகல் என்று கூறப்படும். அழிவு வேலையை வளர்க்கும் வெறுப்பே செயலளவில் மிகுவதாகும்; அது பகை என்று கூறப்படும். திருவள்ளுவர் இகலை நீக்கும் வகையில் விட்டுக்கொடுத்து வாழ வேண்டும் என்றும், பகையையும் முடியுமானால் நீக்கிக்கொள்ள வேண்டும் என்றும் முடியாத போது வென்றாவது போக்கிவிட வேண்டும் என்றும் கூறுகின்றார். செயலளவில் அழிவு வேலைக்கு முனையும் பகையைத் தாக்கி வெல்லலாம் என்று கூறுகின்றவர், எண்ணத்தளவில் உள்ள இகலை விட்டுக்கொடுத்தாவது நீக்கிவிட வேண்டும் என்று கூறுகின்றார்.

வாழ்க்கையில் மாறுபாடு கூடாது என்று திருவள்ளுவர் வற்புறுத்திக் கூறும் காரணங்கள் என்ன? உறவு இல்லாமல் வெறுத்துப் பிரிகின்ற கெட்ட இயல்பை வளர்க்கும் நோய் இந்த மாறுபாடுதான். இதுவே துன்பங்களில் பெரிய துன்பமாகும்; இந்தத் துன்பம் நீங்கினால் இன்பத்தில் பெரிய



இன்பம் உண்டாகும். மற்றவர்களோடு மாறுபட்டு நிற்பதனால் மேம்பாடு உண்டாகும் என்றும், அந்த மேம்பாடே இனியது என்றும் ஒருவன் கருதி மாறுபாட்டை வளர்த்து வரலாம்; அவனுடைய வாழ்க்கை தவறுவதும் அடியோடு அழிவதும் விரைவில் நிகழ்ந்துவிடும்:

இகல்என்ப எல்லா உயிர்க்கும் பகல் என்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய். (851)

இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல்என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். (854)

இகலின் மிகல்இனிது என்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து. (856)

உலகத்தில் எல்லாவகையாலும் ஒத்திருக்கின்ற இருவரைக் காணமுடியாது. ஒரே தன்மையாய்த் தோன்றுகின்ற இரண்டு இலைகளையாவது இரண்டு மலர்களையாவது நுட்பமாக ஆராய்ந்தால் அவற்றிற்குள்ளும் வேறுபாடு காணப்படும் என்று அறிஞர் கூறுகின்றனர். வேறுபட்டுத் தோன்றுகின்ற இருபொருள்களுக்குள் ஒற்றுமையும் உண்டு என்கின்றனர். இவ்வாறு ஒற்றுமைக்கு இடையே வேற்றுமையும், வேற்றுமைக்கு இடையே ஒற்றுமையும் இயற்கை அமைத்துள்ள பெருமை வியக்கத் தக்கதாக உள்ளது. இந்த உண்மையை உணர்ந்தால், மக்களுக்கு இடையே கருத்து ஒற்றுமை முழுதுமாக இருக்க முடியாது என்பதை உணரலாம். ஒருவர் ஒரு செயல் செய்வது போல மற்றவர் செய்யவும் முடியாது. ஆகவே கருத்தும் செயலும் வேறுபடுவது இயற்கை, இந்த வேற்றுமைக்கு இடையே ஒற்றுமையைக் கண்டு அன்பு கொண்டு நட்புச் செய்வது கடமையே அல்லாமல், சிறுசிறு வேறுபாடுகளைக் கண்டு அவை காரணமாக மாறுபாடு கொண்டு பிரிந்து பிளவுபட்டு நிற்பது நல்லது

அன்று. ஆனால் உலகத்தில் நாடுகளும் குடும்பங்களும் பிரிந்து மாறுபட்டு நிற்பதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் ஒற்றுமைப் பகுதியைக் காணாமல், வேற்றுமைப் பகுதியைக் கண்டு கண்டு அதை வளர்ப்பதையே கலையாகப் போற்றுவ தாகும். அதிலும் நெருங்கிப் பழகுகின்றவர்க்குள்ளேயே இந்த மாறுபாடு மிகுதியாக உள்ளது. உடன் பிறந்தார்க்குள் இருக்கும் மாறுபாடு வெளியார்க்குள் இல்லை. ஒரு நாட்டு மக்களில் இரு கட்சியார்க்கு இருக்கும் மாறுபாடு ஒரு நாட்டா ருக்கும் மற்றொரு நாட்டார்க்கும் இடையே இருப்பதில்லை. இப்படி மாறுபாடு வளரும்போது, ஒருவர் அல்லது ஒரு சாரார் அதைப் பொருட்படுத்தாமல் விட்டுக்கொடுத்து, நடப்பார் களானால் மாறுபாடு முற்றாது ; மெல்ல மெல்ல மறைந்து பழைய அன்பு வாழும் ; நட்பு வளரும் ; நன்மை விளையும்.

ஆகையால் இகல் (மாறுபாடு) வேண்டா என்றும் பொது வாக அறிவுறுத்திய திருவள்ளுவர், மற்றவர்கள் நம்மேல் இகல் கொண்டால் நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை யும் ஆராய்ந்து கூறுகின்றார்.

பிரிந்து நிற்கக் கருதி அதற்காக நட்பிற்குப் பொருந்தாத வைகளை ஒருவன் செய்தாலும் அவனோடு இகல்கொண்டு அவனுக்குத் துன்பம் செய்யாமலிருப்பதே உயர்ந்தது. மற்ற வர்களின் மாறுபாட்டை ஏற்றுக்கொள்ளாமல் இயைந்து நடக்க வேண்டும் ; அவ்வாறு சாய்ந்து ஒழுகவல்லவர்களை ஒருவரும் வெல்ல முடியாது. மாறுபாட்டுக்கு எதிரே மாறு பாடே காட்டி நிற்காமல் இயைந்து நடப்பதே நன்மையாகும்: அதைப் பொருட்படுத்தி வெல்லக் கருதினால் கேடு மிகுந்து வரும். மாறுபட்டு நடப்பதால் துன்பம் எல்லாம் உண்டா கும் ; நட்புக்கொண்டு வாழ்வதனால் நல்ல இன்ப வாழ்வு என்னும் பெருமையான நிலை ஏற்படும் :



பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை. (852)

இகல் எதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகல்ஊக்கும் தன்மை யவர். (855)

இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் ; அதனை
மிகல்ஊக்கின் ஊக்குமாம் கேடு. (858)

இகலானாம் இன்னாத எல்லாம் ; நகலானாம்
நன்னயம் என்னும் செருக்கு. (860)

**பகை**

மாறுபாட்டைப் பாரட்டாமல் மறந்து ஒழுகுவதால் நன்மை உண்டு. ஒருவர் மாறுபாட்டையே பாராட்டி வந்தா லும், மற்றொருவர் ஒற்றுமைக்கு உரிய பகுதிகளையே பாராட்டி உறவு கொண்டாடுவதால் அந்த மாறுபாடு மறை வதும் உண்டு. ஆனால், எண்ணத்தளவில் நிற்காமல், செய லளவில் அதை வளர்த்து அழிவு வேலை தொடங்குவோரை என்ன செய்வது ? அவர்கள் செய்யும் தீமையை எத்தனை முறை பொறுப்பது ? பொறுப்பதாலும் பயனில்லை என்று அனுபவத்தால் உணரும் போது வாளா இருக்கமுடியுமோ ? தனிவாழ்வில் அவ்வாறு பிறர் தீமை செய்யச் செய்யப் பொறுமையே மேற்கொண்டு வாழலாம் ; பிறர் தீமையை ஏற்று அழியினும் அழியலாம் ; இது அறத்துப்பாலில் காணும் அறநெறியாகும். ஆனால் பொதுவாழ்வில் பிறர் தீமையைப் பொறுப்பதற்கு ஓர் அளவு உண்டு ; இன்னா செய்யாமல் வாழ்வதற்கு ஓர் எல்லை உண்டு ; அந்த அளவு மீறின் பொறுப்பதே குற்றமாகும் ; பகையைத் தாக்கி அழிக்காமல் வளர விடுவதே குற்றமாகும். ஏன்? பொதுவாழ்வில் பலருடைய நல்வாழ்வைப் போற்றுவது அறம் ஆகுமே அல்லாமல், தீமை செய்யும் சிலரைப் பொறுத்து அவர்களுக்கு

இடம் கொடுப்பது அறம் அன்று : தீமைசெய்யும் சிலரை ஒறுத்து அடக்கி வெல்ல முயல்வது அறம் ஆகுமே அல்லாமல், அவர்களுக்கு இயைந்தாற் போல் நடந்து பலருடைய வாழ்வில் அமைதி குலைவதையும் அல்லல் மிகுவதையும் பார்த்துக்கொண்டிருப்பது அறம் அன்று. ஆகையால், இகல் வேண்டா என்று அறிவுறுத்திய திருவள்ளுவர் வேறு வழி இல்லாமல் வளர்ந்துவிட்ட பகையை ஒழிப்பதே கடமை என்று இங்குக் கூறுகின்றார்.

அவ்வாறு பகைகொண்டு பொதுவாழ்விற்கு நன்மை செய்ய முயலும்போது, யாருடன் பகைகொள்கிறோம் என்று எண்ணிப்பார்க்க வேண்டும். வெல்லக் கூடிய இடத்தில் மட்டுமே பகை கொள்ள வேண்டும். தம்மைவிட வலிமை மிகுந்தவர்களைப் பகைத்து எதிர்ப்பதால் நோக்கம் நிறை வேறாது ; தோல்வியும் அழிவும் நேரும். ஆகையால் அவர்களை எதிர்க்காமல் இருந்து துன்புறுவதே நல்லது. வலிய வர்களோடு மாறுபட்டுப் பகை கொள்வதை விட வேண்டும் ; மெலியவர்களோடு பகைகொள்வதை விரும்பி மேற்கொள்ள வேண்டும். அறியாமையால் சினம் கொள்கிறவன் பேராசை யுடையவன் ஆகியவர்களை நட்பினால் திருத்த முடியாது ; ஆகையால் அவர்களுடைய பகை விரும்பத் தக்கது. அடுத்துத் துணையாக இருக்கும் நிலையிலும் தீமைகளைச் செய்கின்ற வனுடைய பகையைப் பொருள் கொடுத்தாவது கட்டாயம் கொள்ள வேண்டும். அவர்களோடு பகை கொண்டு அடக்கிச் செல்வதே பொது வாழ்வில் நன்மை செய்யும் வழி யாகும்.

வலியார்க்கு மாற்றேற்றல் ஓம்புக ; ஓம்பா
மெலியார்மேல் மேக பகை. (861)



காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும். (866)

கொடுத்தும் கொளல்வேண்டும் மற்ற அடுத்திருந்தும்
மாணாத செய்வான் பகை. (867)

ஆனால், பகையைத் தாமாக விரும்பி மேற்கொள்ளக் கூடாது என்றும், இயன்ற வரையில் பகைக்கும் இடம் ஏற் படாமல் அன்பைக் காப்பதே கடமை என்றும், திருவள்ளு வர் மறவாமல் வலியுறுத்துகின்றார்.

பகை என்பது நன்மை சிறிதும் இல்லாதது ; ஆகையால் அது வேடிக்கையாகவும் விரும்பத்தக்கது அன்று, ஏற்பட் டுள்ள பகையையும் இயன்ற வழியில் முயன்று நட்பாகச் செய்துகொள்ள முடியுமானால், அத்தகைய பண்புடையவனை உலகம் போற்றும் ; அவனுடைய பெருந்தன்மையில் உலகம் பொருந்தி நிற்கும் ;

பகை என்னும் பண்பி லதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற்று அன்று. (871)

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு. (874)

வேறு வழி இல்லாமல் பகை கொள்ள நேரிட்டாலும் எப்போதும் அறிஞரின் பகையை மேற்கொள்ளாமல் காத்துக் கொள்ள வேண்டும். எண்ணமே வாழ்வாக மலர்வது ஆகை யால், எண்ணங்களை வளர்த்துப் பரப்பவல்ல அறிஞருக்கு ஆற்றல் மிகுதி. அவர்கள் எண்ணுகின்ற எண்ணங்களைத் தடுக்கவல்ல தடை உலகத்தில் இதுவரையில் இருந்ததும் இல்லை ; இனி இருக்கப் போவதும் இல்லை, சிறைவாழ்வில் சிக்குண்டிருந்தாலும் அவர்கள் எண்ணும் எண்ணங்கள்

நாடெங்கும் பரவி மூலைமுடுக்கெல்லாம் வளர்ந்து ஆற்றலோடு வேலை செய்து அவர்களுடைய நோக்கங்களை நிறைவேற்றுகின்றன. ஆகையால் அவர்களை அடக்குமுறையால் அடக்கியாள வல்லரசுகளும் அஞ்சுகின்றன. அறிஞரின் வாழ்விற்குத் தடை ஏற்படுத்தி மற்ற நாடுகள் அல்லல்பட்ட கதை எல்லாம் கண்டு கண்டுதான் சில நாடுகள் அறிஞர்க்குத் துன்பம் விளைக்காமல் விளங்கிவருகின்றன. நெடுங்காலத்திற்கு முன்னமே அரசியலை ஆராயப்புகுந்த திருவள்ளுவர் இந்த உண்மையை வலியுறுத்தியுள்ளார். வில்லும் வாளும் கொண்டு உடம்பைத் தாக்கி வெல்ல வல்ல வீரரைப் பகைத்துக் கொண்டாலும், சொற்களையே கருவிகளாகக் கொண்டு உள்ளத்தைத் தாக்கி வெல்ல வல்ல அறிஞரைப் பகைத்துக்கொள்ளல் ஆகாது என்று அறிவித்துள்ளார் :

**வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க**
**சொல்லேர் உழவர் பகை. (872)**

பகை தோன்றாமலே தடுத்துவிடுவது நன்மை. ஒருகால் தோன்றி வளர்ந்துவிட்டால், அது முதிரும் முன்னமே தொடக்கத்திலேயே அதை வென்று அழிக்க வேண்டும். முள்மரத்தை இளையதாக இருக்கும்போதே களைந்துவிடுவது போல் ஒழிக்க வேண்டும். இல்லையானால், அதே இளமரம் காழ்ப்பு ஏறி முதிர்ந்த பிறகு, வெட்டுவோரின் கைக்குத் துன்பம் தருவது போல் முடியும் :

**இளைதாக முள்மரம் கொல்க ; களையுநர்**
**கைகொல்லும் காழ்த்த இடத்து. (879)**

இதுவரையில் கூறியவை எல்லாம் புறத்தே வெளிப்படும் பகையைப் பற்றியவை. புறத்தே வெளிப்படையாகத் தோன்றும் பகையை விடப் பொல்லாதது ஒன்று உள்ளது ; அது



உள்ளத்தில் பகைகொண்டு மேலுக்கு உறவுகொள்ளும் பகை ; அதுவே உட்பகை எனப்படுவது. உட்பகை உடையவர்களை நம்மவர் என்று போற்றிக்கொண்டு ஏமாந்திருப்பது தீமையாகும். நிழலும் இனியது ; நீரும் இனியது : ஆனால் அந்த நிழலும் நீரும் உடல்நலம் காக்க உதவாமல் நோய் தருவனவாக இருந்தால், அப்போது பெறும் இனிமையைப் பொருட்படுத்தாமல் பிறகு வரும் நோயை கருதி நீக்குவதில்லையா ? அதுபோல் சுற்றத்தாராக இருந்தாலும் இனியவர் போல் இருந்து தீமை செய்வார்களானால் அவர்களுடைய தொடர்பு தீயதே ஆகும். தவிர, வாள் போல் வெளிப்படையாகப் பகைத்து நிற்பவர்களின் பகையைக் கண்டு அஞ்ச வேண்டியதில்லை ; ஏன் எனில், அவர்களைப் பகைவர்கள் என்று அறிந்து எப்போதும் தற்காப்பு செய்து கொள்ள முடியுமாகையால் தீமை விளைவது அருமை. உறவுபோல் தோன்றி உட்பகை கொண்ட பகைவர்களின் தொடர்புக்கே அஞ்ச வேண்டும் ; ஏன் எனில், அவர்கள் நம்மவர்கள் என்ற எண்ணத்தால் தற்காப்பு இல்லாமல் சோர்ந்து அகப்பட்டுக் கொண்டு துன்புறுவது எளிதாகும். ஆகையால் வெளிப்படைப் பகைவர்க்கு அஞ்ச வேண்டியதில்லை ; உட்பகைக்கே அஞ்ச வேண்டும். அந்த உட்பகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும், எள்ளின் பிளவு போல் மிகச் சிறியதாக இருந்தாலும், அதனால் கெடுதி உண்டு. அவர்கள் மனப்பொருத்தம் இல்லாதவர்கள் ஆகையால், அவர்களோடு கூடிவாழும் வாழ்க்கை ஒரு குடிசையினுள்ளே பாம்போடு உடன்வாழ்வது போல் எப்போதும் தீமைக்கு இரையாகும் வாழ்க்கையாகும் :

**நிழல்நீரும் இன்னாத இன்னா ; தமர்நீரும்**
**இன்னாவாம் இன்னா செயின். (881)**

வாள்போல் பகைவரை அஞ்சற்க ; அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. (882)

எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு. (889)

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடனுறைந் தற்று. (890)

பெரியாரைப் பிழையாமை

உலகத்தில் சிலர் அறிவும் ஆற்றலும் மிக்கவர்களாக இருக்கின்றார்ககள். அவர்களை மதித்து நடக்கவேண்டும். அவர்களை அவமதித்துப் பிழை செய்வதால் வரும் இடரும் அழிவும் தாங்க முடியாதனவாக இருக்கும். ஆகையால் தற்காப்புத் தேடுவார் செய்யும் காவல் முறைகளில் தலையானது எது என்றால், ஆற்றல் உடையவர்களின் ஆற்றலை இகழாமல் நடப்பதே ஆகும். அத்தகைய பெரியவர்களைப் போற்றாமல் நடந்தால் அவர்களால் நீங்காத துன்பம் வரும். ஆற்றல் உடையவர்களுக்கு ஆற்றல் இல்லாதவர்கள் தீமை செய்தால், அது எமனைக் கைகாட்டி அழைப்பதுபோல் ஆகும். தீயினால் சுடப்பட்டாலும் ஒருவாறு தப்பிப்பிழைக்க முடியும்; ஆனால் பெரியோரிடம் தீமை செய்கின்றவர்கள் தப்பிப் பிழைக்க முடியாது. சிறந்த கொள்கை உடைய பெரியோர்கள் சினம் கொள்வதில்லை ; ஒருகால் பொது நன்மை கருதிச் சினம்கொண்டு எதிர்க்க எழுந்தால், ஆளும் தலைவனும் இடைகாலத்திலேயே சீரழிந்து தலைமைப் பதவி இழந்து கெடுவான் ;

ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை. (891)

பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்
பேணா இடும்பை தரும். (892)



கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல். (894)

எரியால் சுடப்படினும் உய்வுண்டாம்; உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். (896)

ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். (899)

பெரியோர் இயல்பாகவே நல்லவர்கள்; தன்னலம் அற்றவர்கள் ; பொறுமை மிக்கவர்கள். அவர்களுக்குத் தன்னலம் இன்மையால், பிறர் தீங்கு செய்தபோதும், பொறுமை இழக்க மாட்டார்கள்; தீங்கு செய்தவர்களுக்கும் நன்மையே செய்வார்கள். ஆனால் பொதுவாழ்வில் மக்களுக்கு ஏதேனும் குறை இருக்குமானால் அதைக் களைந்து மக்களுக்குத் தொண்டு செய்ய முற்படுவார்கள்; அப்போது ஆட்சித் தலைவனோ, அமைச்சரோ, மன்றத்தினரோ, மற்றவரோ அவர்களைத் தடுக்க முடியாது. ''நம் கடமையில் நாம் செல்கின்றோம். இந்தப் பெரியோர் நம் கடமையில் ஏன் குறுக்கிட வேண்டும்'' என்று இகழத் தொடங்கி, அது காரணமாக அவர்களுக்கு இடையூறும் செய்யத் தொடங்கினால், அப்போதுதான் அந்தப் பெரியோர் பொறுமை இழந்து எதிர்க்கத் தொடங்குவார்கள், பெரும்பாலும் பொறுமை இழக்காத அவர்கள், ஒருகால் இவ்வாறு பொறுமை இழந்து எதிர்க்கத் தொடங்கினால், எத்தகைய பதவியில் உள்ளவர்களும் அழிய வேண்டி நேரும். காரணம் என்ன ? தன்னலம் இல்லாமல் பொதுத்தொண்டு செய்ய முற்பட்ட அவர்களுக்கு ஆற்றல் மிகுதி; மக்களின் நல்லெண்ணமும் அவர்களின் சார்பிலேயே திரளும். ஆகையால் அவர்களிடம் தவறாக நடந்து கொள்ளக்கூடாது என்று திருவள்ளுவர் அறிவுரை கூறுகின்றார்.

**பெண்வழிச் சேறல்**

குடும்பக் கடமை வேறு: உலகக் கடமை வேறு. குடும்பக் கடமையையும் குறைவற முடித்து உலகக் கடமையையும் நன்கு செய்ய வல்லவர் சிலர். அவர்களின் வாழ்க்கையில் போராட்டமே இல்லை. சிலருடைய வாழ்க்கையில் குடும்பக் கடமைக்கும் உலக கடமைக்கும் போராட்டம் ஏற்படும். அவர்களில் சிலர் குடும்பத்தைப் போற்றி உலகக் கடமையைத் துறந்துவிடுவார்கள். வேறு சிலர் உலகக் கடமையைப் போற்றிக் குடும்பத்தைத் துறந்து வெளியேறுவார்கள்; அவர்களால் பொதுவாழ்கையில் பெரிய தீங்கு நேர்வதில்லை.

ஆனால், குடும்பத்திலும் இருந்துகொண்டு உலகக் கடமையையும் மேற்கொண்டு வாழ்கின்ற சிலர், குடும்பத்தின் நன்மையே பெரிதாகக் கொண்டு பொதுவாழ்க்கைக்கு இடையூறான வழியில் நடப்பார்கள். அவர்களே பொது வாழ்க்கையில் கடமையைச் செய்யாமல், பற்று வைத்துக் கொண்டு கெடுதி இழைக்கின்றவர்கள்; குடும்ப வாழ்க்கை எப்படியாவது சிறப்புற வேண்டும் என்று நடுநிலையை மறந்து ஒரு சார்பாக நடக்கின்றவர்கள்; குடும்ப வாழ்க்கைக்கு ஆக்கம் தேடிப் பொதுத் தொண்டில் ஊக்கம் குன்றி நெருக்கடி நேரும்போது கடமையை மறந்து திரிகின்றவர்கள். (பொது நன்மையைக் கருதாமல், கையூட்டு (லஞ்சம்) வாங்கிப் பணம் குவித்துக் குடும்ப வாழ்க்கையை உயர்த்திக் கொள்கின்றவர்களும் அவர்களே). ஒருவன் இவ்வாறு செய்வதற்கு அடிப்படைக் காரணம் என்ன என்று ஆராய்ந்தால், அவனைப் போல் குடும்பத்தில் பொறுப்பு ஏற்றுள்ள அவனுடைய மனைவியின் தன்னலமும் காரணம் என்பதை உணரலாம். அவன் மனம் பொது வாழ்வில் ஈடுபட்



டிருக்கும் நிலைமையை மாற்றித் தன் பக்கம் இழுத்துக் கொடுப்பது அந்தத் தன்னலமே. குடும்பக் கடமையை விட உலகக் கடமை சிறந்தது என்று அறியாத காரணத்தால் அவள் அவனுடைய பொறுப்பை உணர்வது இல்லை. உலகம் என்பது இன்னது, நம் வாழ்க்கையின் அடிப்படையானது உலகப் பொது வாழ்வே என்று அறியாத அவள் எப்படியாவது ஆடம்பரமாக வாழ வேண்டும் என்றும், குடும்பத்திற்குப் பொருளும் சிறப்பும் சேர வேண்டும் என்றும் தவறாக எண்ணுகின்றாள். இப்படி பல குடும்பத்தார் வாழ்ந்து உயர்நிலை பெறுவதை அவள் கண்ணால் கண்டு கண்டு, தன் கணவனும் அவ்வாறே பொதுவாழ்க்கையை உறிஞ்சிக் குடும்ப வாழ்க்கையை மேம்படுத்த வேண்டும் என்று தவறாக உணர்கின்றாள்; பல குடும்பத்தாரின் உயர்வுக்குக் கணவான்மார் இவ்வாறு நடப்பதே காரணம் என்று எடுத்துக்காட்டுகள் பல காண்பதால், இது தவறு என்பதை அவளால் உணர முடிவதில்லை. (மற்றவர்களுக்கு இருப்பன போல் நகைப் பெருக்கம் வேண்டும். பட்டாடைப் பெருமை வேண்டும், மாளிகை வாழ்வு வேண்டும், பல்வகைப் பொருட் சிறப்பு வேண்டும் என்றெல்லாம் மனைவியர் விழையும் விழைவே கணவன்மாரின் நடுநிலை பிறழ்வுக்கும் லஞ்சக் கொடுமைக்கும் இன்று காரணமாக உள்ளது என்பதையும் எண்ணிப் பார்க்கலாம்) அறிவும் கடமையுணர்வும் உள்ள கணவனோ, மனைவியின் விருப்பத்திற்கு இணங்க மறுக்கின்றான். பண்பட்ட மனைவியாயின் அவன் உள்ளத்தை உணர்ந்து திருந்துகின்றாள்; இல்லையாயின் போராடுகின்றாள். போராட்டத்தில் கணவன் ஈடுபடுகின்றான்: உறுதியுள்ளவனானால், அவளைப் பொருட்படுத்தாமல் பொதுக்கடமையை நடுநிலையோடு செய்கின்றான்.

உறுதி குறைந்தவனானால், அன்புடைய அவள் நெஞ்சமே அவனை வெல்கின்றது ; மெல்ல மெல்ல அவள் விரும்பிய வழியில் அவன் நடக்கின்றான் ; இதுவே பெண்வழிச்சேறல் என்பது.

பெண் காதலியாகக் காமத்துப்பாலில் விளங்கும் போது போர்க்களத்தில் பகைவரெல்லாம் அஞ்சத்தக்க காதலனுடைய உரத்தை எளிதில் உடைக்க வல்ல மெல்லியலாக இருக்கின்றாள் ; உடன் இருக்கும்போது அவனுடைய உயிர்வாழ்வாக இருக்கின்றாள் ; பிரியும் போது உயிர் உடம்பிலிருந்து நீங்கும் துன்பமாக இருக்கின்றாள். இவ்வளவு இன்றியமையாமை அந்தக் காதல் வாழ்விற்குப் பொருந்தும். அறத்துப்பாலில் அவள் மனைத்தக்கமாண்பு உடையவளாக இருக்கின்றாள் ; கணவனுடைய வளத்துக்குத்தக்க வாழ்க்கை நடத்துகின்றவளாக இருக்கின்றாள். அதனால் பெருமை பெற்று விளங்குகின்றாள். ''பெண்ணின் பெருந்தக்க யாஉள'' என்று அவளுடைய கற்பின் திறத்தைத் திருவள்ளுவர் வியந்து வாழ்த்துகின்றார். இவ்வாறு கடமையைச் செய்து தற்காத்துத் தற்கொண்டானைப் போற்றும் வாழ்க்கைத் துணைவியாக இருப்பது அந்த இல்லற வாழ்விற்குத் தகும். ஆனால் கணவனுடைய வளத்திற்குத் தக்க வாழ்க்கை நடத்தாமல், தன் பெருமையும் சிறப்புமே பொருளாகக் கருதி, அவற்றிற்காகக் கணவனுடைய கடமையும் பொறுப்பும் எத்தகையவை என்று உணராமல், பொது வாழ்க்கையை உறிஞ்சித் தன்னைப் போற்ற வேண்டும் என்று விரும்புவாளானால், அவளைந் திருத்துவது கணவனுடைய கடமையாகும். திருந்தாமல் அவள் விரும்பும் வழியில் இணங்கிச் செல்லுதல் அவனுக்குக் குற்றமாகும், காமத்துப்பாலில் காதலனாக வாழ்கின்றவன், அறத்துப்பாலில்



அறவோனாக ஒழுகி, பொருட்பாலாகிய பொதுவாழ்க்கைத் துறையில் கடமை வீரனாகச் செயலாற்ற வேண்டும். இவ்வாறே காமத்துப்பாலில் காதலியாகவும் அறத்துப்பாலில் வாழ்க்கைத் துணைவியாகவும் இருக்கும் பெண், பொருட்பாலில் கணவன் ஆற்றும் பொதுக்கடமைகளுக்கு இடையூறாக நிற்காமல் உதவி அளிப்பவளாக இருக்க வேண்டும்.

திருவள்ளுவரின் கருத்து இதுவே என்பதை ஆராயாமல், ஆண் எப்போதும் பெண்ணுக்கு இயைந்து நடத்தலாகாது என்று சிலர் கூறுவர். திருவள்ளுவர் அவ்வாறு கருதுபவர் அல்லர். காமத்துப்பாலில் பெண்ணைக் காதலனுடைய உயிராகப் போற்றிக்கூறிய ஆசிரியர், அறத்துப்பாலில் மனைத்தக்க மாண்புடையவள் என்று போற்றியவர், பொருட்பாலில் பொதுவாழ்விற்கு இடையூறாக நிற்கும் போதுதான் கடிந்து கூறுகின்றார். அப்போதும் பெண்ணைக் கடிந்து கூறவில்லை என்பதையும், பெண்ணைத் திருத்த முடியாமல் அவள் விரும்பிய வழியில் நடக்கும் ஆணையே கடிகின்றார் என்பதையும், பொதுக் கடமைகளுக்கு இடையூறாகும் காரணம் பற்றியே கடிகின்றார் என்பதையும் உணர வேண்டும். 'பெண்வழிச் சேறல்' என்று கடிந்து கூறும் பத்துக் குறளில் ஏழு குறள் இதைத் தெளிவாக்குகின்றன. எவ்வாறு ? மனை ஒருபுறம்—வினை மற்றொருபுறம், இல்லாள் ஒருபுறம்—நல்லார் மற்றொருபுறம், மனையாள் ஒருபுறம் —வினையாண்மை மற்றொருபுறம், நன்னுதலாள் ஒருபக்கம்—நட்டார் மற்றொரு பக்கம், பெண்ஏவல் ஒருபக்கம்—அறமும் பொருளும் மற்றொரு பக்கம், பெண் சேர்ந்த பேதமை ஒருபக்கம் எண் சேர்ந்த நெஞ்சம் மற்றொரு பக்கம் : இவ்வாறு ஏழு குறளையும் சீர்தூக்கும் கோல் போல் அமைத்து, ஒரு பகுதியில் நிற்கும் பெண் மற்றொரு பகுதியாகிய பொதுக் கடமைக்கு

இடையூறாக இருக்கும் தன்மையையே எடுத்துக் காட்டிக் கடிகின்றார். ஆகவே, ''பெண்ணின் பெருந்தக்கயாவுள ?'' என்று உலகத்தை வினவிய திருவள்ளுவர் பெண்ணைத் தாழ்த்தினார் என்று கூறி இந்தப் பகுதியைச் சான்றாகக் காட்டுவது பொருந்தாது.

திருவள்ளுவர் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒத்த உரிமை நல்கும் சான்றோர் என்பதையும் இங்கு மறத்தல் கூடாது. ஆணுக்குப் பெண் அடங்கும் பெண்ணடிமைத் தன்மை, குடும்ப முன்னேற்றத்தைக் குலைக்க வல்லது ; அதுபோலவே பெண்ணுக்கு ஆண் அடங்கி நடக்கும் ஆணடிமைத் தன்மையும் பொதுவாழ்க்கையைக் கெடுக்க வல்லது. ஆகையால் பொதுக்கடமையை மேற்கொண்டவன் ஆகிய ஆண் பெண்ணுக்கு அஞ்சி அடங்கி நடக்கும் இயல்பைக் கடிகின்றார். 'இல்லாள் கண் தாழ்ந்த இயல்பின்மை,' 'மனையாளை அஞ்சும் மறுமையிலாளன்,' 'இல்லாளை அஞ்சுவான்,' 'இல்லாள் அமையார்தோள் அஞ்சுபவர்,' 'பெண் ஏவல் செய்தொழுகும் ஆண்மை,' 'பெண் ஏவல் செய்வார்' என்று ஆறு குறளில் வரும் தொடர்களே திருவள்ளுவரின் உள்ளக் கருத்தைத் தெரிவிக்கப் போதுமானவை.

மனைவியை விரும்பி அவள்வழியில் வாழ்கின்றவர்கள் சிறந்த பயனை அடைய மாட்டார்கள் ; பொதுக்கடமையாகிய வினையை மேற்கொண்டவர்கள் விரும்பத் தகாதது அது. மனைவியிடம் பணிந்து நடக்கும் தீய இயல்பு எப்போதும் நல்லவர்களிடத்தில் பழகும்போது நாணம் தரும். மனைவிக்கு அஞ்சி நடக்கின்றவன் எப்போதும் நல்லவர்களுக்கு நன்மை செய்வதற்கு அஞ்சுவான். மனைவியின் விருப்பம்போல் வாழ்கின்றவர்கள் நண்பர்களின் குறையையும் தீர்த்து உதவ முடியாது ; பொதுநன்மைக்கு உரிய கடமையையும் செய்ய முடியாது. பெண்ணுக்கு ஏவல் செய்



கின்றவர்களிடத்தில் அறம் பற்றிய நல்ல செயலும் காண முடியாது ; பொருள் பற்றிய தக்க செயலும் காண முடியாது ; இன்பம் பற்றிய இனிய செயலும் காண முடியாது ; அவன் வாழ்க்கையே வீணாக முடியும். ஆகையால், கடமை எண்ணம் நிரம்பிய நெஞ்சமும் அதற்கு ஏற்ற பதவியும் உடையவர்களுக்குப் பெண்வழியில் அடங்கி நடங்கும் அறியாமை இல்லை :

மனைவிழைவார் மாண்பயன் எய்தார்; வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது. (901)

இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும் (903)

இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல். (905)

நட்டார் குறை முடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங்கு ஒழுகு பவர். (908)

அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ஏவல் செய்வார்கண் இல். (909)

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்கு எஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல். (910)

### வரைவின் மகளிர்

மனஉறுதியும் அறிவுத் தெளிவும் இல்லாத மக்கள் நாடுகின்ற பொருள்கள் சில உண்டு ; அவை பொதுமகளிர், கள், சூது என்பவை. பெண்வழிச் செல்கின்றவன், எவ்வாறு பொதுக் கடமையைப் புறக்கணிப்பானோ, அவ்வாறே வரைவின்மகளிரையும் கள்ளையும் சூதையும் நாடுகின்றவன் பொதுக்கடமையைப் புறக்கணிப்பான் ; மறக்கவும் மறப்பான். ஆகையால் பொருட்பாலில் பொதுவாழ்விற்கு

ஏலாதன கூறும் திருவள்ளுவர் அவற்றைக் கடிந்து கூறுகின்றார். பொதுமகளிரை நாடுகின்றவனும் கள்ளுண்பவனும் சூதாடுகின்றவனும் பொதுவாழ்விற்குத் தகுதியற்றவர்கள். இவர்கள் அறத்தையும் பொறுப்பையும் போற்றிக் கடமையைச் செய்யாமல், நாடி நரம்புகளுக்கு அடிமைகளாக வாழ்ந்து அல்லல் படுவார்கள். இந்த அடிமைகள் உரிமையும் கடமையும் நிறைந்த பொதுவாழ்க்கைக்கு இடையூறானவர்கள் என்பது திருவள்ளுவர் கருத்து. அவர் காலத்தில் மருதத்திணை என்று போற்றப்படும் பகுதியில் பரத்தையராகிய பொதுமகளிர் இடம் பெற்றிருந்ததையும் மக்களுடைய அன்றாட வாழ்வில் எல்லோரும் பருகும் பொருளாகக் கள் இடம் பெற்றிருந்ததையும் அறிந்து, அகப்பொருட் பாடல்களில் பரத்தையரும் புறப்பொருட் பாடல்களில் கள்ளும் பயின்றிருப்பதையும் கண்டால், இந்த இரண்டையும் முதல் முறையாகத் தமிழ்நாட்டில் கடிந்து கூறிய பெருமகன் திருவள்ளுவரே என்பது விளங்கும். அவற்றை நோக்கினால், அவருடைய சீர்திருத்த உள்ளம் புலனாகும். இவ்வாறு அவர் கடிந்துள்ள காரணம் அறம் பற்றியதாக இருந்தாலும், சிறப்பாகப் பொது வாழ்க்கை பற்றியதே ஆகும். அதனால்தான் அறத்துப்பாலில் அவற்றைக் கூறாமல் பொருட்பாலில் கூறியிள்ளார். தமக்கு முன் இருந்த எந்தப் புலவரும் கடிந்து கூறாமல் விட்ட அவற்றைத் திருவள்ளுவர் கடிந்தமையால், பொது வாழ்க்கையைப் புறக்கணிக்கவும் மறக்கவும் இவை காரணங்களாக இருந்ததை முதல்முதலில் உணர்ந்து தெளிந்தவர் அவரே எனக் கூறலாம்.

ஒருவனுக்கு வாழ்க்கைத் துணையாய் வந்து அவனுடைய வளத்துக்குத் தக்கவளாய் வாழ வேண்டிய மனைவியே



பொருட் பற்றுக் கொண்டால், அவனுடைய பொதுக் கடமைக்கு இடையூறாக நிற்பவளாகின்றாள். அன்பு கொண்ட மனைவியே அவ்வாறானால், பொருட்பற்று ஒன்றே நோக்கமாகத் தம் ஒழுக்கத்தை விற்று வாழும் வரைவின் மகளிர் (பொதுமகளிர்) ஒருவனுடைய பொதுக் கடமைக்கு எவ்வளவு தீங்கு விளைக்கக் கூடும் என்பதைக் கூறவும் வேண்டுமோ ?

அன்பு காரணமாக விரும்பாமல் பொருள்பெறும் காரணத்தாலேயே விரும்புகின்ற மகளிரின் இனிய சொல்லை நம்பிப் பழகக் கூடாது ; அந்த இனிய சொல்லே பிறகு கேட்டைத் தரக் கூடியதாகும். ஆகையால் அதைக் கேட்டு மயங்கக் கூடாது. ஒருவனிடமிருந்து எவ்வளவு பயன் பெற முடியும் என்று ஆராய்ந்து அதைப் பெறுகின்ற வரைக்கும் பண்பான சொற்களைப் பேசுவார்கள் ; ஆனால் உண்மையில் அவர்களுக்குப் பண்பு என்பதே இல்லை ; ஆகையால் அவர்களால் பெறும் இன்பத்தை ஆராய்ந்து வெறுத்து அவர்களை அணுகாமல் விடவேண்டும் :

**அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்**
**இன்சொல் இழுக்குத் தரும்.** **(911)**

**பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பில் மகளிர்**
**நயன்தூக்கி நள்ளா விடல்.** **(912)**

அறநெறியில் நின்று அருளாகிய சிறந்த பொருளை ஆராயும் அறிவுடையவர்கள், இயற்கை அறிவால் மாட்சிமைப்பட்ட கல்வியறிவுடையவர்கள், தாம் பெற்றநன்மையை உலகெல்லாம் பரப்பும் நோக்கமுடையவர்கள் ஆகிய இவர்கள் பொது மகளிரைத் தீண்டமாட்டார்கள். ஆனால், நெஞ்சத்தை நிறுத்தியாளும் தன்மை (நிறை) இல்லாதவர்

களும், எதையும் ஆராய்ந்து காணும் அறிவு இல்லாதவர்களும் உயர்வு சிறிதும் இல்லாத கீழ் மக்களும் பொது மகளிரை விரும்புவார்கள் :

பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவினவர். (914)

பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவினவர். (915)

தம்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள். (916)

நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சில்
பேணிப் புணர்பவர் தோள். (917)

ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப
மாயமகளிர் முயக்கு. (918)

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு. (919)

இவற்றைக் கற்கும்போது, பொதுமகளிரை நாடுவோர் மேல் இரக்கமே உண்டாகின்றது. அருள்பற்றிய உணர்வு அறிவு நலம் ஆகியவை அவர்களுக்கு இல்லையே என்றும், நெஞ்சை நிறுத்தும் வல்லமை இல்லாமல் நாடி நரம்புகளுக்கு அடிமைகளாக அல்லல்படுகின்றார்களே என்றும், தம் வாழ்வைப் பற்றித் தாமே ஆராய்ந்து பார்க்கவும் ஆற்றல் இல்லையே என்றும் வருந்தி இரங்கவேண்டியுள்ளது. ஆனால் அவர்களால் பொதுவாழ்வு (அரசியல் முதலியன) கெடாமல் காக்க வேண்டிய கடமை ஆதலின், அவற்றைக் கடிகின்றார். அவர்களுக்குத் திரு (அரசியல் செல்வாக்கு) வாய்ப்பது அரிது என்றும், வாய்த்தாலும் நீங்கிவிடும் என்றும் இறுதியில் தெரிவிக்கின்றார். உள்ளத்தில் பொருள் வேட்கையும் புறத்தில்' அன்புடையார் போல் நடிக்கும் தன்மையுமாகிய



இருவகைப்பட்ட மனத்தை உடைய பொதுமகளிரும் கள்ளும் சூதும் ஆகிய இவை திரு இல்லாமல் நீக்கப்பட்டவர்களுக்கு (அரசியல் முதலியவற்றில் வீழ்ச்சி உற்றவர்களுக்கு) நட்பாக வந்து அமையும் என்கின்றார் :

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. (920)

இந்த மூன்றும் ஆகாதன என்று பொருட்பாலில் திருவள்ளுவர் கடியும் காரணம் இன்னது என்பது இந்தக் குறளால் தெளிவாகின்றது.

கள்ளுண்ணாமை

திருவள்ளுவர் காலத்திற்கு முன் சமயத்தின் செல்வாக்குக் குறைவு என்றும், அவர் காலத்தில் தான் அது மிகுதியாயிற்று என்றும், அதனால் மற்றவர்கள் கடியாத கள்ளை அவர் கடியத் தொடங்கினார் என்றும் கூறுவார்கள். அது உண்மையானால், கள் குடிப்பது பாவம் என்றாவது, அறத்திற்கு மாறனது என்றாவது, நரகத்திற்குக் காரணம் என்றாவது கூறியிருக்க வேண்டும். அவ்வாறு ஒரு குறிப்பும் கூறவில்லை. பிறரிடம் மதிப்பு இழக்க நேரும் என்றும், சான்றோரின் தொடர்பு போய் விடும் என்றும், அறிவு மயங்கும் என்றும் திருவள்ளுவர் கூறுகின்றாரே அல்லாமல், வேறு வகையால் கடிந்து அறிவுறுத்தவில்லை. ஆகையால் பரத்தையரும் சூதும் போல், கள்ளும் பொருட்பாலில் பொது வாழ்விற்கு இடையூறாவது என்றும், பொதுக்கடமையைச் செய்வதற்கு இடரானது என்றும், உணர்ந்தே இங்கே உணர்த்தியுள்ளார். (உரையாசிரியர் பரிமேலழகரும் முதல் குறளிலேயே 'கட்காதல் கொண்டு ஒழுகுவார்' என்னும் தொடருக்குக் 'கள்ளின்மேல் காதல் செய்து 'ஒழுகும்

அரசர்' என்று அரசியல் நினைவு மாறமல் எழுதுவதும் இங்குக் கருதத்தக்கது).

கள்ளின்மேல் விருப்பம் கொண்டு வாழ்கின்றவர்களைக் கண்டு எப்போதும் பகைவர் அஞ்சமாட்டார்கள். கள்ளுண்பவர் தம்மதிப்பையும் இழந்துவிடுவார்கள். ஆகையால் எக்காரணத்தாலும் கள் உண்ணக் கூடாது; உண்டால், சான்றோரின் உறவு போய்விடும்; சான்றோரின் நல்லெண்ணம் வேண்டாதவர்கள் உண்ணட்டும் :

உட்கப் படாஅர் ஒளிஇழப்பர் எஞ்ஞான்றும்
கள்காதல் கொண்டொழுகு வார். (921)

உண்ணற்க கள்ளை; உணில்உண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார். (922)

மகனுடைய எந்தக் குற்றமும் தாய்க்கு வெறுப்புத் தராது; ஆனால் கள்ளுண்டு மயங்குவது ஒன்றுதான் தாயின் முன்பும் வெறுப்புத் தருவதாகும்; தாய்க்கே இவ்வாறானால் மற்றச் சான்றோர்க்கு எவ்வாறு இருக்கும்?

ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்; என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி? (924)

பொருள் கொடுத்துக் கள் தாங்கிக் குடித்து அதனால் தன் உடம்பைத் தான் அறியாத நிலைமையைப் பெறுவதா? இது, தான்செய்வது இன்னது என்று அறியாத அறியாமையாக இருக்கின்றது. கள்ளால் அறிவு மயங்கிக் கெடுகிறது; நஞ்சால் அறிவு கெட்டு அடியோடு அழிகிறது. உறங்கினவர் செத்தவரைப்போலவே தோன்றுகின்றார்கள்; மூச்சுவிடுதல் தவிர வேறு ஒன்றும் வேறுபாடு இல்லை; அதுபோலவே அறிவு கெடுவதில் கள்ளுண்பவர் நஞ்சு உண்பவரைப் போன்றவர்களே. மறைவாகக் கள்ளுண்டு அறிவு மயங்கித்



தளர்கின்றவர்களை உள்ளூரில் வாழ்கின்றவர்கள் எப்போதும் மறைந்து ஆராய்ந்து வருவார்கள்? அதனால் கள்ளுண்பவர் உள்ளூரிலேயே இகழப்படுவார்கள் :

கையறி யாமை உடைத்தே பொருள் கொடுத்தும்
மெய்யறி யாமை கொளல். (925)

துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்; எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். (926)

உள்ஒற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ஒற்றிக் கண்சாய் பவர். (927)

கள்ளுண்டு மயங்கியவனுக்குக் காரணம் காட்டி அதன் தீமையை விளக்குவது முடியாத செயல்; அது நீரின்கீழ் மூழ்கிய ஒருவனை மற்றொருவன் திவட்டி எடுத்துக் கொண்டு துருவித் தேடுவதுபோல் ஆகும். நீருள் திவட்டி செல்லாதது போலவும், தானும் அவிந்து பயன் கெடுவது போலவும், குடித்தவன் மனத்தில் காரணமும் செல்லாது; காரணம் காட்டுகின்றவனுடைய அறிவும் பயனற்றுப் போகும் :

களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று. (929)

## சூது

சூதாட்டம் அறிவைக் கெடுக்காவிட்டாலும், கடமையைப் புறக்கணிக்கச் செய்ய வல்லது; அதனால் அதுவும் பொதுவாழ்வுக்கு இடையூறானது. தனி வாழ்விற்காவது நன்மையானதா என்று ஆராய்ந்தால், சூதாட்டத்தில் வெற்றி உண்டு என்று கூறலாம்; ஆனால், வென்று பெறும் பொருள், மேல் வரும் இழப்புக்கும் துன்பத்திற்கும் உள்ளாகுமாறு

கெடுக்க வல்லதே அல்லாமல், உண்மையான ஊதியம் அன்று ; அதன் விளைவு தூண்டில் இரும்பை இரை என்று கருதி விழுங்கிய பிறகு மீன் அல்லல்படுவது போல் ஆகும். ஆகையால் வெற்றி தருவதானாலும் சூது ஆடுதலை விரும்பக் கூடாது. ஊதியமாக முன்னே ஒன்று பெறலாம் ; ஆனால் பிறகு நூறு மடங்கு இழக்க வேண்டி வரும். இதுதான் சூதாடிகளின் வாழ்வு. இவர்கள் நன்மை பெற்று வாழ வழி இல்லை.

வேண்டற்க வென்றிடினும் சூதினை ; வென்றதூஉம்
தூண்டில்பொன் மீன்விழுங்கி யற்று. (931)

ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு. (932)

உருளும் கருவிகொண்டு சூதாடுவதை ஓயாமல் விரும்பினால் பொருள் வருவாய் அவனைவிட்டு அகன்று வெளியே போய்விடும். பல துன்பங்களையும் செய்து உள்ள புகழையும் கெடுக்க வல்ல சூதுபோல் வறுமையைத் தர வல்லது வேறொன்றும் இல்லை. சூது என்பதே மூதேவிதான் ; அதற்கு இரையானவர்கள் வயிறார உண்ணவும் மாட்டார்கள் ; அல்லலும் படுவார்கள். உள்ள காலம் எல்லாம் சூதாடும் இடத்தில் செலவாகுமானால், பெற்றுப் பழகி வந்த செல்வத்தையும் (அரசியல் பதவி முதலியவற்றையும்) கெடுக்கும் ; நல்ல பண்புகளையும் கெடுத்துவிடும். உள்ள பொருளைக் கெடுப்பது மட்டும் அல்லாமல், பொய்யை மேற்கொள்ளும் படியாகச் செய்து, அருள்நெறியையும் மறக்கச்செய்து, துன்புறச் செய்யும். சுருங்கச் சொன்னால், சூதாட்டத்தை விரும்பி மேற்கொண்டால், செல்வம், மதிப்பு, கல்வி, உணவு, உடை என்னும் ஐந்தும் இழந்து துன்பப்படவேண்டி வரும் :



உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம்
போஒய்ப் புறமே படும். (933)

சிறுமை பலசெய்து சீர்அழிக்கும் சூதின்
வறுமை தருவதொன்று இல். (934)

அகடாரார் அல்லல் உழப்பர்சூது என்னும்
முகடியால் மூடப்பட் டார். (936)

பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின், (937)

பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள் கொடுத்து
அல்லல் உழப்பிக்கும் சூது. (938)

உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின். (939)

சூதாட்டத்தில் ஈடுபடாமல் மிக மிக விழிப்பாக இருந்து விலக வேண்டிய காரணம் ஒன்று உள்ளது : அதுதான் அதன் அளவற்ற கவர்ச்சி ; துன்பம் படப்பட உடலோடு வாழும் வாழ்க்கையில் உயிருக்கு ஆசை வளர்வது போல், பொருளை இழக்க இழக்கச் சூது ஆடுகின்றவனுக்குச் சூதின் மேல் ஆசை வளரும் ; இப்படிப்பட்ட கவர்ச்சி அதற்கு இருப்பதால் விழிப்பாக இருந்து விலக வேண்டும் :

இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற்று உயிர். (940)

**மருந்து**

பொதுவாழ்விற்குக் கருவியாக உள்ளத்தின் உறுதியும் அறிவின் தெளிவும் கெடாமல் காத்துக்கொள்ள வேண்டும். வரைவின்மகளிர், கள், சூது என்பன போல் உடம்பிற்கு வரும் நோயும், உள்ளத்தின் உறுதியையும் அறிவின்

தெளிவையும் கெடுக்க வல்லதாகும். ஆதலின் பொது வாழ்வில் ஈடுபட்டோர் நோயற்றவராக வாழவேண்டும் என்றும், நோய் வந்தாலும் உடனே தீர்த்துக்கொள்ள வேண்டும் என்றும் திருவள்ளுவர் இங்குக் கூறுகின்றார். முதல் ஏழு குறளில் நோயில்லாமல் வாழ இயற்கை வழியைக் கூறிய பிறகு, மூன்று குறளில் நோய் வந்தபின் மருந்தால் அதைத் தீர்த்துக்கொள்ளும் முறையைக் கூறுகின்றார். அதிகாரத்திற்கு 'மருந்து' என்ற தலைப்பையே கொடுத்திருந்தும் ஏழு குறளில் மருந்து வேண்டாத வாழ்வையே அறிவுறுத்துகின்றார்: ஒரு குறளில் வெளிப்படையாகவே, 'மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு' என்றும் தெளிவிக்கின்றார். ஆனால் இந்த நெறி மிக மிக அரிய நெறி என்றும், எல்லோராலும் எல்லாக் காலத்திலும் இயலாதது என்றும் உணர்ந்தவர் அவர். அதனால் தவறி நோய்வாய்ப்பட்டவர்களுக்கு மருந்தால் தீர்க்கும் முறையை மூன்று குறளால் அறிவிக்கின்றார்.

பழங்காலத்து மருத்துவ முறைப்படி ஒருவனுடைய கையில் நாடி பார்த்து அவன் உற்றநோய் இன்னது என்று காண முடியும். அவ்வாறு காணும்போது உடலில் வாதம் பித்தம் சிலேத்துமம் என்னும் மூன்றும் மிகாமலும் குறையாமலும் இயற்கையான அளவில் இருந்தால் நோயற்ற நிலை என்று கூறுவார்கள். இந்த மூன்றில் ஒன்றோ இரண்டோ மிகுந்தாலும் குறைந்தாலும் நோய் உண்டாகும்:

**மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**
**வளிமுதலா எண்ணிய மூன்று.** (941)

வாதம் பித்தம் சிலேத்துமம் ஆகிய மூன்றும் மிகாமலும் குறையாமலும் தம் அளவில் நிற்க வேண்டுமானால் என்ன செய்வது? வாதம் மிகுந்தால் வாயுப் பொருளை உண்ணாமல்



விடுதல், பித்தம் மிகுந்தால் பித்தப் பொருளை உண்ணாமல் விடுதல், சிலேத்துமம் மிகுந்தால் கபம் உண்டாக்கும் ஈரப் பொருளை உண்ணாமல் விடுதல், இவ்வாறே ஒன்று குறைந்தால் அதை ஈடு செய்யும் பொருளைத் தேடி உண்ணுதல் ஆகிய இந்தமுறையைச் சிலர் கையாள்வது உண்டு. இது அவ்வளவு சிறந்த முறை அன்று. ஏன்? உண்கின்ற உணவுக்கு ஏற்ப வாதம் முதலியவை ஏற்படுகின்றன என்பதுமட்டும் முழு உண்மை அன்று; உண்கின்ற உணவைச் செரிக்கச்செய்து ஏற்றுக்கொள்ளும் வயிற்றையும் பொறுத்தே அவை ஏற்படுகின்றன. ஒருவர் உடம்பில் இனிப்பு (சர்க்கரை) மிகுதியாவதாக வைத்துக்கொள்வோம். அவர் இனிப்பற்ற உணவையே தேடி உண்டாலும், எல்லாவற்றையும் இனிப்பாகவேமாற்றிக் கொள்ளும் ஆற்றல் வயிற்றுக்கு உள்ளது. ஆகையால் இனிப்புப்பொருளை மட்டும் விட்டுவிடுவதால் பயன் ஏற்படுவதில்லை. அவ்வாறே புளிப்பு உடம்பில் மிகுந்து விட்டபோது, புளிப்பான பொருள்களை விட்டுவிடுவதால் பயன் விளைவது குறைவே; புளிப்பற்ற பொருள்களையே தேடி உண்டாலும் அவற்றை எல்லாம் புளிக்கவைத்துப் புளிப்பாக மாற்றிக் கொள்ளும் ஆற்றல் வயிற்றுக்கு உள்ளது. மற்றச் சுவைகளுக்கும் இவ்வாறே காணலாம். சுவைகளை ஒட்டியே வாதம் முதலியனவும் அமைந்துள்ளன என்று வகுப்பார்கள். அந்த முறைப்படி சுவைப்பொருள்களை மாற்றிமாற்றி உண்பதால், வாதம் முதலியவற்றின் மாறுபாட்டால் வந்த நோய் தீர்ந்துவிடும் என்று நம்புவார்கள். அது தவறு விலங்குகளும் பறவைகளும் இயற்கையாகவே தம் உடலுக்கு ஏற்ற உணவையும் அதன் அளவையும் அறிந்து தின்கின்றன. அவற்றின் நாக்கு அளவறிந்து உண்ணும் கருவியாக அமைந்துள்ளது. மக்கள் நாக்கும் தொடக்கத்தில் அந்த ஆற்றல்

பெற்றிருந்தது. ஆனால் பகுத்தறிவும் எண்ணும் ஆற்றலும் வளரவளர, புலன்களின் இயற்கை ஆற்றல் குன்றிவிட்டது. அன்றியும், சமைத்து உண்ணும் செயற்கைமுறை வேரூன்றி விட்டபிறகு, இயற்கை ஆற்றல் அழிவுபட்டது. ஆகையால், இன்று ஏற்ற உணவையும் ஏலாத உணவையும் உணர்ந்து அறிவிக்கும் ஆற்றல் நாக்கிற்கு இல்லை. இன்றும் குழந்தைகளிடத்திலும சிலவகை நோயாளிகளிடத்திலும் அந்த ஆற்றல் ஒரு சிறிது அமைந்திருத்தலை உய்த்துணரலாம். உடலுக்கு ஏலாத சில பொருள்களை அவர்கள் காரணம் இல்லாமலே விலக்குகின்றார்கள். ஆயினும், உடலுக்கு ஏலாத சில பொருள்களை விரும்பவும் விரும்புகின்றார்கள் ; உடல் கெடும் என்று பிறர் சொன்னாலும் கேளாமல் விரும்புகின்றார்கள் ; அதனால் அந்த இயற்கை ஆற்றல் இன்று நாக்கிற்கு உள்ள அளவு போதாது ; நம்பத் தகாததாகவும் உள்ளது. இன்று நாக்கு இயற்கை உணர்வினால் ஆளப்படும் தன்மை குறைந்த, மனிதனுடைய விருப்பு வெறுப்பினால் ஆளப்படும் தன்மை மிகுந்துள்ளது. ஆயினும்இன்றும் உடம்பில் மற்றோர்உறுப்பு அந்த ஆற்றலை இழக்காமல் காத்து வருகின்றது ; அது மனிதனுடைய விருப்பு வெறுப்புக்குக் கட்டுப்படாமல் வேலை செய்து வருகின்றது ; அதுதான் வயிறு. அது ஒன்றே இன்றும் நம்பத் தக்கதாக உள்ளது. தக்க உணவை நன்கு செரித்து, தகாத உணவை நன்கு செரிக்காமல் தள்ளுகின்றது ; மனிதன் ஆசை வயப்பட்டவனாய்த்தகாத உணவையே திணித்து வற்புறுத்துவானானால், அதற்காக அந்த வயிறு மாறி அமைவதில்லை ; மனிதனுக்கு அடிமையாவதில்லை ; வேலை செய்ய மறுக்கின்றது ; திணிப்பும் வற்புறுத்தலும் மேலும் மிகுமானால் (செரிப்புக்கு மருந்து முதலியவை உண்டு வற்புறுத்தினால்)



மறுக்கும் நிலைமையும் கடந்து மானமுள்ளவர் போல் தானே கெட்டு அழிகின்றது. ஆகவே, அது நன்றாக வேலை செய்கின்றதா, செரிப்பு வேலை சீராக நடைபெறுகின்றதா என்று ஆராயக் கற்றுக் கொண்டால், உடல் நலத்தைக் காத்துக் கொள்வது எளிதாகும். இந்த ஆராய்ச்சியை ஜெர்மனியில் வாழ்ந்த டாக்டர் லூயிகூன் முதலான அறிஞர்கள் பலர் விளக்கி எழுதியுள்ளனர். இதையே பல நூற்றாண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டில் வாழ்ந்த திருவள்ளுவரும் மிகச் சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார்.

முன் உண்ட உணவு எவ்வாறு அற்றது (சீரணமானது) என்பதை ஆராய்ந்து அறிந்து, அந்த அளவைக் கடைப் பிடித்துப் போற்றிப் பிறகு அடுத்த வேளை உணவை உண்ண வேண்டும் ; அவ்வாறு உண்டால், உடம்பிற்கு மருந்து என்று ஒன்று வேண்டியதில்லை. முன் உண்ட உணவு அற்ற பிறகு, உண்ண வேண்டியதை இன்ன அளவு வேண்டும் என்று அறிந்து உண்பதே கடமை. அதுவே உடம்பைப் பெற்றவன் அந்த உடம்பை நெடுங்காலம் காத்துச் செல்லும் வழியாகும். முன் உண்டது எவ்வாறு செரித்தது என்று செரித்த தன்மையை ஆராய்ந்து அதனால் அறிந்த உண்மையைக் கடைப்பிடித்து, மாறுகொள்ளாத (உடம்புக்கு ஒத்துக்கொள்கின்ற) உணவை உண்ண வேண்டும் ; அதையும் நன்றாகப் பசித்த பிறகே உண்ண வேண்டும். இவ்வாறு மாறுபாடு இல்லாத உணவையும் மனம் விரும்பும் அளவு உண்ணாமல், உடலுக்குத் தேவையான அளவே உண்ண வேண்டும் ; அவ்வாறு உண்டால் உயிர் வாழ்க்கைக்கு நோயால் வரும் இடையூறு இல்லையாகும். உடலுக்குத் தேவையான உணவை ஆராய்ந்து குறைந்த அளவு இன்னது என்று அறிந்து உண்கின்றவனிடம் இன்பம் (உடல்நலம்) நிற்கும்;

அதுபோல, மனத்தின் விருப்பத்திற்கு இயைந்து அளவுமீறி மிகுதியாக உண்கின்றவனிடம் நோய் நிற்கும். பசித் தீயின் அளவிற்கு ஏற்றவாறு உண்ணாமல் ஒன்றையும் ஆராயாமல் அளவுமீறி மிகுதியாக உண்டால், நோயும் அளவு கடந்து வரும் :

மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின். (942)

அற்றால் அளவறிந்து உண்க ; அஃதுஉடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு. (943)

அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. (944)

மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு. (945)

இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய். (946)

தீயளவு இன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோய்அள வின்றிப் படும். (947)

ஒருகால் நோய் வந்தால், வந்த நோயைத் தீர்க்க என்ன செய்யவேண்டும்? அது என்ன நோய் என்று ஆராய்ந்து, அந்த நோய் என்ன காரணத்தால் வந்தது என்று நாடி, அதைத் தணிக்கும் வழி என்ன என்று அறிந்து பொருத்தமான முறையில் முயற்சி செய்யவேண்டும். மருத்துவன் உதவி செய்வதற்குமுன் நோயாளியின் உடல் நிலைமை, வலிமை, வயது முதலியவைகளையும், நோயின் தன்மையையும், தீர்ப்பதற்கு உரிய காலத்தில் வாய்ப்பையும் ஆராய்ந்து செய்ய வேண்டும் :



நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். (948)

உற்றான் அளவும் பிணி அளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல். (949)

குடிமை

நல்ல குடியில் பிறந்தவர்களுக்கு உயர்ந்த பண்புகள் இருப்பதைச் சன்றோர் கண்டார்கள். அதனால் குடிப்பிறப்புக்கே தனிச் சிறப்புத் தந்து போற்றினார்கள். இக்காலத்திலும் இது ஓரளவு காணப்படும். ஆனால், பண்டைக்காலம் போல் இப்போது இது மாறாத உண்மையாக விளங்கவில்லை. இக்காலத்தில் உயர்ந்த குடியில் பிறந்தவர்களிடம் இழிந்த இயல்புகளையும் காணலாம். உயர்வு இல்லாத குடியில் பிறந்தவர்களிடம் உயர்ந்த பண்புகள் இருப்பதையும் காணலாம், இவ்வாறு நிலைமை மாறியதற்குக் காரணமும் உண்டு.

பண்டைக் காலத்தில் உலகம் ஒரு குடும்பம்போல் நெருங்கிய உறவுகொண்டு வாழவில்லை. சிற்றூர்களில் சிறு சிறு குடும்பங்களே ஒன்றோடொன்று பழகி உறவு கொள்ள முடிந்தது. அதனால் குடிவழியாகச் சிறந்த பண்புகள் வளர்ந்து வந்தன. தந்தை பாட்டன் முதலானோரின் ஆண்மை, வண்மை, பொறுமை முதலியபண்புகள் ஒருவனிடம் இயல்பாக அமைந்திருந்தன. பண்பு என்பது குடிப்பிறப்பால் அமையும் ஒன்று என்று உணரும் நிலைமை இருந்தது. இன்றும் நகரங்களில் மிகுதியாகப் பழகாமல் நாட்டுப்புறங்களிலேயே கொள்வன கொடுப்பன, கல்வி, தொழில் முதலிய எல்லாவற்றையும், வறையறைப்படுத்திக் கொண்டு வாழ்க்கையை நடத்தும் குடும்பங்களில் இவ்வாறு குடிப்

பண்பு என்பது உண்மையாக இருப்பதைக் காணலாம். நாட்டுப் புறங்களில் இருந்து கொண்டு நகரங்களில் பழகும் குடும்பங்களிலோ, நகரங்களிலேயே வாழும் குடும்பங்களிலோ, இந்தக் குடிப்பண்பைக் காண்பது அரிதாகி வருகின்றது. குடிப்பண்பு அடியோடு இல்லை என்று சொல்லிவிட முடியாது ; ஆனால், அதனோடு இனப் பண்பும் சேர்ந்து, எந்தப் பண்பு எதன் செல்வாக்கால் அமைந்தது என்று பிரித்தறிய முடியாமல் கலந்து விடுகின்றது. சில இடங்களில் குடியின் செல்வாக்கு மிகமிகக் குறைந்து, சேரும் இனத்தின் செல்வாக்கே மிகுதியாக விளங்கவும் காண்கின்றோம். இன்னும் சில இடங்களில் குடிப்பண்புக்கு நேர்மாறாக மக்கள் பிறந்து வாழ்தலையும் காண்கின்றோம். மிகப் பழங்காலத்திலும் குடிப்பண்புக்கு முற்றிலும் முரண்பட்ட மக்கள் பிறந்து வாழ்ந்தது உண்டு ; அவர்களை அக்காலத்துப் புலவர்கள் கடிந்து திருத்த முயன்றதும் உண்டு ; அதைப் புறநானூறு முதலான நூல்களில் காணலாம். ஆனால் பழங்காலத்தில் இவ்வாறு குடிப்பண்புக்கு மாறுபடுதல் மிக மிக அருகியிருந்தது. இக்காலத்தில் இது பெருகி வருகின்றது. காரணம் என்ன ?

சேரும் இனத்திற்கு ஏற்றபடி அறிவு திரியும் என்று (சிற்றினம் சேராமை என்னும் அதிகாரத்தில்) திருவள்ளுவர் இனத்தின் செல்வாக்கை விளக்கியுள்ளார். இந்த இனம் என்பது பழங்காலத்தில் மிகமிகக் குறுகியவரையறை உடையது. ஆகையால் திருவள்ளுவர் அதைவிடக் 'குடிமை'யைப் பெரிதாகப் போற்றியுள்ளார். அக்காலத்தில் இனம் என்பது ஒருவன் ஓரிடத்தில் பழகும் கூட்டத்தையே குறித்து வந்தது. இக் காலத்தில் போக்குவரவும், செய்தித் தாள்களும், நூல்களும், வானொலி முதலியனவும். கட்சி கழகம் முதலிய அமைப்புக்களும் பெருகியுள்ளன. ஆகையால்



ஒருவன் பழகும் பழக்கம் வரையறையின்றி விரிவு பெற்று விட்டது. நகரத்தில் வாழும் ஒருவன் பிறப்பது ஒரு குடும்பத்தில் ; விளையாடிவளர்வது பலவேறு குடும்பத்துச் சிறுவர்களுடன் ; கல்வி பயில்வது வெவ்வேறு பண்புகளோடு வெவ்வேறு இடங்களில் இருந்து வந்து கற்கும் பிள்ளைகளுடன் ; பொழுது போக்குவதும் இவ்வாறே வேறு வேறு இளைஞர்களுடன் ; கல்லூரி முதலியவற்றில் கற்பதோ, நாட்டின் மூலைமுடுக்குகளிலிருந்தெல்லாம் வரும் பல்வேறு பழக்க வழக்கமுடைய மாணவர்களுடன் ; கற்கும் நூல்களோ எங்கெங்கோவாழ்ந்து எவ்வெவ்வாறோ உணர்ந்த ஆசிரியர்களின் கருத்துகள் ; காணும் காட்சிகளோ உலகத்தின் பல்வேறு நாகரிகப் போக்குகள் ; செய்தித்தாள்களிலும் வானொலியிலும் கற்றும் கேட்டும் அறியும் செய்திகளோ உலகம் முழுவதிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பற்றியவை : இவை எல்லாவற்றையும் விட, நேரில் காண்பது போல் படக்காட்சிகளின் வாயிலாக உலகத்தின் பல்வேறு வாழ்க்கைப் பகுதிகளையும் கண்டு அறியும் வாய்ப்பு வேறே உள்ளது. இவை இத்தனைக்கும் இடையே பெற்றோருடைய பண்பும் நெஞ்சத்தில் ஒரு சிறு மூலையில் இடம் பெறுவது என்றால் குடிப் பண்புக்குச் செல்வாக்கு ஏது ? தவிர, பண்பு அமைவது ஒருவருடைய இளமையில்தான் ; பால் உணர்ச்சிக்கு உரிய இளமைப் பகுதியில்தான் பண்பு வேரூன்றுகிறது, பதினைந்து வயது வரையில் மிக நல்ல பண்போடு இருந்து வந்த ஒருவனோ ஒருத்தியோ, அதற்குப் பிறகு கெட்டவனாகவும் கெட்டவளாகவும் மாற இடம் உண்டு. அவ்வாறே பொல்லாதவர்களாக இருந்துவந்தவர்கள் உற்ற வயதில் நல்லவர்களாக மாறுவதற்கும் இடம் உண்டு. அந்த வயதில் உரிமை நண்பர்களாக வாய்ப்பவர்கள் நல்லவர்களாக

இருந்தால், கெட்டவர்களும் நல்லவர்களாகலாம். நல்லவர்கள் கெடாமல் வாழலாம். ஆனால் உற்றவயதில் பழகும் நண்பர்கள் கெட்டவர்களாக வாய்த்தால், நல்லவர்களும் கெட இடம் ஏற்படுகின்றது. திருத்தவும் கெடுக்கவும் வல்ல ஆற்றல் நண்பர்களுக்கு உண்டு. உற்ற வயதில்—பால் உணர்ச்சிக்கு உரிய வயதில்—கற்கும் நூல்களுக்கும் இந்த ஆற்றல் உண்டு; பார்க்கும் படக் காட்சிகளுக்கும் இந்த ஆற்றல் உண்டு; சேரும் கழகம் கட்சி முதலியவற்றிற்கும் இந்த ஆற்றல் உண்டு. இவை எல்லாம் பெருகியதால் இந்தக் காலத்தில் குடிப்பண்பு வேரூன்ற முடியவில்லை; இவை இல்லாத பழங்காலத்தில் ஒரு சிற்றூரில் இளமையில் ஒருவன் பழகும் பழக்கம் பெரும்பாலும் பெற்றோரோடும் உடன் பிறந்தாரோடும் குடும்பச் சுற்றத்தாரோடும் அமையும்; சிறுபான்மை அந்தச் சிற்றூரில் ஒருசில நண்பர்களோடு அமையும்; அந்த நண்பர்களும் குடும்பத்தைச் சார்ந்தவர்களாகவே இருத்தல் இயற்கை. இவர்களைத் தவிர, மற்றொரு செல்வாக்கு உண்டு என்றால், அது கற்பிக்கும் ஆசிரியருடைய வாழ்க்கையால் ஏற்படுவது ஆகும். உயர்ந்த பண்புகள் உடையவர்களையே சிற்றூர்களில் ஆசிரியர்களாகக் கொள்ளும் பழக்கம் இருந்த காலம் ஆகையால், அவர்களுடைய செல்வாக்கு எவ்வகையாலும் குடிப்பண்பைக் கெடுக்கவல்லதாக இருந்ததில்லை. இந்தக் காலத்திலோ கல்விக்கூடம் என்பது யந்திரசாலைபோல் நடைபெறும் ஒன்று. ஆகையால், பெரும்பாலும் ஆசிரியர்க்கும் மாணவர்க்கும் உறவு குறைவு; உடன் கற்கும் மாணவ நண்பர்களின் தொடர்புக்கே செல்வாக்கு உண்டு; பாடநூல்களை விடப் பொழுதுபோக்கிற்காகக் கற்கப்படும் நூல்களுக்கே செல்வாக்கு மிகுதி; வீட்டையும் கல்விக்கூடத்தையும் விட வெளியுலகத்திற்கே செல்வாக்கு மிகுதி; சுருங்கக் கூறினால்,



குடும்பத்தைச் சார்ந்தவர்களைவிட வெளியார்க்கே செல்வாக்கு மிகுதி. ஆகையால் இளமையில் குடிப்பண்பு வேரூன்றுவதைவிட, உள்ளம் விரும்பி நாடும் உலகப் பண்பே வேரூன்றுகிறது: தான் விரும்பும் உலகப் பகுதி நல்ல பண்பு உடையதனால் நல்லவனாகின்றான்: அந்த உலகப் பகுதி தீய பண்பு உடையதானால் தீயவனாகின்றான்.

காட்டில் இயல்பாகப் பறந்து திரியும் கிளி கூட்டில் வளர்க்கப்பட்டால் அதன் இயற்கைப் பண்பில் மாறுதல் ஏற்படுகின்றது; அதுவே உயிர்காட்சிச் சாலையில் வைக்கப்பட்டால், வருவார்போவார்க்கு அஞ்சாத இயல்பைப் பெறுகின்றது. சிற்றூர்களில் குடையைக் கண்டால் மருண்டு ஓடும் இயல்புடைய பசு சென்னையில் மக்கள் நெருக்கம் மிகுந்த கடைத் தெருவில் பழகினால் குடை பிடித்துப் போவோர்மேல் உராய்ந்துகொண்டு செல்கின்றது. மருளுவதே இயல்பாக வாழும் மானும் உயிர்காட்சிச் சாலையில் மருளாமல் நெருங்கி வந்து மக்கள் கொடுப்பதைப் பெற்றுத் தின்கின்றது. அறிவு வளர்ச்சி இல்லாத பறவை விலங்குகளின் வாழ்க்கையிலும் பலருடன் பழகுவதால் இந்த மாறுதல் ஏற்படுமானால், காலத்திற்கும் இடத்திற்கும் நிலைமைக்கும் ஏற்றபடி வாழ்க்கையை மாற்றிக்கொள்ளும் ஆற்றலும் அதற்குத் தக்க அறிவுவளர்ச்சியும் உடைய மக்களின் பண்பு மாறுவது மிக எளிது அன்றோ?

ஆகையால், திருவள்ளுவருடைய கருத்துகளைக் குடிமையில் கற்கும்போது, அக்காலத்தில் குடிப்பிறப்புக்கு இருந்த செல்வாக்கை எண்ணிக் கற்க வேண்டும். இப்போது ஒருவன் பழகும் பரந்த உலகப் பகுதியே காட்சியாலும் கருத்தாலும் உறவுடையதாய்க் குடும்பம் போல் அமைந்து நிற்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

குறுகிய எல்லையில் பழகும் குடும்பங்களில் மட்டும் இன்றும் குடிப்பண்பு ஓரளவு அமைந்திருத்தலையும் எண்ணிப்பார்க்க வேண்டும்.

நேர்மையும் நாணமும் ஒருசேர இயற்கையாக அமைந்திருப்பது நல்ல குடியில் பிறந்தவர்களிடத்தில்தான் ; மற்றவர்களிடத்தில் அன்று. நல்ல குடியில் பிறந்தவர்கள், ஒழுக்கம் உண்மை நாணம் ஆகிய மூன்று பண்புகளும் தவறாமல் பெற்றிருப்பார்கள். முகமலர்ச்சி, ஈகை, இன்சொல், ஒருவரையும் இகழாமை ஆகிய நான்கும் உண்மையான நல்ல குடியில் பிறந்தவர்களின் பண்புகளாகும். பல கோடிப் பொருள் பெறுவதாக இருந்தாலும், நல்லகுடியில் பிறந்தவர்கள் ஒழுக்கக் கேடான செயல்களைச் செய்ய மர்ட்டார்கள் ;

இற்பிறந்தார் கண் அல்லது இல்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு. (951)

ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந்தார். (952)

நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு. (953)

அடுக்கிய கோடி பெறினும் குடிபிறந்தார்
குன்றுவ செய்தல் இலர். (954)

மானம்

வாழ்க்கை, போராட்டமானது ; மற்ற உயிர்களும் போராடிப் போராடி வாழ்கின்றன ; மக்களும் போராடிப் போராடியே வாழ்க்கையை நடத்துகின்றார்கள், மற்ற உயிர்களின் வாழ்க்கைப் போராட்டத்தில் ஒன்றோடொன்று போட்டியிட்டுக்கொர்ண்டு உணவு தேடுவதும், துணை



நாடுவதும், பகையிடமிருந்து தற்காப்புத் தேடுவதுமே காணப்படுகின்றன. பறவைகளும் விலங்குகளும் இவ்வாறே வாழ்க்கையைக் கழிக்கின்றன ; போட்டியிட்டு உணவு தேடுகின்றன ; ஆண் பெண்ணையும் பெண் ஆணையும் நாடுகின்றன ; வலிய பகையிடமிருந்து தப்பி ஓடி மெலிய பகையைத் துரத்தி அழிக்கின்றன ; இவ்வளவே மற்றஉயிர்களின் வாழ்க்கைப் போராட்டம். ஆனால், மக்கள் வாழ்க்கையில் போராட்டம் இவ்வளவில் நிற்பதில்லை. அறிவும் உணர்வும் குறைந்த ஒரு பகுதியார்க்கு உணவு, துணை ; பகை என்னும் அளவில் போராட்டம் நின்றுவிட்டாலும், மற்றொரு பகுதியார்க்கு இந்த எல்லையைக் கடந்த வாழ்க்கைப் போராட்டமே பெரிதாக இருக்கின்றது. அது என்ன போராட்டம்? வாழ்க்கையில் உயர்ந்த குறிக்கோள்களை வைத்துக்கொண்டு அவற்றைப் போற்றி வாழப் போராடுவதே ஆகும். அவர்களுக்கு உணவு முதலிய வாழ்க்கைத் தேவைகளைவிட உயர்ந்த கொள்கைகளே பெரியவை என்று தோன்றும். அதனால், போராட்டம் முதிர்ந்தபோது உணவு முதலிய தேவைகளையும் பொருட்படுத்தாமல் கொள்கைகளைப் போற்ற முற்படுவார்கள்; அதாவது, உயிர்வாழ்க்கையின் அடிப்படை கெடுவதாக இருந்தாலும், உயிர் நீங்குவதாக இருந்தாலும், உயர்ந்த நெறியிலிருந்து பிறழ மாட்டார்கள். உயர்ந்த கொள்கைகளை இழக்கும் நிலை வந்தால், அந்தக் கொள்கைகளை வாழவைத்து, உயிரை விட்டுவிடுவார்கள். அவ்வாறு செய்வதால் போராட்டத்தில் வெற்றியே பெற்றதாக மகிழ்வார்கள். இத்தகைய உணர்ச்சிக்கே மானம் என்பது பெயர். இந்த உணர்ச்சி உலகத்தில் சிலருக்காவது இருப்பதால் தான், உயர்ந்த கொள்கைகள் உலகத்தில் வாழ முடிகின்றது. இல்லையானால் மக்களின் வாழ்க்கையும்

பறவை விலங்குகளின் வாழ்க்கை போல், உணவுக்கும் மற்றவைகளுக்குமாகப் போராடி அழிகின்ற காட்டு வாழ்க்கையாக—அநாகரிக வாழ்க்கையாகவே—நின்று தேங்கும். அவ்வாறு அல்லாமல், மானம் உடையவர்கள் தம் உயிர் வாழ்வைப் பொருளாகக் கருதாமல், உயர்ந்த கொள்கைகளைப் போற்றி ஒழுகுவதால், மக்கள் வாழ்க்கை பெருமையுடையதாக விளங்குகின்றது; உணவுமுதலியன பற்றிய விலங்குப் போராட்டத்திற்கு இடையே நாகரிகமும் வாழ்ந்து வருகின்றது. மக்கள் பலர் கூடி வாழும்பொது வாழ்க்கை சிறந்து ஓங்கி நாகரிகமாக விளங்க வேண்டுமானால், உணவு முதலிய சிறுமைப் போராட்டத்தைக் கடந்து ஒளிர வேண்டுமானால், குடிமக்களுக்கு மான உணர்ச்சி வேண்டும் என்றே திருவள்ளுவர் இங்கே மானத்தைப் பற்றிக் கூறுகின்றார் ; மானம் உடையவர்களிடத்தில் விளங்கும் பெருந்தன்மை, சான்றாண்மை, பண்புடைமை, நாணுடைமை முதலிய உயர்ந்த தன்மைகளை அடுத்துத் தொடரும் அதிகாரங்களில் கூறுகின்றார்.

திருவள்ளுவர் 'மானம்' என்னும் பண்பைப் பற்றிக் கூறும் கருத்துகள் மிகச் சிறந்தவை. அவற்றை அறிவதற்கு முன் மானம் என்னும் சொல் இக்காலத்தில் தரும் பொருளையும் கண்டு வேறுபாடு உணரவேண்டும். இக்காலத்தில் ஆடை உடுத்துவது மானத்தை மறைப்பதற்காக என்பார்கள் ; மானத்தைக் காப்பதற்காக என்றும் கூறுவார்கள். இழிவான நிலைக்கு ஆளாகாமல் காத்தல் என்ற பொருள் பேச்சுவழக்கில் உண்டு என்றாலும், இங்குக் கூறும் மானம் என்பது வேறு. ஆடைகொண்டு உடலை மறைக்கும் செயலைத் திருவள்ளுவர் 'அற்றம் மறைத்தல்' (846) என்று குறிக்கின்றார் ; அது வேறு.



மற்றொரு வகை உணர்ச்சியையும் இக்காலத்தில் மானம் என்று கூறுவது உண்டு. ''அவன் என்னைப் பழித்தான். அது எனக்கு மானமாக இருக்கின்றது'' என்பார்கள் ; ''அவன் என்னை இப்படிக் கேட்டான் ; இப்படி என் மானத்தைக் கெடுத்தான்'' என்பார்கள்; ''அவன் என்னை உதைத்தான்; அதனால் எனக்கு மானம் போகின்றது'' என்பார்கள் ; இவ்வாறெல்லாம் கூறும்போது, மானம் என்பது இழிவைப் போக்கிக்கொள்ளுதல் என்ற கருத்து உடையதாக இருந்தாலும், அது உயர்ந்த கொள்கையைப் போற்றும் மானம் அன்று. தன் தவறு பற்றித்தன் நெஞ்சமே வருந்த ; அதனால் உண்டாகும் உணர்ச்சியே சிறந்த மானமாகும் ; பிறன் பழித்தான் உதைத்தான் என்று அதனால் உண்டாகும் மானம் சிறந்த மானம் அன்று. தவிர, பிறன்பழி உதை முதலியவற்றையும் பொறுக்கும் பண்பே மானம் சிறந்தவர்களிடம் காணப்படுகின்றதே அல்லாமல், பிறர் செய்வதற்கெல்லாம் கொதித்துத் தீமை செய்ய எழும் தன்மை காணப்படவில்லை. அன்றியும், மானம் உடையவர் தன்னலம் குறைந்தவராக விளங்க வேண்டுமே அல்லாமல் ; தன்னலம் கருதிப் பிறர்மேல் சினமும் பகையும் கொண்டு பதிலுக்குப் பதில் தீமை செய்யக் கூடாது ; அதனால் அந்தத் தன்னல உணர்ச்சியை மானம் என்று கூறுவதும் பொருந்தாது. இன்னும் ஆராய்ந்தால் மானம் என்பது தன்குடி, தன்நாடு முதலியவற்றின் பெருமையையும், உலக வாழ்க்கைக்கு அடிப்படையான உயர்ந்த கொள்கைகளின் பெருமையையும் காக்கப் பயன்படுவதே அல்லாமல், தன்னல அடிப்படை கொண்ட தன்பழி, தன்புகழ், தன் ஆக்கம், தன்கேடு என்பவற்றைப் பொருளாகக் கொள்வது அன்று. தன்னைவிடத் தன் குடி பெரியது. அதைவிட நாடு பெரியது, அதைவிட

உலகம் பெரியது, அதைவிட உலக வாழ்விற்கு அடிப் படையான ஒப்புரவு பெரியது என்று எண்ணுவதே மான மாகும் ; அவ்வாறு உயர்வகையான மானமுடையவர்கள் செழித்தோங்குவதை எந்த நாட்டிலும் காணலாம் ; ஒப்புரவு நாடுகுடி என்பவற்றை மறந்து தன்னலம்கொண்டு, தன் பழி, தன் புகழ் என்னும் குறுகிய எல்லையில் மான உணர் வைக் கொண்டவர்கள் நாளுக்குநாள் தேய்ந்து அழிவதை எந்த நாட்டிலும் காணலாம். இந்த உண்மையை உணர்ந்தே திருவள்ளுவர் பொதுவாழ்வைக் கூறும் பொருட்பாலில் மானத்தைப் பற்றி விளக்கியுள்ளார். (பொதுவாழ்க்கையில் மானத்தைச் சிறந்த பண்பாக விளக்கும் ஆசிரியர் தனி வாழ்க்கையைக் கூறும்போது பொறுமை தீவினை அஞ்சுதல் இன்னாசெய்யாமை முதலியவற்றை வலியுறுத்தலையும் இங்குக் கருத வேண்டும்.)

எப்படியாவது உயிர் வாழ வேண்டும் என்பது பலருக்கு நோக்கமாக இருந்தாலும், மானம் உடையவர்கள் அதைப் பொருட்படுத்தக் கூடாது. இன்றியமையாத சிறப்பை உடையவைகளாக இருந்தாலும், மானம் குன்றும்படியான செயல்களைச் செய்யாமல் விடவேண்டும் :

**இன்றி யமையாச் சிறப்பின ஆயினும்**
**குன்ற வருப விடல். (961)**

எப்படியாவது ஒரு நல்ல நிலையை அடையப் பாடுபட வேண்டும் என்றும், அதுவரையில் தகாத செயல் செய்தேனும் முன்னேற வேண்டும் என்றும், முன்னேறி நல்லநிலை அடைந்த பிறகு தகாத செயல் செய்த குறையைத் தீர்த்து விடலாம் என்றும், உலகம் அப்படி முன்னுக்கு வந்தவர்களைப் பாராட்டுகின்றது என்றும் சிலர் கருதுகின்றார்கள். அதனால்



அவர்கள் தீய வழியிலும் பொருள் சேர்த்துப் பெருஞ் செல்வராக விளங்கி, அதன்பிறகு அந்தக் குற்றத்தை மறைக்கப் பொருளை வாரி இறைப்பார்கள் ; சில நற்செயல் செய்து புகழ்பெறுவார்கள். இவ்வாறே சிலர் தகாதவை செய்தாவது சிறந்த பதவியைப் பெற முயல்வார்கள் ; பதவி பெற்ற பிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று துணிந்து தீமை செய்வார்கள் ; பதவி கிடைத்தபிறகு அந்தப் பழியைப் போக்கிக்கொள்ள நற்செயல்களைச் செய்வார்கள். உலகம் அவர்களையும் போற்றும். ஆனால், திருவள்ளுவர் அவர்களுடைய போக்கைக் கடிகின்றார். சீர்பெற வேண்டும் என்பதற்காகவும் தகாதவற்றைச் செய்யக் கூடாது என்கின் றார். உண்மையான,சிறப்பையும் மானத்தையும் விரும்புகின் றவர்கள் அவ்வாறு ஒழுகுவார்கள் என்றும் தெளிவிக் கின்றார் :

**சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு**
**பேராண்மை வேண்டு பவர். (962)**

எல்லாரும் மதிக்கும் நிலைமை வந்தபோது அந்தமதிப்பு இல்லாதது போல் நடந்துகொள்ள வேண்டும். அப்போது அந்தமதிப்பைப் பொருட்படுத்தி உயர்வோடு நடந்துகொண் டால் அது செருக்காகக் கொள்ளப்படும். ஆனால், மதிப்புக்கு உரிய நிலை இல்லாதபோது, தாழ்ந்து நடக்கவும் கூடாது ; உரிமையும் மதிப்பும் உடையவர் போல் நடந்துகொள்ள வேண்டும். ஆகையால் வாழ்வு பெருகியபோது பணிவு வேண்டும் ; சுருங்கியபோது உயர்வு வேண்டும் :

**பெருக்கத்து வேண்டும் பணிதல் ; சிறிய**
**சுருக்கத்து வேண்டும் உயர்வு. (963)**

தன்னோடு பொருந்தாமல் பிரிந்து வாழ்கின்றவர்களைத் தானே நாடி அவர்களின் பின்சென்று உயிர்வாழ்வதைவிட

அவ்வாறு செய்ய முடியாமல் மானத்தால் இறந்தான் என்று உலகம் சொல்லுமாறு அழிவதே நல்லது. மானம் இழந்தும் உயிர் வாழலாம்; ஆனால் அப்படியாவது சாகா நிலை பெற முடியுமா? முடியாதே. ஆதலால் மானமும் அழிந்து உயிரும் அழிவதால் பயன் என்ன? ஏதேனும் ஒன்றைக் காக்க வேண்டும். உயிரை நெடுங்காலம் காக்க முடியாது. அதனால் அதை இழந்தாவது மானத்தைக் காக்க வேண்டும். உடம்பை எப்படியாவது ஓம்ப வேண்டும், என்று மானம் இழந்து வாழும் வாழ்க்கை, சாகாமல் இருப்பதற்கு மருந்தாகப் பயன்படாது என்பதை உணர வேண்டும். அவ்வாறு உணர்ந்தவர்கள் மானத்தைக் காப்பதற்காக உயிர்விட வேண்டிய நிலைமை வந்தால், மயிர் நீங்கியபின் உயிர் வாழாத கவரிமானைப் போல் உயிர் விடுவார்கள். இழிநிலை வந்தபோது உயிர் வாழாமல் இறந்த அத்தகைய மானமுடையவர்களின் சிறப்பை உலகம் தொழுது வாழ்த்தும் :

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று. (967)

மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து. (968)

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின். (969)

இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு. (970)

### பெருமை

எல்லா உயிர்க்கும் பிறப்பியல்பு ஒத்திருக்கிறது; பிறப்பால் பெருமை சிறுமை இல்லை: செய்கின்ற தொழிற் வேறுபாடுகளால் சிறப்பியல்பு ஒத்திருப்பதில்லை, நல்ல தொழில் செய்கின்றவர்கள் குற்றமான தொழில் செய்கின்றவர்களை விட மேலானவர்கள். அரிய பெரிய தொழில் செய்கின்றவர்கள் சிறு சிறு தொழில்களைச் செய்கின்றவர்களை விட உயர்ந்தவர்கள் :



பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். (972)

ஒருமனப்பட்ட பெண்கள் தம்மைத் தாம் காத்துக் கொண்டு நிறைஉடையவர்களாக வாழ்வதால் சிறப்பு அடைகின்றார்கள். அதுபோல் பெருமை என்னும் பண்பும் தன்னைத் தான் காத்து ஒழுகுகின்றவனிடமே காணப்படுவதாகும் :

ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு. (974)

பெருமை உடையவர்கள் சிறப்பான நிலைமை உள்ள போதும் செருக்கு இல்லாமல் பணிவாக நடப்பார்கள்; சிறுமை உடையவர்களோ சிறப்பு இல்லாத போதும் தம்மைத் தாமே வியந்து பாராட்டிக்கொள்வார்கள்:

பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து. (978)

பெருமைக்கு உரியவர்கள் மற்றவர்களின் நன்மையைப் பாராட்டிக் குற்றங் குறைகளை மறைப்பார்கள்; சிறுமைக் குணம் உடையவர்கள் மற்றவர்களின் நன்மையை மறைத்துக் குற்றங்களையே கூறிவிடுவார்கள் :

அற்றம் மறைக்கும் பெருமை; சிறுமைதான்
குற்றமே கூறி விடும். (980)

### சான்றாண்மை

சார்ந்தவரிடத்தில் கொள்ளும் அன்பு, பழிபாவங்களுக்கு நாணும் நாணம், எல்லோர்க்கும் உதவியாக ஒழுகும் ஒப்புரவு,

பழகியவர்களிடத்தில் செலுத்தும் கண்ணோட்டம், உள்ளொன்று புறமொன்று இல்லாத உண்மை ஆகிய இந்த ஐந்து பண்புகளும் சால்பு என்பதைத் தாங்கும் தூண்களாகும். கொல்லாமை என்னும் அறத்தைச் சிறப்பாக உடையது தவம்; அதுபோல் பிறர் குற்றத்தை எடுத்துச் சொல்லாத பண்பைச் சிறப்பாக உடையது சால்பு ஆகும் :

**அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வர்ய்மையோடு**
**ஐந்துசால்பு ஊன்றிய தூண். (983)**

**கொல்லா நலத்தது நோன்மை ; பிறர்தீமை**
**சொல்லா நலத்தது சால்பு. (984)**

ஒருவர்க்கும் பணியாமல் செருக்கோடு நடப்பதே ஆற்றலுக்கு அறிகுறி என்று பலரும் எண்ணுகின்றார்கள். ஆனால் சான்றோரின் ஆற்றலுக்கு அது அடிப்படை அன்று. எதையும் செய்து முடிக்கவல்ல சான்றோரின் ஆற்றல் பணிவாக நடப்பதே ஆகும். இந்தத் தன்மையே சான்றோர்க்குத் தம் பகைவரையும் மாற்றவல்ல படையாக இருக்கின்றது. தம்மைவிடத் தாழ்ந்தவர்களிடத்திலும் தோல்வியடைந்து பணிவாக நடக்கும் பண்பே சால்புக்கு உரைகல்லாக விளங்குகின்றது :

**ஆற்றுவார் ஆற்றல் பணிதல் ; அதுசான்றோர்**
**மாற்றாரை மாற்றும் படை. (985)**

**சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி**
**துலையல்லார் கண்ணும் கொளல். (986)**

உலகத் தலைவர்களாகப் புகழ்பெற்ற சான்றோரின் வரலாறுகளை ஆராய்ந்தால், பணிவாக நடத்தலும் தோல்விக்குத் தயங்காமையும் அவர்களின் வாழ்க்கையில் அடிக்கடி காணலாம். தம்மைவிடத் தாழ்ந்தவர் என்று அவர்கள் ஒருவரையும் எண்ணியதாகத் தெரியவில்லை. அதனால்தான் யாரிடமும்தம் தவறுகளை ஒப்புக்கொண்டு பணிவோடு நடந்து வந்திருக்கின்றார்கள். இதற்கு அடிப்படைக் காரணம் என்ன? தம் பெருமையை மறந்து எல்லோரையும் அன்போடு போற்றி, தவறு செய்ய நாணி, பலர்க்கும் உதவியாகவும் உண்மையாகவும் வாழ்ந்த பெருவாழ்வுதான். அதனால் அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மை என்னும் ஐந்தையும் சால்புக்குத் தூண்களாகக் கூறியுள்ளார். இந்தச் சான்றோர் பொதுக் கடமையைப் பெரிதாக மதிப்பார்களே அல்லாமல், தம் புகழையும் மதிப்பையும் பொருட்படுத்துவதே இல்லை. தம் புகழையும் மதிப்பையும் மறந்த வாழ்வில்தான் பணிவு காணப்படும். பொதுக்கடமை நிறைவேற வேண்டும். பொதுவாழ்வு ஓங்கவேண்டும் என்ற பரந்த எண்ணத்தால் தாழ்ந்தவரிடமும் தயங்காமல் தோல்வியை ஒப்புக்கொள்ளும் பண்பு காணப்படும் ; எண்பது வயதுடைய சான்றோராயினும் பத்து வயதுள்ள சிறுவன் கடிந்து அறிவுரை கூறினால் அன்போடு கேட்டுத் திருந்த முயல்வதும் காணப்படும்.



இவ்வாறு தம் மதிப்பும் புகழும் மறந்து தொண்டு செய்யும் சான்றோர் தம் நலமும் மறந்து வாழ்வார்கள். தமக்கு ஒருவன் தீங்கு செய்தாலும் இன்னவனால் நேர்ந்த தீங்கு என்று அவனைப் பற்றி வெறுப்போடு எண்ணாமல், அவனுக்கும் நன்மை செய்யவே முற்படுவார்கள். நன்மை தீமை என்பவற்றையும் பலருக்கும் பொதுவாகக் காணப் பயின்றவர்கள் ஆகையால், தமக்கு உரிய நன்மை தமக்கு உற்ற தீமை என்ற எண்ணங்கள் இல்லாமல் எல்லார்க்கும் நன்மை செய்வார்கள். சிறப்பாக, தீமை செய்தவர்களுக்கும் நன்மையே செய்வார்கள் இதுவே சால்பின் பயனாகும் :

**இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்**
**என்ன பயத்ததோ சால்பு ? (987)**

வாழ்க்கையில் வரும் குறைகளும் இவர்களைத் தாக்குவதில்லை. வறுமையாலும் இவர்கள் வாடுவதில்லை. பொது நலம் நாடித் தன்னலம் மறந்த சால்பே இதற்குக் காரணம். இந்தச் சால்பே இவர்களுக்குத் திண்மை தருகின்றது. அதனால் வறுமை வந்தபோதும் அவர்கள் இழிவு அடைவதில்லை. ஊழிக்காலத்து மாறுதல் போன்றவை நேர்ந்தாலும் அப்போதும் இவர்கள் தம் நிலைமையில் மாறுவதில்லை. சால்பு என்னும் கடல் போன்ற பண்பிற்கு இவர்கள் கரைபோல் அமைந்திருப்பார்கள். ஒருகால், இவர்களும் தம் சால்பு குன்றுவார்களானால், பிறழ்ந்து நடப்பார்களானால், இந்த நிலவுலகம் நிலை கலங்கும் என்றே சொல்ல வேண்டும். அவ்வளவு உறுதியான கலங்காத வாழ்வை இவர்களிடம் காணலாம் ;

இன்மை ஒருவற்கு இளிவன்று சால்பென்னும்
திண்மை உண்டாகப் பெறின். (988)

ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார். (989)

சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை. (990)

பண்புடைமை

கை கால் முதலிய உறுப்புகளால் மக்களைப் போல் இருப்பது பொருந்திய ஒப்புமை அன்று ; அமையத் தக்க பண்பினால் ஒத்திருப்பதே பொருந்திய ஒப்புமை ஆகும். அவ்வாறு அமையாமல், தோற்றத்தால் மட்டும் மக்களைப்போல் இருப்பதால் ஒரு சிறப்பும் இல்லை. அரத்தின் கூர்மைபோல் கூரிய மூளை பெற்றிருந்தாலும் மக்களுக்கு உரிய பண்பு இல்லாதவர்கள் மரம்போன்றவர்களே. மண்ணில் ஒரு பகுதி



மரமாய் வளர்ந்ததைப் போல் மற்றொரு பகுதி மூளையாய் வளர்ந்ததாகவே கருதப்படும் :

உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால் ; வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு. (993)

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர். (997)

மக்கட் பண்பு என்றால் என்ன ? நீதியையும் அறத்தையும் விரும்பும் தன்மை ஆகும். இவற்றை விரும்புகின்றவர்களே உலகத்திற்குப் பயன்படுவார்கள். அவர்களுடைய. பண்பையே உலகமும் பாராட்டும். அவர்கள் இருப்பதால் தான் உலக வாழ்க்கை உண்டு என்று சொல்லக் கூடியதாய் நடைபெறுகின்றது. இல்லையானால் உலகம் வெறுமண்ணாய் நின்று அழியக் கூடியதாகும் :

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு. (994)

பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் ; அது இன்றேல்
மண்புக்கு மாய்வது மன். (996)

உலகம் தோற்றத்தால் மண்ணும் கல்லுமாக இருக்கின்றது. மற்றப் பூதங்கள் இருந்தாலும் மண்ணே அதன் புறத்தோற்றத்திற்குக் காரணமாக இருக்கின்றது. மற்றப் பூதங்கள் இருப்பதைவிட, மற்ற உயிர்கள் இருப்பதைவிட, மக்கள் வாழ்வதே மண்ணுலகத்தின் சிறப்புக்குக் காரணம். மக்கட் பண்பு இல்லாமல், விலங்குகளைப் போல், மரங்களைப் போல் மக்கள் வாழ்க்கை நடத்தினால், ஒருவரை ஒருவர் கொன்று அழித்துவிட, இறுதியில் வெறு மண்ணுலகமாய்த் தோன்றி அழிந்துவிடும். உலகம் என்பது என்ன ? வெறு மண்ணா ? மண்ணில் கலந்துள்ள மற்றப் பூதங்களா ? மரம் செடி

கொடியாக உள்ள மண்ணா ? எலும்பாகவும் தசையாகவும் உள்ள மண்ணா ? மூளையாகவும் நரம்பாகவும் உள்ள மண்ணா ? பண்பு என்ற ஒன்று இல்லையானால், இந்த உலகம் எவ்வாறு தோன்றும் ? மண்ணில் வளர்ந்த புழுக்களுள் மக்கள் உடல்கள் பெருவகைப் புழுக்களாய்த் தோன்றும். அந்தப் பெருவகைப் புழுக்கள் தம்மைவிட மெலிந்த (மக்கட்) புழுக்களை வருத்தியும் பொருதும் கொன்றும் வாழ்வதாகத் தோன்றும். இன்னும் கூர்ந்து ஆராய்ந்தால், மண்ணில் சில பகுதிகள் அசையும் எழுச்சியும் பெற்று ஒன்று மற்றொன்றைத் தாக்கி மண்ணாய் மாய்வதாகத் தோன்றும் அன்றோ ? அவ்வாறு வெறு மண்ணாகவோ, நரம்பு மூளை முதலிய உயர் வகை மண்ணாகவோ தோன்றாமல் உண்மைப் பெருமையுடைய உலகமாகத் தோன்றச் செய்வது நெஞ்சப் பண்பு ஒன்றே ஆகும். அத்தகைய நெஞ்சப் பண்பு உடையவர்கள் ஒரு சிலரே ஆயினும் அவர்களால் தான் உலகம் உலகமாய் உள்ளது என்பது திருவள்ளுவர் கருத்து.

ஒருவரை ஒருவர் இகழ்ந்து அன்பில்லாமல் நடப்பது விளையாட்டிலும் தீமையானது ; துன்பமானது. அதற்கு நேர்மாறாக, பண்புடையவர்கள் பகை உள்ள இடத்திலும் பண்போடு நடப்பதைக் காணலாம். நண்பர்களாக இல்லாமல் தீங்கு செய்து வாழும் மற்றவர்களிடத்திலும் அவர்கள் பண்பு தவறாமல் நடப்பார்கள். அறிவுடையவர்கள் இந்தப் பண்பைத் துறந்து வாழ்வது பெரிய குறையாகும். ஏன் ? ஒருவரோடு ஒருவர் பழகும்போது மனம் கலந்து மகிழ வேண்டும். இந்த மகிழ்ச்சி அடைய முடியாதவர்கள் உலகத்தில் வாழ்ந்து பயன் என்ன ? பரந்த பெரிய உலகம் அவர்களுக்குப் பகலிலும் இருண்டு தோன்றும். உலக வாழ்க்கைக்கு அவர்கள் தகுதி அற்றவர்களாவே இருப்பார்கள் !



நகையுள்ளும் இன்னது இகழ்ச்சி ; பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. (995)

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றார் ஆதல் கடை. (998)

நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள். (999)

## நன்றியில் செல்வம்

வாழ்க்கைக்குப் பயன்படக் கூடியவைகளையே மக்கள் தேடிச் சேர்க்கத் தொடங்கினார்கள். அப்படிச் சேர்த்து வைத்தவைகளுக்கே 'பொருள்' என்றும், 'செல்வம்' என்றும் பெயர் கொடுத்து வழங்கினார்கள். முதல் முதலில் உணவுப் பொருளைச் சேர்த்துவைக்கும் பழக்கம் மிகுதியாக இருந்தது. அதனால் அது 'கூழ்' என்று கூறப்பட்டது. திருவள்ளுவரும் உணவுப் பொருளையே செல்வமாக மதித்து அரசாட்சிக்கு உரிய ஆறு அங்கங்களுக்குள் 'கூழ்' ஒன்றாகக் கூறியுள்ளார். உழவைத் தொழிலாகக் கொள்ளாமல் ஆடு மாடுகளை மேய்க்கும் தொழிலை வாழ்வுக்கு உரியதாகக் சிலர் கொண்டார்கள் ; அவர்கள் அவற்றைப் பொருளாகக் கொண்டார்கள் ; அதனால் 'மாடு' செல்வம் என்று வழங்கியது. நாளடைவில் பளபளப்பான உலோகங்களும் கற்களும் மற்றக் கைத்தொழிற் பொருள்களும் செல்வம் என்று மதிக்கப்பட்டன. இன்று நிதிநிலை (பாங்கு) முறை அமைந்திருப்பதால், காகிதப் பணம் (நோட்டு) முதலியனவும் செல்வமாக மதிக்கப்படுகின்றன. அவ்வாறே செல்வாக்கு உள்ள அரசியல்பதவி முதலியனவும் செல்வமாகவே கொள்ளத்தக்கவை. ஆனால் எல்லாவற்றிற்கும் மதிப்பு

உயர்வதும் குறைவதும் உணவுப்பொருளின் பெருக்கத்தையும் சுருக்கத்தையும் பொறுத்தே நிற்கின்றன. அதனால் இன்றும் அடிப்படையான மதிப்பு உணவுப் பொருளுக்கே உண்டு என்பது தெளிவாகின்றது. காரணம் என்ன? உணவுப் பொருளே நாள்தோறும் தேவையாய் இருப்பது; வேளைக்கு வேளை பயனளிப்பது; உடை முதலிய கைத்தொழிற் பொருள்கள் அதற்கு அடுத்தபடி பயன்படக் கூடியவை; பளபளப்பான உலோகங்களும் கற்களும் ஆடம்பரத்தை ஒட்டியவை; நேரான பயன் இயலாதவை. இந்த உண்மையை ஆராய்ந்தால், செல்வம் என்பது பயனை ஒட்டியே மதிக்கப்படுவது என்பது விளங்கும். ஆகையால், திருவள்ளுவர், செல்வத்தைப் பெற்றவர்கள் அதைப் பயன் படுத்தாவிட்டால் அது வீணாகும் என்று கூறி, அத்தகைய செல்வத்தை நன்மையற்ற செல்வம் (நன்றியில் செல்வம்) என்று கடிகின்றார்; பயன்படுத்தாத செல்வம் உடையவர்களையே—உலோபிகளையே—அதன் வாயிலாகக் கடிந்துரைக்கின்றார்.

ஒருவன் தன் வீடெல்லாம் நிறையும்படியான பெரும் பொருளைச் சேர்த்து வைத்தான்; அதைத் தானும் அனுபவிக்காமல் சேர்த்து வைத்துக் காப்பாற்றினான்; அப்படிப்பட்டவன் உயிருடன் இருந்தும் செத்தவனுக்கு நிகரே ஆவான்; ஏன் என்றால், அவன் உரிமையோடு அந்தச் செல்வத்தைக் குறித்துச் செய்யக் கூடியது ஒன்றும் இல்லையே! பொருளால் எல்லாம் உண்டாகும் என்ற அறிவே இதற்குக் காரணம். ஆனால் அதற்காக அதைச் சேர்த்து ஒருவருக்கும் உதவாமல் பற்றுள்ளம் (உலோபம்) செய்கின்ற மயக்கம் கூடாது. அந்த மயக்கம்—அந்த அறியாமைதான்—தாழ்வான பிறப்புக்குக் காரணமாகும். பொருள் சேர்த்து வைப்பதற்கு விரும்பி, புகழை விரும்பாமல் வாழ்கின்ற மக்களின் பிறப்பு வீண்



பிறப்பே ஆகும்; அவர்கள் பிறந்ததால் நிலத்திற்குப் பாரமானதே அல்லாமல் பயன் ஒன்றும் இல்லை:

> வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் ஃதுண்ணான்
> செத்தான் செயக்கிடந்தது இல். (1001)

> பொருளானாம் எல்லாம்என்று ஈயாது இவறும்
> மருளானாம் மாணாப் பிறப்பு. (1002)

> ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
> தோற்றம் நிலக்குப் பொறை. (1003)

பொருளைப் பிறர்க்குக் கொடுத்து உதவினால்தான் அன்பை வளர்க்க முடியும்; அதனால் புகழும் வளரும். இப்படி உதவி செய்யாதவன் உலகத்தில் ஒருவராலும் விரும்பப்பட மாட்டான்; அவன் தனக்குப் பிறகு உலகத்தில் எஞ்சி நிற்கும் புகழ் இல்லையே என்பதை எண்ணாமட்டானோ? இறந்த பிறகு தனது என்று ஒன்றை விட்டுவிட்டுச் செல்ல எளிய மக்களின் மனமும் விரும்புமே! இவன் எதை அவ்வாறு விட்டுச் செல்ல எண்ணுவானோ?

> எச்சமென்று என்எண்ணுங் கொல்லோ ஒருவரால்
> நச்சப் படாஅ தவன்? (1004)

பொருளால் அடையத் தக்க பயன் என்ன? பிறர்க்குக் கொடுத்து அன்பைப் பெறலாம்; தான் அனுபவித்து இன்பத்தைப் பெறலாம். இந்த இரண்டும் பெற முடியாதபோது பொருள் இருந்தாலும் ஒன்றுதான்; இல்லாவிட்டாலும் ஒன்றுதான். ஆகையால் பிறர்க்குக் கொடுப்பதும் தான் அனுபவிப்பதும் ஆகிய இரண்டும் இல்லாதவர்களுக்குப்பல கோடிப் பொருள் இருந்தாலும் பயன் இல்லை. இன்னும் ஆராய்ந்தால், தானும் அனுபவிக்காமல் தக்கவர்களுக்கும் ஒன்று ஈயாமல் வாழ்கின்றவன் அந்தப் பெருஞ்

செல்வத்திற்கே ஒரு நோய் போன்றவன். பலரிடமும் சென்று பலர்க்கும் பயன்படக்கூடிய நல்ல செல்வத்தை எங்கும் செல்லாமல் முடக்கிவைத்திருப்பதால் அவன் அந்தச் செல்வத்திற்குத் தீங்கு—ஏதம்—ஆகின்றான். இவ்வாறு சுற்றியுள்ள ஒருவராலும் விரும்பப்படாமல் உதவியற்றவனாய் வாழ்கின்றவனுக்குச் செல்வம் சேர்வது, ஊர் நடுவே நச்சுமரம் பழுத்துப் பழம் நிறைந்திருப்பது போல் ஆகும். பிறர்க்கு உதவாமையால் அன்பையும் ஒழித்து, அனுபவிக்காமையால் தன்னையும் அழித்து, எப்படியாவது சேர்க்க வேண்டும் என்ற ஆசையால் அறத்தையும் ஆராயாமல் விட்டுச் சேர்த்துவைத்த சிறந்த பொருள் ஒருவனிடம் இருந்தால், அதை அயலாரே கொண்டு போவார்கள் ; அயலாரே பயன்படுத்திக் கொள்வார்கள் :

கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடிஉண் டாயினும் இல். (1005)

ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்கொன்று
ஈதல் இயல்பிலா தான். (1006)

நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு மரம்பழுத் தற்று. (1008)

அன்பொரீஇத் தற்செற்று அறம்நோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர். (1009)

பிறர்க்கு உதவியாக வாழ்கின்ற நல்ல செல்வர்களுக்குச் செல்வம் குறைந்து சிறிது வறுமையும் வரலாம். ஆனால் அந்த வறுமை அவர்களைத் தாக்காது. அவர்கள் செல்வம் மிகுந்தபோது பிறர்க்குப் பயன்பட வேண்டும் என்றே அதைப்போற்றுவார்கள் ; செல்வம் குறைந்தபோதும், பிறர்க்குப் பயன்படுதல் குறைகின்றதே என்று வருந்துவார்களே



அல்லாமல், தாம் எதையோ இழந்துவிட்டதாக வருந்த மாட்டார்கள். அவர்களின் வறுமை, உலகத்தைக் காக்கின்ற மழை வளம் குன்றியதைப் போன்றதாகும் :

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனையது உடைத்து. (1010)

நாணுடைமை

பொதுவாழ்க்கையில் தகாதன செய்வது குற்றமாகும். அதனால் பலர்க்குத் துன்பம் நேரும். ஆகையால் தகாதன செய்ய நாணுகின்ற தன்மை இயல்பாக அமைய வேண்டும்.

மனம் மொழி மெய் என்பவை ஒடுங்குவதால் வரும் நாணம் வேறு ; தகாதசெயல் செய்ய முடியாதவாறு தடுக்கும் நாணம் வேறு. முன்சொன்னவை பெண்களுக்கு இயல்பாக வரும் நாணம் ; மற்றது நன்மக்கள் பொதுவாழ்வில் கொள்ள வேண்டிய நாணம். இந்த நாணமே மக்களுக்குச் சிறப்புத் தருவது ; உணவும் உடையும் மற்றவைகளும் எல்லார்க்கும் பொதுவே அல்லாமல் சிறப்பு அல்ல. இந்த நாணமே சான்றோர்க்கு அணிகலன் ; இது இல்லையானால், நடையில் மட்டும் விளங்கும் பெருமிதம் ஒரு நோய் என்றே கொள்ள வேண்டும்:

கருமத்தால் நாணுதல் நாணுத்; திருநுதல்
நல்லவர் நாணுப் பிற. (1011)

ஊண்உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல;
நாணுடைமை மாந்தர் சிறப்பு. (1012)

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு ?
அஃதின்றேல்
பிணியன்றோ பீடு நடை ? (1014)

பொதுவாழ்க்கையில் தமக்கு வரும் பழிக்கு மட்டும் நாணுவதால் பயன் இல்லை ; பிறர்பழிக்காகவும் நாணுதல்

வேண்டும். இவ்வாறு பிறர்பழியும் தம்பழியும் ஒப்ப மதித்து நாணுகின்றவர்களே நாணத்திற்கு உறைவிடம் என்று உலகம் மதிக்கும். மேலோர் இத்தகைய நாணத்தை வேலியாகக் கொள்ளாமல் உலகத்தில் பொதுவாழ்க்கையை விரும்பமாட்டார்கள். நாணத்திற்கும் உயிர்வாழ்க்கைக்கும் போராட்டம் ஏற்படும் காலத்திலும் அவர்கள் நாணத்தை விடாமல் காத்து உயிரைவிடுவார்களே அல்லாமல், உயிரின் பொருட்டு நாணத்தைத் துறக்க மாட்டார்கள் :

**நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்**
**பேணலர் மேலா யவர். (1016)**

**நாணால் உயிரைத் துறப்பர் ; உயிர்ப்பொருட்டால்**
**நாண் துறவார் நாணாள் பவர். (1017)**

மற்றவர்கள் நாணத்தக்க செயலைத் தான் நாணாமல் செய்வானானால், அப்படிப்பட்டவனைக் கண்டு அறம் நாணும் ; அவனுடைய வாழ்க்கை அத்தகைய குற்றமுடைய வாழ்க்கையாகும். உள்ளத்தில் நாணம் இல்லாத மக்கள் உயிரோடு இயங்கும் தன்மை, மரத்தால் செய்த பாவை கயிற்றினால் இயங்குவது போன்றது ; இது பயனற்ற வாழ்க்கையாகையால், உயிரில்லாத வாழ்க்கைக்கு ஒப்பாகும்;

**பிறர்நாணத் தக்கது தான்நாணான் ஆயின்**
**அறம்நாணத் தக்கது உடைத்து. (1018)**

**நாண அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை**
**நாணால் உயிர்மருட்டி யற்று. (1020)**

## குடிசெயல்வகை

உழவன் தனக்கு வேண்டிய எல்லா உணவுப் பொருள்களையும் காய்கறிகளையும் தன் நிலத்தில் விளைத்துக் கொண்டான். அவற்றோடு ஒரு பகுதியில் சிறிது பருத்தியும்



பயிரிட்டான். ஓய்வுநேரத்தில் அதில் விளையும் பருத்தியை எடுத்துப் பதப்படுத்திவைத்துக்கொண்டு நூல் நூற்று வந்தான். அதற்கு உரிய இராட்டினமும் அவன் கையால் செய்ததே. அவ்வாறே மரங்களையும் மூங்கில்களையும் அடுத்துள்ள காட்டில் வெட்டிவந்து கைத்தறி ஒன்று செய்து கொண்டான். தான் நூற்றுச் சேர்த்த நூலைக்கொண்டு பாவு எடுத்து நெய்து தேவையான சில ஆடைகளையும் தன் கைத்திறமையால் செய்துகொண்டான். குடும்பத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களோடு உடைவகையையும் உண்டாக்கிக்கொண்டு கவலை இல்லாமல் வாழ்ந்தான். அவன் தன் வாழ்வுக்குத் தன் கையையே நம்பிருந்தான். தன் கடமையைச் செய்தால் வாழ்வுக்குக் குறை இல்லை என்று உணர்ந்திருந்தான். மற்றவர்களின் உதவி இல்லாமலே பெரும்பாலும் வாழ்க்கை நடத்தினான். இத தான் பழங்காலத்து வாழ்க்கை முறை.

இன்று உள்ள உழவன் ஒருவன் நெல் பயிரிடுகின்றான் ; கம்பு கேழ்வரகு முதலியவற்றையும் விளைவிக்கின்றான். ஆனால் காய்கறி முதலியவற்றிற்கு அயலாரை அல்லது வெளியூராரை நம்பியிருக்கின்றான். அவற்றையும் தோட்டத்தில் விளைத்தாலும், மிளகாய் முதலியவற்றிற்குக் கடையை நாடுகின்றான். உடை முதலியவற்றை இவன் உண்டாக்குவதில்லை. ஒருகால் பருத்தி பயிரிட்டாலும், பருத்தியை அப்படியே விற்றுவிடுகின்றான் ; தானே நூல் நூற்பதில்லை. கையால் நூற்கின்றவர்கள் மிகச் சிலரே. அவர்களும் நெய்வதில்லை; நெய்வோரிடம் கொடுத்து ஆடை பெறுகின்றார்கள் அல்லது அதற்கு உரிய கடைகளில் நூற்ற நூலை விற்றுவிடுகின்றார்கள். நெய்வோரின் கதையும் இவ்வாறே அவர்கள் எங்கிருந்தோ நூலை வாங்கி நெய்கின்றார்கள்.

நெய்தவற்றைத் தாம் பயன்படுத்துவதில்லை. கடைக்காரருக்கு விற்றுவிடுகின்றார்கள். விற்ற பணத்தைக்கொண்டு யாரோ உழுது விளைவித்த உணவுப் பொருள்களை வாங்கி உண்கின்றார்கள். நூல் நூற்கும் பஞ்சாலைகள் உண்டு. அங்கே யாரோ பயிரிட்டு உண்டாக்கிய பஞ்சு வந்துசேரும்; ஆலைகள் அந்தப் பஞ்சைப் பதப்படுத்தி நூலை உண்டாக்கும். சில ஆலைகளில் அந்த நூலை ஆடையாக்கும் இயந்திரங்களும் உண்டு. சில, நூல் ஆலைகளாகவே இருக்கும். அவை நூலை மட்டும் உண்டாக்கி நெசவாலைகளுக்கு அனுப்பி விடும். அந்த ஆலைகளில் உள்ள தொழிலாளர்களோ எவரும் முழு ஆடையை உண்டாக்குவதில்லை; ஒவ்வொருவரும் ஒவ்வொரு பகுதியான கடமையைச் செய்ய, அவ்வாறே தொகுதியான உழைப்பால ஆயிரக்கணக்கானவர்களுக்கு ஆடை உண்டாக்கப்படும். ஆகவே, உழவன், நூற்போன், நெய்வோன், யந்திரத் தொழிலாளி ஆகிய ஒவ்வொருவரும் தம் தம் உழைப்பை மட்டும் நம்பி வாழ முடியாமல், பிறர் உழைப்பையும் நம்பி வாழ வேண்டியிருக்கின்றது. பருத்தி விளைவிக்கும் உழவன் 'என் கடமையைச் செய்வேன்' என்று செய்து முடித்தால் ஆடைகிடைத்துவிடாது. நூற்கும் ஆலையில் உள்ள தொழிலாளி அவ்வாறு இருந்துவிட்டாலும், ஆடை கிடைத்துவிடாது. 'எனக்குத் தேவையான ஆடை இவ்வளவுதான். ஆகவே அந்த அளவுக்குமேல் நான் ஏன் நூல் உண்டாக்க வேண்டும்' என்று பழங்காலத்து உழவனைப் போல் நூற்பதை அளவுப்படுத்திக் கொண்டால், அவனுக்கு வாழ்வு இல்லை. ஒவ்வொருவரும் தம் தம் பொறுப்பை பொதுவாக உணர்ந்து கடமையைச் செய்தால்தான், எல்லாருக்கும் எல்லாப் பொருளும் கிடைக்கக்கூடிய நிலைமை உண்டு. இதுவே இக்காலத்து வாழ்க்கை முறை.



பழங்காலத்து முறையில் ஒவ்வொருவருடைய வாழ்வும் தனித்தனியே முழுமை அடைந்திருந்தது. இக்காலத்து முறையில் எவருடைய வாழ்வும் தனியே முழுமை அடைந்திருக்கவில்லை; எல்லோருடைய வாழ்வும் சேர்ந்தால்தான் எல்லோருக்கும் வாழ்வுநிரம்புகின்றது. உணவு உடை முதலிய தேவைகளைப் பொறுத்த வரையிலும் இது உண்மையாக இருப்பது போலவே, அரசியலிலும் இது உண்மையாக விளங்குகின்றது. பழங்காலத்தில் ஒவ்வொருவரும் தம் தம் குடும்பத்தைக்காத்து உயர்த்திக்கொண்டால் போதும்; நாடு முழுதும் வாழ வழி இருந்தது. பழங்காலத்தில் ஒவ்வொருவரும் தமக்கு வேண்டிய பருத்தி விளைவித்து நூல் நூற்று ஆடைநெய்து கொண்டமையால், நாட்டில் உடைப்பஞ்சம் இல்லாமல் காக்க முடிந்தது அல்லவா? அதுபோல்தனித்தனியே குடும்பக்கட்மையைச் செய்து முடித்ததால் நாட்டில் நல்வாழ்வு நிலவ இடமிருந்தது. இன்று, ஒரு குடும்பம் என்ன பாடுபட்டாலும், கடமையைக் குறைவறச் செய்தாலும், உலகப் பஞ்சம் அதைத் தாக்காமல் விடாது. அதுபோலவே ஒருகுடும்பம் உயர்நிலை பெறுவதற்கு என்ன முயற்சி செய்தாலும், உலகத்தின் குறை அதைவிடாது; அதையும்தாக்கித் தீரும்; தாழ்வும் இடையூறும் வந்து தீரும். இந்த உண்மையை உள்ளத்தில் கொண்டே 'குடிசெயல்வகை' கற்க வேண்டும். கற்கும்போது, திருவள்ளுவர் வாழ்ந்த காலத்தில் சிற்றூர்கள் சிற்சில குடிகளின் அமைப்புகளாகத் தனித்தனியே இருந்து வந்த நிலைமை மாறி இப்போது ஒரு நாடுமுழுதும் நெருங்கிக் கலந்து ஒரு குடியாய் வாழும் நிலைமை வந்திருப்பதை உணர வேண்டும்; உலகம் முழுதும் ஒரு குடும்பமாய் நெருங்கிச் சுருங்கி வருவதையும் உணர வேண்டும். உணர்ந்தபின், 'குடிசெயல்வகை' என்பதற்கு ஈடாக 'நாடு செயல்வகை'

என்று பொருள் கொண்டு கற்றால் இந்த அதிகாரம் இக்காலத்தார்க்கும் சிறந்த கருத்துகளை உணர்த்த வல்லதாய் விளங்கக் காணலாம்.

என் கடமையாகிய தொழிலைச் செய்வதற்கு நான் தளர மாட்டேன் என்னும் முயற்சிப் பெருமையைப் போல் சிறப்புடையது வேறு இல்லை. முயற்சி, நிறைந்த அறிவு என்று இரண்டாலும் இடையறாமல் தொழில் செய்து வந்தால் குடி (நாடு) உயர்வு பெறும். என் குடிசை (நாட்டை) முன்னேறச் செய்வேன் என்று கடமை உணர்ந்து தொழில் செய்யும் ஒருவனுக்கு ஊழ்வினையும் விரைந்து முன்வந்து துணைபுரியும். குற்றம் இல்லாதவனாய்த் தன் குடியின் (நாட்டின்) கடமையைச் செய்து வாழ்கின்ற ஒருவனை உலகம் தானே சுற்றமாகச் சூழ்ந்துகொள்ளும் :

கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையின் பீடுடையது இல். (1021)

ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்
நீள்வினையும் நீளும் குடி. (1022)

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். (1023)

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. (1025)

ஒருவனுக்கு நல்ல ஆண்மை என்று சொல்லப்படுவது எது ? அடிமையாய் வாழும் வாழ்வைப் போக்கிப் பகையை அழித்துவிடுவது மட்டும் ஆண்மை அன்று ; அதனோடு ஆக்க வேலையிலும் ஆண்மை விளங்க வேண்டும். ஆகவே, நல்ல ஆண்மை என்று சொல்லப்படுவது பிறந்த குடியை (நாட்டை) ஆளும் தன்மையைத் தனக்கு உரியதாக்கிக்கொள்வதே ஆகும். (ஒவ்வொருவனும் ஆட்சிமுறையில் பொறுப்பை



ஏற்றுக் கடமையைச் செய்து உரிமையோடு விளங்குவதே ஆகும்.) போர்க்களத்தில் போர்வீரர் பலர் இருந்தாலும் அஞ்சாமை உடைய சிலமே போரைத்தாங்கி நடத்துவது போல், குடியைச் சார்ந்த சுற்றத்தாரை (நாட்டு மக்களைக்) காக்கும் வகையிலும் தாங்க வல்லவர்களின்மேல்தான் பொறுப்பு வந்து சேரும் ;

நல்லாண்மை என்பது ஒருவர்க்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல். (1026)

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை. (1027)

இவ்வாறு பொதுக்கடமையை ஏற்றுச் செய்கின்றவர்கள் சோம்பலாகவும் இருக்கக் கூடாது ; தம் மானத்தையும் பொருட்படுத்தக்கூடாது. குடி (நாடு) உயரவேண்டும் என்று கடமையைச் செய்கின்றவர்களுக்கு அதற்கு உரிய காலம் என்று ஒன்று இல்லை ; அவர்கள் அந்தக் கடமையை எப்போதும் செய்யலாம். காலம் நோக்கிச் சோம்பலாக இருந்து, மானத்தையும் எண்ணுவார்களானால், குடி (நாடு) கெட்டுவிடும் :

குடிசெய்வார்க்கு இல்லை பருவம் ; மடிசெய்து
மானம் கருதக் கெடும். (1028)

மானம் வேண்டும் என்று முன் கூறிய திருவள்ளுவர் இங்கு அதைக் கருதக்கூடாது என்கிறார். இதில் ஒன்றும் முரண்பாடு இல்லை. முன்வேண்டும் என்றது பொதுவாழ்விற்கு வேண்டிய நல்லுணர்ச்சி பற்றிய மானமாகும். இங்கு வேண்டா என்று கடிந்தது பொதுவாழ்விற்குத் தகாத தனி மானமாகும், தனி ஒருவன் தன்மானத்தைக் கருதுவானானால் அவனுக்குப் பொதுவாழ்வில் இடம் இல்லை ; இடம் இருப்பின் பொதுக்கடமையே கெடும். ஓர் அமைச்சனை

ஒருவன் தெருவில் பழித்துக்கூறுகின்றான் என்று வைத்துக் கொள்ளலாம் ; அதைப்பொருட்படுத்தாமல் மறந்து தன் கடமையைச் செய்கின்றவனே நல்ல அமைச்சன் ; இதுவே தனி மானத்தைக் கருதாத நல்ல பண்பு. இதற்குமாறாக, அந்த அமைச்சனுடைய நாட்டையோ அல்லது ஆட்சி முறையையோ அல்லது நாட்டு மக்களையோ ஒருவன் பழிக்கின்றான் என்று வைத்துக் கொள்ளலாம் ; ''நம் பெயரைச் சொல்லி அவன் ஒன்றும் பழிக்கவில்லை ; அதனால் நமக்குக் கவலை இல்லை. நாட்டைப்பழித்தால் நமக்கு என்ன ? ஆட்சிமுறையைத்தான் பழித்தால் நமக்கு என்ன ? மக்களைப் பழித்தாலும் நமக்கு என்ன ?'' என்று அமைச்சன் எண்ணுவானானால் அவன் நல்ல மான உணர்ச்சி இல்லாதவன் ; பொது வாழ்விற்கு இந்த மானம் வேண்டும் என்று திருவள்ளுவர் கூறியுள்ளார். தனி மான உணர்ச்சி உள்ள மக்கள் நாளுக்கு நாள் அழிந்து மறைவதையும், குறுகிய இனம் பற்றியோ பரந்த நாடு பற்றியோ மான உணர்ச்சி கொண்ட மக்கள் ஆக்கம் பெற்று முன்னேறுவதையும் உலக வரலாற்றில் பல முறை காணலாம்.

தன் குடி (நாடு) குறையறாமல் காக்க முயல்கின்றவனைக் கண்டால் இரக்கமும் தோன்றும். மேன்மேலும் துன்பங்களே வந்து அவனை வாட்டுவது உண்டு. அப்போது ''இவனுடைய உடம்பு துன்பத்திற்கே இடமானதோ'' என்று எண்ணத் தோன்றும் ; ஆனால் இத்தகைய நல்ல ஆள் இல்லாத குடி (நாடு) முன்னேறாது ; துன்பம் வெட்டி வெட்டிச் சாய்க்க அந்தக் குடி (நாடு) தாங்குவார் இல்லாத தாய் விழுந்து அழியும் :

**இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்**
**குற்றம் மறைப்பான் உடம்பு ? (1029)**

**இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்**
**நல்லாள் இலாத குடி. (1030)**



## உழவு

திருவள்ளுவரின் 'உழவு' என்னும் அதிகாரத்தைக் கற்கும்போது, இக்காலத்து உழவர்களின் நிலையை நினைந்து நினைந்து வருந்த வேண்டியுள்ளது. இன்று வறுமையின் எல்லையைக் காண வேண்டுமானால், கடன் சுமையின் தொல்லையைக் காண வேண்டுமானால், அறியாமையின் முழுமையைக்காண வேண்டுமானால், நோய்களின் ஆட்சியைக் காண வேண்டுமானால், இன்னல்களின் இருப்பைக் காண வேண்டுமானால், ஏய்ப்பும் ஏமாற்றமும் பலிக்கும் இடத்தைக் காண வேண்டுமானல், சுரண்டுவோரின் திறமை செல்லும் இடத்தைக் காண வேண்டுமானால், புறக்கணிப்பின் பொல்லாங்கைக் காண வேண்டுமானால், உழவர்களின் வாழ்வையே காண வேண்டும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகியும் வழி வழியாக முன்னேறாமல் என்றும் வறியவர்களாகவும் அடிமைகளாகவும் அல்லல்படுவோர் உழவர்களே. கந்தலாடையும், பொத்தல் குடிசையும், கால்வயிற்றுக் கஞ்சியும் தவிர நம் வாழ்வில் வேறு ஒன்றும் காண முடியாது என்று துன்பக் கடலிலும் அமைதி பெற்றுவிட்டவர்கள் உழவர்களே. ஒரு கிராமத்தில் புகுந்து குடிசைகளையும் கண்டு, ஓரளவு நன்றாக அமைந்த வீடுகளையும் கண்டால், குடிசைகளில் வாழ்கின்றவர்கள் தலைமுறை தலைமுறையாக உழவுத்தொழில் செய்கின்றவர்கள் என்றும், மற்றச் சிறு வீடுகளில் வாழ்கின்றவர்கள் இரண்டொரு தலைமுறைக்கு முன்பே உழவோடு நிற்காமல் வேறுதொழிலும் செய்யக்கற்றவர்கள் என்றும் உணரலாம். பெரிய வீடுகளில் வாழ்கின்றவர்கள் யார் ? தாம் உழைக்காமல் பரப்பான நிலங்களை வைத்துக்கொண்டு பிறர் உழுது பயன் தருமாறு வாழ்கின்றவர்கள், அல்லது, சில தலைமுறைகளுக்கு முன்னமே ஏரும் எருதும் தொடாமல் உழவைக்

கைவிட்டு வேறு தொழில் ஏற்றவர்கள் என்று கூறிவிடலாம். நிலத்தில் உழைக்கும் உழவு ஒன்றே வாழ்வுக்கு வழி என்று கொண்ட குடும்பத்திற்குப் பெண் கொடுக்க மற்றவர்கள் முன்வராத நிலையும், உழவன் தன் மகளை உழவு தவிர வேறு வகையான தொழில் செய்து வாழும் குடும்பத்திற்கே கொடுக்க விரைந்து முன்வரும் நிலையும் எங்கும் காணலாம். உழவு உற்ற இழிநிலை இத்தகையது.

இதற்குக் காரணம் என்ன ? உழவர்கள் ஒருவரோடு ஒருவர் பண்டமாற்றுச் செய்துகொண்டு வாழ்க்கைக்குத் தேவையான எல்லாவற்றையும் பெற்றுக் கவலையில்லாமல் வாழ்ந்த காலம் போயிற்று. உழவின் வளம் எல்லாவற்றையும் சேர்த்து உறிஞ்சி வாழும் பணமாற்று வாணிகம் ஓங்கிவிட்டது. உழவர்களுக்கிடையே இருந்து நன்மை எல்லாவற்றையும் இதுவே விழுங்கிவருகின்றது. அதனால் உழைத்த உழைப்பின் பயனை முழுதுமாகப் பெற முடியாமல் வாடுவது உழவர்களின் வாழ்க்கையாயிற்று. ‘ஏர்ப்பின்னது உலகம்,’ ‘உழுவார் உலகத்தார்க்கு ஆணி,’ ‘உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்,’ ‘பலகுடை நீழலும் தம் குடைக்கீழ்க் காண்பர்’ என்னும்மொழிகள் இன்று உண்மையாகத் தோன்றவில்லை. ‘வாணிகத்தின்பின்னது உலகம்,’ ‘வாணிகர் உலகத்தார்க்கு ஆணி,’ வாணிகம் செய்வாரே வாழ்வார்,’ ‘பலகுடை நீழலும் தன் கணக்கின்கீழ்க் காண்பர்’ என்றெல்லாம் சொல்லத் தோன்றுகின்றது. இன்று பெரிய வாணிகம் செய்வோரே அரசாங்கத்தையும் ஆட்டிவைக்க வல்லவர்களாக இருக்கின்றார்கள். ஆயினும் இது எக்காலத்திலும் நிற்கக் கூடிய நிலைமை அன்று. பண்டைக் காலத்தில் இந்த நிலைமை இல்லை ; இத்தகைய வாணிகமும் இல்லை; எதிர்காலத்திலும் இந்த நிலைமை இருக்கப்போவதில்லை. இப்போதே ஐரோப்பாவிலும் மற்ற



நாடுகளிலும் உழவர்கள் உறிஞ்சுதலுக்கு இடம் தராமல் தற்காப்புச் செய்துகொள்கின்றார்கள் ; தமக்குள் கூட்டுறவு முறை ஏற்படுத்திக்கொண்டு மற்றவர்கள் தம் உழைப்பின் பயனை உறிஞ்சாதபடி காத்துக்கொண்டு முன்னேறி வருகின்றார்கள். இந்த நாட்டிலும் அந்த நிலைமை ஏற்படுவது திண்ணம். கூட்டுறவு முறை புதியதாகத் தோன்றினாலும் அதன் அடிப்படை பழையதே. பழங்காலத்தில் தனித் தனியே அவரவர் செய்துவந்த பண்டமாற்றை இப்போது எல்லாரும் ஒன்று சேர்ந்து தொகுதியாக நின்று பண்டங்களை மாற்றிவிற்றும் வாங்கியும் வாழ்வதே கூட்டுறவு முறையாகும். அத்தகைய முறை ஏற்பட்டுவிட்டால் பழையபடி ‘ஏர்ப் பின்னது உலகம்’ ‘உழுவார் உலகத்தார்க்கு ஆணி’ என்னும் மொழிகள் உண்மையாக விளங்கும்.

மற்றொன்றும் இங்கே ஆராய வேண்டும். திருவள்ளுவர் காலத்திலும், அதற்கு முன்னும், அதற்குப்பின் ஏறக்குறையச் சென்ற நூற்றாண்டு வரையிலும் நாட்டில் உழவு ஒன்றே மிகப்பெரும்பாலோரின் தொழிலாக இருந்துவந்தது. இன்றும் பெரும்பாலோரின் தொழில் அதுவே. மற்றவர்கள் ஏதேனும் ஒரு கைத்தொழிலை வாழ்வுக்கு உரிய தொழிலாக ஏற்படுத்திக்கொண்டுள்ளார்கள். விஞ்ஞான முற்போக்கு ஏற்பட ஏற்பட, பெரும்பாலோர் செய்யும் உழவைச் சிறுபான்மையோர் செய்து முடிக்க முடியும். அதனால் உழைப்பைப் பலருக்கும் பங்கிட்டுக் குறைக்க நேரும். அப்போது ஆலைகளிலும் தொழிற்சாலைகளிலும் தொழில் செய்வோரே நாட்டில் பெரும்பாலோராக விளங்குவார்கள். இப்போதே வெளி நாடுகளில் இந்த நிலைமை காணப்படுகின்றது. அங்கெல்லாம் உழவர்கள் சிறுபான்மையோராக இருக்கின்றார்கள் ; பெரிய பெரிய நிலப்பரப்புகளை எல்லாம் சிற்சிலர்

இருந்து உழுது பயிரிட முடிகின்றது. அந்த நிலைமை இந்த நாட்டிலும் வந்த பிறகு, உழவர்க்கு உரிய சிறப்பு மற்றத் தொழிலாளர்க்கும் ஏற்படும். வாழ்வுக்கு மிக மிக இன்றியமையாததான உணவுப்பொருளை உண்டாக்கும் பெருமை உழவர்க்கு இருந்தாலும், அடுத்தபடி தேவையான பொருள்களை உண்டாக்கும் பெருமை மற்றத் தொழிலாளர்க்கு இருக்கும். அப்போது உழவும் மற்றத் தொழிலும் ஒரு நிகராகக் கருதப்படலாம். உழவு என்பது உடம்பால் உழைத்துத் தொழில் செய்யும் வாழ்வுக்கு அறிகுறியாக நிற்கும். உடம்பால் உழைத்துத் தொழில் செய்வோரையே உலகம் நாடி நிற்கும் என்றும், அவர்களே உலகத்தார்க்கு ஆணி என்றும், அவர்கள் வாழ்வே நல்ல வாழ்வு என்றும், அரசாட்சியும் அவர்களுடைய உழைப்பைப் பொறுத்ததே என்றும் எல்லாக் கைத்தொழிலையும் புகழும் நிலைமை வரும். ஆகவே, உழவு என்னும் இந்த அதிகாரம் சிறப்புப் பற்றி நிலத்தில் உழுது பாடுபடும் தொழிலைப் போற்றுவதாக இருந்தாலும், உடம்பால் உழைத்துப் பாடுபடும் எல்லாத் தொழிலையும் போற்றுவதாகக் கொண்டால், காலத்திற்கு ஏற்ற முறையில் பொருள் விளக்க வல்லதாகும்.

வேறு எந்த எந்த வழிகளில் சுழன்றாலும் உலகம் முடிவில் ஏர்த்தொழிலின் பின் நிற்கின்றது; ஏரினால் விளையும் பொருளையே எதிர்பார்த்து நிற்கின்றது ; அதனால், துன்பம் உற்றாலும் உழவே தலையான தொழில். உழவு செய்வது உடல் வருத்தும் தொழில் என்று அதைச் செய்ய முடியாமல் வேறு வழியில் வாழ்க்கை நடத்துகின்றவர்களையும் தாங்கிக் காப்பாற்றுகின்றவர்கள் உழவர்களே ; ஆகையால் அவர்களே உலகத்தார்க்கு அச்சாணி போன்றவர்கள். உழவு செய்து அதனால் தாமும் உண்டு வாழ்கின்றவர்களே



உரிமையோடு வாழ்கின்றவர்கள ; மற்றவர்கள் பிறரைத் தொழுது வழிபட்டு அதனால் வயிறு வளர்த்து உரிமை இல்லாமல் அவர்களின் பின் செல்கின்றவர்கள் :

**சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் ; அதனால்**
**உழந்தும் உழவே தலை. (1031)**

**உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது**
**எழுவாரை எல்லாம் பொறுத்து. (1032)**

**உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் ; மற்றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர் (1033)**

தம் கையால் உழைத்துத் தொழில் செய்து அதனால் கிடைத்ததை உண்டு வாழும் தன்மை உடையவர்கள் பிறரிடம் சென்று இரக்க மாட்டார்கள் ; தம்மிடம் வந்து இரப்பவர்களுக்கு அவர்கள் கேட்ட பொருளைக் கொடுத்து உதவுவார்கள் :

**இரவார் இரப்பார்க்கென்று ஈவர் கரவாது**
**கைசெய்தூண் மாலை யவர். (1035)**

உழவர் வாழ்க்கை மிக மிகச் சீர்கெட்டுள்ள இந்தக் காலத்திலும் பிறர்க்கு உதவும் பண்பை அவர்களிடம் காணலாம். அறுவடைக் காலத்தில் நெல்லையோ மற்றப் பொருளையோ இரண்டுகையாலும் வாரி வழங்குகின்றார்கள் ; கூழுக்குத் திண்டாடும் காலத்திலும் தாம் குடிக்கும் கூழில் ஒரு பகுதியைக் கேட்டவர்களுக்குக் கொடுத்துப் பசி தீர்க்கின்றார்கள். எதிர்காலத்தைப் பற்றிக் கவலை இல்லாமல், சேர்த்து வைக்கும் சிக்கனம் இல்லாமல், உதவிசெய்யும் தன்மை இன்னும் அவர்களிடம் உள்ளது. அதனால் கைத் தொழில் செய்து வாழும் தொழிலாளர் உலகமே இரத்தலை (பிச்சையெடுத்தலை) ஒழிக்க வல்லது என்பது திருவள்ளுவர் கருத்தாகும்.

உழவர்களின் கை, தொழில் செய்யாமல் மடங்கினால் எவரும் வாழ முடியாது ; ஒரு பொருளை மனத்தால் விரும்பும் தன்மையையும் விட்டுவிட்டோம் என்று கூறும் துறவிகளுக்கும் அப்போது வாழ்வு இல்லை ; அவர்களும் துறவறத்தில் நிற்க முடியாது :

**உழவினார் கைமடங்கின் இல்லை விழைவதூஉம்**
**விட்டேமென் பார்க்கும் நிலை.** (1036)

ஒரு பலம் புழுதி கால்பலம் ஆகின்ற வரைக்கும் நிலத்தைக் காயவிட வேண்டும் ; அவ்வாறு காயவிட்டால், ஒரு பிடி எருவும் இல்லாமலே பயிர் நன்றாகச்செழித்து விளையும். ஏர் உழுவதைவிட எரு இடுவது நல்லது ; களை கட்டபிறகு, நீர்பாய்ச்சுவதைவிடக் காவல்காத்தல் நல்லது ; ஆகையால் இவை எல்லாவற்றையும் விடாமல் செய்வதே உழவனின் கடமை. நிலத்திற்கு உரிய உழவன் நாள்தோறும் போய் நிலத்தைப் பார்த்து வேண்டியதைச் செய்ய வேண்டும் ; அவ்வாறு செய்யாமல் சோம்பலாக இருந்தால், (புறக்கணிக்கும் காலத்தில் ஊடுகின்ற) அவனுடைய மனைவியைப் போல அந்த நிலம் அவனை வெறுத்து ஊடி விடும் ; எதிர்பார்த்த பயனைத் தராது. நிலம் உழைக்க உழைக்கப் பயன் தர வல்லது. அதனால், வறுமையுற்று வருந்துகிறோம் என்று எண்ணித் தொழில் செய்யாமல் இருப்பவரைக் கண்டால், நிலமகள் தன்னுள்ளே சிரிப்பாள் :

தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். (1037)

ஏரினும் நன்றால் எருஇடுதல் ; கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு (1038)

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடிவிடும். (1039)

இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலம்என்னும் நல்லாள் நகும். (1040)



## நல்குரவு

குடிமக்களுக்கு வேண்டிய பல நல்ல இயல்புகளையும் கூறி, கையால் தொழில் செய்து வாழும் சிறப்பையும் கூறிய திருவள்ளுவர், அவர்களின் வாழ்வில் இருக்கத் தகாதன இவை என்றுகூறத் தொடங்குகின்றார். நல்ல அரசியல் நடைபெற வேண்டுமானால், குடிமக்களிடம் வறுமை இருக்கக் கூடாது, இரந்து உயிர் வளர்க்கும் வாழ்க்கை இருக்கக் கூடாது, இரந்து வாழ அஞ்சுகின்ற அச்சம் இருக்க வேண்டும், கீழ்ப்பட்ட தன்மை-மக்கட்பண்புக்கு மாறான தன்மை இருக்கக் கூடாது என்று இவற்றை அறிவிக்கின்றார் ; நல்குரவு, இரவு, இரவச்சம், கயமை என்னும் நான்கு அதிகாரங்களைப் பொருட்பாலில் இறுதியில் வைத்துக் குடிமக்களுக்குத் தகாதவற்றை எடுத்துக்கூறிக் கடிகின்றார். அவற்றுள்ளும் வறுமையே இரவுக்கும் கயமைக்கும் பெரும்பாலும் காரணமாகையால், 'நல்குரவு' என்னும் இந்த அதிகாரத்தில் வறியவர்களின் வாழ்வை நினைந்து உருகிய உணர்வோடு வறுமையின் கொடுமையைப் புலப்படுத்துகின்றார். திருவள்ளுவர் பிறந்து வாழ்ந்து நூலெழுதி இரண்டாயிரம் ஆண்டுகள் கழிந்த பிறகும், அந்த வறுமை இன்னும் அதே நிலையில் அல்லது அதைவிடக் கொடிய நிலையில் இருந்து வருகின்றது. திருக்குறளைக் கற்கும் போதெல்லாம், அது இன்னும் கொடுமை செய்துவருகின்றதே, இன்னும் ஒழியவில்லையே என்று நினைந்து வருந்த வேண்டியுள்ளது. திருவள்ளுவர் கருதியவாறு, இந்த வறுமை ஒழிய வேண்டும் என்றும், ஒழிந்தால்தான் பொதுவாழ்வு சீர்ப்படும் என்றும் எண்ண வேண்டிய நிலைமை இன்றும் உள்ளது.

வறுமை போல் பொல்லாதது எது என்று கேட்டால், வறுமை போல் பொல்லாதது வறுமையே தவிர

வேறொன்றும் இல்லை என்றுதான் கூற வேண்டும். வறுமை என்கின்ற பாவி வந்து சேர்ந்தால், அதனால் மறுமை வாழ்வும் கெடுகின்றது ; இம்மை வாழ்வும் கெடுகின்றது ; இரண்டையும் கெடுக்கும் வகையிலே வறுமை வந்து சேர்கின்றது. வறுமையால் ஆசை வளர்கின்றது ; அது பழைய குடிப்பண்பையும் புகழையும் ஒருசேரக் கெடுத்துவிடுகின்றது. நல்ல குடியில் பிறந்த மக்களையும் வறுமை கெடுத்துவிட வல்லது ; அவர்களிடத்திலும் இழிவான பழி பிறப்பதற்குக் காரணமான சோர்வை அது ஏற்படுத்திவிடும். வறுமை என்று ஒரு துன்பம் வந்தால் போதும் ; அதனுள் பலவகைத் துன்பங்கள் சேர்ந்துவிளையும்:

**இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்**
**இன்மையே இன்னா தது. (1041)**

**இன்மை என ஒரு பாவி மறுமையும்**
**இம்மையும் இன்றி வரும். (1042)**

**தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக**
**நல்குரவு என்னும் நசை. (1043)**

**இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த**
**சொற்பிறக்கும் சோர்வு தரும். (1044)**

**நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்**
**துன்பங்கள் சென்று படும். (1045)**

வறியவர்கள் பேசுவதை அன்போடு கேட்டு உணர்கின்றவர்கள் இல்லை. அதனால் அவர்கள் நல்ல கருத்தைத் தெளிவாக உணர்ந்து சொன்னபோதிலும், அந்தச் சொல்லும் பொருளும் கேட்பாரற்றுப் பயன்படாமல் போகும். அது மட்டும் அன்று ; அறத்தோடு பொருந்தாத வறுமை வந்த காலத்தில் ஒருவன் பெற்ற தாயாலும் அயலான் போல் புறக்கணிக்கப் படுவான் :

**நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்**
**சொற்பொருள் சோர்வு படும். (1046)**



**அறம்சாரா நல்குரவு ஈன்றதா யானும்**
**பிறன்போல நோக்கப் படும். (1047)**

பெற்ற தாய் எந்த நிலையிலும் ஈன்ற மகனை வெறுப்பது இல்லை. கள்ளுண்டு மயங்கித் திரியும்போது அத்தகைய வெறுப்பு அந்தத் தாய்க்கும் ஏற்படுவதாகத் திருவள்ளுவர் கூறியுள்ளார். தாய் மகனைப் புறக்கணிப்பதும் அருமையே. ஆனால் வறுமை வந்தபோது ஒருவன் அறநெறியிலிருந்தும் வழுவ நேரும் ; வறுமைத் துன்பம் நல்ல வாழ்வையும் கெடுக்கக்கூடும் ; அப்படி வாழ்வு கெட்டபோது அந்தத் தாயும் புறக்கணிக்கக் கூடும் என்று திருவள்ளுவர் வறுமையின் கொடுமையைப் புலப்படுத்துகின்றார். தாயாலும் புறக்கணிக்கப்படும் நிலைமை நேருமானால், மற்றவர்களின் புறக்கணிப்பைப் பற்றிக் கூறவேண்டியதே இல்லை.

வறுமையில் வாடுகின்ற மக்களைப்பற்றித் திருவள்ளுவர் எண்ணி எண்ணி அந்த உணர்வாகவே நின்றார் ; அவர்கள் படும் துன்பத்தைத் தாம் படுவதாக உணர்ந்தார் ; உணர்ந்து அவர்கள் உருகி எண்ணும் எண்ணமாக அவர்கள் சொல்லாலேயே வெளியிடுகின்றார் :— "நேற்றும் வந்தது அந்த வறுமை ; கொலை செய்வது போல் வந்து வருத்தியது ; அந்த வறுமை இன்றைக்கும் வருமோ ? வந்தால் நான் என்ன செய்வேன் ? அய்யோ ! நெருப்பில் படுத்து உறங்கினாலும் உறங்க முடியும் ; இந்த வறுமைத் துன்பத்திற்கு இடையே கண்மூடி உறங்க முடியவில்லை" என்று வறியவன் ஒருவன் உள்ளம் உடைந்து துன்புறுவதாகக் கூறுகின்றார் :

**இன்றும் வருவது கொல்லோ நெருநலும்**
**கொன்றது போலும் நிரப்பு (1048)**

**நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் ; நிரப்பினுள்**
**யாதொன்றும் கண்பாடு அரிது. (1049)**

வறுமையால் வருந்துகின்றவர்களுக்கு வாழ்வில் நுகரத் தக்க பொருள் ஒன்றும் இல்லை ; எல்லாப் பற்றும் அவர்களை விட்டுவிட்டன என்று கொள்ளலாம் ; ஆனால் மன உறுதி இல்லாத காரணத்தால், அவர்களுக்கு அந்தப் பொருள்களின் மேல் ஆசை நீங்கவில்லை ; இதுவே அவர்கள் முற்றத் துறக் காமல் வருந்துவதற்குக் காரணம், இதனால் அவர்கள் இன்னும் உப்பையும் கஞ்சியையும் தேடி அவற்றிற்கு எமனாகத் திரிகின்றார்கள் ;

> துப்பரவு இல்லார் துவரத் துறவாமை
> உப்பிற்கும் காடிக்கும் கூற்று. (1050)

இத்தகைய கொடிய வறுமை வந்தால் மனஉறுதி உள்ளவர்கள் துறவிகள் போல் பற்றற்று வாழ்க்கை நடத்து வது ஒன்றே வழி என்பது திருவள்ளுவர் கருத்து. ஆனால் மன உறுதி இல்லாதவர்களை நினைந்து அவர் இரக்கமே கொள்கின்றார். உப்பும் கஞ்சியும் வேண்டுமென்று அவற்றின் மேல் பற்றுவைத்து அவர்கள் வருந்தும் வாழ்வைக் கண்டு நோகின்றார்.

பொதுவாழ்க்கைக்குப் பண்பு வேண்டும், புகழ் வேண்டும், பழி அற்ற ஒழுக்கம் வேண்டும், சொல்லுக்கும் மதிப்பு வேண்டும், புறக்கணிக்கப்படாத உரிமை வேண்டும், வாழும் வகையில் அமைதி வேண்டும், ஆனால் வறுமை என்ற ஒன்று இருந்தால் இத்தனையும் கெடுமாறு செய்கின்றது. மக்களைப் பொதுவாழ்க்கைக்குத் தகுதி அற்றவர்களாகச் செய்கின்றது. ஆகையால், வறியவர்களுடைய குறைகளைச் சொல்லிக் கடிந்து கூறுவதால் பயன் என்ன ? அவ்வாறு அவர்களைக் குறைகூறுவது கொடுமையும் ஆகும். அவர்களைக் கெடுத்துப் பொதுவாழ்க்கைக்குத் தகுதி அற்றவர்களாகச் செய்யும் வறுமையைத்தான் கடிய வேண்டும் ; ஒழிக்க வேண்டும். இந்த உணர்வு வந்தால், திருவள்ளுவர் எண்ணியது போல்



எண்ணி, வறியவர்களின்மேல் இரக்கம் கொள்ள முடியும் ; வறுமையை எல்லோரும் சேர்ந்து தொலைப்பதைக் கடமையாகக் கொள்ளமுடியும். வறுமை ஒழிந்தால், இன் னும் பலர் பொதுவாழ்க்கைக்குத் தகுதியானவர்களாக விளங்குவார்கள். அதனால் நாடு நன்மை பெறும் என்று உணர்த்தவே திருவள்ளுவர் இந்தக் கருத்துகளை இங்குக் கூறியுள்ளார்.

### இரவு

தெருவில் பிச்சைக்காரரைக் காண்கின்றோம். அவர் களுக்கு ஏதாவது கொடுத்து உதவினால், அவர்கள் மேன் மேலும் இரந்து வாழ்வதற்கு ஊக்கம் ஊட்டியது போல் ஆகின்றது. அல்லது, அவர்கள் இந்த நாட்டின் பெயர் கெடும்படியாக இரப்பதை விடவேண்டும் என்ற நல்ல நோக் கத்தோடு ஒன்றும் உதவாமல் வந்தால், அவர்களுடைய உயிர்வாழ்க்கைக்காக ஒரு வழியும் செய்யாமல் ஒதுங்கிய குற்றம் சார்கின்றது. எல்லோரும் இவ்வாறே எண்ணி உதவி செய்யாமல் விட்டுவிட்டால், அவர்களில் அஞ்சாமை மிகுந்தவர்கள் திருடு முதலியன செய்து பிழைக்கத் துணி வார்கள் ; மற்றவர்கள் பட்டினியால் மெலிந்து வாடி அழிவார் கள். இந்த நிலையில் என்ன செய்வது ? தனிப்பட்ட அவர் களுடைய நன்மையைக் கருதி உதவியும் செய்யவேண்டும். நாட்டின் நன்மையைக் கருதி இரக்கும் தொழிலை அவர்கள் கைவிடுமாறு சீர்திருத்தமும் செய்யவேண்டும். திருவள்ளுவர் இந்த இரண்டையுமே தனித்தனியாக இரண்டு அதிகாரங்களில் கூறுகின்றார். இரப்போர் நல்லவர்களை நாடி இரக்க வேண்டும் என்றும், அவர்களுக்கு உதவிசெய்வது நல்லவர் களின் கடமை. என்றும், 'இரவு' என்னும் அதிகாரத்தில்

கூறுகின்றார்; அதை அடுத்து, இரந்து உயிர்வாழ்வது தவறான வாழ்க்கை என்று 'இரவச்சம்', என்னும் அதிகாரத்தில் அந்தத் தொழிலைக் கடிந்து கூறுகின்றார். அதனால் தான் 'தக்கவர்களைக் கண்டால் இரந்து உதவி பெறலாம்' என்று ஓர் இடத்தில் இரப்பவர்களின் உயிர்வாழ்க்கையைக் கருதி இரக்கம் கொண்டு கூறியபின், கண்போல் சிறந்த மிக நல்லவர்களிடத்திலும் இரந்து உதவி பெறாமல் வாழ்வதே கோடி மடங்கு நல்லது என்று நாட்டின் பொது நலம் கருதியபோது கடிகின்றார்.

இரக்கத்தக்க நல்லவர்களைக் கண்டால், அவர்களிடத்தில் மட்டும் இரந்து உதவி கேட்கலாம் ; அவர்களும் இல்லை என்று கரப்பார்களானால், அது அவர்களின்பழியே அல்லாமல் இரந்தவர்களின் பழி அன்று. இரந்து கேட்ட பொருள்கள் நல்லவர்களிடமிருந்து துன்பம் இல்லாமல் கிடைக்குமானால், அப்படிப்பட்டவர்களிடம் இரந்து கேட்பதும் ஒருவனுக்கு இன்பமே ஆகும். இல்லை என்று மறைக்காமல் உள்ளதைக் கொடுத்து உதவும் நல்லவர்கள் உலகத்தில் இருப்பதால்தான். அவர்களிடத்தில் போய் நின்று இரப்பவர்கள், உயிர் வாழ்வதற்காக அதையும் ஒரு தொழிலாக மேற்கொள்கின்றார்கள், இகழாமலும் எள்ளாமலும் கொடுத்து உதவ வல்ல நல்லவர்களைக் கண்டால், இரப்பவர்களின் உள்ளம் உள்ளுக்குள் மகிழ்வது உண்டு. இவ்வாறு இரந்து உதவியைப் பெற்றுக் கொள்கின்றவர்கள் இல்லாவிட்டால், கொடுப்பவர்களுக்குப் புகழ் ஏது ?

**இரக்க இரத்தக்கார்க் காணின் ; கரப்பின்**
**அவர்பழி ; தம்பழி அன்று. (1051)**

**இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை**
**துன்பம் உறாஅ வரின். (1052)**



**கரப்பிலார் வையகத்து உண்மையான் கண்நின்று**
**இரப்பவர் மேற்கொள் வது. (1055)**

**இகழ்ந்தெள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்**
**உள்ளுள் உவப்பது உடைத்து. (1057)**

**ஈவார்கண் என்உண்டாம் தோற்றம் இரந்துகோள்**
**மேவார் இலாஅக் கடை? (1059)**

இவ்வாறு இரப்பவர்களின்மேல் இரக்கம் கொண்டு, அவர்கள் எப்படியாவது உயிர்வாழவேண்டுமே என்று எண்ணி, வறுமை தொலைகின்ற வரைக்கும் வேறுவழி இல்லை என்று தெளிந்து, நல்லவர்களைக் கண்டால் அவர்களிடம் மட்டும் இரக்கலாம் என்று கூறிய திருவள்ளுவர், நாட்டின் பொதுநலம் கருதிப் பின்வருமாறு கூறுகின்றார்.

தம்மிடம் உள்ளதை மறைக்காமல் மகிழ்ச்சியோடு கொடுத்து உதவுகின்ற கண்போல் சிறந்தவர்களிடத்திலும் இரக்காமல் வாழ்வதே கோடி மடங்கு நல்லது.

**கரவாது உவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்**
**இரவாமை கோடி உறும். (1064)**

அவர்கள் ஏன் இரந்து வாழ முன்வருகின்றார்கள் என்பதையும் திருவள்ளுவர் எண்ணினார். உயிர் வாழ்க்கைக்குக் காற்று வேண்டும், ஒளி வேண்டும், நீர் வேண்டும், உணவு வேண்டும். உயிர்வாழ்க்கைக்காக உலகத்தைப் படைத்தவன், அதற்கு வேண்டிய காற்றும் ஒளியும் நீரும் உணவும் படைத்திருக்கிறான். படைப்பில் குறை ஒன்றும் இல்லை காற்றும் ஒளியும் நீரும் மக்களின் கைக்கு எட்டாதனவாக இருந்து எல்லோருக்கும் பொதுவாகக் கிடைக்கின்றன. உணவுப்பொருள் மட்டும் மக்கள் கையில் அகப்படுவதால், சேர்த்து வைக்கத்

தக்கதாய் இருப்பதால், சேர்த்து வைக்க வல்லவர்கள் பெற்று உண்கின்றார்கள் ; மற்றவர்கள் அந்தத் திறமை இல்லாத குறையால், சேர்த்து வைத்தவர்களிடம் இரந்து பெற்று உயிர் வாழ்கின்றார்கள். ஆகவே இரத்தலும் ஒரு தொழில் ஆயிற்று. இந்தக் குறை படைப்பின் குறை அன்று ; சேர்த்து வாழ மக்கள் அமைத்த அமைப்பின் குறையே ஆகும். இவ்வாறு எண்ணிய திருவள்ளுவர், உழைத்து உயிர் வாழாமல் இரந்தும் உயிர் வாழும்படியாக உலகத்தைப் படைக்கவில்லையே என்று உணர்கின்றார் ; கடவுள் அவ்வாறு இரந்தும் உயிர்வாழவேண்டி உலகத்தைப் படைத்திருந்தால், படைத்த அவன் எங்கும் அலைந்து கெடுவானாக என்கின்றார் :

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான். (1062)

மக்கள் ஏன் உழைத்து உயிர்வாழக்கூடாது ? வறுமைத் துன்பத்தை உழைப்பு நீக்கிவிடுமே! அவ்வாறு நீக்கிக் கொள்ளாமல், இரந்து உதவி பெற்று வறுமைத் துன்பத்தைத் தீர்க்க எண்ணுகின்ற வன்மையே வன்மை! அதைவிட வன்மையான எண்ணம் வேறொன்றும் இல்லை. இது மக்கள் வாழ்க்கைக்குத் தகாத தீய வன்மை :

இன்மை இடும்பை இரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்டது இல். (1063)

வேறு வழி ஒன்றும் இல்லாதபோது, உழைத்துப் பிழைக்கவும் வழி இல்லாதபோது, இரந்து வாழலாமே என்று எண்ணக் கூடும். அப்போதும் இரந்து வாழ உடன்படாத பெருந்தன்மைதான் வேண்டும். அந்தப் பெருந்



தன்மைக்கு உலகமெல்லாம் சேர்ந்தாலும் ஈடு ஆகாது. உழைக்கும் முயற்சியால் கிடைத்தது போதாமல் இருக்கலாம்; தெளிந்த நீர்போன்ற கூழாக இருக்கலாம் ; ஆயினும் இரந்து உதவிபெற மறுத்து, கிடைத்தது போதும் என்று அதை உண்பதைவிட இனியது இல்லை. நம்பொருட்டாக இரப்பது கெடுதியானால், பிறர்பொருட்டு இரந்து கேட்டு உதவி செய்யலாம் அன்றோ எனக் கேட்கலாம். அதற்காக இரப்பதும் தீமையே. நீர் வேட்கையால் வருந்தும் பசுவுக்காக நீர் வேண்டும் என்று அறம் நோக்கி இரந்து கேட்பதானாலும் நாவிற்கு அதைப் போல் இழிவானது இல்லை :

இடம்எல்லாம் கொள்ளாத் தகைத்தே இடம் இல்லாக்
காலும் இரவொல்லாச் சால்பு. (1064)

தெண்ணீர் அடுபுற்கை ஆயினும் தாள்தந்தது
உண்ணலி னூங்கினியது இல். (1065)

ஆவிற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல். (1066)

பிறர் பொருட்டாகவும் இரத்தல் கூடாது என்னும் திருவள்ளுவர், வறுமை தொலைகின்ற வரைக்கும் அது எல்லோராலும் முடியாதது என்று உணர்ந்துள்ளார். அதனால் பிறர் நன்மைக்காக இரந்து கேட்பதும் கூடாது என்று கூறிவிட்டு உடனே தாமே இரந்து கேட்கத் தொடங்குகின்றார் ; இரப்பவர்களின் நன்மைக்காக இரப்பவர்களை நோக்கியே இரந்து கேட்கின்றார் : ''இரந்து வாழும் மக்களே! வறுமை தொலைகின்ற வரைக்கும் இந்த நிலையை மாற்றுவது அருமை என்பதை உணர்கின்றேன். வேறு வழி இல்லை என்று இனியும் இரந்து வாழ விரும்புகின்றீர்களா? அப்படியானால் நான்

முன்னே உங்களிடம் இரந்து கேட்டுக்கொள்வது ஒன்று உண்டு. அதாவது : இனிமேல் நீங்கள் யாரிடமாவது இரந்து கேட்பதானால், வைத்துக்கொண்டே இல்லை என்று கரப்பவர்களிடம் மட்டும் போக வேண்டா ; அவர்களிடம் போய் இரக்க வேண்டா. இதுவே நான் உங்களை இரந்து கேட்டுக்கொள்வது என்கின்றார் :

**இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின்**
**கரப்பார் இரவன்மின் என்று. (1067)**

இவ்வாறு திருவள்ளுவர் வேண்டிக் கொள்ளக் காரணம் என்ன ? மக்களாகப் பிறந்தவர்கள் எல்லோருக்கும் ஒத்த உரிமை இருக்க வேண்டிய உலகத்தில் தலைகீழ் முறை வாழ்கின்றதே என்று அவர் நினைந்து உருகுகின்றார். "ஒத்த உரிமை உடைய மக்களுள் ஒருவர் பொருள் சேர்த்து வைத்துக்கொண்டிருக்க, மற்றொருவர் ஒரு பொருளும் இல்லாமல் வாடுவதா ? தம்மைப் போல் பிறந்து வாழ்கின்ற ஒருவரிடம் இவர் போய், 'எனக்கு இல்லை ; கொடுத்து உதவு' என்று இரந்து கேட்பதா ? இது கொடுமை அன்றோ ? இதை நினைத்தாலும் உள்ளம் உருகுகின்றதே ! இந்த நிலையில் அவர் இரந்து கேட்பதைப் பற்றிச் சிறிதும் உணராமல் பொருள் வைத்துக்கொண்டே இல்லை என்று சொல்ல மனிதர் ஒருவருக்கு மனமும் வருகின்றதே ! இது அதை விடக் கொடுமை அன்றோ ? இந்தக் கொடுமையை நினைத்தால், உருகுவதற்கு உள்ளமும் இல்லாமல் உடைந்து அழிகின்றதே" என்று வருந்துகின்றார் :

**இரவுள்ள உள்ளம் உருகும் ; கரவுள்ள**
**உள்ளதூஉம் இன்றிக் கெடும். (1069)**



**கயமை**

வடிவால் மக்களாக உள்ள எல்லோரும் பண்பாலும் மக்களாகவே இருந்தால், பொதுவாழ்க்கைக்கு ஒரு கெடுதியும் நேராது. ஆனால் கீழ்மக்கள் வடிவால் மக்கள் போல் தோன்றி மக்கட்பண்பு இல்லாமலே வாழ்கின்றார்கள். இந்த வேறுபாடு இருந்த போதிலும், அவர்கள் வெளித் தோற்றத்தால் மக்களை ஒத்திருக்கும் ஒப்புமையைப் போல் வேறு எங்கும் கண்டதில்லை :

**மக்களே போல்வர் கயவர் ; அவரன்ன**
**ஒப்பாரி யாம்கண்ட தில் (1071)**

கயவர் என்றால் யார் ? வாழ்க்கையில் பொறுப்பு இல்லாத காரணத்தால் நெஞ்சில் கவலை இல்லாதவர்கள் ; நெறி இல்லாத காரணத்தால் தம் விருப்பம் போல் நடக்கின்றவர்கள். அவர்கள் தமக்காகவும் கவலைப்பட மாட்டார்கள் ; பிறர்க்காகவும் கவலைப்பட மாட்டார்கள். தமக்கு உரிய நல்வழி இது என்று அறிந்த நன்மக்கள் ஒருகாலும் அவர்களைப் போல் கவலை இல்லாமல் வாழ முடியாது ; நன்மக்களோடு கயவரை ஒப்பிட்டு நோக்கினால், நெஞ்சில் கவலை இல்லாத கயவரே நன்மக்களை விடப் பேறு பெற்றவர்கள் என்று தோன்றும். அவர்கள் விருப்பம் போல வாழ்கின்ற நெறியற்ற வாழ்க்கையைக் கண்டால் தேவர்களைப் போன்றவர்கள் என்று தோன்றும். இவ்வாறு பொறுப்புணர்ச்சியும் நன்னெறியும் இல்லாமல் வாழ்கின்ற கயவர் பொதுவாழ்க்கைக்கு இடையூறே ஆவார்கள் :

**நன்றறி வாரின் கயவர் திருவுடையர் ;**
**நெஞ்சத்து அவலம் இலர். (1072)**

தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான். (1073)

பொதுவாழ்க்கையில் ஒருவரிடம் ஒருவர் உரிமை உணர்ந்து நடக்க வேண்டும் அன்றோ? கீழ்மக்களுக்கு உரிமை என்பது தெரியாது. தம்மைவிடத் தாழ்ந்தவர்களைக் கண்டால், அவர்களைவிட மேம்பாடு கொண்டு இறுமாப்புக் கொள்வார்கள். தம்மைவிட வலியவர்களிடத்தில் அவர்கள் அடங்கி நடக்கும் முறையும் உரிமையற்ற முறையே ஆகும். அவர்கள் ஒழுங்காக நடக்க வேண்டுமானால், அச்சத்தால் அடங்குமாறு செய்யலாம்; அல்லது, அவர்களுக்கு ஏதாவது ஆசையூட்டி, அந்த ஆசை காரணமாகச் சிறிதளவு ஒழுங்கு உண்டாகச் செய்யலாம். இவ்வாறு, கீழ்மக்கள் பிறர்க்கு உரிமை கொடுத்தும் தாமும் உரிமையோடு வாழத் தெரியாமல், மெலிந்தவர்களை அடக்கியும் வலியவர்களுக்கு அடங்கியும் வாழ்வார்கள்; பிறருடைய அச்சத்திற்கு அடங்குவார்கள், அல்லது, பிறர் தந்திரத்தால் ஊட்டும் ஆசைக்கு அடிமை ஆவார்கள்:

அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ். (1074)

அச்சமே கீழ்களது ஆசாரம்; எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது. (1075)

இந்தக் கருத்தை உணர்ந்து உலகத்தை நோக்கினால், பிறரை அடக்கி ஆள விரும்புவோரும் பிறர்க்கு அடங்கிவாழ விரும்புவோரும் ஆகிய இருதிறத்தாரும் ஒரே வகையார் என்னும் உண்மையைத் தெளியலாம். வாய்ப்பு நேரும்போது அடிமைகள் அதிகாரிகள் ஆவதையும், வேறுவழி இல்லாத போது அதிகாரிகள் அடிமைகள் ஆவதையும் காணலாம்.



அடிமைத் தன்மை, கொடுங்கோன்மை என்ற இரண்டும் உரிமையற்ற வாழ்க்கையின் இருமுனைகள் என்பதையும் உணரலாம்.

கயவர்கள் புலனடக்கம் இல்லாதவர்கள்; அதனால் மனம் போன போக்கெல்லாம் போவார்கள்; தம்மைத் தாம் ஆளும்முறை அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் பொது வளர்ப்பு முறையின் குறையே அது. அவர்கள் பொது வாழ்க்கையில் ஈடுபடும்போது அந்தக் குறை நன்றாகப் புலப்படுகின்றது. நாவடக்கம் என்பது உண்டா என்று ஆராய்வதாலேயே அது தெளிவாகும். ஏதாவது மறை (ரகசியம்) ஒன்றை அவர்கள் கேள்விப்படுவார்களானால், கேட்ட அதை மற்றவர்களிடமெல்லாம் கொண்டுபோய்ச் சொல்வார்கள்? அதைப் பலர் அறிய வெளிப்படுத்துவதில் அவர்கள் அறையும் பறை போன்றவர்கள்:

அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான். (1076)

புலனடக்கம் இல்லாமல் போனாலும் போகட்டும். பிறர்க்கு உதவியாக வாழ்ந்தாலும் போதும். அதையும் அவர்களிடம் காண முடியாது. அச்சுறுத்தி வருத்தி அவர்களிடம் உள்ள பொருளைக் கொள்ள முடியுமே அல்லாமல், தாமாக ஒன்றும் கொடுக்கமாட்டார்கள். கன்னத்தைக் குத்துவதற்காக வளைந்த கையோடு நெருங்குகிறவர்களுக்குத் தவிர மற்றவர்களுக்குத் தாம் உண்ட எச்சில் கையையும் விதிர்க்க மாட்டார்கள். மெலியவர் சென்று தம் குறையைச் சொன்னால் சான்றோர் உதவி செய்வது போல் கயவர் உதவ மாட்டார்கள்; ஆலையில் வைத்துநெருக்கியபோது கரும்பு சாறு உதவுவது போல், வலியவர் வந்து துன்புறுத்தினால்தான்

கயவர் பயன் தருவார்கள். இது மட்டும் அன்று ; பிறர் நன்றாக வாழ்வதைக் கண்டாலும் கயவர் பொறாமை கொள்வார்கள். பிறர் நன்றாக உடுப்பதையும் உண்பதையும் கண்டாலும், அவர்களின்மேல் இல்லாத குற்றங்களை எல்லாம் கண்டு சொல்லித் தூற்ற வல்லவர்கள் கயவர்கள் :

**ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்**
**கூன்கையர் அல்லா தவர்க்கு. (1077)**

**சொல்லப் பயன்படுவர் சான்றோர் ; கரும்புபோல்**
**கொல்லப் பயன்படும் கீழ். (1078)**

**உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்**
**வடுக்காண வற்றாகும் கீழ். (1079)**

பொது வாழ்க்கையில் ஈடுபடுகின்றவர்களுக்குக் கொள்கை வேண்டும் ; உரிமையுணர்வு வேண்டும். கயவர்களுக்கோ இரண்டும் இல்லை. அதனால் அவர்களை அடிமைப் படுத்த ஒருவரும் முயல வேண்டியதில்லை. ஏதாவது ஒரு துன்பம் வந்துற்றபோது, யாரும் விலை கேட்காமலே அவர்கள் விரைந்து தம்மைத் தாமே பிறர்க்கு விற்றுவிடுவார்கள். இது தவிர வேறு எந்தத் தொழிலுக்கும் அவர்கள் உரியவர்கள் அல்லர் :

**எற்றிற்கு உரியர்கயவர் ? ஒன்று உற்றக்கால்**
**விற்றற்கு உரியர் விரைந்து. (1080)**

இத்தகைய கயவரைத் தனியே பிரித்து ஒதுக்குவது முடியவில்லை. அவர்கள் மக்கள் போலவே வெளித்தோற்றத்தில் காணப்படுவதால் பொதுவாழ்க்கையில் அவர்களை எளிதில் அறிந்து விலக்கிவிட முடியவில்லை ; அவர்கள் உலகில் வாழ்வதால் பொறுப்பற்ற தன்மை, நெறியின்மை



அதிகார மனப்பான்மை, அடிமை மனப்பான்மை, அற்ப ஆசை, பொறாமை, கொள்கையின்மை முதலிய பல மாசுகள் பொதுவாழ்வில் இருக்கின்றன. ஆகையால் பொதுவாழ்விற்கு ஆகாதது கயமை என்று திருவள்ளுவர் கடிகின்றார். அவர்களின் தன்மையை அறிந்து விலக்குவதே பொது வாழ்க்கை சீர் பெறுவதற்கு வழியாகும்.

# 3. அறத்துப்பால்

ஆயிரக்கணக்கான கிளைகளையும் விழுதுகளையும் உடைய ஆல் முதலிய மரங்களைவிட, நுட்பமான உறுப்புகளை உடையனவாய் நூறாயிரக்கணக்காகத் தம் இனத்தைப் பெருக்க வல்லனவாய் உள்ள சிற்றுயிர்களைவிட, இரவும் பகலும் ஓயாது உழைக்கவல்ல எறும்பு முதலியவற்றைவிட, எங்கும் பறந்து சென்று பல நிற மலர் நாடிப் பலவகை மணமும் துய்க்கும் வண்டு முதலியவைகளைவிட, ஐயறிவும் நிரம்பி அழகும் வலிமையும் பெற்றுள்ள பறவைவிலங்குகளை விட, மக்களே வாழ்க்கைச் சிறப்பு உடையவர்கள் இவ்வாறு மக்கள் வாழும் வாழ்க்கைச் சிறப்புற்று நிற்பதற்குக் காரணம் என்ன ? மனம் என்னும் சிறந்த கருவியைப் பெற்று அதைப் பண்படுத்தவும் பயன்படுத்தவும் வல்லவர்களாக அவர்கள் விளங்குவதே காரணமாகும். மக்கள் வாழ்க்கை, மெய் வாய் கண் மூக்கு செவி என்பவற்றின் வாழ்வுமட்டும் அன்று ; இவையுமாய் இவற்றிற்கு அப்பாலுமாய் உணர்ந்து அறிந்து மனத்தால் வாழும் வாழ்க்கையுமாகும். இந்த மனம் பண்படும் இடம் காதல் வாழ்க்கை ; மனம் பயன்படும் இடம் பொது வாழ்க்கை ; மனம் வாழும் இடமே தனி வாழ்க்கை. திருவள்ளுவர் காமத்துப்பாலில் காதல் வாழ்க்கையை விளக்கி, காதல் கொண்டவரிடம் கலந்தும் கரைந்தும் மனம் பண்படும் வகையைக் கூறியுள்ளார் ; பொருட்பாலில் பொது வாழ்க்கையை விளக்கி, அறிவின் வழி இயங்கிப் பொதுக்



கடமையைச் செய்து மனம் பயன்படும் வகையைக் கூறியுள்ளார் ; அறத்துப்பாலில் தனி வாழ்க்கையை விளக்கி அன்பை வளர்த்து அறத்தைப் போற்றி மனத்தூய்மை பெற்று வாழும் வகையைக் கூறியுள்ளார்.

காதல் வாழ்க்கை தொடக்கத்தில் எல்லோரிடத்திலும் ஓரளவு அமைகின்றது ; காதல் கொண்டவர் எல்லோரும் தொடக்கத்தில் ஒருவரோடு ஒருவர் மனம் கலந்து உறவு கொள்கின்றார்கள் ; மனம் கரைந்து நாடுகின்றார்கள். மிக மிகக் கொடியவர்களிடத்தில் தொடக்கத்தில் இந்த நிலையைக் காணலாம். ஆனால், இந்த மனக் கலப்பும் கரைவும் பலரிடம் நீடிப்பதில்லை. பலர் வாழ்க்கை காமமாக மாறுகின்றது ; அல்லது காசு நாட்டத்தால் கெடுகின்றது காரணம் என்ன ? இன்றுள்ள உலக அமைப்பின் தீமையால் மனம் தூய்மை பெறாமையே இதற்குக் காரணமாகும். மனம் பண்படுவதற்கு ஏற்ற வாய்ப்பைப் பெற்றும் பண்படுவதில்லை. வாய்ப்பு வீண்போகின்றது.

பொதுவாழ்க்கைக்கும் தொடக்கத்தில் எல்லோரும் ஓரளவு தகுதி பெற்றிருக்கின்றார்கள் ; தம் உள்ளத்தின் உணர்ச்சியை அடக்கிப் பிறரிடத்திலும் ஒழுங்காகக் கடமையைச் செய்யும் தன்மை எல்லோரிடத்திலும் தொடக்கத்தில் இருக்கின்றது. சிடுசிடுப்புக்காரனும் வெளியூரில் புதிதாகப் பழகுவோரிடத்தில் முகமலர்ந்து பேசுகின்றான் ; அந்த ஊராரின் இயல்பு அறிந்து உடன்பட்டு நடக்கின்றான். ஆத்திரக்காரனும் புதியவரிடத்தில் அமைதியாக ஒழுகுகின்றான் அறிவில்லாதவனும் புதியவரிடத்தில் அறிவுடையவன் போல் எண்ணிப் பேசுகின்றான், சோம்பேறியும் புதிய துறையில் ஊக்க முடையவனாய்க் கடமையை மறக்காமல் செய்கின்றான். தீயொழுக்கம் உடையவனும் தொடக்கத்தில்

பொதுக்கடமையை மேற்கொண்டபோது பொதுமகளிரையும் கள்ளையும் சூதையும் நாடாமல் ஒதுங்குகின்றான். கயவரும் புதிதாகப் பழகும்போது மேன்மக்கள் போல் நடந்துகொள்கின்றார்கள். பொதுவாழ்க்கைக்கு வேண்டிய இந்த இயல்புகள் பலரிடம் நீடித்து நிற்பதில்லை. பழகப் பழக நாளாக ஆக, தீய இயல்புகள் தலையெடுக்கின்றன. அறியாமையும் உட்பகையும் மெல்ல மெல்ல வெளிப்படுகின்றன. பொதுவாழ்க்கைக்குப் பலர் இடையூறு ஆகின்றார்கள், காரணம் என்ன? அறிவுவளராமை ஒரு காரணம். அறிவு வளராத காரணத்தால் மனத்தைச் சென்ற இடத்தில்செல்ல விடாமல் தீமையிலிருந்து காத்து நன்மையில் செலுத்தத் தவறுகின்றார்கள். மற்றொரு காரணம் அறிவு வளர்ச்சி பெற்றபோதிலும், மனம் அடங்கிப் பயன்படாமை ஆகும்; அறிவுகொண்டு மனத்தை ஆள முயன்றாலும் முயற்சி கைகூடுவதில்லை: மனம் தீமையிலேயே சென்று கெடுகின்றது; நன்மையை நாடுவதில்லை. இவ்வாறு அறிவின் ஆட்சியைக் கடந்து மனம் அலைவதற்குக் காரணம் தூய்மை இல்லாக் குறையே ஆகும். மனம் பயன்படுவதற்கு ஏற்ற பொதுவாழ்க்கை வாய்த்தபோதிலும், வாய்ப்பு வீண்போகின்றது. அதனால் திருவள்ளுவர் பொருட்பாலிலும் மனத் தூய்மையை வலியுறுத்தியுள்ளார்.

> பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
> ஆகுதல் மாணார்க்கு அரிது. (823)

என்று நல்ல மனம் உடையவராக விளங்குவதன் சிறப்பைக் கூறியுள்ளார்.

ஆகவே, தூய்மை இல்லையானல், காதல் வாழ்க்கையால் மனம் பண்படுவதும் இல்லை; பொதுவாழ்க்கையில் மனம் பயன்படுவதும் இல்லை. மனம் ஒரு கண்ணாடி; மாசு படியப்



படியக் கண்ணாடி தானும் விளங்குவதில்லை; மற்றப் பொருளையும் விளக்குவதில்லை. மனமும் அத்தகையதே. தூய்மை அற்ற மனம் தானும் பண்படுவதில்லை; பிறர்க்கும் பயன் படுவதில்லை. தூய்மையே, மனத்தின் ஆற்றல் தூய்மை மிக மிக, ஆற்றலும் பெருகும். தூய்மையுள்ள மனமே முழுதும் பண்படும்; முழுதும் பயன்படும்; முழுவாழ்வு வாழும். இந்தத் தூய்மையை விளக்குவதே அறத்துப்பாலில் திருவள்ளுவர் நோக்கம். மனத்தூய்மையே அறத்தின் அடிப்படை என்று அவர் கூறுகின்றார்:

> மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்தறன்;
> ஆகுல நீர பிற. (34)

மனம் தூய்மையானதா இல்லையா என்பது எப்போது தெரிகின்றது? ஒருவன் தன் காதலியோடு உள்ளபோது அது தெரிவதில்லை. அப்போது அவனுடைய மனம் தன்னை இழக்கும் நிலையில் உள்ளது; தன் இன்பம் துன்பம் பெருமை சிறுமை எல்லாவற்றையும் மறந்து காதலியின் இன்பம் துன்பம் முதலியவற்றையே நினைந்து இன்புறுகின்றது, துன்புறுகின்றது; தன்நிலையை இழந்து வேறொருமனத்தின் நிலையை அடைகின்றது. ஆகையால் அப்போது மனத்தின் தூய்மை விளங்குவதில்லை. அவன் ஒரு நாட்டு அமைச்சன் என்று வைத்துக்கொள்வோம். அமைச்சனாகப் பொதுவாழ்வில் பொறுப்பு ஏற்றுக்கடமையைச் செய்யும்போது அவனுடைய அறிவு வழிகாட்ட, மனம் அமைந்துநிற்க, தன் கடமையைச் செய்கின்றான். தன்உள்ளத்தில் உள்ளத்தைப்புறத்தார்க்குப் புலனாகமல் மறைத்து அந்தக் கடமையைச் செய்துமுடிக்க முடியும். உள்ளத்தில் துயர் வருத்திக்கொண்டிருக்கலாம்; புறத்தில் முகமலர்ச்சியோடு கடமையைச் செய்ய முடியும்.

உள்ளத்தில் வெறுப்பு மிகுந்திருக்கலாம்; புறத்தில் பற்றற்றவர் போல் கடமையைச் செய்யலாம், இவ்வாறே மற்ற மன நிலைகளையும் மறைத்துக் கடமையைச் செய்வதில் நடிக்க முடியும். ஆனால், அவன் கடமையை முடித்து வீட்டிற்குச் சென்று ஓய்வு கொள்ளத் தொடங்கியதும், அவனுடைய முகத்தில் அடங்கியிருந்த துயரம் வெளிப்படுவதைக் காணலாம்; ஒதுங்கியிருந்த வெறுப்பும் புலனாவதைக் காணலாம். இவ்வாறே மற்ற மனநிலைகளும் தனிமையில் நன்கு வெளியாகும். பெரிய வீரர்களும் சிறந்த அறிஞர்களும் கொடிய பாவிகளும் பலர் நடுவே இருந்தபோது உள்ளத்தில் உள்ளதை மறைத்து உறுதியோடு விளங்கியதையும், தனியே இருக்க நேர்ந்த போது உள்ளத்தின் போராட்டத்திற்கு ஆளாகிக் கலங்கியதையும் பழைய வரலாறுகளில் காணலாம்; இன்றைய வாழ்க்கையிலும் காணலாம். ஆகவே மனம் தூய்மை பெற்றிருக்கின்றதா இல்லையா என்பதும், அதன் தன்மை இன்னது என்பதும் தனிவாழ்க்கையில் மட்டுமே விளங்கக் காண்கின்றோம்.

இந்தத் தனிவாழ்க்கையையே திருவள்ளுவர் அறத்துப் பாலில் விளக்குகின்றார். அதையும் மனத்தின் ஆராய்ச்சியே நோக்கமாகக்கொண்டு விளக்குகின்றார். காமத்துப்பாலிலும் பொருட்பாலிலும் மனம் உள்ளம் என்னும் சொற்களை எங்கோ ஒவ்வோரிடத்தில் வழங்கும் ஆசிரியர், அறத்துப் பாலில் பலமுறையும் திரும்பத் திரும்ப வழங்குவதைக் காணலாம். அறநெறியில் வாழ்ந்தால் இன்பம் உண்டு என்றும், அறிநெறி தவறினால் துன்பம் உண்டு என்றும், அதனால் மனம் தூய்மைப்பட்டு அறநெறியில் நிற்றலே இன்ப வாழ்க்கைக்கு வழி என்றும் விளக்குகின்றார்.



இன்பம் துன்பம் என்பன என்ன? வாழ்க்கையில் எல்லா உயிர்களும் இன்பத்தை நாடித் துன்பத்தை விலக்குகின்றன. ஆனால் உயிர் இன்பம் அடைந்ததா அல்லது துன்பம் உற்றதா என்பதை எவ்வாறு அறிவது? காதல் வாழ்க்கையால் அறிவதா? பொதுவாழ்க்கையால் அறிவதா? தனிவாழ்க்கையால் அறிவதா?

தன் காதலுக்கு உரிய மற்றொரு மனம் உற்ற இன்பமே தன் இன்பமாகவும், அந்த மனத்தின் துன்பமே தன் துன்பமாகவும் கொள்வதைக் காதல்வாழ்க்கையில் காண்கின்றோம். அங்கே தன் இன்பத்தையும் தன் துன்பத்தையும் மறக்கும் பெற்றியே பெரும்பாலும் காண்கின்றோம். அரசியல் முதலிய பொதுவாழ்க்கையிலோ, தன் இன்பமும் துன்பமும் பிறர்க்குப் புலப்படாதபடி மறைக்கும் பெற்றியே காண்கின்றோம்; அவ்வாறு மறைத்து அறிவின்வழி இயங்கிக் கடமையைச் செய்யும் மனமே அங்குக் காண்பது. காதல் வாழ்க்கையில் தன் இன்ப துன்பத்தை மறக்கும் ஆற்றலும், பொதுவாழ்க்கையில் அவற்றை மறைக்கும் ஆற்றலும் இருப்பதால் தனி வாழ்க்கையிலேயே ஒருவனுடைய மனநிலை விளங்குகின்றது. மனம் பண்படும் இடத்திலும் பயன்படும் இடத்திலும் அதன் உண்மைநிலை புலனாவதில்லை; மனம் வாழும் இடத்திலேயே அதன் நிலைமை விளங்குகின்றது.

உண்பதும் குளிப்பதும் முதலானவை உடம்பைப் பண்படுத்தும் முறைகள். தொழில்செய்து உழைக்கும் உழைப்பே உடம்பைப் பயன்படுத்துவது. உடல்நிலை எப்போது தெளிவாக விளங்குகின்றது? உண்ணும்போதும் குளிக்கும் போதும் விளங்குகின்றதா? இல்லை. உழைக்கும் போதாவது நன்கு விளங்குகின்றதா? இல்லை. ஓய்ந்திருக்கும்போதுதான் உடல் நலம் அல்லது நோய்நிலை நன்கு விளங்குகின்றது.

நெடுந்தொலைவு நடந்து வந்த ஓய்ந்தபோது கால்கள் நடந்த துன்பம் நன்றாகத் தெரிகின்றதே அல்லாமல், நடந்து போய்க்கொண்டிருக்கும் போதும் தெரிவதில்லை ; காலைப் பிடித்தும் தேய்த்தும் நீராட்டும்போது அவ்வளவு தெரிவதில்லை. மனநிலையும் அத்தகையதுதான். காதலிக்காக (அல்லது காதலனுக்காகத்) தன்னை மறந்து உருகும் போது தன் மனநிலை தெளிவாகப் புலப்படுவதில்லை ; அல்லது, அறிவு காட்டும் வழியில் கடமையை ஆற்றிப் பொதுவாழ்க்கையில் உழைக்கும்போதும் புலப்படுவதில்லை ; தனித்திருக்கும்போதுதான்—தனி வாழ்க்கையில் தான்—மனநிலை தெளிவுறுகின்றது ; அப்போதுதான் அது எவ்வளவு மாசு பட்டுள்ளது, அல்லது தூய்மையுற்றிருக்கின்றது என்பது தெளிவாகின்றது.

தனி வாழ்க்கையே இன்று பலர்க்கு இல்லை எனலாம். பரந்த உலகத்தில் ஏதேனும் ஒரு தொழில் நாடிப் பகலெல்லாம் பெரும்பாலும் அதிலே கழித்து, எஞ்சியுள்ளநேரத்தையும் தொழில்தொடர்பானவர்களோடு பழகுவதில் போக்கி வீட்டிற்குத் திரும்பி வந்து உண்டு உறங்குவதாகவே நகரங்களில் பெரும்பாலோரின் வாழ்க்கை அமைந்துள்ளது. நாட்டுப்புறங்களிலும் படிப்படியாக அந்த நிலைமை பரவிவருகின்றது. வீட்டில் ஒரு சிறிது ஓய்வு நேரம் வாய்த்து அமைதியாக இருப்பதனால், மனநிலை விளங்கக் கூடும். ஆனால் வீட்டிற்கு வெளியே காண்பது போன்ற பொருளாதாரச் சிக்கல் அமைந்த வாழ்வே வீட்டிற்குள்ளும் பலருக்கு அமைந்திருக்கின்றது.[2] அவர்கள் வீட்டினுள்ளும் அறத்துப்பாலைக் காணாமல் பொருட்பாலைக் காணவேண்டியயுள்ளது, கருத்து ஒருமைப்பாடு இல்லாத கணவனும் மனைவியுமாக வாழ்வோர் பலர் ; அவர்கள் வாழும் வீட்டில் பொருட்போர் தலைகாட்டு மானல், அது வெளியுலகத்தைவிடக் கடுமையாக இருக்கும்



அன்றோ ? அங்கே மனம் வாழ்வதற்கு இடம் ஏது ? மனநிலை விளங்குவதற்கு இடம் ஏது ? வெளியுலக வாழ்க்கைக்கு என்று கொண்ட அறிவும் ஆற்றலுமே அத்தகைய வீட்டு வாழ்க்கைக்கும் வேண்டியிருக்கின்றன ; அங்கே அன்பும் ஆர்வமும் வாழ இடம் இல்லை ; இவ்வாறு வாழ்கின்றவர் களுக்கும் என்றேனும் ஒருநாள் ஒருவேளை தனித்திருக்கும் வாய்ப்பு கிடைக்கும்போது மனம் எழுந்து தன்னை விளக் கிக் கூறும். (சேக்ஸ்பியர் முதலிய கலைஞர்கள் தம் கற்பனை களில் செல்வமும் செல்வாக்கும் உள்ளவர்கள் இவ்வாறு தனித்திருக்கும்போது உள்ளப் போராட்டத்திற்கு ஆளாகி வருந்துவதாக விளக்கியுள்ள பகுதிகளை—தனிநிலைப் பேச்சு (solitoquy) ஆக அமைத்துள்ள பகுதிகளைக்—கற்று உணர் வதால் இது தெளிவாகும்.) இவ்வாறு தனி வாழ்க்கை வாய்த்து உள்ளப் போராட்டத்தை உணர்வோரில் சிலர் திருந்தி நல்லவர்களாகவும் உண்டு ; மனம் மாசடைந்திருப் பதை அப்போது அவர்களே கண்டு வருந்தி மாசு போக்கித் தூய்மை பெறுவதும் உண்டு.

ஆனால் இந்த வாய்ப்பையும் சிலர் இழந்து விடுகின்றார் கள். உள்ளப் போராட்டம் எழும் என்று தெரிந்தவுடனே, புலன்களை மயக்கும் வகையில் ஏதாவது ஒன்றை நாடிச் சென்றுவிடுகின்றார்கள் ; இந்த மயக்கம் வந்து அமைந்தால், மனம் தன் நிலையை விளக்காமல் மயங்கி நிற்கும் ; அதனால் உள்ளப் போராட்டம் எழாதவாறும் மனச்சான்று தன் குற்றத்தை இடித்துச் சொல்லாதவாறும் தடுக்க முடிகின் றது. அந்த மயக்கம் அந்த வேளைக்கு அவர்களுக்கு நன்மை பயப்பதைக் கண்டவுடன், அடுத்த வேளைக்கும் அதையே விடாமல் நாடுகின்றார்கள் ; தனிவாழ்க்கை கிடைத்தபோ தெல்லாம் அதை நாடி நாடி உள்ளப் போராட்டத்திற்கே இடம் இல்லாமல் செய்து கொள்கின்றார்கள்.

அந்த மயக்கம் எது? அதுதான் வரைவின் மகளிரை (பொதுமகளிரை) நாடி அவர்களிடம் மயங்குதல். கள் முதலிய மயக்கப் பொருளை உண்டு அதனால் மயங்குதல், சூதாட்டத்தை நாடிக் கவர்ச்சி பெற்றுமயங்குதல் முதலியன. கருத்து ஒருமித்த மனைவியால் மனத்தூய்மைக்கு வாய்ப்பு அமைவது போலவே, கருத்து ஒருமித்த நண்பராலும் மனத்தூய்மைக்கு வாய்ப்பு அமையும்; ஆனால் அத்தகைய நல்ல நண்பரை நாடினாலும் உள்ளப் போராட்டம் வளரும் என்று அறிந்தே, அவர்களை விட்டுத் தீய நண்பரை நாடி அவர்களோடு சேர்ந்து பொதுமகளிரையும் கள்ளையும் சூதையும் பெற்று மயங்குகின்றார்கள். இவை போலக் கொடியது மற்றென்றும் உண்டு; அதுதான் கெட்ட நாடகம், கெட்டகதை முதலிய தீய கலைப்பகுதி. இத்தகைய தீய கலை, கள்ளைப் போலவும் பொதுமகளிரைப் போலவும் சூதைப் போலவும் பயன்படுவதாகவும்; மனத்தை மயக்கிப் போராட்டம் எழாதபடி தடுக்க வல்லதாகும். அதனால்தான் திருவள்ளுவர் தீய நட்பை விலக்கி நல்லநட்பை விளக்கும் போது நல்ல நூல்போல் பழகப் பழக நன்மை பயக்கும் பண்புடையாளர் தொடர்பு வேண்டும் என்று கூறியுள்ளார். வெறுங் கேளிக்கையில் பொழுது போக்க உதவும் நண்பரால் பயனில்லை; தவறு நேர்ந்தபோது முன்நின்று இடித்துச் சொல்லித் திருத்தும் நண்பரே வேண்டும் என்று திருவள்ளுவர் கூறியுள்ள கருத்தைப் போற்றி, கலையுலகிலும் அத்தகையவற்றையே தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். வெறும் பொழுதுபோக்கும் கேளிக்கையும் பயக்கும் நாடகம் கதை முதலியவற்றை நாடாமல், மனத்தைத் திருத்திச் சீர் செய்ய வல்த நாடகம் கதை முதலிய கலைப் பகுதியையே நாட வேண்டும். இதை உணர்ந்தே, திருவள்ளுவர் கல்வியைப் பற்றிக் கூறத்



தொடங்கியபோதே கற்பவை இவை என்று ஆராய்ந்து கற்கத்தகுந்த நூல்களை மட்டுமே கற்கவேண்டும் என்று அறிவித்துள்ளார். இன்றேல், நூல்களும் மற்றக்கலைகளும் கள் சூது பொதுமகளிர் என்பனபோலவே மனத்தைத் திருத்தாமல் மயங்கிக் கெடுத்துவிடும். உள்ளப் போராட்டம் தோன்றும் காலத்தில் கள்ளையும் சூதையும் பொது மகளிரையும் நாடுவதுபோல் தீய கலையை நாடுகின்றவர்களும் தனி வாழ்க்கையில் மனத் தூய்மைபெறும் வாய்ப்பை இழக்கின்றவர்களே ஆவார்கள்.

அறத்துப்பாலில் ''தன்நெஞ்சே தன்னைச்சுடும்'' என்று நெஞ்சிற்குச் சுடும் ஆற்றல் இருப்பதாகத் திருவள்ளுவர் கூறுகின்றார். இதையே இக்காலத்தில் ''மனச்சான்று வருத்தும்'' என்று கூறுவார்கள், இந்த மனச்சான்று யாரைச் சுடும்? அதன் அறிவுரையைக் கேட்கச் செவி கொடுப்பவர்களையே சுடும். மனச்சான்றே உள்ளப் போராட்டத்தை நிகழ்த்தி வருத்துவது. ஆனால் அது எப்போது போரட்டம் நிகழ்த்தும்? அதற்குத் தனிமையில் வாய்ப்புத் தரும் போதுதான் போராட்டம் நிகழ்த்தும். அதற்கு அத்தகைய வாய்ப்பே தராமல், வேறு வேறு இடங்களை நாடி ஒளிய வல்லவர்களை அது என்ன செய்யும்? கள்ளையோ, சூதையோ, விலைமகளிரையோ, தீய நட்பையோ, தீய கலையையோ நாடி அடைக்கலம் புக வல்லவர்களை அந்த மனச்சான்று என்ன செய்யும்? அவர்களுக்கும் அறத்துப் பாலுக்கும் தொடர்பு குறைவு. அவர்கள் ஒழுக்கம் கெடலாம்; மனச்சான்று வருத்த வரும்போது கள்ளினிடம் அடைக்கலம் புகலாம்; பிறனில் விழையலாம்; அதனால் மனச்சான்று இடித்துரைக்கவந்தால் சூதாட்டத்தை நாடலாம் தீவினை செய்யலாம்; அது காரணமாக மனச்சான்று போராட வரும்போது விலைமகளிரிடம் அடைக்கலம் புகலாம். பொய்

கூறலாம்; அதற்காக மனச்சான்று தன்னைச்சுட வரும்போது தீயநண்பர்களின் கூட்டத்தில் அடைக்கலம் புகலாம்; அப்போது அந்த நண்பர்கள். ''யார்தான் செய்யவில்லை! உலகம் இப்படித்தான், இல்லாவிட்டால் பிழைக்க முடியுமா? சரிதான் போ அய்யா! அதைப்பற்றிக் கவலைப்படாதே'' என்று சொல்லியும் தேற்றலாம்; சொற்களைப் பயன்படுத்தாமல் கள் சூது முதலியவற்றைப் பயன்படுத்தியும் தேற்றலாம். தகாதன என்று உணர்ந்த மற்றக் குற்றங்களையும் செய்யலாம்; மனச்சான்று துன்புறுத்த வரும்போது தீய நாடகம், தீய கதை முதலிய கலைப்பகுதியை நாடி அவற்றினிடம் அடைக்கலம் புகலாம். மனம் ஓய்வின்றி அவற்றில் மயங்கி நிற்கச் செய்து போராட்டத்தை ஒத்தி வைக்கலாம். இவ்வாறே தப்பித்து வாழலாம். ஆகவே இவர்களிடம் அறத்துப்பாலைக் காண்பது எவ்வாறு? கள் முதல் தீய கலை வரையில் உள்ள இவற்றின் மயக்கத்திற்கு ஆளாகாமல் ஒருநாளில் சிறிது நேரமேனும் அமைதியாக இருந்து தன் வாழ்க்கை விளங்க இடமளித்தால் மனச்சான்று எழுந்து போராடுவதைக் காணலாம்; திருவள்ளுவர் கூறியவை அழியாத உண்மைகளே என்பதை அந்நிலையில்தான் காணலாம்.

ஒருவன் உழைக்கும் உழைப்பு அளவோடுபொருந்தியதா அளவுக்கு மீறியதா என்பதை எவ்வாறு அறிவது? வேலை செய்வதால் உடம்பில் உண்டாகும் மாறுதலை உணர்ந்தே அறிய வேண்டும். நோவு தெரியாமல் உடம்பு நல்ல நிலையில் இருந்தால் அளவொடு பொருந்திய உழைப்பு என்று அறியலாம். நோவு தெரிந்தால் அளவுக்கு மீறிய உழைப்பு என்று அறியலாம். ஆனால் உழைப்புக்கு இடையிலும் உழைப்பின் முடிவிலும் கள் குடித்தும் பழகுவோர்க்கு நோவு தெரிவது உண்டோ? கள் மயக்கத்தில் தெரிவதில்லை. நோவு தெரியத் தொடங்கினால் உடனே குடிக்கத் தொடங்கிக் கள்மயக்கத்தில் நோவு தெரியாமல் செய்துகொள்கின்றார்கள். இவர்கள் தம் உடல் நலத்தை அறிந்துகொள்வதற்கு உரிய வாய்ப்பு ஏது? கள்குடிக்காமல் ஒருநாள் முழுவதும் இருந்தால் அன்று அறிவார்கள். ஆனால் அன்றும் கள்ளை நினைத்து ஏங்குவார்களே அல்லாமல், உடல்நலத்தைக் காக்க விழைவதில்லை. உலகத்தில் மனச்சான்றின் போராட்டத்தைத் தடுக்க முயல்கின்றவர்களும் இவ்வாறே வாழ்கின்றார்கள். அவர்கள் அறத்தைப்பற்றி எண்ணுவதில்லை. ஒருகால் ஓய்வு வாய்த்து ஒதுங்கியிருக்கும்போது, போராட்டம் எழுந்தாலும், அதைப் பொருட்படுத்தித் திருந்த முயலாமல், கள் சூது தீய கலை முதலியவற்றை நாடி அலைகின்றார்கள்; அவற்றை நினைத்து ஏங்குகின்றார்கள்; அளவுக்கு மீறிய உழைப்பு உள்ளவர்கள் கள்ளால் நோவை அடக்க முயன்றாலும், அது அழியாமல் உள்ளுக்குள் இருந்து ஒருநாள் வெளிப்படுவது போல் பொய்யரும் மற்றோரும் மனச்சான்றைப் பல வகையாலும் அடக்க முயன்றாலும் அதுவும் உள்ளே அடங்கியிருந்து வாய்ப்பு கிடைத்தபோது எழுந்து அலைந்து அல்லல் படுத்தும். எவ்வளவு பெரிய குடிகாரனும் உடலின் இயற்கையை அடியோடு மாற்ற முடியாது; எவ்வளவு கொடிய பாவியும் மனச்சான்றை அடியோடு அடக்கிவிட முடியாது.

தலைவலி வரும்போது. 'அதற்குக் காரணம் என்ன? கண்ணுக்கு உழைப்பு மிகுதியா? அல்லது கண் மெலிந்து விட்டதா? நீர்க்கோவையா?' என்று ஆராய்ந்து நாளைக்கு வராமலிருப்பதற்கு உரிய வழி செய்து திருத்திக் காத்துக் கொள்வது கடமை. ஆனால், வந்தவுடனே, அல்லது வரு முன்பே, தலைவலித் தைலத்தை இட்டுத் தடவி நரம்புகளை

மயக்கிவைத்திருக்கலாம். இதனால் தலைவலி தெரியாமல் தப்பித்துக்கொள்ளலாம். ஆனால் நரம்புகளின் இயற்கையை அடியோடு மாற்றிவிட முடியாது. எல்லாத் தீமையும் ஒருங்கு சேர்ந்து தீராத் தலைவலியாகவோ, கண்ணின் கேடாகவோ, நரம்புத்தளர்ச்சியாகவோ, வேறு நோயாகவோ முடிந்துவிடும். "இவ்வாறே மற்ற நோய்களைப் பற்றியும் வந்தபோது ஆராய்ந்து, வராமல்இருக்க வழிகளைக் கண்டு, உணவு, ஒய்வு பயிற்சி முதலியவற்றால் போக்கிக் கொள்வதோ, அல்லது தக்க மருந்தைத் தேடிக் குறைந்த அளவாகப் பயன்படுத்துவதோ, உடலோம்பு வழியாகும். "மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு" என உடம்பை நெடிது உய்க்குமாறு கூறிய திருவள்ளுவரின் கருத்தும் இதுவே. இதைவிட்டு, எந்த நோயாயினும் வந்த உடனே, அல்லது, வரும் என்று தெரிந்தவுடனே, விரைந்து கேட்கும் மருந்தையோ ஊசியையோ கொண்டு அடக்கி நாடி நரம்புகளை மயக்கித் தப்பித்துக்கொள்ளலாம். ஆனால் நரம்புகளின் இயற்கையை மாற்றுவது முடியுமோ? நெடுங்காலம் அடங்கியிருந்த இயற்கை ஒருநாள் தீரா நோயாகவோ, மாரடைப்பு முதலிய திடீர் நோயாகவோ வெளிப்படும்; மருத்துவரின் அறிவுக்கு எட்டாததாய், காரணம் காணமுடியாததாய் அவர்களுடைய உதவி எள்ளளவும் பயன்படாததான நெருக்கடியை உண்டாக்கி அழிவை விளைவித்துவிடும். மனச்சான்றும் இத்தகையது தான். கள்ளாலும் சூதாலும் விலைமகளிராலும் தீய நட்பாலும் தீய கலையாலும் பல நாள் அடங்கியிருந்த மனச்சான்று ஒருநாள் பெரும் போராட்டத்தை எழுப்பி அலைத்துச் சுடும்; அன்று எதனுடைய மயக்கமும் பயன்படாமல் போகும்; தற்கொலையோ பிற அழிவோ வந்து நேரும்; அடக்குமுறை வீழ, 'அறம் வெல்லும்.



இவ்வாறு ஆராய்ந்தால், அறம் இன்பம் பயக்கும் என்றும், அறம் கேடு சூழும் என்றும் திருவள்ளுவர் கூறியன யார்யாருக்கு எவ்வெவ்வாறு பொருந்தும் என்பது விளங்கும். மனச்சான்று விளங்கும் வாழ்க்கை உடையவர்களிடத்தில் அறம் அவ்வப்போதே இன்பமும் துன்பமும் பயக்கின்றது; மற்றவர்களிடத்தில்—கள் முதலியவற்றால் மயங்கி வாழ்கின்றவர்களிடத்தில்—அறத்தின் ஆட்சி அவ்வப்போதே தெரிவதில்லை; இறுதியில் தான் தெரிகின்றது. மனச்சான்றை மதித்து வாழ்கின்றவர்களிடத்தில் திருவள்ளுவரின் அறத்துப்பால் கூறுவன எல்லாம் எப்போதும் உண்மையாகத் தெரியும். மற்றவர்களிடத்தில் அவ்வாறு தெரிவதில்லை. தெரியாத காரணத்தால் அறத்தின் ஆட்சி இல்லை என்று உணரக் கூடாது. வெண்ணிற ஆடையில் தான் அழுக்குத் தெரியும். கரித்துணியில் தெரியாது; அதனால் அழுக்கு இல்லை என்றுகூற முடியுமோ? ஒழுக்கம் கெட்டவர்கள், தீமை செய்பவர்கள், பொய்யர்கள் முதலானோர், கள் முதலியவற்றை நாடிக் காலம் கழித்துக் கவலை இல்லாமல் இன்பமாக வாழ்வதாகத் தோன்றலாம். இது தோற்றத்தின் அளவே அன்றி உண்மை அன்று. அவர்கள் கவலை தோன்றாமல் மயங்கி வாழ்கின்றார்கள் என்று கூற வேண்டுமே அல்லாமல், கவலை இல்லாமல் இன்பமாக வாழ்கின்றார்கள் என்று கூற முடியாது இவ்வாறு மயங்கி நிற்பது வேறு; மன அமைதியோடு இன்புற்று வாழ்வது வேறு. மனத்தூய்மை பெற்று அறவோராக வாழ்கின்றவர்களே அமைதியாக இன்புற்று வாழ்கின்றார்கள்; தனி வாழ்க்கையில் அவர்கள் அமைதியையும் இன்பத்தையும் காண்கின்றார்கள், மற்றவர்கள் தனிவாழ்க்கையில் அலைவையும் அல்லலையும் காணநேருமே என்று அஞ்சி அதற்கு இடம் கொடுக்காமல் தப்பி நிற்கவே எந்நேரமும் முயல்கின்றார்கள்.

புறத்தோற்றத்தைக் கண்டு ஒருவர் இன்பமாக வாழ்கின்றார் என்று கூறல் தவறு. அவருடைய நெஞ்ச நிலையை ஆராய்ந்தால் உண்மை விளங்கும். மாட மாளிகையிலே வாழ்ந்து அறுசுவை உணவு உண்பவர்களின் மனம் ஓயாமல் அலைந்து துன்புறுவதும் உண்டு. குடிசையிலே இருந்து கூழ் குடித்துக் காலம் கழிப்பவர்களின் நெஞ்சம் அமைதியாக இன்புறுவதும் உண்டு. எல்லாம் பெற்றுச் சீரும் சிறப்புமாக வாழ்கின்றவர்கள் தம் உள்ளத்தில் ஏங்கிக் கவலையுறுவதும் உண்டு. ஒன்றும் இல்லாமல் வாடுகின்றவர்களும் மனநிறைவோடு கவலையில்லாமல் இருப்பதும் உண்டு. ஆற்றலும் துணையும் மிக்கவர்கள் கண்ணீர் விட்டுக் கலங்கிச் சாவதும் உண்டு. திக்கற்று மெலிந்தவர்கள் உள்ளத்தில் அஞ்சாமை கொண்டு வீராய் வாழ்வதும் உண்டு. வான் போல் உயர்ந்த தவ வேடம் புறத்தோற்றமாய் விளங்கினாலும், தன் மனச்சான்று உள்ளிருந்து குற்றத்தை எடுத்துக்காட்டி வருத்துவது உண்டு என்று திருவள்ளுவர் கூறுகின்றார் :

**வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்**
**தானறி குற்றப் படின் ? (272)**

ஆகையால் புறத்தோற்றத்தைக் கண்டு ஒருவருடைய வாழ்க்கை இன்பமானதா துன்பமானதா என்று கூற முடியாது. உடல்சூட்டை அளந்து அறிவிக்கும் கருவி போல் நெஞ்சநிலைமை அளக்கும் கருவி ஒன்று இருந்தால் எளிதில் அளந்து காண முடியும். ஆனால் அத்தகைய கருவி இல்லை. அதற்கு ஈடாக, நெஞ்சத்தை அளந்து காணும் வாய்ப்பு நிலைகள் மூன்று உள்ளன.

ஒன்று, கருத்து ஒருமித்த மனைவி அல்லது நண்பனிடத்தில் பழகும்போது, அந்த மனைவியோ நண்பனோ மனச்



சான்றை மதித்து நடக்கும் பண்புடன் இருந்தால், நெஞ்ச நிலை விளங்கும்.

மற்றொன்று, கனவில் நெஞ்ச நிலையை உள்ளவாறு தெரிந்துகொள்ள முடியும் ; உள்ளத்தில் துன்பம் உறுகின்றவன் துன்பக் கனவும், இன்பம் உறுகின்றவன் இன்பக் கனவும், அமைதி உறுகின்றவன் அமைதிக் கனவும், அஞ்சி நடுங்குகின்றவன் அச்சக் கனவுமே காண முடியும்.

மூன்றாவது, கள் முதல் தீய கலை வரையில் உள்ளவற்றுள் ஒன்றையும் நாடி மயங்காமல் தனியே இருக்கும் போது, மனச்சான்றே வந்து நின்று நெஞ்ச நிலையைத் தெளிவாக உணர்த்திவிடும்.

இந்த மூன்று வாய்ப்புகளில் ஏதேனும் ஒன்றைப் பயன்படுத்திக்கொண்டால், அறம் என்பது வாழ்க்கைச் சட்டம் என்பதும், அதன் வழியில் நின்று வாழ்வதே இன்ப வாழ்வு என்பதும், மீறினால் துன்பம் உறும் என்பதும், கள் முதலியவற்றின் துணையால் தப்பி ஒளிவதும் நெடுங்காலம் முடியாது என்பதும் தெளிவாக விளங்கும். அப்போது தான் திருவள்ளுவரின் அறத்துப்பாலில் உள்ள ஒவ்வொரு குறள் மொழியையும் வாழ்க்கையோடு பொருந்தக்கண்டு அனுபவமாகப் பொருள் உணரமுடியும். அவை அனைத்தும் உண்மையான வாழ்க்கைச் சட்டங்கள் என்பதையும் உணர முடியும்.

### கடவுள் வாழ்த்து

உலகம் எவ்வாறு இயங்குகின்றது என்பதையும், உடல் எவ்வாறு வாழ்கின்றது என்பதையும், உயிர் எவ்வாறு உணர்கின்றது என்பதையும் எண்ண எண்ண, இவை எல்லாவற்றிற்கும் அடிப்படையாக ஒரு மெய்ப்பொருள் இருக்க வேண்டும் என்பதும், அதுவே எல்லாவற்றிலும்

கலந்து நின்று எல்லாவற்றையும் இயக்குகின்றது என்பதும் தெளிவாகும். அதை விளக்குவதற்குப் பல உவமைகள் தேட லாம். அவற்றுள் சிறந்தது அகரமாகிய முதல் ஒலிக்கும் மற்ற ஒலிகளுக்கும் உள்ள தொடர்பு. 'அ' என்ற ஒலி, வாயைச் சிறிது திறந்தவுடன் இயல்பாகப் பிறக்கின்றது. அதற்குப் பிறகு மூச்சை இயக்கும் வகையாலும் நா இதழ் முதலியவற்றைப் பலவாறு மாற்றி அமைப்பதாலும் ஆ, இ, க முதலிய பல ஒலிகளும் பிறக்கின்றன. இவற்றின் தொடக் கத்தில் அடிப்படையாக அகர ஒலி இருப்பதோடு அல்லாமல், அது இவற்றில் எல்லாம் கலந்தும் நிற்கின்றது. கடவுளுக்கும் உலகத்திற்கும் உள்ள இயைபும் இத்தகையதே ஆகும். உலகம் கடவுளையே முதலாகக் கொண்டிருக்கின்றது :

**அகர முதல எழுத்தெல்லாம் ; ஆதி**
**பகவன் முதற்றே உலகு. (1)**

நூல்கள் பலவற்றைக் கற்கக் கற்க, கடவுளின் தன் மையை உணர்ந்து வழிபடும் உணர்வு பெற வேண்டும். அறிவு பெறப் பெற, அறிவின் தூய்மையை எட்டி உணர் வதே சிறந்த பயனாகும். தூய அறிவு வடிவானவன் இறை வன் ; அவனுடைய திருவடிகளைத் தொழாவிட்டால், கற்ற கல்வியால் பயன் இல்லை :

**கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்? (2)**

மக்களின் மனம் சிறந்த ஒரு பொருளைப் பற்றி எண்ணத் தொடங்கினால் அந்தப் பொருளை மக்கள் வடிவில் வைத்தே எண்ண முடியும் ; யாரேனும் ஒரு சான்றோரின் வடிவில் வைத்துத்தான் எண்ண முடியும். புலன்கள் ஐந்தனுள் செவியே வளர்ச்சியால் முற்போக்கு உடையது என்றாலும் ஒலிவடிவாய் எண்ணம் அமைவது அரிது. அதற்கு அடுத்த



கண், மனத்தோடு இயைந்து நின்று எண்ணங்களுக்கு வடிவு கொடுத்து நிலைபெறச் செய்துவரும் ஆற்றல் உடையது. செவி முதலியவை மூளைக்கு வேறாக அமைந்து தொடர்பு பட்டிருக்கின்றன என்றும், கண்நரம்புகள் மூளைநரம்பு அமைந்துள்ளன என்றும், ஒவ்வோர் எண்ணமும் உருவம் பெற்று நிலைபெறுவதற்குக் காரணம் அதுவே என்றும் உடல் நூலார் கூறுகின்றனர். அதனால், அறிவு வடிவான கடவுளை எண்ணத் தொடங்கிய மனமும் சிறந்த உருவம் தேடிக்கொள்கின்றது. இந்த இயல்பை நன்கு உணர்ந்தே திருவள்ளுவர் தொழுதல் என்று குறிக்கும்போது உருவ வழிபாட்டைச் சுட்டி 'நல் தாள், என்று கூறியுள்ளார்.

அன்போடு நினைக்கின்றவர்களின் மனமே இறைவன் விளங்கும் மலர் ஆகின்றது. அந்த மலர்மேல் விளங்கும் இறைவனுடைய சிறந்த திருவடிகளை நினைந்து பொருந்து கின்றவர்கள் (தியானம் செய்கின்றவர்கள்) உலகத்தில் நெடுங்காலம் வாழ்வார்கள். இறைவன் விருப்பு வெறுப்பு அற்றவன் ; அவனுடைய திருவடிகளை நினைந்து பொருந்து கின்றவர்களுக்கு எப்போதும் துன்பம் இல்லை. இறைவ னுடைய புகழே உண்மையான புகழ் ; அந்தப் புகழை விரும்பி வழிபடுகின்றவர்களிடம் மயக்கத்தால் சேரும் இருவினையும் சேராமல் அகலும், இறைவன் ஐம்பொறி களால் வளரும் அா அவற்றவன் ; அவனுடைய உண்மை யான ஒழுக்க நெறியில் நின்றவர்கள் நெடுங்காலம் வாழ்வார் கள். இறைவன் தனக்கு நிகர் இல்லாமல் சிறந்து விளங்கு கின்றவன் ; அவனுடைய திருவடிகளை நினைந்து பொருந்து கின்றவர்களுக்கே மனக்கவலையை மாற்றுவது முடியும். மற்றவர்களுக்கு அது அரிது. இறைவன் அறக் கடலாக உள்ள அருளாளன் ; அவனுடைய திருவடிகளை நினைந்து

பொருந்துகின்றவர்களுக்கே பொருளும் இன்பமும் ஆகிய வாழ்க்கைக் கடல்களை நீந்துவது இயலும் ; மற்றவர்களுக்கு அது இயலாது :

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். (3)

வேண்டுதல்வேண் டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. (4)

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. (5)

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறி நின்றார் நீடுவாழ் வார். (6)

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. (7)

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது. (8)

### வான் சிறப்பு

இயற்கையில் கடவுள் தன்மையைக் கண்டு போற்றுவது உயர்ந்த நெறி. இயற்கையில் அமைந்துள்ள பலவற்றிலும் மழை மிகச் சிறந்தது. நீரெல்லாம் ஆவியாகி மேலே கிளம்பி முகில்களாய்த் திரண்டு இயங்குதலும், பருவம் வந்தவுடன் காற்றின் துணையால் குளிர்ந்து மழையாய்ப் பெய்தலும், மழைநீர் மண்ணில் ஊறியும் பரந்தும் பாய்தலும், ஆறாய்ப் பெருகிக் கிணறு குளமெல்லாம் நிரப்பிக் கடலில் கலத்தலும், மீண்டும் சூரிய வெப்பத்தால் ஆவியாகி முகிலாய்த் திரளுதலும் ஆகியவை இவ்வாறு திரும்பத் திரும்ப நடைபெறுதலால் உலகம் அழியாமலிருத்தலைக் காணக் காண வியப்பு



மிகுகின்றது. உயிர்களும் இவ்வாறே பலவேறு உடல் தாங்கிப் பிறத்தலும் வாழ்தலும் இறத்தலும் மாறி மாறி வருகின்றன என்பதையும் இந்தக் காட்சி நினைவூட்டுகின்றது. இவ்வாறு மாறி மாறி இடைவிடாமல் ஒழுங்கு பெற நிகழும் இயற்கை நிகழ்ச்சிகளை நினைக்க நினைக்க அறிவில் தெளிவு பிறக்கின்றது. உலகவாழ்க்கை இடையறாமல் நடக்க வேண்டிய வகையில் இயற்கையை இயக்கிவரும் ஒரு பெரிய சக்தியை நினைந்து உருகுவதற்கும் இது காரணமாக உள்ளது. மழைக்கு இந்தப் பெருமை மிகுதியாக இருத்தலால் திருவள்ளுவர் இந்த ஒன்றைமட்டும் இங்கே விளக்குகின்றார்.

திருவள்ளுவரின் உள்ளத்தை மழை மிகப் பெரிதும் கவர்ந்திருக்கின்றது. அவர் பலமுறை உவமையாக எடுத்தாண்டிருப்பது மழையே ஆகும். ஒப்புரவாளரின் கைம்மாறு வேண்டாத கடப்பாட்டை எண்ணும்போது "மழைக்கு உலகம் என்ன கைம்மாறு செய்யமுடியும்?" (211) என்று நினைந்து வியக்கின்றார் அறநெறி தவறாமல் ஆளும் தலைவனுடைய செங்கோலை நோக்கிக் குடிமக்கள் வாழ்வார்கள் என்று செங்கோன்மை கூறும்போது, உலகமெல்லாம் மழையை நோக்கி வாழும் சிறப்பை (542) உவமையாகக் கூறுகின்றார். ஆட்சித் தலைவன் அருள் அற்றவனாக உள்ள காரணத்தால் குடிமக்கள் துன்புறுவதை எடுத்துரைக்கும்போதும், மழைத்துளி காணாமல் உலகம் வருந்தும் நிலையைக் கூறி (557) விளக்குகின்றார். பிறர்க்கு உதவியாக வாழும் நல்ல செல்வருக்கு நேரும் வறுமை மழையின் வறட்சி போன்றது (1010) என்று கூறுகின்றார். காதல் கொண்ட மகளிர்க்குப் பிரிந்து மீண்டு வந்த காதலர் செய்யும் தலையளியைக் காதலி நினைக்கும் போது, உயிர் வாழும் மக்களுக்கு மழை பயன் பெருகப் பொழிதலை நினைந்து உருகச் செய்கின்றார் (1192) நாட்டில் நல்ல ஆட்சி உள்ளபோது மழை பொழிந்து உதவும் (545)

என்றும், ஆட்சிமுறை தவறினால் மழை உதவாது (559) என்றும் நம்பும் நம்பிக்கையும் திருவள்ளுவர்க்கு உண்டு. இவ்வாறு மழையின் அருளிலும் சிறப்பிலும் ஈடுபட்ட திருவள்ளுவர், அதுவே நிலம் கடல் மக்களின்மனம் ஆகிய எல்லாம் செழிப்பதற்கும் காரணம், கெடுவதற்கும் காரணம் என்று விளக்குகின்றார்.

மழை மாறாமல் நிற்பதனால் உலகம் இயங்கி வருகின்றது; அதனால் மழை என்பது உலகம் அழியாமல் காக்கும் அமிழ்தம் என்று உணரத்தக்கதாகும். மழை பெய்யாமல் நின்று பொய்த்துவிடுமானால், மிகப் பெரிய நீர்நிலையாகிய கடல் சூழ்ந்த அகன்ற உலகமாக இருந்தும் பசி உள்ளுக்குள் நிலையாக இருந்து உயிர்களை வாட்டும். மழை என்னும் வருவாய் வளம் குன்றிப் போகுமானால், பசி தீர்க்கும் உணவுப் பொருளை விளைக்கும் உழவர்களும் ஏர்கொண்டு நிலத்தை உழ மாட்டார்கள். பெய்யாமல் நின்று கெடுக்க வல்லதும் மழையே ; அவ்வாறு கெட்டவர்களுக்கு உதவியாய் நின்று கெடுத்தது போல் காப்பாற்ற வல்லதும் மழையே ; எல்லாம் மழையின் உதவியைப் பொறுத்து நிற்பனவே. விசும்பிலிருந்து மழைத்துளி வீழ்ந்தால் அல்லாமல், இந்த நிலவுலகத்தில் பசிய புல்லின் தலையையும் காண்பது அரிதாக உள்ளது. மழை இல்லையானால் இவ்வாறு நிலம் பயனற்றுக் கெடுவதுபோலவே, கடலும் பயனற்றுப் போகும். கடல் நீரை ஆவியாக்கிக் குறைத்து மறுபடியும் மேகம் அதற்கே மழைநீராகத் தராவிட்டால், மிகப் பெரிய கடலும் தன் இயல்பு குன்றிவிடும் :

வான்நின்று உலகம் வழங்கி வருதலான்
தான் அமிழ்தம் என்றுணரற் பாற்று. (11)

விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்து
உள்நின்று உடற்றும் பசி. (13)



ஏரின் உழாஅர் உழவர் புயல் என்னும்
வாரி வளங்குன்றிக் கால். (14)

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற்று ஆங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை. (15)

விசும்பின் துளிவீழின் அல்லால்மற்று ஆங்கே
பசும்புல் தலைகாண் பரிது. (16)

நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின். (17)

மழை இல்லையானால் மண்வளம் சுருங்கும் ; நீர்வடிவான கடலின்வளமும் சுருங்கும் ; இவை மட்டும் அல்லாமல், உலகில் வாழும் மக்களின் மனத்தின் வளமும் சுருங்கும். மழை வறண்டால், இந்த உலகத்தில் தேவர்க்காக மக்கள் செய்யும் திருவிழாவும் நடக்காது ; பூசையும் நடக்காது. மக்கள் பிறர்க்கு உதவியாகச் செய்கின்ற தானமும் இருக்காது ; தமக்கு நன்மை நாடிச் செய்கின்ற தவமும் இருக்காது :

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு. (18)

தானம் தவம்இரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்காது எனின் (19)

கடல் வளம்சுரக்கவில்லையே என்று கடலைப்பழிப்பதால் பயன் இல்லை ; மழை பெய்யவில்லையே என்றுதான் வருந்த வேண்டும். நிலம் பயன் தரவில்லையே என்று நிலத்தைப் பழிப்பதால் பயன் இல்லை ; மழைபெய்து நிலத்தைப் பயனுள்ளதாகச் செய்யவில்லையே என்று தான் வருந்த வேண்டும். மக்கள் மனம் பண்படவில்லையே என்று பழிப்பதாலும் பயன் இல்லை ; மழைவளம் பொழிந்து வாழ்க்கையில் உள்ள வறட்சியை—வறுமையைப்—போக்கவில்லையே என்றுதான் வருந்த வேண்டும்.

தென்புலத்தார் தெய்வம் விருந்து சுற்றம் என நான்கு வகையாலும் தன் கடமையைச் செய்து ஐந்தாவதாகத் தன்னையும் காத்துக்கொள்வது இல்வாழ்வான் கடமை (43); ஆனால் தன்னையும் தன் மனைவிமக்களையும் உயிர் போகாமல் காத்துக் கொள்ளக் கால்வயிற்றுக் கஞ்சிக்கே போராடுகின்றவன் எவ்வாறு மற்றக் கடமைகளைச் செய்ய முடியும்?

கணவனுடைய பொருள் வளத்திற்குத் தக்கவாறு மனைவி வாழ்க்கையை நடத்த வேண்டும் (51); ஆனால் பொருள் வளம் என்ற பேச்சிற்கு இடம் இல்லாதவாறு வீட்டில் வறுமை நிலைத்திருக்கும்போது மனைவி எவ்வாறு தன்னையும் காத்துத் தன் கணவனையும் போற்ற முடியும்? வறுமையால் வாடி நைந்து சாகும் துணிவு எளிதில் அமைவதா?

தம் மக்கள் கற்றவரின் கூட்டத்தில் முந்தியிருக்குமாறு அறிவுடையவர்களாகச் செய்வது பெற்றோர் கடமை (67, 68); ஆனால் மக்களின் சிறு கை அளாவுதற்கே கூழ் இல்லாமல் பட்டினியால் வாடும் குடும்பத்தில் அவர்களுடைய பசிப்பிணியைப் போக்குவதற்கே ஏங்கி நிற்கும்போது கல்வியறிவு ஊட்டுவதற்கு வாய்ப்பு ஏது?

அன்புடையவர் தம் எலும்பும் பிறர்க்கு உரியனவாய்ப் பயன்படுமாறு வாழ்வார்கள் (72); ஆனால் உடம்பில் உயிர் வாழ்வதற்கு வேண்டிய அளவு கஞ்சிக்கே நாள்தோறும் போராடிக் காலம் கழிக்கின்றவர்கள் அன்பை வளர்ப்பது எங்கே?

வீட்டில் இருந்து பொருள்களைக் காத்து வாழ்வது விருந்தினரைப் போற்றி உதவுவதற்கே ஆகும் (81); ஆனால் இருக்க வீடும் இல்லாமல், போற்றப் பொருளும் இல்லாமல் கணவனும் மனைவியுமாக வாழ்வோர் செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பது எவ்வாறு?



எல்லோரிடத்திலும் இன்பம் பயக்கும் இன்சொல்லை வழங்கினால் துன்பத்திற்குக் காரணமான வறுமை இல்லாமல் வாழலாம் (94); ஆனால், ''உனக்கு இந்த உலகத்தில் வாழ்வு இல்லை; நீ அழிய வேண்டும்'' என்று சொல்வது போல் உலகமெல்லாம் ஒருவனைப் பட்டினியால் வாட்டும்போது, உலகத்தில் அவன் உள்ளம் குளிர்ந்து வாழ முடியுமோ? உள்ளத்தில் குளிர்ச்சி இல்லாதபோது வாய்ச் சொல்லில் இனிமை ஊறுமோ?

நன்மையே தருவதானாலும் நடுநிலைமை தவறிப் பெறக்கூடிய ஆக்கத்தை ஒழிய விடுவதே அறம் (113); ஆனால் நடுநிலைமை கெட்டுக் கையூட்டு (லஞ்சம்) ஏராளமாகப் பெற்றுச் செல்வம் குவித்து உடம்பெல்லாம் பட்டும் பொன்னுமாய் நிறைந்தபோது அவர்களை அரசாங்கம் தக்கார் என மதித்தலையும், அறிஞர்கள் அவர்களைச் செப்பம் உடையவர்கள் எனப் பாராட்டுதலையும், அவர்களுடைய மக்கள் மேன்மேலும் கல்வி முதலியவை பெற்றுச் சிறப்படைதலையும் கண்டபிறகும், இத்தகைய ஆக்கம் வேண்டா என்று ஒதுக்கி வாழ்தல் யாரால் இயலும்? அறமே உருவாக விளங்கும் சான்றோர் ஒருசிலரால்தான் இயலும். அத்தகைய சான்றோர்க்கு அறத்தின் பெற்றியை எடுத்துரைக்க வேண்டியதே இல்லை. மற்றவர்கள் திருந்துவதற்கு வழி என்ன?

ஒருவன் தன் நெஞ்சில் அழுக்காறு இல்லாத தன்மையை ஒழுக்கமாகப் போற்ற வேண்டும் (151); ஆனால் ஒழுக்க நெறியில் தவறாமல் நின்று நேர்மையான வழியில் உழைக்கும் ஒருவன் வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளையும் பெறாமல் வருந்தும்போது, நேர்மை தவறி அறம் மறந்து உழைப்பே இல்லாமல் வாழ்வோர் எல்லா நலமும் பெற்றுச் சீரும் சிறப்புமாய் வாழ்வதைக் காணின், உள்ளம்

புழுங்காதிருத்தல் எளிதோ? அவனை அழுக்காறு இல்லாமல் வாழச் செய்தல் எவ்வாறு?

நிலையான இன்பத்தை விரும்புகின்றவர்கள் நிலையில்லாத சிறிய இன்பத்தை விரும்பி அறமல்லாத செயல்களைச் செய்ய மாட்டார்கள் (173); ஆனால் அந்தச் சிறிய இன்பத்தையே எட்ட முடியாமல் வாழ்க்கையில் போராடிக்கொண்டிருப்பவர்களுக்கு இந்த அறிவுரையைக் கூற முடியுமோ?

வறுமை காரணமாகவும் பிறர்பொருள் வெளவுதல் கூடாது (174); ஆனால் வறுமையில் செம்மை உடைய சான்றோர்க்குத் தவிர அடுத்த வேளை உணவைப் பற்றி ஏங்கி நிற்பவர்களுக்கு இது பயன்படுமோ?

பிறர்பொருள் வெளவுதலால் நாளைய விளைவு பெருந்துன்பமாக இருக்கும் (177); ஆனால் இன்னறய வாழ்க்கைக்கே எண்ணி எண்ணி ஏங்கி மெலிவோர், நாளைய துன்பத்திற்கு அஞ்சி இன்றைய இன்பத்தைக் கைவிடும் ஆற்றலுடையவராக இருக்க முடியுமோ? பசி வந்தால் பத்தும் பறந்து போகும் நிலையில் உள்ளவர்க்கு இந்த அறத்தை எவ்வாறு அறிவுறுத்துவது?

புறங்கூறிப் பொய்யாக உயிர் வாழ்வதைவிடச் சாதலே அறத்தின் நன்மையைத் தரும் (183); ஆனால் வயிற்று நிலை கடந்து அறிவுநிலை பெற முடியாமல் எண்ணிப் பார்க்கவும் வழி இல்லாமல் வாடுவோர் அறத்தை இழப்பதைவிட உயிரை இழப்பது மேல் என்பதை எவ்வாறு உணர்ந்து துணிவுகொள்ள முடியும்? வாழ்க்கையில் செல்வம் பெற்றுக் குறைவில்லாமல் வாழ்வோரும் போதும் என்று அமையாமல் மேன்மேலும் செல்வம் சேர்க்க எண்ணி அலைந்து அறநெறி தவறுவதைக் கண்ணால் காணும் எளியவர்கள் எவ்வாறு திருந்த முடியும்?



வறுமை தீர்க்க உதவும் என்று எண்ணியும் தீயவை செய்யக்கூடாது (205); ஆனால், மிகப் பலர் தீயவை செய்து செய்து பொருள் திரட்டி வாழ்க்கையில் முன்னேறக் கண்டால், வறியவன் மனமும் கெடும் அன்றோ? நாளை வரும் வறுமையை நினைத்து அஞ்சாமல் இன்றுள்ள வறுமை தீர்தலைக் கண்டு மகிழவே அவன் விழைவான் அல்லனோ?

வறியவர்களுக்கு ஈவதே ஈகை எனத்தகும் (221); ஆனால் அவர்களுக்கு ஈவதால் பொருள் சுருங்கும் என்றும், ஆடம்பரச் செயல்களிலும் நன்கொடை வகைகளிலும் புகழ் தரும் முறைகளிலும் பொருளைச் செலவு செய்வது ஒருவகையில் வாணிகம் போல் அமைந்து மேன்மேலும் பொருளைப் பெருக்க உதவும் என்றும் செல்வர் பலருடைய வாழ்க்கை எடுத்துக்காட்டும்போது, பெரும்பாலோர் மனம் மாறுவது இயல்பே அன்றோ? அவர்களைத் திருத்த வழி என்ன? சேர்த்து உவக்கும் வாழ்வை இன்ப வாழ்வு என்று பலரும் கருதும்போது, சேர்த்து உவக்கும் செல்வரையே கற்றவர் கவி பாடி நிற்கும்போது, எளியவரின் மனம் ஈத்துவக்கும் இன்பத்தை (228) உணர முடியுமோ? பொருளாதாரத் தாழ்வு இல்லாமல் வாழும் ஒருவன் பலரோடு பகுத்துண்டு வாழத்தொடங்கி அதனால் செல்வம் இழந்து வறுமை உற்று ஒருமுறை வீழ்ச்சி அடைந்தால், மீண்டும் தலையெடுக்க முடியாமல் அழிவதைக்கண்ணால் கண்டவர்கள், பகுத்துண்ணும்) வாழ்வு பொருந்தியவனைப் பசிநோய் அணுகாது (227) என்னும் உண்மையை நம்புவார்களோ? பொருளாதார நெருக்கடி ஒருமுறை நேர்ந்தால் இந்த உலகத்தில் தப்பிப் பிழைப்பது அருமை என்னும் நம்பிக்கை அவர்களின் நெஞ்சில் நிலைத்திருக்கும்போது, அறத்திற்கு இடம் ஏது? ஒருவர்க்கும் உதவாமல் உலோபியாச் செல்வம் சேர்த்து இறந்த ஒருவனு

டைய பிணத்தைச் சுற்றி தேவார திருவாசக பிரபந்த நல்லிசைகள் முழங்குதலையும், பலர்க்கும் உதவி உதவி வறுமையுற்றுவாடி இறந்த ஒருவன் பிணம் எடுப்பாரின்றிக் கிடத்தலையும் கண்டால், எளிய மக்கள் மேலுலகம் இல்லை என்றாலும் ஈதலே நன்று (222) என்னும் உண்மையை உணர்வது எவ்வாறு ? வறியவர்க்குக் கொடுக்காமல் பொருளைச் சேர்த்துத் தாமே உண்ணும் வாழ்க்கை பிச்சை எடுப்பதைவிடத் தீயது (229) என்னும் உண்மையை அவர்கள் எவ்வாறு உணர முடியும் ?

பலவகையால் ஆராய்ந்தாலும் அருளே உண்மையாக வாழ்க்கைக்குத் துணையாக நிற்பது (242) ; ஆனால் பணம் ஒன்றே வாழ்க்கைத் துணை என்று நம்பி மயங்கியவரே பலராக உள்ள உலகத்தைத் திருத்த வழி என்ன ? அருளில்லாதவர்கள் வாழ்க்கையில் அழிந்தவர்களே என்றும் ஈடேற முடியாது என்றும் (248) அறநூல் கூறுகின்றது ; ஆனால் வாழ்க்கையில் அருளைப் போற்றிப் பொருளைப் போற்றாமல் வாழ்கின்றவர்கள் என்றும் தலையெடுக்க முடியாமல் சிதைவதைக் கண்டு அஞ்சி, அருளைப் பிற்காலத்தில் கொள்ளலாம் என்று ஒதுக்குகின்றவர்களைத் திருத்துவது எவ்வாறு ?

ஒன்னாரைத் தெறலும் உவந்தாரை ஆக்கலும் (264) பணத்தால் ஆகும் என்றும், வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் (265) பணமே முயன்று சேர்க்கத்தக்கது என்றும், பணம் மிக்கவர்க்கே சிறந்த மருத்துவ நிலையங்களின் உதவியும் தேர்ந்த மருத்துவர்களின் துணையும் உயர்ந்த மருந்துகளின் பயனும் கிடைப்பதால் எமனிடமிருந்து தப்புவதும் (269) அவர்களுக்கே கைகூடும் என்றும் மயங்கியுள்ள பலர்க்கும் தவத்தின் பெருமையை உரைத்துத் திருத்தல் எளிதோ ?



வஞ்ச மனத்தானுடைய பொய்யொழுக்கத்தை அவனுடம்பில் உள்ள ஐந்து பூதங்களும் எள்ளும் 271) ; அவனுடைய உயர்ந்த தோற்றத்தை அவன் நெஞ்சமே மதிக்காமல் குற்றஞ் சாட்டும் (272) ; ஆனால் அந்த ஐந்து பூதங்களும் நெஞ்சமும் தெளியாமல் மயங்கி நிற்கும்படி கள் முதலிய போதைப் பொருள்களாலும் சூது தீய நாடகம் முதலிய போதைப் பொருள்களாலும் மயக்கி, ஒவ்வொரு நாளையும் கழித்துவிடப் பழகிவிட்டவர்களை அறம் உரைத்துத் திருத்துவது எவ்வாறு ?

களவினால் வரும் ஆக்கம் அளவு கடந்து அழியும் (283) ; பயன் விளையும்போது பெருந் துன்பம் தரும் (284) ; ஆனால் சிறு சிறு களவையும் வெளிப்படைக் களவையுமே உலகம் தூற்றித் தண்டிக்கின்றது என்றும், வாணிகம் முதலிய வேறு பெயர்களால் பெருங் களவு மேற்கொள்ளுதல் புகழும் பயனும் தரும் என்றும் உணர்ந்தவர்களைத் திருத்தும் அறவுரை யாது ?

மனத்தில் துன்பமானது என்று அறிந்தவைகளை எவ்வளவு சிறிதாயினும் எப்போதும் யார்க்கும் செய்யாமலிருப்பதே அறம் (317) ; ஆனால் கட்சி முதலிய அமைப்புகளை வளர்த்துச் செல்வாக்குப் பெறுவதற்கு வழி மற்றவர்களுக்குத் துன்பம் செய்து ஒறுத்து அவர்களைத் தலையெடுக்க வொட்டாமல் செய்வதே என்று வரலாற்றில் சான்று கண்டு நாட்டுப்பற்று முதலிய நல்ல பெயர்களைச் சொல்லி மயங்கிப் பிறர்க்குத் தீமை செய்து பழகுவோரைத் திருத்தும் முறை யாது ?

வறுமைக்கே அஞ்சி அஞ்சி வாழ்நாளைக் கழிப்போர் கொலைக்கு அஞ்சிக் கொல்லா அறத்தை மறவாது போற்றுவது (325) எவ்வாறு ? போர், வீரம், நாட்டுப்பற்று, கட்சிப்

பற்று முதலியவற்றின் பெயரால் பெருங் கொலைகள்செய்வதைக் கடமை என்று போற்றுகின்றவர்களைத் திருத்துவது எவ்வாறு ?

செல்வம் நிலைபேறு இல்லாதது ஆகையால் செல்வம் பெற்றபோதே அறச் செயல்களைச் செய்துவிட வேண்டும். (333) என்று அற நூல்கள் கூறும் ; ஆனால் நிதிநிலையம் (பாங்கி) முதலியவை இல்லாத காலம் அது என்றும், காக்கும் முறையும் திறனும் அறிந்து நிதி நிலையும் முதலியவற்றில் வைப்பதால் முப்பது ஆண்டுகள் மட்டும் அல்லாமல் முந்நூறு ஆண்டுகளும் அழியாமல் செல்வத்தைக் காக்க முடியும் என்றும் ; செல்வம் அழியும் என்று பழங்காலத்து மக்கள் கவலையுற்றது போல் இப்போது அறிவுள்ள ஒருவன் சிறிதும் கவலைப்பட வேண்டியதில்லை என்றும் துணிந்துள்ள மனங்களை அறநெறிக்கு ஈர்த்தல் எவ்வாறு ?

தனக்கென்று ஒரு பொருளும் இல்லாதிருத்தலே தவத்திற்கு உரிய இயல்பு என்று (314) அறம் கூறும் ; ஆனால் துறவறமே ஆயினும் அதற்கென்று தனி நிலையமும் சூழலும் அமைத்துச் செல்வம் சேர்ப்பதே சிறப்புறுவதற்கு வழி என்று காணும் காட்சி உள்ளபோது, அவா அற்ற தன்மையே சிறந்த செல்வம் (363) என்னும் உண்மையைப் பலரும் போற்றுமாறு செய்வது இயலுமோ ? இவை எல்லாம் செல்வ வறுமைப் போராட்டத்தினால் நேர்ந்துள்ள கொடிய விளைவுகளாகும். இவை தீர்ந்தாலன்றி ஒழுக்கம் உயர்வது எங்கே ? அறம் செழிப்பது எங்கே ?

அறம் கூறப் புகுந்த திருவள்ளுவர், மக்களின் வாழ்க்கையமைப்பை இவை போல் பலவகையாக எண்ணியுள்ளார். வாழ்க்கையைக் கெடுக்க வல்ல வறுமையின் கொடுமையைப் பலமுறை எண்ணி எண்ணியே கடவுள் வாழ்த்தை அடுத்து வான்சிறப்பைக் கூறியுள்ளார். மழை



இல்லையேல் நிலவளம் சுருங்கும், கடல்வளம் குன்றும், மக்களின் மனவளமும் கெடும் என்று கூறியுள்ளார். பசும் புல் தலைகாணா நிலத்தையும் நீர்மை குன்றிய கடலையும் காணும்போது மழை இல்லையே என்று வருந்துமாறு கூறியிருக்கிறார் ; அவ்வாறே மக்களின் மனவளம் குன்றிய போதும், விழா பூசை தானம் தவம் என்பவை காணாத போதும், மக்களைப் பழித்திடாமல், மழை இல்லையே என்று வருந்துமாறு அறிவுறுத்தியுள்ளார். இதுவே வான் சிறப்பில் அவர் வற்புறுத்தும் கருத்தாகும்.

திருவள்ளுவர் காலத்தில் மழை இல்லையானால் வாழ்வு இல்லை ; இக்காலத்தில் பணம் இல்லையானால் வாழ்வு இல்லை : இதுவே காலத்தால் நேர்ந்துள்ள வேறுபாடு. இந்த வேறுபாடு உணர்ந்தே திருவள்ளுவரின் கருத்தை உணர முற்படவேண்டும். பண்டைக் காலத்தில் நாணய மாற்று அருகியிருந்த நிலைமையால். ஒருநாட்டில் மழைபெய்தபோது நல்லவிளைவு பெருகி, உரியவர்கள் பல பொருளும் பெற்று மகிழ்ந்தார்கள். பொருள் இல்லாமல் இரப்பவர்களுக்கும் கொடுத்து மகிழ்ந்தார்கள், அளவுக்கு மீறி உணவுப் பொருள் குவிந்தாலும், அதை நெடுங்காலம் வைத்துப் போற்ற முடியாத காரணத்தால், வைத்திழக்கும் துன்பமே கண்டார்கள். ஒருவனிடம் பதினாயிரம் கலம் நெல் இருந்து, அவன் அதைச் செல்வம் என்று எண்ணிச் சேர்த்துவைத்தால், இரண்டு ஆண்டுகள் கழிந்த பிறகு நெல் முழுதும் கெட்டு அழிய, அதனால் அவன்மதிப்பும் கெடும். ஆனால் இக்காலத்திலோ, அந்தப் பதினாயிரம் கலம் நெல்லையும் விற்றுப் பணமாக்கி நிதிநிலையத்தில் சேர்த்து அழியாச் செல்வமாக்கி, அந்தச் செல்வப் பெருக்கால் ஒருவன் தன் மதிப்பை உயர்த்திக்கொள்ள முடியும். பழங்காலத்தில் இதற்கு இடம்

இல்லை. இருந்த நல்வழி ஒன்றே ; அதாவது, பதினாயிரம் காலம் நெல்லும் இரண்டாண்டில் அழியுமே என்பதைத் தெளிந்து, அழிவதற்கு முன்னரே பசித்தவர்களை நாடி அதை அவர்களின் வயிற்றிற்கு உணவாக்கி உதவி செய்வதே அப்போது இருந்த வழி. ஒருவன் அக்காலத்தில் தன் மதிப்பை உயர்த்திக்கொள்வதற்கும் இதுவே வழியாக இருந்தது. அதனால் திருவள்ளுவர் வறியவர்களின் கடும்பசியைத் தீர்ப்பது அறம் என்றும், பொருள் பெற்றவன் சேமித்துப் பயனடையும் வழி அதுவே என்றும் விளக்கியுள்ளார்.

**அற்றார் அழிபசி தீர்த்தல் ; அஃதொருவன்**
**பெற்றான் பொருள்வைப் புழி. (226)**

ஆகையால் அக்காலத்தில் பொருளுடையவர்கள் இல்லாதவர்களுக்கு ஈத்துவக்கும் இன்பத்தையே நாடினார்கள். ஒரு கோடி உடையவர், நூறு கோடி உடையவர் என்று மதிப்பை உயர்த்திக்கொள்ளுமாறு சேர்த்துவைக்கும் இன்பம் அவர்களுக்கு இல்லை. மழைவளம் இருந்தால் எல்லோருக்கும் உணவு உண்டு என்றும், வாழ்க்கைக்குக் குறைவு இல்லை என்றும் வறியவர்களும் நம்பி வாழ்ந்த காலம் அது. அதனால் மழை இல்லாத குறை ஒன்றே அக்காலத்தில் மக்கள் எல்லோரையும் தாக்கித் துன்புறுத்திவந்தது. ஆகவே, எல்லோருடைய வாழ்க்கைப் போராட்டமும் மழையை ஒட்டிப் பொதுவாக இருந்துவந்தது. வாழ்க்கைத் தேவைகளும் மிகக் குறைவாகவே இருந்தன. உணவிற்கு அடுத்தபடி உடை வீடு முதலிய சில தேவைகளே இருந்தன. இக்காலத்தில் தேவைகள் பெருகிவிட்டன. ஒருவன் பெறும் வருவாயில் சிறுபங்கையே உணவுக்காகச் செலவு செய்து மற்றப் பல தேவைகளை நாடிநிற்கும் காலம் இது. நாடு முழுவதும் மழை பெய்தாலும், நிலமுடையவர்களிடமே உணவுப் பொருள் குவிகின்றது.



பொருள் குவிகின்றது. அவர்களும் வணிகரிடத்தில் விற்றுப் பணமாக்கி வைத்துக் கொள்கின்றார்கள் ; நிதிநிலையம் முதலியவற்றால் பணத்திற்கு நெடுங்காலம் நிலைபெறும் வாழ்வு வாய்த்துள்ளது. ஆகவே, நாட்டின் மழைபெய்யும் காலத்திலும் ஒரு சிலரே அதன் நன்மையைப் பெற முடிகின்றது; மழை பெய்யாக் காலத்திலும் பணம்மிகுந்த சிலர் வெளிநாடுகளிலிருந்து மிகுந்த விலை கொடுத்தேனும் உணவுப்பொருள் பெற்று மழையில்லாத் துன்பம் தம்மை மட்டும் தாக்காதபடி காத்துக்கொள்ள முடிகின்றது. பணம் இல்லாதவர்களோ மழை பெய்யும் காலத்திலும் உணவுப் பொருளை விலை கொடுத்து வாங்க முடியாமல் வருந்துகின்றார்கள் ; பெய்யாக் காலத்திலும் விலை மிக்க உணவுப் பொருளை வாங்காமல் வாடுகின்றார்கள் ; அரசாங்கம் செய்யும் சிறு உதவியை எதிர்பார்த்து ஏங்குவதிலேயே நாட்களைக் கழிக்கின்றார்கள். இந்த நிலைமையை ஆராய்ந்தால்; திருவள்ளுவர் காலத்தில்மழையே பொதுவாக மக்கள் வாழ்க்கையை எடுத்தும் கெடுத்தும் வந்தது என்பதும், இப்போது பணம் தனித்தனியாக மக்கள் வாழ்க்கையை எடுத்தும் கெடுத்தும் வருகின்றது என்பது தெளிவாகும். அக்காலத்தில் வாழ்க்கைப் போர் பொதுவாக இருந்தது. உலகிற்குப் பொதுவாகப் பெய்யும் மழையே காரணமாக இருந்தது. இக்காலத்து வாழ்க்கை போர் பெரும்பான்மையான மக்களுடையதாக இருந்தாலும் தனித்தனியாக அமைந்திருக்கின்றது ; சிலரிடமே குவியும் பணம் காரணமாக இருக்கின்றது. இப்போது திருவள்ளுவர் வாழ்ந்து வாழ்க்கையை விளக்குவாரானால் பணமே மக்களின் மனவளத்தை எடுக்கவும் கெடுக்கவும் ஆற்றல் பெற்றிருக்கின்றது என்பதையும், பணப்போராட்டத்தால் அறநெறியை மறந்தவர்களைப் பழித்துப்பயனில்லை என்பதையும்

தெளிவாக்கியிருப்பார். அவர் வாழ்ந்த காலத்திற்கு ஏற்ப, நிலம், கடல், மனம் எல்லாவற்றையும் கெடுக்கவும் எடுக்கவும் மழை ஆற்றல் பெற்றிருத்தலையும், மழை இல்லாமையால் வறுமை மிகுந்து வாழ்க்கைப் போராட்டத்தில் சிக்குண்டு மக்கள் வருந்தும்போது ஒழுக்கத்திற்கு இடம் இல்லை என்பதையும் விளக்கிக் கூறுகின்றார். உலக வாழ்க்கை மழை நீர் இல்லாமல் அமையாது ஆகையால், எப்படிப்பட்டவர் களுக்கும் மழை இல்லாமல் ஒழுக்கம் அமையாது என்கின்றார்:

**நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்**
**வான்இன்று அமையாது ஒழுக்கு. (20)**

யார்யார்க்கும் என்று கூறும்போது, வாழ்க்கைப் போராட்டம் யாரையும் விடாது என்பதை நினைவூட்டி, அதனால் தான் ஒழுக்கத்தைக் கைவிடும் நிலைமை நேர்கின்றது என்பதையும் புலப்படுத்தி, அவ்வாறு போராட்டத்திற்கு இரையாகி ஒழுக்கத்தைக் கைவிட்டவர்களைப் பழிக்காமல் இரக்கம் கொள்ள வேண்டும் என்ற கருத்தும் தோன்ற வைத்துள்ளார். இத்தகைய போராட்டத்திற்கு என்றென்றும் இரையாகாமல் காத்துக்கொள்ள வல்லவர்கள் சிலர் உண்டு என்றும், அவர்களே ஒழுக்கத்தில் நிலைபெற்ற சான்றோர் என்றும் தொடர்ந்தாற் போல் அறிவுறுத்தி, 'ஒழுக்கத்து நீத்தார் பெருமை' கூறத் தொடங்குகின்றார்.

## நீத்தார் பெருமை

உலகத்தில் உள்ள வாழ்க்கைப் போராட்டத்தைப் பொருட்படுத்தாத தெளிவும் துணிவும் உடையவர்களே அறநெறி தவறாமல் வாழமுடியும். அவர்களே ஒழுக்கத்தைப்



போற்ற முடியும். ஒழுக்கத்தில் நிலைத்து நின்று பற்றுவிட்டவர்களின் பெருமையை மேன்மையாகப் போற்றுவது நூல்களின் துணிவாகும். நன்மை தீமை அறிவு அறியாமை உயர்வு தாழ்வு பிறப்பு இறப்பு முதலாக இரண்டிரண்டாக வரும் வாழ்க்கைக் கூறுகளை ஆராய்ந்து இத்தகைய வாழ்க்கையிலேயே அறத்தை மேற்கொண்டவர்களின் பெருமையே உலகத்தில் உயர்ந்தது. அறிவின் திண்மை என்னும் அங்குசத்தால் ஐம்பொறிகளாகிய யானைகளைக் காக்க வல்ல புலனடக்கம் உடையவன் மேன்மையாகிய முத்திவாழ்விற்கு ஒரு வித்து ஆவான். (அவன் கவலையற்ற இன்ப வாழ்விற்கு உரியவன் ஆவான்) :

**ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும் பனுவல் துணிவு. (21)**

**இருமை வகைதெரிந்து ஈண்டு அறம் பூண்டார்**
**பெருமை பிறங்கிற்று உலகு. (23)**

**உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்**
**வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து. (24)**

புலனடக்கம் உடையவர்களே செய்வதற்கு அரிய செயல்களைச் செய்து வாழ்வார்கள் ; அவர்களே பெரியோர். புலனடக்கம் இல்லாதவர்கள் புலன்ஈர்க்கும் வழியில் சென்று அலைந்து ஆற்றலை இழப்பதால், அரிய செயல்களைச் செய்ய மாட்டார்கள் ; அவர்கள் சிறியோர் :

**செயற்கரிய செய்வார் பெரியார் ; சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார். (26)**

உலகம் என்பது என்ன என்று பூதங்கள் ஐந்தையும் அவற்றின் கூறுபாடுகளையும் ஆராய்ந்து தத்துவஆராய்ச்சி செய்ய வேண்டும். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று

ஐவகையாகவே உலகம் உணரப்படுதலால் அவைகளே உல அனுபவத்திற்குக் காரணம் என்று அவற்றின் வகைகளை ஆராய்கின்றவனுடைய அறிவில் உலகம் அடங்கும் :

**சுவைஒளி ஊறோசை நாற்றமென்று ஐந்தின்**
**வகைதெரிவான் கட்டே உலகு. (27)**

புலனடக்கமும் தத்துவ ஆராய்ச்சியும் உடையவர்கள் நல்ல பண்புகள் எல்லாம் நிறைந்து வாழ்வார்கள் ; குணம் என்னும் மலையின் உச்சியில் நின்றவர்கள் இவர்கள் ; தீய பண்பு ஒன்றும் சிறிது நேரமும் இவர்களிடம் காண முடியாதபடி அவ்வளவு தூய்மை பெற்று விளங்குவார்கள். தடுப்பதற்கு அரிதாகிய வெகுளியும் இவர்களிடத்தில் வராது. ஏதேனும் ஒரு காரணம் பற்றி வேண்டுமென்றே சினத்தை மேற்கொள்வதானாலும் ஒரு கணநேரமும் அதைத் தம்மிடம் வைத்துக் காத்தல் அவர்களுக்கு அரிதாகும் :

**குணம்என்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது. (29)**

மற்ற எல்லாக் குற்றங்களையும் அடியோடு விலக்கிக் கடிந்த திருவள்ளுவர், சினத்தைத் தடுப்பது அருமை என்றும், சில வேளையில் தடுக்க முடியாதபடி தோன்றிவிடும் என்றும் உணர்ந்தே, அவ்வேளையிலும் கூடுமானால் சினம் கொள்ளா திருப்பது நல்லது (புணரின் வெகுளாமை நன்று 308) என்று உணர்த்தியுள்ளார். கூடுமானால் (புணரின்) என்று விலக்கு அளிப்பது போல் கூறத்தக்க அருமைப் பாடு உடைய அந்த நற்பண்பும் இவர்களுக்கு எளிதாய் இயல்பாய் அமைந்துவிடும் என்று இங்கே கூறுகின்றார்.

பண்பிற் சிறந்தவர்களாக வாழும் இவர்களுக்கு அறியாமையும் பற்றும் நீங்குமே அல்லாமல் அன்பும் அருளும்



குறைவதில்லை. எல்லா உயிர்களிடத்திலும் செம்மையான அருள்கொண்டு ஒழுகுவதால், அந்தணர் என்று சொல்லப் படும் இவர்கள் அறவோர் ஆவார்கள் :

அந்தணர் என்போர் அறவோர்மற்று எவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான். (30)

## அறன் வலியுறுத்தல்

அறமே வாழ்க்கைக்கு வேண்டிய சிறப்பையும் தரும் ; செல்வத்தையும் தரும் ; ஆகையால் அறத்தைவிட உயிர்க்கு ஆக்கமானது வேறு எது ? அறத்தைவிட ஆக்கமும் இல்லை ; அதை மறந்து கைவிடுவதைவிடக் கெடுதியும் இல்லை. ஆகையால் அறச் செயல்களை இயலும் வகையால் ஓயாமல் செய்ய வேண்டும் ; செய்யத்தக்க வழியில் எல்லாம் செய்ய வேண்டும் ;

**சிறப்பீனும் ; செல்வமும் ஈனும் ; அறத்தினூஉங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு ? (31)**

**அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை ; அதனை**
**மறத்தலி னூங்கில்லை கேடு (32)**

**ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
**செல்லும்வாய் எல்லாம் செயல். (33)**

அறம் என்பது யாது ? செயலா ? சொல்லா ? எண்ணமா ? மூன்றுமே ஆகும். மூன்றனுள்ளும் செயலுக்கும் சொல்லுக்கும் எண்ணமே அடிப்படை ஆகையால், எண்ணத்தில் தூய்மையே முதன்மையானது. ஆகையால் மனத்தில் மாசு இல்லாத தன்மை பெற வேண்டும் ; அறம் அவ்வளவே ; மனமாசு நீங்காமல் செய்யும் செயலும், சொல்லும் சொல்லும் வீண் ஆரவாரமானவை ; அவை அறம் அல்ல. பொறாமை, அவா, வெகுளி, இன்னாசொல் இந்த நான்கையும் கடிந்து நடப்பது அறமாகும் ;

மனத்துக்கண் மாசிலன் ஆதல் ; அனைத்தறன் ;
ஆகுல நீர பிற. (34)

அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம். (35)

அறம் செய்வதில் தயக்கமோ காலம் தாழ்த்தலோ ஒத்தி வைத்தலோ கூடாது; "இப்போது இளமைப்பருவம் ஆகையால் அறத்தைப் பற்றிக் கவலை வேண்டா, பிறகு பார்த்துக்கொள்ளலாம்" என்று புறக்கணிக்கக்கூடாது. இளமை முதல் கொண்டே அறம் செய்ய வேண்டும் ; அவ்வாறு செய்யும் அறமே, அழிவு வருங்காலத்தில் அழியாத் துணையாக நின்று காக்கும்.

அன்றறிவாம் என்னாது அறம்செய்க ; மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. (36)

வாழ்க்கையில் அறியாமை காரணமாகக் கொள்ளப்படும் உயர்வு தாழ்வுகளை வைத்து அறத்தை அளந்தறியக்கூடாது. அகத்தே எண்ணும் எண்ணங்களின் தூய்மையாலும் நெஞ்சின் இன்ப துன்ப உணர்வுகளாலும் அறத்தை அறியக் கூடுமே அல்லாமல், புறத்தே உள்ள உயர்வு தாழ்வுகளால் அறிய முடியாது. ஆகையால் பல்லக்கைக் சுமப்பவன் ஊர்பவன் இவர்களிடையில் வைத்து, அவன் அறம் செய்யாத காரணத்தால் சுமக்கின்றான் என்றும், இவன் அறம் செய்த காரணத்தால் ஊர்கின்றான் என்றும் அறத்தின் பயனை அளந்து கூற வேண்டா. சுமப்பவன் இன்புறுகிறான் என்றும். ஊர்பவன் துன்புறுகிறான் என்றும் கூற முடியாது இன்ப துன்ப உணர்வுகளை நெஞ்சநிலையால் அறிய முடியுமே அல்லாமல் இத்தகைய வேறுபாடுகளால் அறிய முடியாது. அரியணைமேலிருந்து அழுது கலங்குவோரும் உண்டு ; எளிய வாழ்வில் அமைதியாக இன்புறுவோரும் உண்டு, வாழ்க்கைக்



கடமைகளில் எது தன்னலம் குறைந்ததாய்ப் பிறர்க்கு நன்மை மிகுந்ததாய் உள்ளதோ அதுவே உயர்ந்தது ; இன்பம் நல்குவது. எது தன்னலம் மிகுந்ததாய்ப் பிறர்க்கு நன்மை குறைந்ததாய் உள்ளதோ அதுவே தாழ்ந்தது ; துன்பம் விளைவிப்பது. ஆகையால் புறத்தோற்றத்தைக் கண்டு அறியாமையால் கற்பிக்கும் உயர்வுதாழ்வுகளைக் கொண்டு அறத்தின் பயனை அளந்தறியக்கூடாது :

அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தா னிடை. (37)

"அறத்தாறு என்பதற்கு அறத்தின் பயன் என்று பொருள் கொண்டு, ஊழைக் கருத்திருத்திப் பல்லக்கைத் தாங்குவோர் தீவினை செய்தோர் என்றும், பல்லக்கில் ஏறிச் செல்வோர் நல்வினை செய்தோர் என்றும் விளக்க உரை கூறுவோர் உளர்—ஊழை உளங்கொண்டு பொருள் கூறுவதில் உயர்வு தாழ்வு தோற்றத்துக்கு இடம் நேரும். அது போராட்டத்தை எழுப்புவதாகும். ஆசிரியர் ஊழில் உறுதி இல்லாதவரல்லர். அவர்க்கு அதன்கண் உறுதி உண்டு. ஊழுக்கெனத் தனி அதிகாரம் ஒன்று அவரால் அருளப்பட்டுள்ளது. ஊழ் இப்பாட்டில் இடம் பெறவில்லை என்பது எனது கருத்து ... ஊழிற் கருத்திருத்தாது, அறத்தாறு என்பதற்கு அறநெறி என்றே நேர்ப்பொருள் கொண்டு, அறநெறி இரு சாரரிடத்தும் பொதுமையாக விளங்குவது என்று விளக்க உரை பகர்வது ஏற்புடையதாகும்" என்றும்,

"பல்லக்கைத் தாங்கிச் செல்வோரும் மனிதரே. அதில் ஏறிச் செல்வோரும் மனிதரே. இருவரும் ஒரு வழியில் பிறந்தவரேயாவர். இருவரும் தொழின் முறையில் ஈடுபட்டவரே ஆவர். அறநெறி தொழிலிடைப் பொதுவாயிலங்குவது. அறநெறி, பல்லக்கைத் தாங்கலில் சுருங்கியும், அதில்

செல்கையில் பெருகியும் நிற்பதோ ? இல்லை. பல்லக்கைச் சுமந்து செல்வோரும் அறநெறி நின்றால் அறவோர் ஆகலாம். பல்லக்கில் ஊர்ந்து செல்வோரும் அறநெறி நின்றால் அறவோர் ஆகலாம். அறவோராகும் வாய்ப்பு இருவர்க்கும் உண்டு. ஒருவர்க்கு மட்டும் அவ்வாய்ப்பில்லை. அறத்தாறு ஒரு சாரார் பக்கம் சாயும் தன்மையுடையதன்று'' என்றும் ஆசிரியர் திரு. வி. க. அவர்கள் திருக்குறள் விரிவுரையில் விளக்குதல் காண்க.

அறம் ஒன்றே மனச்சான்றை மகிழ்விக்கும் ; அந்த மனச்சான்றின் மகிழ்ச்சியே உண்மையான இன்பமாகும். மனச்சான்று ஒருவனைச் சுடும்போது, குற்றம் சாட்டும் போதும், எள்ளி நகைக்கும்போது (293, 272, 271) ஒருவன் கண்ணுக்கும் செவிக்கும் மூக்கிற்கும் நாக்கிற்கும் உடம்பிற்கும் இன்பமாக என்னென்ன தேடித் தரினும் அவை இன்பம் நல்கா ; அவற்றால் மனம் அமைதியுறாமல் மேன்மேலும் அலைந்து வருந்திக்கொண்டே இருக்கும். ஆகையால் அறத்தால் வருவதே உண்மை இன்பமாகும் ; மற்றவை எல்லாம் போலி இன்பமாகும் ; புகழும் இல்லாதவையாகும். அதனால் ஒருவன் வாழ்நாளில் செய்யத் தக்கது அறமே ; செய்யாமல் ஒதுக்கத் தக்கது பழியே :

> **அறத்தான் வருவதே இன்பம் ; மற் றெல்லாம்**
> **புறத்த புகழும் இல.** (39)

> செயற்பாலது ஒரும் அறனே ; ஒருவற்கு
> உயற்பாலது ஓரும் பழி. (40)

## இல்வாழ்க்கை

''இல்வாழ்க்கை என்பது காதலர் வாழ்க்கைதானே ? அதைக் காமத்துப்பாலில் கூறியிருக்கும்போது, அறத்துப் பாலிலும் கூறக் காரணம் என்ன ? என்று கேட்கலாம்.



காமத்துப்பாலில் காதலர் ஒருவர்க்காக ஒருவர் தியாகம் செய்து வாழும் வாழ்க்கையைக் காண்கின்றோம். ஆனால் அறத்துப்பாலின் இல்வாழ்க்கையில் காண்பது வேறு ; காதலர் இருவரும் ஒருமனப்பட்டு மக்கள் விருந்தினர் முதலானவர்களுக்காகத் தியாகம் செய்து வாழும் வாழ்க்கையைக் காண்கின்றோம். காமத்துப்பாலில் காண்பது காதலர் ஒருவர் மற்றொருவரிடத்தில் செலுத்தும் அன்பு ; இல்லறத்தில் காண்பது காதலர் இருவரும் தம்மை மறந்து பிறரிடத்தில் செலுத்தும் அன்பு. ஆண் பெண் இருவரின் இருவேறு மனங்கள் ஒன்று மற்றொன்றில் கரைந்துபோகும் தன்மையைக் காமத்துப்பால் கூறுகின்றது ; கணவனும் மனைவியுமாகிய இருவர் ஒருமனம் உடையவராய் உலக நன்மை கருதி வாழும் தன்மையை இல்லறம் காட்டுகின்றது.

இல்லறத்தில் தனிவாழ்க்கை இல்லை என்றும், துறவறத்தில்மட்டுமே தனிவாழ்க்கை உள்ளது என்றும், அந்தத்தனி வாழ்க்கையில் மட்டுமே அறத்திற்கு அடிப்படையான மனத் தூய்மை விளங்கும் என்றும், அதனால் இல்வாழ்க்கை இங்கு வேண்டாதது என்றும் சிலர் கூறலாம். ஆனால் இல்லறம் நடத்தும் கணவனும் மனைவியுமாகிய இருவரும் ஒத்த மனம் உடையவர் ஆதலின், இன்பதுன்ப உணர்வுகளையும் மற்ற மனநிலைகளையும் கணவனோ மனைவியோ மறைத்து வாழும் வாழ்க்கைக்கு இங்கு இடம் இல்லை. தனித்தனியாக வாழும் வாழ்க்கையில் உணரும் உணர்வெல்லாம் இத்தகைய இல்லற வாழ்விலும் உணரலாம். ஒருவர் குறை மற்றொருவர்க்கு நன்கு புலப்படும் ஆகையால், இன்னும் தெளிவாக மனநிலை விளங்க இடம் உண்டு. ஆகையால், மனம் வாழும் நிலையை விளங்க இடம் உண்டு. ஆகையால், மனம் வாழும் நிலையை யும் அதற்கு உரிய அறநெறியையும் தனி வாழ்க்கைவாயிலாக விளக்கவந்த திருவள்ளுவர், முதலில் இல்வாழ்க்கையை விளக்கியுள்ளார் ; பிறகு அதன் சார்பானவைகளையும் விளக்கி

யுள்ளார்; இந்தப் பயிற்சியின் பயனாகப் பரந்த அன்பு அருளாக வளர்ந்து பற்றற்ற வாழ்க்கை வாழ்வதே துறவறம் ஆகையால், அந்தத் தனி வாழ்க்கையையும் அதன் பிறகு விளக்கியுள்ளார். இவற்றை ஆராய்ந்தால், திருவள்ளுவர் அறத்துப்பால் முழுவதிலும் மனத்தின் வாழ்வையே விளக்கி அது தூய்மைப்படுவதற்கு வேண்டிய அறநெறியை அறிவுறுத்து கின்றார் என்பது தெளிவாகும்.

அன்புடன் வாழ்வதே இல்வாழ்க்கையின் பண்பு. அறத்தைப் போற்றி வாழ்வதே இல்வாழ்க்கையின் பயன். அறநெறியில் இல்வாழ்க்கை நடத்தினால் போதும்; வேறு வழியில் போய்ப் பெறத்தக்க பயன் ஒன்றும் இல்லை. அறத்தின் இயல்போடு இல்வாழ்க்கை வாழ்கின்றவனே வாழ முயல் கின்றவர்கள் எல்லோரிலும் தலையானவன்:

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது. (45)**

**அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றின்**
**போஒய்ப் பெறுவது எவன்? (46)**

**இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**
**முயல்வாருள் எல்லாம் தலை. (47)**

இல்லறம் துறவறம் இரண்டிலும் அறம் தவறாமல் வாழ வேண்டும் என்று திருவள்ளுவர் கூறுகின்றார். இல்வாழ்க் கையைப்பற்றிக் கூறும் இங்கு, அறநெறி போற்றி இல்லறம் நடத்த வேண்டும் என்கின்றார். அவ்வாறானால், இருவகை யாகப் பகுத்து ஓதவேண்டிய காரணம் என்ன என்றும், இரண்டும் வேறு வேறாயின் இரண்டில் சிறந்தது எது என்றும் கேட்கலாம்; வாழ்க்கை பொதுவாகத் தொடங்குவது இல்லறத்தில்; முடிவது துறவறத்தில் ஆகும். தன்னையும் காத்துப் பிறரையும் காக்க வல்லது இல்லறம். அதற்கு



உழைத்துப் பொருளீட்டும் ஆற்றலும் பகுத்துண்ணும் திறனும் வேண்டும்; இளமைக்காலமே அதற்கு ஏற்றது. இளமையை இவ்வாறு போக்கியபின் ஆற்றலும் திறனும் குறைந்து முதுமை வந்தபோது முன்போல் பொருளீட்டவும் பகுத்துண்ணவும் முடியாத நிலைமை வரும். அப்போது வாழ்க்கையை மாற்றி அமைத்துக்கொண்டு எல்லாம் துறந்து வாழ நேரும்; இதுவே புறத்துறவு என்பது. ஆதலின் இரண்டில் எது கொள்ளத்தக்கது என்று ஆராய்வதால் பயன் இல்லை. இரண்டில் எது சிறந்தது என்று ஒப்பிட்டுக் காண வேண்டுமானால், எதனால் பிறர்க்குப் பயன் மிகுதி என்று ஆராய வேண்டும். மற்றவர்களையும் நல்வழியில் வாழச் செய்து தானும் அறநெறியிலிருந்து தவறாமல் வாழவல்லது இல்வாழ்க்கை; ஆகையால் தாம் மட்டும் நன்மை அடைவ தற்காகத் தவம் செய்வோரின் வாழ்க்கையைவிடப் பிறர் நலம் கருதிய இல்வாழ்க்கை சிறப்பு உடையது ஆகும்:

**ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை**
**நோற்பாரின் நோன்மை உடைத்து. (48)**

வாழ்க்கைத் துணைநலம்

இல்லறத்திற்குத் தக்க நல்ல பண்பு உடையவளாக இருக்க வேண்டும்; தன்னைத் துணையாகக் கொண்ட கணவனுடைய வருவாய்க்குத் தக்க வாழ்க்கை நடத்தவேண்டும்; அத்தகைய வளே வாழ்க்கைத்துணை. இவ்வாறு இல்லறத்திற்கு ஏற்ற பண்பு மனைவியிடத்தில் இல்லையானால், அந்த இல் வாழ்க்கை வேறு எவ்வளவு சிறப்புப் பெற்றிருந்தாலும் பயன் இல்லை:

**மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. (51)**

மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித்து ஆயினும் இல். (52)

இல்வாழ்க்கைக்குத் துணையாக நிற்பதே அல்லாமல்,
பெண்ணுக்குத் தனிச்சிறப்பும் உண்டு. கற்பு என்னும் உறுதி
உண்டாகப் பெற்றால், பெண்ணைவிடப் பெருமையுடைய
நிலை வேறு இல்லை. பெண்கள் நிறை என்னும் பண்பினால்
தம் நெஞ்சத்தை நெறியில் நிறுத்திக் காத்துக் கொள்ளும்
காப்பு மிகச் சிறந்த முறையாகும், இதை நோக்க, மதில்
முதலியன அமைத்துக் காப்பவர்களின் காவல்முறை பயனற்ற
தாகும். இந்தப் பண்பினால் தன்னையும் காத்துக்கொண்டு,
தன்னைத் துணையாகக் கொண்ட கணவனையும் காத்து ;
இருவரும் ஒரு மனத்தோடு நடத்தும் இல்வாழ்க்கையின் நலம்
நிறைந்த புகழையும் காத்து, சோர்வு இல்லாமல் வாழ்கின்ற
வளே பெண் என்னும் சிறப்பு உடையவள் :

பெண்ணின் பெருந்தக்க யாஉள கற்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்? (54)

சிறைகாக்கும் காப்பெவன் செய்யும்? மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை. (56)

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். (56)

மக்கட் பேறு

இல்வாழ்க்கையில் பெற வேண்டிய பேறுகள் பல உள்
ளன ; அவற்றுள் நல்ல மக்களைப் பெறும் பேறு ஒன்று. அறிய
வேண்டியவற்றை அறிவதற்குரிய மக்களைப் பெறுவது போல்
மற்றப் பேறுகள் அவ்வளவு சிறப்புடையவை அல்ல. பழி இல்
லாத பண்பு உடைய நல்ல மக்களைப் பெற்றால், எழுபிற
வியிலும் அத்தகைய பெற்றோரைத் தீமைகள் அணுகுவ
தில்லை :



பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற. (61)

எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். (62)

இல்வாழ்க்கைக்கு அன்பு வேண்டும் என்றும், அறம்
வேண்டும் என்றும், திருவள்ளுவர் கூறியுள்ளதை இங்கு உணர
வேண்டும். அன்பு அறத்துறைகளில் ஒன்று ஆயினும் தனியே
பிரித்துக் கூறியது, அன்பே அறத்தை வளர்க்கும் ஆற்றல்
உடையது என்னும் உண்மை பற்றியே ஆகும். கணவனும்
மனைவியும் ஒருவர் ஒருவரிடம் கொண்ட காதல் இல்வாழ்க்
கையில் அன்பாய்ப் பாய வேண்டும். அந்த அன்பு முதலில்
பெருகுமிடம் தாம் பெற்று வளர்த்த குழந்தைகளிடமே.
குழந்தைகள் தம் உயிரின் பகுதியாகவும் உடம்பின் பகுதியா
கவும் பிறந்து வளர்வதால், பெற்றோர் இருவரும் குழந்தை
களைத் தம் உயிர்போல் போற்றுகின்றார்கள் ; தம் கண்
போல் போற்றுகின்றார்கள். ஆகையால் தூய அன்பு
பெருகுகின்றது. இந்த அன்புப் பெருக்கத்தைத் திருவள்ளுவர்
அழகாக எடுத்துரைக்கின்றார்.

ஒருவர் கையால் தொட்டதை மற்றொருவர் எடுத்து
உண்ண மனம்வராத நிலை ஒன்று உண்டு. சிறு குழந்தைகள்
புழுதியிலும் சேற்றிலும் விளையாடும்போது கண்டு வெறுப்ப
தும் உண்டு. திருமணம் ஆவதற்கு முன், குழந்தை பெற்று
வளர்க்கும் பேறு வாய்ப்பதற்கு முன், மற்றவர்களுடைய
குழந்தைகள் அவ்வாறு மண்ணில் விளையாடுவதைக் கண்
டால் வெறுக்கும் மனம் பலர்க்கு உண்டு. அந்தக் குழந்தைகள்
புழுதிப்பட்ட கைகளோடு நெருங்கி வந்தால் விலக்கும்
தன்மையும் உண்டு. அந்நிலையில் குழந்தைகள் கையால்
எடுத்துக் கொடுக்கும் பொருளை உண்ணத் தயங்குவதும்

உண்டு. தாம் உண்ணும் உணவில் அந்தக் குழந்தைகள் கை வைக்காதபடி காத்துக்கொள்வதும் உண்டு. அந்தக் குழந்தைகள் பேசும்போது, ''இன்னும் பேச்சு வரவில்லை'' என்றும், ''இன்னும் திருத்தமாகப் பேசத் தெரியவில்லை'' என்றும், ''என்னவயது ஆயிற்று ? இன்னுமா பேச வரவில்லை ?'' என்றும், ஆராய்ச்சி நடத்துவதும் உண்டு. இவ்வளவும் ஒரு நிலை. இவர்களே பெற்றோராகித் தம் குழந்தைகளை வளர்க்கும்போது முற்றிலும் மாறான நிலை காணப்படுகின்றது. மண் பட்ட கையோடு தம் குழந்தைகள் தாம் உண்ணும்போது நெருங்கி வந்தாலும் ஆவலோடு காண்கின்றார்கள் ; நெருங்கி வரவேண்டும் என்று விரும்புகின்றார்கள் ; அந்தச் சிறு கைகளால் தம் உணவைத் தொடுகின்றனவா. பார்க்கலாம் என்று காத்திருக்கின்றார்கள் ; உணவைத் தொட்டுக் கலக்கும்போதும் மகிழ்கின்றார்கள். அப்போது அந்தச் சிறு கைகள் அளாவிய சோற்றை எள்ளளவாவது வெறுக்கின்றார்களா ? தூய்மை கெட்டது என்று ஒதுக்குகின்றார்களா ? இல்லை. வெறுக்கும் நிலைமை எல்லாம் பழங்கனவாகப் போய்விட்டது. இப்போது என்ன செய்கின்றார்கள் ? தம் குழந்தைகளின் பூங்கைகள் அளாவிய அந்தச் சோற்றைக் களிப்போடு எடுத்து உண்கின்றார்கள். அந்த உணவு முன்னிலும் சுவை மிகுந்துவிட்டதாக உணர்கின்றார்கள்; அமிழ்தத்தைவிட மிக இனிமையாக இருப்பதாக உண்டு மகிழ்கின்றார்கள். இவ்வளவுக்கும் காரணம் என்ன ? அந்தச் சிறு கைகள் தம் குழந்தைகளின் கைகள் ; தம் கண் போலவும் தம்உயிர் போலவும் வளரும் குழந்தைகளின் சிறு கைகள் ; குழந்தைகளைத் தம் அன்பின் வடிவாகக் காண்கின்றார்கள் ; அந்தச்சிறு கைகளை அன்பு மலர்களாகக் காண்கின்றார்கள். ஆகையால் அவர்களின் கைபட்ட உணவு அன்பு கலந்து அளாவிய உணவாக இனிமை பயக்கின்றது.



குழந்தைகள் தம் மேல் படிந்து விளையாடும்போதும் அந்த இனிமையை நுகர்கின்றார்கள் ; அந்தக் குழந்தைகளைத் தொடும்போதெல்லாம் அந்த இன்பத்தை உணர்கின்றார்கள். குழந்தைகள் பேசும் மழலைமொழியிலும் அந்த இன்பம் ஊற்றெடுத்துச் செவி வழியாகப் பாய்வதாக உணர்கின்றார்கள். குழலும் யாழும் கேட்டு அவற்றின் இனிய இசையை நுகர்ந்த செவிகள் அவர்களுடைய செவிகள். அதனால் குழந்தை பெற்று வளர்ப்பதற்குமுன், குழலுக்கும் யாழுக்கும் நிகரான இனிய இசை இல்லை என்று எண்ணியிருந்தார்கள். தம் மக்களின் மழலைச் சொல்லைக் கேட்ட பிறகு, அது நிரம்பாச் சொல் என்பதையும் மறந்து செவியின்பம் பெறுகின்றார்கள் ; குழலையும் யாழையும் விடச்சிறந்த இன்பம் தம் குழந்தைகளின் மழலைச் சொல்லில் இருப்பதை உணர்கின்றார்கள். இவ்வளவுக்கும் காரணம் என்ன ? தம் அன்பு முன்னே சென்று தம் குழந்தைகளை அன்புருவாகக் காண்பதனால், குழந்தைகளின் கைகளின் செயலிலும், உடம்பின் மென்மையிலும், பேசும் மழலையிலும் இனிமை ஒன்றையே உணர்கின்றார்கள் ;

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ். (64)

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் ; மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு. (65)

குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர். (66)

இவ்வாறு உணர்ச்சி நிலையிலேயே நெடுங்காலம் தேங்கி நிற்க முடியாது ; தேங்கிநிற்கக் கூடாது ; இயற்கையும் விடுவதில்லை. குழந்தை வளர்கின்றது ; வளர வளர, பெற்றோர் தம் உணர்ச்சி நிலையிலிருந்து எழுந்து அறிவுநிலையில் நின்று

கடமையைச் செய்ய வேண்டும். தாய்தந்தை இருவரிலும் தந்தையின் கடமை பெரிது. தன் மகன் கல்வி கேள்விபெற்று வளர்வதற்கு வேண்டிய வாய்ப்புகளைத் தந்தை தேடி நல்க வேண்டும். அந்த வாய்ப்புகளைப் பெற்று மகன் அறிவுடையவனாய் வளர்ந்து, அறிஞர் கூட்டத்தில் முன் நிற்கும்படியாகச் செய்ய வேண்டும் ; இதுவே தந்தை மகனுக்குச் செய்ய வேண்டிய நல்ல கடமையாகும். மக்களைப் பொருள் நிறைந்தவர்களாகச் செய்வதைவிட, அறிவு நிறைந்தவர்களாகச் செய்வதே பெற்றோரின் கடமை. மக்களிடம் பொன் முதலியவை நிறையச் சேர்ந்தால் பெற்றோர் மட்டும் மகிழலாம் ; ஆனால் மக்களிடம் அறிவு நிறைந்தால் பெற்றோரும் மகிழலாம் ; உலகத்தாரும் மகிழலாம். உண்மையாக நோக்கினால், தம் மக்கள் அறிவுடையவர்களாக இருப்பது, தம்மைவிட உலகத்தார்க்கு மிக நல்லதாகும். அதனால், மக்களுக்கு உரிய கடமையைச் செய்வதோடு அல்லாமல் உலகத்தார்க்கும் கடமையைச் செய்வதாக முடியும். அப்போது இல்வாழ்க்கை பிறர்க்குப் பயன்படும் நல்வாழ்க்கையாக விளங்கும் :

**தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து**
**முந்தி இருப்பச் செயல். (67)**

**தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லாம் இனிது. (68)**

ஈன்று வளர்த்து அன்பு செலுத்தி அறிவுடையவனாக்கும் பெற்றோர்க்கு மகன் (அல்லது மகள்) செய்யவேண்டிய நன்றி என்ன ? பெற்றோரின் மனம் மகிழுமாறு செய்வதே அவன் கடமையாகும். ஈன்ற தாய் எப்போதும் மகிழும் இயல்புடையவள். குழந்தையைப்பெற்ற அன்றே அவள் மகிழ்ச்சி அடைகின்றாள் ; பல திங்கள் சுமந்து நொந்து பெற்ற துன்பத்தை



யெல்லாம் ஒரு நொடியிலேயே மறக்கக்கூடிய அவ்வளவு மகிழ்ச்சி அடைகின்றாள். மகன் நல்லவனானால் தாய்க்கு அந்த மகிழ்ச்சி என்றும் குறைவதில்லை ஆனால் மகன்கடமை ஒன்று உள்ளது ; அது தான் அந்த மகிழ்ச்சி மேன்மேலும் மிகும்படியாகச் செய்வது. அதற்கு வழி என்ன ? தன் மகனுடைய நல்ல பண்புகளை அவள் எண்ணி உணர்ந்து மகிழ்வாள். எனினும், அதே பண்புகளை மற்றவர்கள் உணர்ந்து புகழ்ந்து பேசுவார்களானால், அந்தப் போற்று தலைக்கேட்கும் போது தாய்க்குத் தனி மகிழ்ச்சி உண்டு. பெற்றெடுத்த காலத்தில் மகிழ்ந்ததைவிட அப்போது மிக மகிழ்வாள். (தான் சமைத்த உணவின் சுவையையோ, தன் கையெழுத்தையோ வேறு திறமையையோ, தான் எவ்வளவு நன்றாக உணர்ந்திருந்தாலும், பிறர் அதைப் பாராட்டிக் கூறும் போதுதான் மகிழ்ச்சி மிகுதியாகும். அது போன்றதே மகனைப் பற்றிய மகிழ்ச்சியும்.) ஆகையால், ''இவன் நல்ல பண்புகள் நிறைந்தவன்-சான்றோன்'' என்று பிறர் பாராட்டுவதைக் கேட்டுத் தாயின் உள்ளம் குளிருமாறு மகன் நடந்து கொள்ள வேண்டும். அவ்வாறே தந்தையையும் மகிழ்விக்க வேண்டும். நல்லவன் என்று கேட்டுத் தாய் மகிழ்வது போல், வல்லவன் என்று கேட்டுத் தந்தை மகிழ்வது இயல்பு. ஆகையால் மகன் தந்தைக்குச் செய்யத் தக்க கைம்மாறு இது : மகனுடைய அறிவையும் ஆற்றலையும் கண்டவர்கள், ''இவ்வளவு வல்லவனைப் பெற்று வளர்க்க இவனுடைய தந்தை செய்த தவமே தவம்'' என்று புகழும்படியாக நடந்துகொள்ள வேண்டும். இவ்வாறு தாய் தந்தையரின் உள்ளம் குளிருமாறு நல்லவராகவும் வல்லவராகவும் வாழ்க்கையை நடத்துவதே மக்களின் கடமையாகும் :

**ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய். (69)**

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை
என்நோற்றான் கொல்எனும் சொல். (70)

**அன்புடைமை**

அன்பு இயற்கையான உணர்வு ; மக்கள் எல்லோரிடத்திலும் அது அமைந்திருக்கின்றது. அன்பு இல்லாதவரைக் காண்பது அருமை. கண்ணீர் விடாதவர்கள் உலகத்தில் இருந்தால், அவர்களையே அன்பு இல்லாதவர்கள் என்று சொல்ல வேண்டும். கண்ணீரிலும் இருவகை உண்டு. தன் துன்பத்திற்காக விடும் கண்ணீர், மற்றவரின் துன்பத்திற்காக விடும் கண்ணீர் என்பவை. தன் துன்பத்திற்காகக் கண்ணீர் விடுதல் விலங்குகளிடத்திலும் பறவைகளிடத்திலும் உண்டு. மற்ற உயிர்களின் துன்பம் கண்டு கசிந்து கண்ணீர்விடும் இயல்பு விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் இல்லை தம் துணைகளுக்காகவும் தம் வயிற்றில் பிறந்தவைகளுக்காகவும் அவை உதவி செய்து வாழ்வது உண்மை. ஆனால் அப்போதும் பிறப்பியல்பாக உள்ள உணர்ச்சியால் உந்தப்பட்டு அவ்வாறு சேய்கின்றன. ஒரு குறித்த காலத்திற்குமேல் தம் வயிற்றில் பிறந்தவைகளிடத்திலும் அவைகளுக்கு அந்த உணர்ச்சி இருப்பதில்லை; அதனால் உதவி செய்வதையும் மறந்து அவற்றைப் புறக்கணிக்கின்றன. மக்கள் வாழ்க்கையில் தம் துன்பத்திற்காக விடும் கண்ணீரும் உண்டு ; பிறர் துன்பத்திற்காக விடும் கண்ணீரும் உண்டு. வாழ்க்கை பண்படப் பண்பட, பிறர் துன்பத்திற்காகக் கண்ணீர் விடுவதே மிகுதியாகின்றது. இந்தக்கண்ணீரில் தான் மக்கள் வாழ்க்கையின் சிறப்பியல்பு அமைந்துள்ளது. தாம் அன்பு செலுத்துகின்றவர்களுக்கு ஏதேனும் துன்பம் கண்டால், உடனே கலுழ்கின்றகண்ணீர், உள்ளத்தில் கொண்ட அன்பைப் பலர் அறிய வெளிப்படுத்துகின்றது. ஆகையால்



அன்புக்குத் தடை ஏற்படுத்த முடியாது ; அதை அடைத்து வைக்கும் தாழ் இல்லை ; அத்தகைய இயற்கையான உணர்வு அது :

அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ்? ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும் (71)

அன்பு குறையக் குறையக் தன்னலம் பெருகும். அன்பு பெருகப் பெருகத் தன்னலம் தேயும். இதுவே அன்புக்கும் தன்னலத்துக்கும் உள்ள தொடர்பு. அன்பு இல்லாதவர்கள் தன்னலம் மிகுந்தவர்கள் ; அதனால் எல்லாப் பொருள்களும் தம் நன்மைக்காகவே இருப்பதாகக் கொள்வார்கள். அன்பு மிக்கவர்கள் தன்னலம் இல்லாதவர்கள். அதனால் எல்லாப் பொருள்களும் பிறர் நன்மைக்காக இருப்பதாகக் கொள்வார்கள் ; தம் உயிர்வாழ்க்கைக்குக்காரணமான உடம்பில் உள்ள எலும்பும் பிறர் நன்மைக்காக இருப்பதாகக் கருதுவார்கள் ; பிறர்க்கு உரியவராகவே வாழ்வார்கள் :

அன்பிலார் எல்லாம் தமக்குரியர் ; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. (72)

அன்பினால் விருப்பம் வளரும் ; அது நட்பு என்னும் அரும்பெருஞ் சிறப்பைத் தேடித் தரும். அதனால் உலகத்தில் தனித்து வாழ்ந்து துன்புறும் நிலைமை நீங்கும் ; அன்புடைய பலர்க்கு இடையில் வாழும் பெருமை வாய்க்கும். உலகத்தில் இன்பமாக வாழும் பேறு பெற்றவர்கள் அடைந்துள்ள சிறப்புக்குக் காரணம் இது தான் ; அன்பு பொருந்தி வாழும் வாழ்க்கையே இதற்குக் காரணமாகும் :

அன்பீனும் ஆர்வ முடைமை ; அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு. (74)

அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு (75)

நெஞ்சம் நெகிழ்ந்து இயைந்து வாழ்வதற்கு அன்பு
துணை என்று காண்கின்றோம். அது மட்டும் அன்று ; சிலர்
மீது பகைகொண்டு ஒருவன் செய்யும் வீரச் செயல்களுக்குக்
காரணம் எது ? அவன் தன்னைச் சார்ந்தவர்களிடம் கொண்ட
அன்பே அதற்கும் காரணம். மனைவியிடம் நெஞ்சம்
நெகிழ்ந்து வாழ்கின்ற அன்புடையவன், அவளைக் காப்பதற்
காகக் கொடியவர்களை அஞ்சாமல் எதிர்க்கின்றான் ;
குழந்தையிடம் அன்பு கொண்டு உருகும் தாய், கொடிய
விலங்கினிடமிருந்தும் அதைக்காக்க அஞ்சாமல் போராடு
கின்றாள்; வண்ணச் சீறடி மண்மகள் அறியாதாவறு மெல்லிய
லாய் வளர்ந்த மங்கை தன் கணவனுடைய புகழைக் காப்பதற்
காக நாடாளும் தலைவனையும் சீறி வழக்குரைக்கின்றாள் ;
இவ்வாறு நெஞ்சை நெகிழ்வித்து உருக்கும் அன்பே, நெஞ்சை
வன்மையுறச்செய்து பகைக்கவும் எதிர்க்கவும் அழிக்கவும்
ஆற்றல் அளிக்கின்றது. இதனால் விளங்கும் உண்மை என்ன ?
அறத்திற்கு மட்டுமே அன்பு துணை என்று சிலர் சொல்
வார்கள் ; அது அறியாமை; மறத்திற்கும் (வீரச் செயலுக்கும்)
அதுவே துணையாகும் :

அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார் ;
மறத்திற்கும் அஃதே துணை. (76)

அன்பு இல்லதா உயிர், வாழ்வதற்கு உரிமை இல்லாத
உயிர் ஆகும். எலும்பு இல்லாத உடம்பு வெயிலில் திரி
வதற்கு உரிமை இல்லை ; அதை வெயில் அழிப்பது போல்,
அன்பு இல்லாதவரை அறம் அழிக்கும். உயிர் வாழ்க்கைக்கு
இடம் பொருள் முதலிய எல்லா நலமும் வேண்டும் ; ஆனால்
அன்பு ஒன்று இல்லையானால் இவற்றால் ஒரு பயனும்
இல்லை ; வாழ்க்கைக்கு மற்றவை எல்லாம் புறத்துறுப்பு
அன்பு ஒன்றே அகத்துறுப்பு. அது இல்லையானால் பயன்



இல்லை அன்பு அடிப்படையாக வாழும் உடம்பே உயிர்
நின்ற உடம்பு : அன்பு இல்லாதவர்கு உள்ள உடம்பு
எலும்பைத் தோலால் போர்த்த உடம்பே ; உயிருடன்
வாழ்ந்தும் பயன் அற்ற உடம்பே ; உயிர் அற்ற பிணமே
எனலாம் :

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம். (77)

புறத்துறுப்பு எல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு ? (79)

அன்பின் வழியது உயிர்நிலை ? அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு. (80)

**விருந்தோம்பல்**

நிலையான இருப்பிடமும் நெடுங்காலத்திற்கு உரியஉணவு
முதலியனவும் தேடி வருந்தாமல், பறவைகளைப் போலவும்
விலங்குகளைப் போலவும் கிடைத்ததை உண்டு கவலை இல்லா
மல் வாழும் வாழ்க்கையில் துன்பம் குறைவு. வீடு அமைத்
துக் கொண்டு நாளைக்கு எனப் பல் பொருளும் தேடி வருந்தி
அவற்றைக் காத்துக்கவலையுறும் இல்வாழ்க்கையில் துன்பம்
மிகுதி. ஆயினும் அதற்கு ஈடான நன்மையும் இருக்க
வேண்டும் அன்றோ ? அதுதான் புதியவராய் வந்தவர்க்கு
உதவி செய்து வாழும் நன்மை—விருந்தோம்பும் நன்மை—
ஆகும். அதனால், வீட்டிலிருந்து பொருள் சேர்த்துக்காத்து
வாழும் துன்பம் உள்ள வாழ்க்கை எல்லாம் விருந்தினரைப்
போற்றி அவர்களுக்கு உதவிசெய்யும் அறத்தின் பொருட்டே
என்று திருவள்ளுவர் கூறுகின்றார் :

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. (81)

பலகாலும் பழகி அறிந்தவர்க்குச் சிறந்த உணவு அளித்துச் செய்யும் உதவியும், தம்மைவிட மிக்க செல்வம் உடையவர்க்கும் புகழ் கருதிப் போற்றிச் செய்யும் ஆடம்பரச் சிறப்பும், ஏதேனும் நன்மை எதிர்பார்த்து அதற்காக ஒருவர்க்குச் சிறந்த உணவு நல்கும் உதவியும் விருந்து என்று இக்காலத்தில் போற்றப்படுகின்றன. திருவள்ளுவர் இவற்றை விருந்து என்று கொள்ளவில்லை. திருவள்ளுவர் கூறியுள்ளதைப் போன்ற விருந்தை இக்காலத்தில் நாட்டுப்புறங்களில் மூலைமுடுக்குகளில் ஏழைகளாய் வந்தவர்க்குக் கூழ் வார்க்கும் உதவியில் காணலாமே அன்றி உணவு விடுதிகள் மலிந்த நகரங்களில் காண முடியாது. நகரங்களில் புதியவராய் வருவோரில் மானமுடைய பலரும் கையில் காசு கொண்டு உணவுவிடுதிகளை நாடிச்சென்று உண்டு பசி தீர்க்கின்றார்கள். காசுக்கு வழி அற்றவரில் சிலர் உதவிபெற முடியாமல் பட்டினி கிடந்து வாடி வருந்தி நகரங்களை விட்டு விரைவில் நீங்கிச் செல்கின்றார்கள்; மற்றும் சிலர் மானம் இழந்துபிச்சை எடுத்தேனும் வயிறு வளர்க்கத் தலைப்படுகின்றார்கள். வேறு சிலர் திருடு முதலியவற்றைக்கற்றுத் திரிகின்றார்கள். ஆகவே புதியவராய் உதவிக்கு உரியவராய் வருவோருக்கு விருந்து அளித்து உதவும் வாழ்க்கை இன்று அரிதாகி விட்டது எனலாம்.

திருவள்ளுவரின் காலம் உணவுக்கடைகள் இல்லாத காலம்; பணமாற்று இல்லாத காலம்; வெளியூர்களுக்குச் செல்வோர் பல நாளுக்கு வேண்டிய கட்டுச் சோற்றைக் கையில் கொண்டு செல்லவும் முடியாது; பல திங்களுக்கு வேண்டிய அரிசி முதலியவற்றைக் கொண்டு செல்லவும் முடியாது. குறுநில மன்னர் முதலியோரும் வாணிகக் கூட்டத்தாரும் தேர்களிலும் மற்ற ஊர்திகளிலும் செல்லும்போது மட்டுமே



அவ்வாறு உணவுப்பொருளை உடன்கொண்டு செல்ல முடிந்தது; மற்றவர்கள் சில நாட்களுக்குமேல் தேவையான உணவையோ உணவுப் பொருளையோ கொண்டு செல்ல முடியவில்லை; ஆகையால் இந்த விருந்தோம்பல் ஊர்தோறும் இன்றியமையாத அறமாகப் போற்றப்பட்டு வந்தது. தாம் வெளியூர்க்குச் சென்றபோது பட்ட துன்பத்தை நினைந்து அவ்வாறு தம் ஊர்க்கு வருவோர் வருந்தக் கூடாது என்று உணர்ந்து இந்த அறத்தை மக்கள் போற்றி வந்தார்கள். இக்காலத்தில் விருந்து என்று கூறப்படுவதற்கும் இந்த அறத்திற்கும் ஒரு தொடர்பும் இல்லை. இக்காலத்து விருந்து எனப்படுவது வறியவரை மறப்பது; ஆடம்பரத்தைப் போற்றுவது; பயன் கருதி வாணிக முறையில் செய்வது. உண்மையாக விருந்து என்று கூறத்தக்கது, பசித்தவர் முகமும் திக்கற்றவர் முகமும் பார்த்து அவர்களை அன்புடன் போற்றி உதவி செய்தல் கடமை என்று உணர்ந்து செய்யும் அறமே ஆகும்; பழகியவர்களை அன்போடு வரவேற்று உணவளிக்கும் வழக்கத்தை அதற்கடுத்த நிலையில் வைத்துப் போற்றலாம்.

விருந்தினர் வீட்டின் புறத்தில் இருக்கத் தான்மட்டும் உண்பது கூடாது; சாவா மருந்தாகிய அமிழ்தமே ஆனாலும் அவ்வாறு விருந்தினரை விட்டு உண்ண விரும்பக்கூடாது. வருகின்ற விருந்தினரை நாள்தோறும் போற்றி உதவுகின்றவனுடைய இல்வாழ்க்கை வருந்திக் கெடுவதில்லை. விருந்தோம்புதல் ஒரு வேள்வி; இந்த வேள்வியின் பயன் இவ்வளவு என்று கூறுவதற்கு ஓர் அளவு இல்லை; விருந்தினராக வந்தவரின் தகுதிக்கு ஏற்ற பயன் உண்டாகும். இவ்வாறு விருந்தினரைப் போற்றி இந்த வேள்வியின் பயனைப் பெறாதவர்கள் வாழும் இல்வாழ்க்கை பயனற்றதே; வருந்திப் பொருளைத்தேடிச் சேர்த்துக் காத்துப்பிறகு ஒரு காலத்தில் அதை

இழந்துவிட்டுப் பற்றுக்கோடு இல்லையே என்று அவர்கள் வருந்த நேரிடும். ஆகையால், விருந்தோம்பு தலைப்போற்றாத அறியாமை இருந்தால், அது செல்வம் உள்ளபோது வாய்த்த வறுமை என்றே சொல்லவேண்டும் ; அறிவில்லாதவர்களே அந்த வறுமைக்கு ஆளாவார்கள் ;

விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற்று அன்று. (82)

வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று. (83)

இனைத்துணைத்து என்பதொன்று இல்லை ; விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன். (87)

பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்
வேள்வி தலைப்படா தார். (88)

உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை ; மடவார்கண் உண்டு. (89)

## இனியவை கூறல்

அன்பு கலந்தவைகளாய் வஞ்சனை அற்றவைகளாய் மெய்ப்பொருள் உணர்ந்தவர்களின் வாயில் பிறக்கும் சொற்கள் இன்சொற்களாம். விருப்பத்துடன் முகமலர்ந்து இன்சொல் கூறும் தன்மை இருந்தால், அது, மனம் உவந்து பொருளைக் கொடுத்து உதவுவதைவிட நல்லது. ஒருவரைக் கண்டால் முகத்தில் விருப்பம் தோன்ற இனிமையாகப் பார்த்து, மனம்கலந்த இன்சொல் கூறுவதே அறநெறி ஆகும் :

இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். (91)

அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின். (92)



முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம். (93)

பேச்சுத்திறன் மக்களுக்கே சிறப்பியல்பாக அமைந்து உள்ளது. அதை நல்ல வகையில் பயன்படுத்தினால், நன்மை அடையலாம். அதனால் பலரை மகிழ்விக்க முடியும். பலர் மகிழ வாழ்கின்றவனுடைய வாழ்க்கைக்கு ஒரு குறைவும் நேராது. ஆகையால், எல்லோரிடத்திலும் இன்பத்தைப் பெருக்க வல்ல இன்சொல் உடையவர்க்கு வாழ்க்கையில் துன்பத்தைச் செய்யக்கூடிய வறுமையும் அணுகாது. இது மட்டும் அன்று ; பணிவுடையவனாகவும் இன்சொல் பேசுபவனாகவும் விளங்குவதே ஒருவனுக்கு உண்மையான அணிகலமாகும் ; உடம்பிற்கு அழகாக அணியும் மற்றவை உண்மை அணிகள் அல்ல :

துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. (94)

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணி ; அல்ல மற்றுப் பிற. (95)

சொற்களுள் நல்லவை உண்டு ; தீயவையும் உண்டு; இனியவை உண்டு ; இன்னாதவையும் உண்டு; நல்ல சொற்கள் கடுமையாக இருத்தலும் உண்டு ; தீய சொற்கள் இனிமையாக இருத்தலும் உண்டு இவ்வாறு சொற்களைப் பகுத்து நன்மையும் இனிமையும் ஒருங்கே விளைக்கும்படியாகப் பேசிப் பழகவேண்டும். நல்ல சொற்களை ஆராய்ந்து அவற்றுள்ளும் கடுமையானவற்றை விட்டு இனிய சொற்களையே பேசிப் பழகினால், வாழ்க்கையில் பாவங்கள் தேய அறம் பெருகும். இத்தகைய இன்சொற்கள் இன்பம் உண்டாக்குவதை வாழ்க்கையில் காண்கின்ற ஒருவன், கடுஞ்சொற்களைச் சொல்வது என்ன காரணமோ? அவனை நினைத்தால்

இரக்கமே ஏற்படுகின்றது. வாழ்க்கையில் இன்பம் பயக்கத் தக்க இனிய சொற்கள் இருக்கும்போது கடுஞ்சொற்களையே கூறுவது, இனிய கனிகள் இருக்கும்போது காய்களைத் தேடிக் கவர்ந்து உண்பது போன்ற அறியமைதான் :

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். (96)

இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது ? (99)

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. (100)

### செய்ந்நன்றி அறிதல்

ஒருவர்க்கொருவர் உதவி செய்யாவிட்டால், உலக வாழ்க்கை நடைபெறாது. அவ்வாறு உதவி செய்வோரை மறவாமல் அவர் செய்த நன்மையைப் போற்றுவது சிறந்த கடமையாகும். அத்தகைய உதவியிலும் பலவகை உண்டு. இதற்குமுன் அவருக்கு ஓர் உதவியும் செய்யாதிருக்கும் போது காரணமில்லாமல் ஒருவர் மனம் உவந்து தாமே உதவி செய்வதும் உண்டு. அந்த உதவிக்குக் கைம்மாறு இல்லை. மண்ணுலகம் விண்ணுலகம் இரண்டையும் கொடுத்தாலும் அவை அந்த உதவிக்கு ஈடு ஆகா. பெரிய துன்பம் நேர்ந்து நெருக்கடி ஏற்பட்ட காலத்தில் ஒருவர் செய்த உதவியும் சிறந்த உதவியே ஆகும். அந்த உதவி சிறிய உதவியாக இருக்கலாம் ; என்றாலும் தக்க காலத்தில் செய்யப்பட்டது ஆகையால் அது மண்ணுலகத்தைவிடப் பெருமை உடையது ஆகும். இவருக்கு இப்போது உதவினால் நாளைக்கு இன்ன கைம்மாறு கிடைக்கும் என்று பயனை ஆராயாமல் ஒருவர் செய்த உதவியும் சிறப்புடையதே



ஆகும் ; அதன் நயத்தை ஆராய்ந்தால், கடலை விடப் பெரிய நன்மை உடையதாக விளங்கும் :

செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. (101)

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. (102)

பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலின் பெரிது. (103)

செய்யும் உதவியில் சிறுமை பெருமை காண முடியாது. உதவியைப் போற்றுவதில் பயன் கண்டவர்கள், தினையளவு உதவி பெற்றாலும் அதையே பனையளவாகக் கொள்வார்கள். ஆதலால் உதவிக்கு ஈடானது கைம்மாறு என்று சொல்ல முடியாது. உதவியை ஏற்றுக்கொண்டவர்களின் பெருந் தன்மைக்கு ஏற்ற அளவாகவே அது விளங்கும் !

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாகக்
கொள்வர் பயன்தெரி வார். (104)

உதவி வரைத்தன்று உதவி ; உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. (105)

ஒருவர் செய்த நன்மையை மறப்பது அறம் ஆகாது; ஒருவர் செய்த தீமையை அப்பொழுதே மறந்துவிடுவது அறம் ஆகும். கொன்றார் போன்ற கொடுந் துன்பத்தை ஒருவர் செய்தாலும், அவர் அதற்குமுன் செய்துள்ள ஒரு நன்மையை நினைத்தால், அந்தத் தீமை மறந்துபோகும். இதுவே பிறர் செய்த தீமையை மறப்பதற்கும் நன்மையை மறவாமல் இருப்பதற்கும் வழியாகும். உலகத்தில் எந்த அறத்தை அழித்தாலும் தப்பிப்பிழைக்க வழி உண்டு ; ஆனால் செய்த நன்றியை மறந்த ஒருவனுக்கு உய்யும் வழி இல்லை.

நன்றி மறப்பது நன்றன்று ; நன்றல்லது
அன்றே மறப்பது நன்று. (108)

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்று நன்று உள்ளக் கெடும். (109)

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் ; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (110)

நடுவுநிலைமை

அறநெறியில் நின்று வாழ்க்கை நடத்தும்போது நடுநிலைமை தவறாமல் நீதியைப் போற்ற வேண்டும். நம்மவர் பிறர் என்ற பாகுபாடு செய்து இவருக்கு ஒருவகையும் அவருக்கு ஒருவகையுமாக நடக்கக் கூடாது ; அறம் எல்லோருக்கும் பொதுவானது என்ற உணர்வோடு நடக்க வேண்டும். நடுநிலைமையைக் கடந்து ஒரு செயல் செய்வதால் நன்மை உண்டாவதில்லை ; ஒருகால் நன்மையே விளைவதாக இருந்தாலும், நடுநிலை தவறி உண்டான ஆக்கம் என்று அதை அப்போதே கைவிட வேண்டும். தன் நன்மை தீமையை மறந்து அறத்தைப் போற்றுவதற்கு அதுவே வழியாகும் :

நன்றே தரினும் நடுஇகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். (113)

தன்னலத்தால் நடுநிலை கடந்த வாழ்கின்றவர்கள் நன்மை பெற்று வாழலாம் ; செல்வாக்கும் பெறலாம் ; அந்தச் செல்வாக்கினால் நடுநிலை கடந்த குற்றமும் மறைக்கப்படலாம். ஆனால் ஒரு காலத்தில் அந்தக் குற்றம் புலப்பட்டுவிடும். வாழும் காலத்தில் செல்வாக்கின் காரணத்தால் மாசற்றவர் போல் தோன்றினாலும் பிற்காலத்தில் உண்மையே விளங்கும் ஆகவே தக்கவர் தகாதவர் (நடுநிலையானவர், அல்லாதவர்)



என்பது வாழும்போது விளங்காவிட்டாலும், அவரவர்க்குப் பின் எஞ்சி நிற்கும் புகழாலும் பழியாலும் அறியப்படும் ;

தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும். (114)

(எச்சம் என்பது எஞ்சி நிற்பது என்னும் பொருள் தரும். ஒருவர் இறந்தபின் நிற்கும் புகழை எச்சம் என்று திருவள்ளுவர் கருதுவதை 'இசை என்னும் எச்சம்' என்ற தொடரால் அறியலாம். இறந்தபின் எவருடைய செல்வாக்குக்கும் அஞ்சாமல் பொதுமக்கள் உண்மையைப் பேசுவார்கள். ஆகையால், அவருடைய உண்மையான தகுதி அப்போது விளங்கும் என்று திருவள்ளுவர் கருதுகின்றார். அவ்வாறு அல்லாமல், எச்சம் என்பதற்கும் மக்கள் என்று பொருள் கொள்வது பொருந்தாது. தக்கவர்களுக்குக் கெட்ட மக்களும், தகாதவர்களுக்கு நல்ல மக்களும் பிறப்பதும் உண்டு. இது உலகத்தில் தொன்றுதொட்டே காணப்பட்டு வருவதாகும் )

நடுநிலைமையை அறமாகக் கொண்டு ஒழுகுவோர் போற்றவேண்டிய பெரிய உண்மை ஒன்று உண்டு. வாழ்க்கையில் உயர்வும் தாழ்வும் எப்போதும் உள்ளவை என்பதை அவர்கள் உணரவேண்டும். இதைச்செய்தால் வாழ்க்கையில் உயர்வு பெறலாம் என்று அவாவுற்றும், இதைச் செய்தால் தாழ்வு நேரும் என்று அச்சமுற்றும் கடமைகளைச் செய்யக் கூடாது. அவ்வாறு அவாவும் அச்சமும் கொள்வதால் நடுநிலைமை கடந்தாவது உயர்வு பெறவேண்டும் என்று எண்ணத் தோன்றும். உயர்வு தாழ்வு வாழ்க்கையில் இயல்பானவை என்று உணர்ந்து நெறி தவறாமல் வாழ முற்பட்டால், "வருவதுவருக ; என் கடமையை நடுநிலையில் நின்று ஆற்றுவேன்" என்று உறுதியோடு வாழலாம். கேடும் பெருக்கமும் இயல்பானவை என்று உணர்ந்த காரணத்தால் சான்றோர் நெஞ்சம்

கோடாமல் நடுநிலையுடன் வாழ்கின்றர்கள் ; இதுவே சான்றோர்க்கு அழகாக உள்ளது. நடுநிலை கடந்து தீமை செய்ய நெஞ்சம் முற்படுமானால் அப்போது ஒருவன், ''யான் இதனால் கெடப்போகின்றேன்'' என்று அறிய வேண்டும் ; அறிந்து அந்தச் செயலைக் கைவிட வேண்டும். நடுநிலை தவறாமல் இவ்வாறு நடப்பதால் வாழ்க்கையில் தாழ்வு வருமே என்றும் அஞ்சக் கூடாது. உயர்ந்தவர்கள்; நடுநிலையாக அறநெறியில் நின்றவனுடைய தாழ்வைத் தாழ்வாகக் கருத மாட்டார்கள் :

**கேடும் பெருக்கமும் இல்லை ; நெஞ்சத்து**
**கோடாமை சான்றோர்க்கு அணி. (115)**

**கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்**
**நடுஒரீஇ அல்ல செயின். (116)**

**கெடுவாக வையாது உலகம் நடுவாக**
**நன்றிக்கண் தங்கியான் தாழ்வு. (117)**

நடுநிலையைப் போற்றுவோர் துலாக்கோலை (தராசை) நோக்க வேண்டும் ; தான் சமமாக நின்று பிறகு வேண்டியவர் வேண்டாதவர் என்ற வேறுபாடு இல்லாமல் தன்னிடம் வைத்த பொருளின் எடையை உள்ளவாறு அறிவிக்கின்றது துலாக்கோல். அதுவே அதன் பெருமைக்குக் காரணமாக இருப்பது. அதுபோல் சமநிலையில் நின்று ஒரு சார்பாகக் கோணாமல் நடப்பதே சான்றோர்க்கு அழகாகும். உள்ளத்தில் கோணுதல் இல்லாத தன்மையே முன்னே உறுதியாக வேண்டும். அது இருந்தால், சொல்லில் கோணல் பிறக்காது ; அதுவே சிறந்த நடுநிலைமை ஆகும்:

**சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல்**
**அமைந்தொருபால்**
**கோடாமை சான்றோர்க்கு அணி (118)**



**சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா**
**உட்கோட்டம் இன்மை பெறின். (119)**

இந்த நடுநிலைமை சிறப்பாக வணிகர்க்கு வேண்டும். பொருளைக்கொடுத்து மாற்றும் அவர்களுடைய தொழிலில், கொடுப்பதையும் குறையக் கொடுக்காமல், கொள்வதையும் மிகக் கொள்ளாமல் வாழும் நடுநிலைமை வேண்டும். பிறருடைய பொருளையும் தம் பொருள் போல் போற்றி வாழ்வார்களானால், வாணிகத்தைத் தொழிலாகச் செய்வார்க்கு அது நன்மை பயக்கும் ;

**வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவும் தமபோல் செயின். (120)**

### அடக்கமுடைமை

எண்ணத்தாலும் பேச்சாலும் செயலாலும் அறத்தைப் போற்றி வாழ வேண்டுமானால், மனம், மொழி, மெய் என்பவற்றைத் தன் ஆட்சியின்கீழ் வைத்திருக்கும் ஆற்றல் வேண்டும். அவ்வாறு மனம் முதலியவை அடங்கி ஒத்துழைக்கும் வாழ்வே சிறந்த வாழ்வு, அத்தகைய அடக்கம் ஒருவனை மேன்மேலும் உயர்த்த வல்லது ; சிறந்த நன்மக்களிடம் சேர்க்க வல்லது ; அடங்காமையோ, செறிந்த இருள்போன்ற தீய வாழ்க்கையில் செலுத்திவிடும். ஆகையால் அடக்கத்தை உறுதிப் பொருளாகக் கொண்டு போற்றிக் காக்கவேண்டும். உயிர்க்கு ஆக்கம் தருவது அதைவிட வேறு இல்லை :

**அடக்கம் அமரருள் உய்க்கும் ; அடங்காமை**
**ஆரிருள் உய்த்து விடும். (121)**

**காக்க பொருளா அடக்கத்தை ; ஆக்கம்**
**அதனினூங்கு இல்லை உயிர்க்கு. (122)**

அடக்கத்தைப் போற்றுவோர்மலையின் நிலையை நோக்க வேண்டும், எத்தனையோ தட்பவெப்ப மாறுதல்கள், எத்தனையோ புயல்கள், எவ்வளவோ மழை இடி முதலியவை, எவ்வளவோ விளைவும் அழிவும், எவ்வளவோ விலங்குபறவை முதலியவை செய்யும் செயல்கள்—இவை எல்லாவற்றிற்கும் இடம் தந்து எல்லாவற்றையும் கண்டும் தான்மட்டும் அசையாமல் தன் நிலையில் நிற்கின்றது. காலம் பல மாறியும் தன் நிலைமை மாறாமல் உயர்ந்து விளங்கித்தன் கடமையை ஆற்றுகின்றது. இதை எடுத்துக்காட்டாகக் கொண்டு, ஒருவன் தன் கடமையைச்செய்து அமைதியாக வாழவேண்டும் அவ்வாறு வாழும்போது, தன் நிலைமையிலிருந்து வேறுபடாமல் அடக்கம் உடையவனாக வாழ்வானானால், அவன் உயர்ந்து விளங்குவான் ; அவனுடைய உயர்வு மலையைவிட மிகப்பெரியதாகும் :

**நிலைவின் திரியாது அடங்கியான் தோற்றம்**
**மலையினும் மாணப் பெரிது.** **(124)**

மலைபோன்ற நிலைமை என்றால், பல மாறுதல் தன்னை அணுகினும் தான் அவற்றால் வேறுபடாமல் இருக்கும் அடக்கம் என்பதே கருத்தாகும் ; அதுவே அல்லாமல், ஒன்றும் செய்யாமல் வாளா இருப்பது அன்று. அடக்கம் வேறு ; ஒடுக்கம் வேறு. ஒடுக்கம் என்பது ஐம்புலன்களையும் தொழில் செய்யாதவாறு ஆற்றல் ஒடுங்கியிருக்கச்செய்வது. அடக்கம் என்பது ஐம்புலன்களையும் வேண்டியபோது தொழில் செய்யவிட்டு, வேண்டாதபோது ஆற்றலுடன் அடங்கியிருக்கச் செய்வது. அது ஆமை போன்ற நிலைமை, ஆமை தனக்குத் தீங்கு நேரும் என்று அறிந்தபோது தன் ஐந்து உறுப்புகளையும் ஓட்டினுள் அடக்கிக்கொண்டு அமைதியாக இருக்கும், தனக்கு ஒரு தீங்கும் இல்லை என்று அறிந்தபோது,



தலையையும் கால்களையும் வெளியே நீட்டி இயங்கும். அது போல் நல்ல நெறியில் திறமையாகத் தொழிலாற்றச் செய்து தீய நெறியில் செல்லாமல் ஐம்புலன்களையும் அடக்கிக் கொள்வாதே அடக்கமாகும். அவ்வாறு அடக்கும் வல்லமை பெற்றால் அது எழுமைக்கும் நல்ல காவலாக அமையும் ;

**ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து.** **(126)**

அடக்கத்தில் சிறந்தது நாவடக்கமாகும். வேறு எவற்றைக் காக்கத் தவறினாலும் நாவையேனும் அடக்கிக் காக்க வேண்டும். அதைக் காக்கத் தவறினால், சொற் குற்றத்தில் அகப்பட்டுத் துன்பப்பட நேரும், ஏன் எனில், பல நல்ல சொற்களையே சொல்லியிருந்தும், அவற்றில் ஒன்றாயினும் தீய சொல்லாய் அதன் தீய பொருட்பயன் உண்டாகுமானால் மற்ற நல்ல சொற்களின் நன்மையும் கெட்டுவிடும். ஆகையால் நல்ல சொற்களுக்கு இடையே மறந்தும் தீய சொல் ஒன்றும் சொல்லாமல் காத்துக்கொள்ள வேண்டும் ; தீய சொல் மட்டும் அன்றி, நல்ல சொல்லே ஆயினும் பொருளால் தீய பயன் உண்டாவதானால் அதையும் நீக்கவேண்டும், தீய செல்லைவிடத் தீயே மேலானது. ஏன் எனில், தீயால், சுட்ட புண் புறத்தில் வடு ஏற்படுத்தினாலும் உள்ளத்தில் ஆறிவிடும் ; ஆனால், நாவினால் சுட்ட புண் உள்ளத்தில் வடு ஏற்படுத்தும் ; அந்த வடு எப்போதும் ஆறுவதில்லை. ஆகையால், பிறருடைய உள்ளத்தைப் புண்படுத்தும் சொல்லைச் சொல்லாமல் காத்துக்கொள்ள வேண்டும். இதற்கு வழி என்ன ? நாவை அடக்க வேண்டுமானால் மனத்தையே அடக்க வேண்டும். மனத்தில் வெகுளி இல்லாமல் காத்துக் கொண்டு, கற்பன கற்று அமைதியாய் அடங்கி ஒழுகவேண்டும் ; அவ்வாறு ஒழுக வல்லவனை அறம் தானே தேடிச்

செல்லும்; உரிய வழியில் சென்று அவனுடைய செவ்வியை அறம் பார்த்துக்கொண்டிருக்கும்:

யாகாவா ராயினும் நாகாக்க ; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (127)

ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும். (128)

தீயினால் சுட்டபுண் உள் ஆறும் ; ஆறாதே
நாவினால் சுட்ட வடு. (129)

கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து. (130)

மனத்தில் வெகுளி வைத்துக்கொண்டே நாவை மட்டும் அடக்கிக் காத்தல், ஒவ்வொருகால் அந்த வெகுளி நாவின் வழியாக வெளிப்பட்டுத் தீய சொல் பிறக்கக் காரணமாகும். அதனால் கல்வி வாயிலாக மனத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்வதே நாவைக் காக்கும் நெறி என்றார்.

### ஒழுக்கமுடைமை

உயிர் எல்லாப் பொருளையும் விடச் சிறந்ததே ; ஆயினும் அந்த உயிருக்கும் சிறப்புத் தர வல்லதாக ஒழுக்கம் விளங்குகின்றது ; ஆகையால் உயிரைவிட ஒழுக்கமே சிறந்த தாகக் கொண்டு காக்க வேண்டும். அறம் பலவற்றையும் ஆராய்ந்து போற்றித் தேர்ந்தாலும் முடிவில் துணையாய் நிற்கக் காண்பது ஒழுக்கமே ; அதனால் ஒழுக்கத்தை வருந்திப் போற்றியும் காக்க வேண்டும் ; ஒழுக்கத்தைக் காப்பதற்காக எவ்வளவு துன்பம் நேர்வதானாலும் வருந்தி ஏற்க வேண்டும் :

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். (131)



பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் ; தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை. (132)

ஒழுக்கத்தால் மக்கள் மேன்மை அடைவார்கள்; ஒழுக்கம் தவறுதலால் பொல்லாத பழி அடைவார்கள். நல்லொழுக்கம் நன்மைக்கு வித்தாக அமையும் ; தீயொழுக்கம் எப்போதும் துன்பம் தரும். ஆதலின் பழியும் துன்பமும் வராமல் மேன்மையும் இன்பமும் பெற வேண்டுமானால் ஒழுக்கத்தைப் போற்ற வேண்டும்:

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை ; இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் ; தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். (138)

மனத்தை அளந்தறிவதற்கு வாய்ச்சொல் ஒரு கருவியாக உள்ளது. வாயில் பிறக்கும் சொற்களின் நன்மை தீமையைக் கொண்டு ஒருவனுடைய ஒழுக்கம் இன்னதென்று அறியலாம். ஒழுக்கமுடைய நன்மக்கள், தவறியும் தீய சொற்களை வாயால் சொல்ல முடியாது :

ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல். (139)

எதை நல்லொழுக்கம் என்று கொள்ளுவது? எதைத் தீயொழுக்கம் என்று தள்ளுவது? அற நூல்கள் சொல்லிய வாறே ஒழுகலாம் எனின், காலம் மாறியுள்ளதே ! இவ்வாறு ஐயப்பாடு எழுதல் உண்டு, காலப்போக்கை அறிந்தே உயர்ந்தோர் அறநெறியைப்போற்றி வாழ்கின்றார்கள். ஆகையால் அவர்களுடைய வழியை ஒட்டி (உலகத்தோடு பொருந்த) ஒழுகுவதே கடமையாகும் ; பல நூல்களைச் கற்றுத்தேர்ந்தும் இதைக் கல்லாதவர்கள் அறிவில்லாதவர்களே கல்விக்குப்

பயன் நெறியில் நிற்றலே ஆகையால், அவர்கள் கல்வி கற்றும்
பயன் பெறாதவர்களே ஆவார்கள் :

**உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.** (140)

**பிறனில் விழையாமை**

அறத்தின் அடிப்படை எது? பிறருக்குத் தீங்கு
செய்யாமல் வாழும் நல்லியல்பே ஆகும். பிறருடைய
உரிமையில் தலையிடுதலும் பிறருக்குத் தீங்கு செய்தலே
ஆகும். அதனால் பிறனுடைய மனைவியை விரும்பாமை
(பிறன் இல் விழையாமை) அறவோரின் கடமை ஆகின்றது.
உலகத்தில் பிறருக்குத் தீங்கு செய்யக்கூடாது என்ற அற
நூலின் முடிவையும் பிறருடைய உரிமையைக் கெடுக்கக்
கூடாது என்ற பொருள் நூலின் முடிவையும் ஆராய்ந்து
கண்டவர்களின் வாழ்க்கையில் பிறனுடைய மனைவியை
விரும்பி ஒழுகும் அறியாமை இல்லை :

**பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல்.** (141)

அறநெறி தவறி வாழ்வோர் பலவகைப்படுவார்கள் ;
அவர்களுள் பிறன்மனைவியை விரும்பிப் பிறன்வாயிலில்
சென்று நிற்பவர்களே கீழ்ப்பட்டவர்கள் ; அவர்களைப்
போல் பேதைகள் வேறு எவரும் இல்லை. தம்மை நல்லவர்
என்று தெளிந்து ஐயப்படாமல் வீட்டில்இடம் கொடுத்தவரின்
மனைவியிடம் நெறி தவறி நடக்கின்றவர்களைப் பிணம்
போல் கருதி ஒதுக்க வேண்டும் ; அவர்கள் உயிருடன் இருந்
தாலும் இறந்தவர்களே ஆவார்கள் ;

**அறன்கடை நின்றருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல்.** (142)



**விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தார்இல்
தீமை புரிந்தொழுகு வார்.** (143)

ஒருவர் எவ்வளவு பெருமை உடையவராக இருந்தாலும்
பயன் என்ன? தினையளவும் எண்ணிப் பார்க்காமல் காமத்
தால் மயங்கிப் பிறனுடைய மனைவியை விரும்பினால் அந்தப்
பெருமையெல்லாம் போய்ச் சிறுமையே வந்துசேரும். பிறன்
மனைவியை அடைவது எளிதில் கைகூடுகின்றது என்ற கார
ணத்தால் அறத்தை மறந்து பிறன்மனைவியை நாடுகின்றவன்
எக்காலத்திலும் தீராத பெரும்பழியை அடைவான். பகை
பாவம் அச்சம் பழி என்ற நான்கும் பிறன்மனை விழைகின்
றவனிடம் நீங்காமல் சேரும் :

**எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்
துணையும்
தேரான் பிறனில் புகல்.** (144)

**எளிதென இல்இறப்பான் எய்தும் எஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.** (145)

**பகைபாவம் அச்சம் பழிஎன நான்கும்
இகவாவாம் இல்இறப்பான் கண்.** (146)

அறநெறிப்படி இல்வாழ்ககை நடத்துகின்றவன் பிற
னுக்கு உரியவளின் பெண்மையை விரும்பாதவனே. பிறன்
மனைவியைக் காமத்தோடு நோக்காமல் வாழ்தல் பெரிய
ஆண்மையாகும் ; இந்தப் பேராண்மையே சான்றோர்க்கு
அறமுமாகும் ; நிறைந்த ஒழுக்கமுமாகும் :

**அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.** (147)

**பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு.** (148)

காம மயக்கத்தோடு பிறன் மனைவியை நோக்கும் நோக்கமே
ஒழுக்கக்கேட்டிற்கு வழிவகுத்து அவனுடைய மனத்தையும்

கெடுப்பது ஆகையால், அவ்வாறு நோக்காமல் வாழ்வதைத் திருவள்ளுவர் போற்றிக் கூறுகின்றார் ; பேராண்மை என்கின்றார் ; அறம் என்கின்றார் ; நிறைந்த ஒழுக்கம் என்கின்றார்.

பிறர்உரிமைக்கு இடையூறு செய்யாதவர்களுக்கே உலக நன்மையின் உரிமை உண்டு. ஆகையால், இந்தப் பரந்த உலகத்தில் நன்மைக்கு உரிமை உடையவர் யார் என்றால், பிறனுக்கு உரியவளாகிய ஒருத்தியின் தோளைச் சேராதவரே ஆவர் :

**நலக்குரியார் யார்எனின் நாமநீர் வைப்பின்**
**பிறர்க்குரியாள் தோள்தோயா தார். (149)**

## பொறையுடைமை

பொறுமையைப் போற்றுகின்றவர் நிலத்தைப் பார்த்துக் கற்க வேண்டும். நிலம் தன்னை வெட்டித் தோண்டுகின்றவரையும் விழாமல் தாங்குகின்றது ; அதனால் நிலத்தின் ஆற்றல் குறைவதில்லை ; அது போல் தம்மை இகழ்வாரைப் பொறுத்துக்கொள்வதே சிறந்த அறம். அவ்வாறு பொறுக்கப் பொறுக்க ஆற்றல் வளருமே அல்லாமல் குறையாது. (விருந்தினர்க்கு உதவாமல் வாழ்தல் வறுமையுள் வறுமை ஆவது போல்) அறியாமையால் தீமை செய்வாரைப் பொறுத்துக்கொள்வது வல்லமையுள் வல்லமையாகும் :

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. (151)

இன்மையுள் இன்மை விருந்தொரால் ; வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. (153)

தீமை செய்தவர்க்குத் தீமையே செய்து அவர்களைத் தண்டிக்கலாம். அதனால் பயன் என்ன ? தண்டித்தவரின்



மனமும் கெடும் ; தண்டிக்கப்பட்டவரின் மனமும் கெடும் ; அவர்களைத் திருத்தவும் முடிவதில்லை ; தாமும் திருந்துவதில்லை. தவிர, தண்டித்தவர் சினத்தால் அவ்வாறு செய்கின்றார் ஆகையால், மனவலிமை அற்றவராகக் கருதப்படுவார் ; பொறுத்தால் மன வலிமை உடையவர் என்று விளங்குவார். அதனால் சான்றோர், தீமைக்குத் தீமை செய்து ஒறுத்தவரை ஒரு பொருளாக மதிப்பதில்லை ; பொறுத்தவரையே பொன் போல் நன்கு போற்றி மதிப்பார்கள். இது தவிர உள்ளத்தளவில் இன்பம் உற்றவர் யார் என்பதும் ஆராயலாம். ஒறுத்தவர்க்குக் கிடைப்பது, சினம் கொண்டு ஒறுத்த அந்த ஒருநாள் இன்பமே ; பொறுத்தவர்க்கோ நிலைத்த இன்பமும் உண்டு ; உலகம் அழியும் வரைக்கும் புகழும் உண்டு. ஆகையால், பிறர் தீமை செய்த போதிலும், அதற்காக அவர்மேல் சினம் கொள்ளாமல், அந்தத் தீய செயலால் அவர்க்கு வரக்கூடிய துன்பத்திற்காக மனம் வருந்தி, பதிலுக்குத் தீமை செய்யாமலிருப்பதே அறம் ஆகும். தீமை செய்தவரை எதிர்த்து அடக்கி வெல்ல வேண்டும் என்று சிலர் முயல்வார்கள். மனச் செருக்கினால் அவர் தீமை செய்கின்றார் என்பதை அறிந்தும் அவரை எதிர்ப்பதால் பயன் என்ன ? அதைவிடத் தம் பொறுமையால் பொறுத்திருப்பதே வெல்லும் வழியாகும் :

**ஒருத்தாரை ஒன்றாக வையாரே ; வைப்பர்**
**பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து. (155)**

**ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம்; பொறுத்தார்க்குப்**
**பொன்றுந் துணையும் புகழ். (156)**

**திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து**
**அறனல்ல செய்யாமை நன்று. (157)**

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல். (158)

அன்புடைமை உயிர்வாழ்க்கைக்கு அடிப்படையான அறம் என்று கண்டோம். அவ்வாறு அன்பு உடையவராய் வாழும்போது, தமக்கு உதவி செய்தவரிடத்தில் அன்பு செலுத்துவது எல்லோருக்கும் முடியும்; உதவி செய்யாதவரிடத்திலும் அன்பு செலுத்துவது சிலரால்தான் முடியும்; உதவி செய்வதற்கு மாறாகத் தீமையே செய்தவரிடத்திலும் அன்பு செலுத்துவது மிகச் சிலரால்தான் முடியும். இவ்வாறு தீமை செய்தவரிடத்திலும் அன்புடன் ஒழுகுவதே உள்ளத்தின் வலிமையையும் தூய்மையையும் காட்டுவது; இதுவே உயர்ந்த அன்பின் அறிகுறி. பற்றற்றுத் துறவிகளாய் வாழ்வோர் அடையவேண்டிய பரந்த தூய அன்பு நிலையை – அருள்நிலையை— இவர்கள் அடைந்துவிட்டார்கள் என்றே கருதவேண்டும். ஆகையால், நெறிகடந்து பேசுகின்றவரின் கொடுஞ்சொற்களைப் பொறுத்துக்கொள்ளும் அன்பு உள்ளவர்கள் துறந்தவர்களைப் போல் தூய்மை பெற்றவர்களே ஆவார்கள். இந்த இருவகையாரில் எவரால் உலகத்திற்கு நன்மை என்று எண்ணிப்பார்க்கும்போது வேறுபாடும் தெரிகின்றது. உண்ணும் உணவு முதலியவற்றையும் விட்டுத் தவம் செய்கின்றவர்கள் தம் நன்மை கருதியே உடல் துன்பத்தைப் பொறுக்கின்றார்கள்; ஆனால் இவர்களோ பிறர் நன்மையைக் கருதி அன்பு பூண்டு அவர்களின் கொடுமையைப் பொறுக்கின்றார்கள்; ஆகையால், பிறர் சொல்லும் கொடுஞ்சொல்லைப் பொறுக்கின்றவர்களுக்கே பெருமை மிகுதி; உண்ணா நோன்பு மேற்கொண்டுள்ளவர்கள் அவர்களுக்கு அடுத்த நிலையில்தான் பெருமை பெறத் தக்கவர்கள்:



துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர். (159)

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின். (160)

இத்தகைய அன்பு வளர வளர, தன்னலம் தேயத்தேய உலகக் குடும்பத்தில் தன் உயிர்க்கும் மற்ற உயிர்க்கும் உள்ள வேற்றுமை உணர்ச்சி மறையும். அப்போது பிறர் செய்யும் தீமையைப் பொறுத்தலே அல்லாமல், மறத்தலும் முடியும். தன் கையாலோ காலாலோ தன் உடலுக்கு ஒரு துன்பம் நேர்ந்தால், அதை மறந்துவிடுவது போல் இதுவும் முடியும். ஆகையால், பிறர்செய்த தீமையை எப்போதும் பொறுப்பது நல்லது; அதைப் பற்றி நினைக்காமலே மறந்து விடுவது அதைவிட நல்லது:

பொறுத்தல் இறப்பினை என்றும்; அதனை
மறத்தல் அதனினும் நன்று. (152)

## அழுக்காறாமை

அன்புடையவர்கள் பிறர் நன்றாக வாழும்போது அதைக் கண்டு மகிழ்வார்கள்; அதுவே அன்பின் நெறியாகும். பிறர் சீருடன் வாழும் வாழ்க்கையைக் கண்டு மனம் பொறுக்காமல் புழுங்குவது அன்பு இல்லாத குறையையே காட்டும். ஆகையால் அறநெறியில் வாழ்வோர்க்குப் பொறாமை கூடாது. ஒருவன் தன் நெஞ்சத்தில் பொறாமை இல்லாமல் வாழும் தன்மையை ஒழுக்கநெறியாகக் கொள்ள வேண்டும். நண்பர் பகைவர் என்ற வேறுபாடும் இல்லாமல், யாரிடத்திலும் பொறாமை இல்லாமல் வாழும் தன்மை பெற்றால், ஒருவன் பெற வேண்டிய சிறந்தபேறுகளுள் அதற்கு நிகரானது இல்லை:

ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு. (161)

விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின். (162)

நெஞ்சத்தில் பொறாமை இருந்தால் அது பிறர்க்குத் தீங்கு செய்யத் தூண்டும். அவ்வாறு தீங்கு செய்தால் செய்தவர்க்கே துன்பம் உண்டாகும். ஆகையால் அறிவுடையோர் பொறாமை காரணமாகத் தீங்கு செய்யமாட்டார்கள். பொறாமை யுடையவர்க்கு வேறு பகையே வேண்டா ; பொறாமையே போதும் ; பகைவர் கெடுதி செய்யத் தவறினாலும் பொறாமை தவறாமல் கேடு விளைவித்துவிடும். அதனால் நெஞ்சில் தோன்றும் பொறாமையைப் பொல்லாத பகையாகக் கருதிப் போக்க வேண்டும் ;

அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து. (164)

அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ; ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது (165)

பிறருடைய இன்பத்தைக் கண்டு மனம் பொறுக்காத தன்மையே பொறாமை ஆதலின், ஒருவர் மற்றவர்க்கு உதவியாகப் பொருள் கொடுப்பதைக் கண்டாலும் பொறாமை ஏற்படுவது உண்டு ; அவ்வாறு பொறாமை கொள்கின்றவன் தான் அழிவதும் அல்லாமல் தன்னைச் சார்ந்தவர்கள் அழிவதற்கும் காரணம் ஆவான் ; அவனுடைய சுற்றம் உணவு உடை முதலியன இல்லாமல் வறுமையால் வாடிக் கெடும் ;

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றி கெடும். (166)



பொறாமைப்படுவதால் ஒரு பயனும் இல்லை. பிறர்க்கு உள்ள நன்மையையும் இன்பத்தையும் தான் அடைவதாக இருந்தாலும் பொறாமைப்படலாம். பொறாமைப் படுவதால் உள்ள வளமும் கெடுமே அல்லாமல் முன்னேற வழி இல்லை. பொறாமை உள்ள நெஞ்சத்தான் ஆக்கம் பெற்றாலும், அல்லது பொறாமை இல்லாத நேர்மையாளன் அழிவு உற்றாலும் அவை இயற்கை அல்ல ; என்ன காரணமோ என்று ஆராயத்தக்கவை. ஆனால், பெரும்பாலும், பொறாமைப் பட்டு முன்னேறியவர்களும் இல்லை ; பொறாமை இல்லாதவர்களாய் வாழ்ந்து முன்னேறாமல் தாழ்ந்தவர்களும் இல்லை :

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். (169)

அழுக்கற்று அகன்றாரும் இல்லை ; அஃதில்லார்
பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல் (170)

வெஃகாமை

பிறர்பொருள் கண்டு பொறாமைப்படுதலே குற்றமான போது, பிறர்பொருளை வெளவக் கருதுவது குற்றம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. அன்புடையவர் பிறர்க்குப் பொருள் கொடுத்து உதவுவாரே அல்லாமல், பிறர்க்கு உரிமையான பொருளை வெளவிக் கொள்ளக் கருதார். தம் பொருள்போல் பிறர் பொருளையும் போற்றுவதே நடுநிலைமை உடையவர் கொள்கை. நடுநிலைமை இன்றிப் பிறருடைய நல்ல பொருளை வெளவக் கருதினால், அதனால் ஒருவனுடைய குடியும் அழியும் ; குற்றங்களும் அப்பொழுதே விளையும். நடு நிலைமையிலிருந்து கோணுவதற்கு நாண வேண்டும் ; அவ்வாறு நாணுவோர் பிறர்பொருளால் தமக்கு

ஏற்படும் பயனை விரும்ப மாட்டார்கள் ; அந்தப் பயனை விரும்பிப் பழியான செயல்களைச் செய்ய மாட்டார்கள் :

**நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்**
**குற்றமும் ஆங்கே தரும். (171)**

**படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்**
**நடுவன்மை நாணு பவர். (172)**

பிறர் பொருளை வெளவுதலால் வரும் இன்பம் சிறிது ; அறநெறியில் வரும் இன்பமோ பெரிது. ஆகையால், அற வோர் நிலையில்லாத சிறிய இன்பத்தை விரும்பி அறம் அல் லாத செயல்களைச் செய்ய மாட்டார்கள். புலனடக்கம் இல்லாத காரணத்தால் பிறர்பொருளை விரும்பிச் சிறிய இன்பத்தைப் பெற மனம் அலையும். ஆனால் புலன்களை வென்ற குற்றமற்ற அறிவுடையோர், வறுமை உற்ற காலத்திலும், 'நம்மிடம் பொருள் இல்லையே' என்று கவலை யுற்றுப் பிறர்பொருளை விரும்பமாட்டார்கள் :

**சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே**
**மற்றின்பம் வேண்டு பவர். (173)**

**இலம் என்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற**
**புன்மையில் காட்சி யவர். (174)**

நுட்பமாய் அமைந்து பல நூல்களையும் கற்று விரிவாக வளர்ந்த அறிவு உடையவர் பிறர்பொருளை விரும்பாமல்வாழ வேண்டும். அவர்களும் பொருளை விரும்பி அதற்காக நெறி யற்ற செயல்களை யாரிடத்திலும் செய்தால், நுட்பமானதாய் விரிவுடையதாய் வளர்ந்த அந்த அறிவால் பயன் என்ன ? அவர்கள் அறிவில்லாத மக்களைப் போன்றவர்களே ஆவார்கள் :

**அஃகி அகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்**
**வெஃகி வெறிய செயின் ? (175)**



பொருள் அருள் என்னும் இரண்டனுள் அருளே சிறந்தது என்று நம்பித் தெளிந்து அதையே விரும்பி அதற்குரிய அறநெறியில் நின்றவர்கள் பிறர்பொருளை விரும்பி அலையக் கூடாது. அவர்கள் பிறர்பொருளை விரும்பித் தீய வழிகளை எண்ணுவார்களானால், அவர்களுடைய வாழ்க்கை கெடும் :

**அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்**
**பொல்லாத சூழக் கெடும். (176)**

அறிவுடையவர்களும் அருளுடையவர்களும் பிறர்பொருளை நாடி அலையக் கூடாது என்று திருவள்ளுவர் அறிவுறுத்து கின்றார். அறிவை நாடியவர்களும் அருளை நாடியவர்களும் பிறருடைய பொருளுக்காக அலைவார்களானால், அறிவோ அருளோ இன்னதென்று அறியாத மற்ற ஏழை மக்களின் நிலைமையை என்ன என்று சொல்லுவது ? அதனால் திருவள்ளுவர் அறிவில்லாத ஏழை மக்களுக்கு ஒன்றும் அறிவுறுத்தாமல் அமைதியுறுகின்றார். தாமும் திருந்தி உலகத்தையும் திருத்தவல்ல அறிவாளிகளுக்கும் அருளாளர் களுக்கும் மட்டுமே இவ்வாறு அறிவுரை கூறத் துணிகின்றார்.

பின்விளைவதைப் பற்றி எண்ணாமல் பிறர்பொருளை வெளவக் கருதினால் அது அழிவைத் தரும் ; பிறர்பொருளை நமக்கு உரியது அன்று என்று அதை விரும்பாமல் நிற்கும் பெருமையே வாழ்க்கையில் வெற்றியைத் தரும் :

**இறல்ஈனும் எண்ணாது வெஃகின் ; விறல்ஈனும்**
**வேண்டாமை என்னும் செருக்கு. (180)**

**புறங்கூறாமை**

பிறரைக் கடிந்து கூறுதல் வேறு ; இகழ்ந்து பேசுதல் வேறு. கடிந்து கூறுவதில் அன்பு உள்ளது ; திருத்தவேண்டும் என்ற

நோக்கம் உள்ளது. இகழ்ந்து பேசுவதில் வெறுப்பும் பகையுமே உண்டு; திருத்த வேண்டும் என்ற நோக்கம் இல்லை. ஆகையால் இகழ்ந்து பேசுவது அறம் அன்று: கடிந்து கூறுவதையும் இன்சொற்களால் கூறவேண்டும் என்று கருதும் திருவள்ளுவர், இகழ்ந்து பேசுவதை அறவே விலக்கு கின்றார்; அதிலும் பிறர்முன்னிலையில் அவர்களை இகழ்ந்து பேசுவதையும் கடந்து அவர்கள் இல்லாதபோது புறத்தே பழித்துக் கூறுவது பெருங்குற்றம் என்கிறார்.

புறத்தில் பழித்துக்கூறி நேரில் கண்டபோது பொய்யாகப் பழகுவது வஞ்சகம்; அது அன்பான வாழ்க்கைக்கு முற்றிலும் முரண்பட்டதாகும். புறத்தே இகழ்ந்துரைத்து நேரில் கண்ட போது நண்பர் போல் பொய்யாக நடித்துச் சிரித்துப் பழகுதல் தீமையுடையது; அது, அறத்தைக் கைவிட்டு அறமல்லாத வற்றைச் செய்வதைவிட மிக்க தீமையுடையது. இவ்வாறு காணாதபோது பழித்துச் சொல்லிப் பொய்யாக நடித்துப் பயன் அடைந்து அதனால் உயிர்வாழும் நிலைமை ஒருவனுக்கு நேர்வதாக வைத்துக்கொள்ளலாம்; அப்போதும், அவ்வாறு உயிர்வாழ்வதைவிட, பொருள் இல்லாமல் வறுமையுற்று இறந்துவிடுவது நல்லது; அந்தச் சாவு அவனுக்கு அறநெறிப் பட்ட நன்மையைத் தரும்; ஆகையால் அதுவே மேலானது:

அறன்அழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறன்அழீஇப் பொய்த்து நகை. (181)

புறன்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறம்கூறும் ஆக்கம் தரும் (183)

ஒருவனுடைய எதிரில் நின்று கண்ணோட்டம் இல்லாமல் கடிந்து சொன்னாலும் சொல்லலாம்; ஆனால் அவன்



எதிரில் இல்லாதபோது பின்வரும் தீமையை ஆராயாமல் பழிச்சொல்லைச் சொல்லக் கூடாது:

கண்நின்று கண்அறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல. (184)

ஒருவன் அற நூல்களைப் படிக்கலாம்; அறத்தைப் புகழ்ந்து பேசலாம்; அறவோனைப் போல் நடிக்கலாம். ஆனால் அவனுடைய வாயிலிருந்து வரும் சொல்லால் நெஞ் சத்தின் நிலைமை வெளியாகும்; புறத்தே இகழ்ந்து பேசும் குறைபாடு இருந்தால், அதனால் அவன் நெஞ்சத்தில் அறம் இல்லை என்பதை அறியலாம்!

அறம்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையால் காணப்படும். (185)

மற்றவனைப் பற்றிப் புறத்தே பழித்துப் பேசுகின்ற ஒருவன் இவ்வாறே மற்றவனால் பழித்துக் கூறப்படுவான்; மற்றவன் இவனைப் பழிக்கும்போது, இவன் வருந்தும்படி யான பழிகளை ஆராய்ந்து கூறிப்பழிப்பான். ஆகையால் புறங் கூறுகின்றவன் தனக்குத்தானே தீமை தேடிக் கொள்வான். புறங்கூறுவோர் நட்பு முறைக்குப் பொருந்தாதவர்கள்; மகிழு மாறு இன்சொல் பேசி நட்புக்கொள்ளும் தன்மை இவர்களுக் குத் தெரியாது; ஆகையால் நண்பர்கள் தம்மைவிட்டு விலகு மாறு இவர்கள் புறங்கூறிப் பிரித்துவிடுவார்கள். தம்மோடு நெருங்கிப் பழகிய நண்பர்களின் குற்றத்தையும் இவ்வாறு தூற்றுந் தன்மை உடையவர்கள் அயலாரிடம் எப்படி நடந்து கொள்வார்களோ? ஆனால் புறங்கூறுகின்றவனை உலகம் பொறுத்துக் கொண்டுதான் இருக்கின்றது; அதுதான் உலகத்தின் அறம்போலும்;

பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
திறன்தெரிந்து கூறப்படும். (186)

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர். (187)

துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு ? (188)

அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை ? (189)

புறங்கூறுவோர் மற்றவர்களின் குற்றங்களைக் காண்பது போல் தம் குற்றத்தையும் காண முடியுமானால், உயிர்க்குத் துன்பம் உண்டோ ? அவ்வாறு தம் குற்றத்தை ஆராயத் தொடங்கினால், புறங்கூறுவதும் ஒரு குற்றம் என்பதை உணர்ந்து வெறுத்து அதைக் கைவிடுவார்கள் ; அதனால் திருந்தி நன்மை அடைவார்கள் :

ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு ? (190)

பயனில சொல்லாமை.

பயனில்லாத சொற்களைச் சொல்லிப் பழகுகின்றவன், கள்ளுண்பவனைப் போலவும் சூதாடுபவனைப் போலவும் காலத்தை வீணாக்கி, ஆற்றலையும் வீணாக்கி, கடமையையும் மறக்கின்றான் ; அதனால் அவன் அடையும் பயனோ பொய்யான இன்பம் ; தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்ளும் போலி இன்பம். அறத்தைப் போற்றி வாழ வேண்டியவன் இவ்வாறு வீண்வாழ்வு வாழக் கூடாது.

பயனில்லாத சொற்களைப் பேசிக்கொண்டிருந்தால் கேட்பவர்க்கும் மெல்ல மெல்ல வெறுப்பு ஏற்படும் ; பிறகு



எல்லோராலும் அவன் இகழப்படுவான். பலர்முன் பயனில்லாத சொற்களைப் பேசிக்கொண்டிருப்பது நண்பனிடத்தில் விரும்பத் தகாதவற்றைச் செய்வதைவிடத் திங்காகும் :

பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும். (191)

பயனில பல்லார்முன் சொல்லல் நயனில
நட்டார்கண் செய்தலின் தீது. (192)

வாய்ச்சொற்கள் நெஞ்சநிலையைக் காட்ட வல்லவை. நெஞ்சில் அறநினைவு இருந்தால் பயனில்லாத எண்ணங்கள் தோன்றா ; அந்த எண்ணங்களின் விளைவான பயனில்லாத சொற்களைப் பேசுதலும் இயலாது. நாவடக்கம் இல்லாமலும் மன அமைதி இல்லாமலும் அலையும் நிலையிலேயே பயனில்லாத சொற்கள் வாயில் பிறக்கும். ஆகவே பயனில்லாத சொற்களை ஒருவன் விரிவாகப் பேசும் பேச்சு, அவன் அறம் இல்லாதவன் என்பதை அறிவிக்கும். அந்தச் சொற்களைப் பாராட்டிக் கொண்டிருப்பவனை மனிதன் என்றும் சொல்லக் கூடாது; மக்களுக்குள் காணப்படும் பதர் என்றே சொல்ல வேண்டும் :

நயனிலன் என்பது சொல்லும் பயனில
பாரித்து உரைக்கும் உரை. (193)

பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்;
மக்கட் பதடி எனல். (196)

வாழ்க்கையின் அரிய பயன் இன்னது என்று ஆராயும் அறிவுடையோர், பெரும்பயன் இல்லாத சொற்களைச் சொல்ல மாட்டார்கள். மயக்கம் தீர்ந்த மாசற்ற அறிவுடையோர் பொருளற்ற சொற்களை மறந்தும் பேச மாட்டார்கள். ஆகவே பயனுள்ள சொற்களையே சொல்ல

வேண்டும்; பயனற்ற சொற்களைச் சொல்லக் கூடாது. [பேசுவதால் பயனுண்டா என்று ஆராய்ந்து அறிந்த பிறகே வாய் திறந்து பேச வேண்டும்; இல்லையேல் நாவடக்கத்தோடு (மௌன நிலையில்) அமைதியுற வேண்டும்] :

அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல். (198)

பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார்மருள் தீர்ந்த
மாசறு காட்சி யவர் (199)

சொல்லுக சொல்லில் பயனுடைய; சொல்லற்க
சொல்லில் பயனிலாச் சொல். (200)

உலகத்தில் செயற்கரிய செயல் செய்த பெரியோர்கள் பலரும் சில சொற்கள் சொல்வதிலேயே பயன் கண்டவர்கள். ஆகையால் பயனில்லாத பல சொற்கள் சொல்வது பண்படாத மனத்தின் குறையாகும் என்று திருவள்ளுவர் உணர்ந்தே, அந்தக் குறையைப் போக்கி மனத்தைத் தூய்மையுறச் செய்யவேண்டும் என்று பயனிலசொல்லாமையை அறமாக எடுத்துரைத்துள்ளார்.

### தீவினையச்சம்

விதைக்கப்படுவது எதுவோ அதுவே விளைந்து பயன் தரும். அதுபோல், நல்ல செயல் நன்மையே பயக்கும்; தீய செயல் தீமையே பயக்கும்; ஆகையால் தீயவை என்றால் அஞ்ச வேண்டும்; அழிவு செய்யும் தீ அப்போது அந்த இடத்தில் மட்டும் தீமை செய்யும்; ஆனால் தீய செயல் வேறு காலத்திலும் வேறு இடத்திலும் வந்தும் தீமை செய்யும்; ஆகையால் தீயைவிட மிகுதியாகத் தீயசெயலுக்கு அஞ்சவேண்டும் இதை உணர்வதே அறிவின் பயன். அறிவு



நிலைகள் பலவற்றிலும் தலையானது எது என்றால், பகைவர்க்கும் தீமை செய்யாமல் விடுவதே ஆகும்:

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். (202)

அறிவினுள் எல்லாம் தலைஎன்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல். (203)

தீமை செய்வது மட்டும் அன்று, தீமை எண்ணுவதும் கூடாது. தீய எண்ணம் எண்ணுவதும் வீண் போகாது; எண்ணத்தளவில் விதைத்த தீமை விளைந்தே தீரும். இது அறத்தின் சட்டம்; மீற முடியாத சட்டம். ஆகையால், மறந்தும் மற்றவனுக்குக் கெடுதியானதை எண்ணக் கூடாது; எண்ணினால் எண்ணியவனுக்குக் கெடுதி விளையுமாறு அறம் எண்ணிவிடும்:

மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்
அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு. (204)

ஒருவன் வறுமையால் வாடும்போதும் பசித்துன்பம் முதலியவற்றால் வருந்தும்போதும் தீமை செய்வதாவது துன்பத்தைப் போக்கிவிடத் தோன்றும். அவ்வாறு வறுமையை எண்ணித் தீமை செய்வதும் கூடாது: செய்தால், அப்போது வறுமை தீர்வதுபோல் இருந்தாலும், மறுபடியும் வறியவனாகவே வாழ நேரும்; ஆகையால் வறுமைக்கு மருந்து என்று நம்பியும் தீயவை செய்யக்கூடாது:

இலன் என்று தீயவை செய்யற்க; செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து. (205)

ஒவ்வொருவரும் துன்பம் இல்லாமல் இன்பமாக வாழவேண்டும் என்று விரும்புகின்றனர்; இவ்வாறு விரும்புவதைத் தவிர, அதற்கு உரிய வழியைத் தேடிக்கொள்வதில்லை.

துன்பங்கள் தன்னை வருத்தக்கூடாது என்று விரும்புகின்ற வன் மற்றவர்களிடம் தீய செயல்களைச் செய்யாமல் வாழ வேண்டும். அதுவே அதற்கு உரிய வழி. ஏன் எனில், புறத்தில் தோன்றும் பகை எவ்வளவு பெரும்பகையாக இருந்தாலும் ஒருவாறு ஓடி ஒளிந்து தப்பித்துக் கொள்ளமுடியும் ; தீவினையாகிய பகை விட்டுநீங்காமல் தொடர்ந்து வருத்தியே தீரும். தீயவை செய்தவர்களைக் கேடு தொடர்ந்து செல்லும்; ஒருவனுடைய நிழல் எங்குச் சென்றாலும் விடாமல் அடியின் கீழ் தங்கியிருப்பது போல் தீமையும் செய்தவனை விடாமல் தொடரும். ஆகையால் தன்னைத்தான் விரும்பிக் காத்துக் கொள்ள வேண்டுமானால், தீய செயல் சிறிதளவும் செய்யாமல் காத்துக்கொள்ள வேண்டும் :

தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான். (206)

எனைப்பகை உற்றாரும் உய்வர் ; வினைப்பகை
வீயாது பின்சென்று அடும். (207)

தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடியுறைந் தற்று. (208)

தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால். (209)

## ஒப்புரவறிதல்

எவ்வளவு அறிவு ஆற்றல் உடையவனும் இந்த உலகத்தில் பிறர் உதவியில்லாமல் வாழ முடியாது. அவன் வாழும் வீடு பலருடைய உழைப்பால் கட்டப்பட்டது. அதற்காகத் தேவையாக இருந்த இரும்பு முதலியவை எந்த எந்த இடங்களிலோ எவர் எவர் உழைப்பாலோ கிடைத்தவை. அந்த



வீட்டிற்கு உரிய கற்களை உடைத்துத்தந்தவர் பலர் செங்கல் ஓடு முதலியவற்றை அறுத்து அமைத்தவர் பலர் ; அவன் உண்ணும் உணவுப்பொருள்களை விளைத்துத் தந்தவர்பலர் ; அவற்றின் விளைவுக்காக உழவு முதலியவற்றைச் செய்யக் காரும் கலப்பையும் செய்து அமைத்தவர் பலர்; அவ்வாறு உழுது விளைந்த உணவுப் பொருளை உரிய இடங்களில் கொண்டுபோய்ச் சேர்த்தவர் பலர் ; அவற்றைப் பதம்படுத்தியவர் பலர் ; சமைப்பதற்கு உரிய கருவிகளைச் செய்து உதவியவர் பலர் ; விறகு முதலியன தந்தவர் பலர். அவனுக்கு வேண்டிய ஆடை முதலியவற்றை நூற்றும் நெய்தும்உதவக் காரணமாக இருந்து உழைத்த தொழிலாளிகள் பலர் ; யந்திரத்தால் நூற்றும் நெய்தும் தரப்பட்ட ஆடையாயின், அந்தத் தொழிற்சாலை, அதற்கான கருவிகள், கருவிகளைச் செய்து தந்த தொழிற்சாலைகள் முதலியவற்றிற்கு உரிய உழைப்பு எவ்வளவோ! அவன் கல்விகற்று அறிவுவளர்க்கக் காரணமான நூல்கள் எத்தனைபேர் உழைப்பால் ஆக்கப்பட்டவை! எழுதிய ஆசிரியரின் உழைப்பு, அவருடைய வாழ்வுக்குத் துணையாக உதவியவர்களின் உழைப்பு, அச்சிட்ட தொழிலாளிகளின் உழைப்பு, காகிதம் செய்து உதவிய தொழிலாளிகளின் உழைப்பு, காகிதத்திற்கு உரிய சணல் முதலியவற்றை விளைவித்தவர்களின்உழைப்பு, அச்சுப் பொறிமுதலியவற்றையும் மை முதலியவற்றையும் உதவிய தொழிலாளிகளின் உழைப்பு - இவ்வாறே எண்ணிச் செல்லச் செல்ல, பற்பலருடைய உதவியால்பெற்ற நூல்களைக் கற்றே அறிவை வளர்க்கின்றான் என்பது விளங்கும். எழுதுகோல் முதலிய ஒவ்வொரு பொருளையும் ஆராய்ந்தால், ஒவ்வொன்றிலும் நூற்றுக்கணக்கானவரின் உழைப்பு அடங்கியிருத்தலைக் காணலாம். ஆகவே உலகில் பலருடைய உழைப்பாலாகிய உதவி இல்லாமல் தனி ஒருவன் வாழ்க்கை நடத்தமுடியாது. இந்த உண்மையை

உணர்ந்தவர்க்குத் தம் வாழ்க்கைமுழுதும் பிறர்க்குப் பயன்பட வேண்டும் என்ற ஆர்வம் பிறக்கும் கைம்மாறு கருதாமல் பலர்க்கும் உதவவேண்டும் என்ற நல்லெண்ணம் இயல்பாக அமைந்துவிடும். அவர்களே ஒப்புரவு அறிந்தவர்கள்.

ஒப்புரவாளர்; வாழ்க்கை மழை போன்றது. பல இடங்களிலிருந்து சேர்த்துக்கொண்ட நீர்த்துளிகளே ஆவியுருவாய் மேகத்தினிடம் உள்ளன. அந்த மேகம் திரும்ப நீர்த்துளிகளை உலகிற்கு உதவுகின்றது. ஆனால், இன்னார்க்கு இன்ன பயன் கருதி என்ற வரையறை இல்லாமல் உதவுகின்றது. அத்தகைய மழைக்கு இந்த உலகம் என்ன கைம்மாறு செய்ய முடியும்? ஒப்புரவாளர் செய்யும் உதவிகளும் அத்தகையவைகளே. அந்த உதவிகளும் கைம்மாறு எதிர் பார்ப்பவை அல்ல. அவர்கள் முயன்று உழைத்துச்சேர்த்த பொருள் எல்லாம் பிறர்க்கு உதவி செய்யும் பொருட்டே ஆகும். இந்த ஒப்புரவுபோல் நன்மையானவற்றை விண்ணுலகத்திலும் பெற முடியாது மண்ணுலகமாகிய இங்கும் பெறமுடியாது. உலகமெல்லாம் ஒரு குடும்பமாய் ஒத்து இயங்கும் தன்மையை ஒப்புரவால் அறிந்தவனே உயிருடன் கூடி வாழும் சிறப்பு உடையவன்: இதை அறியாதவன் உயிருடன் இருந்தாலும் செத்தவருள் ஒருவனாகவே கருதப் படுவான்:

கைம்மாறு வேண்டா கடப்பாடு ; மாரிமாட்டு
என் ஆற்றுங் கொல்லோ உலகு? (211)

தாளாற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செயதற் பொருட்டு (212)

புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல் அரிதே
ஒப்புரவின் நல்ல பிற. (213)



**ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் ; மற்றையான்
செத்தாருள் வைக்கப்படும்.**

உலகம் வாழவேண்டும் என்று விரும்புகின்ற பேரறிஞனிடம் செல்வம் சேருமானால் அது ஊரார் நீருண்ணும்குளம் நீர் நிறைந்ததைப் போன்றது. வெள்ளம் வந்து நிறைந்திருந்தபோது ஊரார்க்கு நீர் உதவியது போலவே, நீர் சுருங்கிக் குறைந்த காலத்திலும் குளம் ஊரார்க்கு உதவிக் கொண்டே இருக்கும். அதைப் போன்றதே ஒப்புரவு மேற்கொண்ட அறிஞரின் வாழ்க்கை. அவர்கள் உலகத்தார்க்கு உதவுவதே தம் கடமை என்று அறிந்த அறிவு உடையவர்கள் ஆகையால், செல்வம் சுருங்கிய காலத்திலும் ஒப்புரவு போற்றத் தளர மாட்டார்கள் :

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (215)

இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கும் ஒல்கார்
கடனறி காட்சி யவர். (218)

எல்லோரிடத்திலும் அன்புகொண்ட ஒப்புரவாளனிடம் செல்வம் சேருமானால், அது பயனுள்ள மரம் ஊர் நடுவே பழம் நிறைந்து பழுத்ததைப் போன்றது. மரம் பழுத்த காலத்தில் எல்லோர்க்கும் பழம் உதவி, பழம் தீர்ந்தபின் தன் பழங்களை இழந்ததற்காக வருந்தாமல், ஊரார்க்குக் கொடுக்கப் பழம் இல்லையே என்று வாடி நிற்கும். அன்பு மிக்க ஒப்புரவாளன் வாழ்க்கையும் அதைப் போன்றதே ; அவன் செல்வம் இழந்து வறுமை உற்றபோது, தன் வறுமைக்காக வருந்துவதில்லை ; பிறர்க்குச் செய்யத்தக்க உதவிகளைச் செய்ய முடியவில்லையே என்று வருந்துவதே அவனுடைய வறுமையாகும் :

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின். (216)

நயனுடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர
செய்யாது அமைகலா வாறு. (219)

ஒப்புரவாளன் அறிஞனானால் தன்னிடம் வந்து சேரும் செல்வத்தைப் பிறர்க்கு உதவுவான் ; தன் வாழ்வில் உள்ள வற்றை எல்லாம் கொடுத்து உதவுவான் ; குளம் தன்னிடம் சேரும் நீரை ஊரார்க்கு உதவுவதைப் போன்றது இது. ஒப்புரவாளன் அன்புமிக்கவனானால் தன்னிடம் உள்ளவற் றில் சிறந்த பகுதியை எல்லாம் பிறர்க்கு உதவுவான் ; மரம் தன்னிடம் பழுத்த பழங்களை ஊரார்க்கு உதவுவதைப் போன்றது இது ; மரம் தன்னில் ஒரு பகுதியைத் தருவது போல் அன்பு மிக்கவன் தன் வாழ்வில் ஒரு பகுதியைப் பிறர்க்கு உதவுவான். ஆனால் ஒப்புரவின் எல்லை கண்ட பெருந்தகையாளன் அறிவு அன்பு என்பவற்றையும் கடந்து அருள் வடிவாக நிற்பான். அறிஞன் தன்னிடம் சேர்ந்ததைக் கொடுப்பான் ; அன்பன் தன்னில் ஒரு பகுதியைக் கொடுப் பான் ; அருள் மிக்க பெருந்தகையாளனோ, தன்னிடம் சேர்ந்ததையும் தன்னில் ஒரு பகுதியையும் கொடுப்பதோடு தன்னையே முழுவதுமாகப் பிறர்க்குக் கொடுக்கவும் வல்லன். குளம் தன்னிடம் சேர்ந்த நீரைக் கொடுக்கும் ; பழுமரம் தன் பகுதியாகிய பழங்களைக் கொடுக்கும். ஆனால் நோய்களுக்கு மருந்தாகப் பயன்படும் மரமோ, வேர் பட்டை இலை பூ காய் பழம் முதலிய எல்லாவற்றையும் கொடுத்துத் தன்னையே முழுதுமாக அளித்துத் தவறாமல் பயன்படும். அருள் வடிவான பெருந்தகையாளன் செல்வனானால் அவ்வாறு முழுதும் பயன்படுவான். மருந்தாகப் பயன்படும் மரம், வேர் பட்டை இலை பூ முதலிய எல்லாம் பயன்பட்டுத் தான்



இல்லாமல் முழுவதுமே அழிவதும் உண்டு. பெருந்தகை யாளன் ஒப்புரவும் அப்படிப்பட்டதே. ஒப்புரவினால் தன் வாழ்வுக்கே கேடு வருமானால், தன்னை விற்றாவது அந்தக் கேட்டை ஏற்றுக்கொள்ளலாம் என்று அவன் துணிவான்.

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். (217)

ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்கது உடைத்து. (220)

## ஈகை

அன்புடையவர் பிறருடைய வறுமைத் துன்பத்தைக் கண்டு வாளா இருக்க முடியாது. வெறும் பேச்சும் எண்ண மும் பிறருடைய துன்பத்தைத் தீர்க்க முடியாது. ஆகையால் தம்மால் ஆன உதவியைச் செய்து வறுமைத் துன்பத்தைத் தீர்க்க முயல்வதே கடமை ; அதுவே ஈகை எனப்படும். ஈகை என்னும் பெயரால், பொருளுடையவர்க்கே மேன்மேலும் கொடுத்து உதவுவதால் பயன் இல்லை ; அது ஈகையும் ஆகாது. வறியவர்க்குத் தம்மால் இயன்ற ஒன்றை ஈவதே ஈகை ஆகும். வறுமை அற்ற மற்றவர்களுக்குப் பொருள் கொடுத்தல் ஈகை அன்று ; அது ஒரு பயன் நோக்கிக் கொடுத்து வாங்கிக்கொள்ளும் முறையே ஆகும் :

வறியார்க்கொன்று ஈவதே ஈகை ; மற்றெல்லாம்
குறியெதிர்ப்பை நீரது உடைத்து. (221)

ஒருவர் கொடுக்கும் பொருளைப் பெற்று அதனால் வயிறு வளர்க்கும் வாழ்க்கை நல்ல வாழ்க்கை அன்று. அவ்வாறு வாழ்வதற்குக் காரணமான வறுமை ஒழிய வேண்டும் என் பதை 'நல்குர'விலும், வறுமை வந்தாலும் பிறர் உதவியைப் பெறாமல் வாழ்வதே நல்லது என்பதை 'இரவச்ச' த்திலும்

திருவள்ளுவர் விளக்கியுள்ளார். வறுமையற்ற நல்லுலகம்
வர வேண்டும் என்று அவர் விரும்பியபோதிலும் அதுவரை
யிலும் வறியவர்கள் உயிர்வாழ்வது எவ்வாறு என்று இரக்கத்
தோடு எண்ணிய எண்ணங்களையே 'இரவு' என்னும்
தலைப்பில் தெரிவித்து, அவ்வாறு இரப்பவர்க்கு ஈந்து உதவ
வேண்டும் என்னும் கருத்தையே 'ஈகை' என்னும் தலைப்பில்
இங்குக் கூறியுள்ளார். பிறரிடம் பொருள் உதவி பெறாமல்
வாழ வழி அமைப்பது எதிர்கால நல்லுலகம்; அந்த நல்லு
லகம் வரும்வரையில் அவ்வாறு பிறர் உதவி பெறாமல் வாழ
வல்லவர்கள் வாழ்ந்து காட்ட வேண்டும். பிறரிடம் சென்று
கையேந்தி இரக்கும் கொடுமை இல்லாதவாறு அமைவது
எதிர்கால நல்லுலகம்; அந்த நல்லுலகம் வரும்வரையில்
அவ்வாறு வறுமையில் வாடி இரந்து வாழத் தொடங்கிய
வர்கள் கை ஏந்திக் கேட்காதபடி குறிப்பாலேயே அவர்களு
டைய குறையை உணர்ந்து பொருள் கொடுத்துக் கை
ஏந்தும் காட்சி இல்லாமல் செய்ய வேண்டும். இந்தக்
கருத்துக்களையே திருவள்ளுவர் பின்வருமாறு கூறு
கின்றார் :—

பிறரிடம் கொடு என்று கேட்டு அவர் கொடுத்ததைக்
கொள்வது நல்ல வழி என்று யாராவது போற்றிக் கூறி
னாலும் அது வேண்டா; அது தீமையானதே. பிறர்க்குப்
பொருள் கொடுக்கும் ஈகையால் மேலுலகம் கிட்டாமல்
போகும் என்று யாராவது தடுத்தாலும் ஈவதே நல்லது.
அவ்வாறு ஈகையால் உதவும்போது, இரக்கின்ற காட்சிக்கு
இடம் இல்லாதபடி குறிப்பால் அறிந்து கொடுத்து உதவ
வேண்டும். வறியவன் தன்னிடம் வந்து "யான் வறியவன்",
என்னும் துன்பத்தை வாயால் சொல்லாதபடி, அவன்
கேட்பதற்கு முன்னே அறிந்து கொடுக்கவேண்டும்; சிறந்த
பண்புடையவனிடத்தில் இத்தகைய நல்ல ஈகை உண்டு :



**நல்லாறு எனினும் கொளல்தீது ; மேலுலகம்**
**இல்லெனினும் ஈதலே நன்று. (222)**

**இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலனுடையான் கண்ணே உள. (223)**

இரக்கும் காட்சி ஒன்றுதான் துன்பமானது என்று சிலர்
கருதுவார்கள்; இரந்து கேட்கப்பட்டு, இரப்பவரின் முன்னே
ஒருவர் நிற்கும் காட்சியும் துன்பமானதே. 'என்னைப்
போன்ற மனிதன் ஒருவன் என்முன்னே வந்து நின்று இரந்து
கேட்கின்றானே, இது என்ன உலகம்!' என்று உணர வல்ல
வர்க்கே அது துன்பமானது என்பது தெரியும். அந்தத்
துன்பம் எப்போது தீரும்? இரப்பவரின் துன்பம் தீர்ந்த பிறகு
தான் இதுவும் தீரும் இரப்பவரின் முகத்தில் தோன்றும்
மலர்ச்சியைக் கண்டால்தான் இந்தத் துன்பம் தீரும் :

**இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்**
**இன்முகம் காணும் அளவு. (224)**

தவம் செய்வோரின் ஆற்றல் பசித்துன்பத்தைப்
பொறுப்பதே ஆகும். ஆனால், அவர்கள் தம் பசியைப்
பொறுப்பதற்கே பாடுபடுகின்றார்கள். ஈகை உடையவர்
களோ தம் பசியையும் தீர்த்துக்கொண்டு, பிறருடைய பசித்
துன்பத்தையும் ஈகையால் மாற்றும் ஆற்றல் பெற்றிருக்கின்
றார்கள். ஆகையால், தவம் செய்வோரின் ஆற்றலும் ஈகை
யாளரின் ஆற்றலுக்கு அடுத்ததுதான் :

**ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை**
**மாற்றுவார் ஆற்றலின் பின். (225)**

தன்னிடம் உள்ளதைப் பலர்க்கும் பகுத்துக்கொடுத்து
உண்ணப் பயின்றவனைப் பசி என்னும் தீய நோய் அணுக
முடியாது. இவ்வாறு உதவாமல், தம்மிடம் உள்ள

செல்வத்தைப் பெருக்குவதற்காகச் செட்டாக வாழ்ந்து தாம் மட்டும் தனியே உண்டு வாழ்வது வாழ்வு அன்று ; மற்ற வரிடம் சென்று இரந்து வயிறு வளர்க்கும் வாழ்வைவிட இது கொடியது. இரப்பவர் வறுமையால் இரக்கின்றார்கள் ; பொருள் பெற்றவுடன் மகிழ்கின்றார்கள் ; இவர்களோ செல்வம் இருந்தும் வாடுகின்றார்கள் ; ஒருநாளும் மகிழ்ச்சி அடைய வழி இல்லை ; ஆகையால் இரக்கும் வாழ்வைவிட இவர்களின் வாழ்வு துன்பமானது ;

பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்
தீப்பிணி தீண்டல் அரிது· (227)

இரத்தலின் இன்னாது மன்ற நிரம்பிய
தாமே தமியர் உணல். (229)

ஈவதில் ஒரு தனி இன்பம் உண்டு. அந்த இன்பம் குழந்தைகளுக்கும் தெரியும். அதனால் குழந்தைகள் சில வேலைகளில் தம்மிடம் உள்ளதைப் பிறர்க்குக் கொடுப்பதை ஒரு விளையாட்டாகக் கொண்டு மகிழும். ஆனால் இரக்கம் அற்ற செல்வர் சிலர்க்கு அந்த இன்பம் இருப்பது தெரி யாதோ ? அவர்கள் தம் செல்வத்தை ஈயாமல் வைத் திருந்து பிறகு இழந்து வருந்துகின்றார்கள். அறநெறி உணர்ந்தவர்கள் அவ்வாறு ஈயாமல் வாழ முடியாது. சாவது போல் துன்பமானது வேறு இல்லை ; ஆனால் வறிய வர்க்கு ஈகையால் உதவ முடியாதபோது சாவதே இனிய தாகிவிடும் ; இவ்வாறு உணர்வதே அறவோர் இயல்பு.

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை
வைத்திழக்கும் வன்க ணவர் ? (228)

சாதலின் இன்னாதது இல்லை ; இனிதாதூஉம்
ஈதல் இயையாக் கடை. (230)



## புகழ்

திருவள்ளுவர் காலத்தில் புகழ் என்பது ஒருவனுடைய நல்ல பண்புகளையும் நல்ல செயல்களையும் அறிந்தவர்கள் போற்றியுரைக்கும் சொல்லாக இருந்தது. அவன் இறந்தபின் பும் அழியாமல் நிற்பது ஆகையால் அதை எச்சம் (இசை என்னும் எச்சம்-238 ) என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். சிறு சிறு ஊர்களாகவே நாடு அமைந்திருந்த காலம் அது. பெரிய நகரங்களாக நான்கு ஐந்து ஊர்கள் இருந்தபோதிலும், அந்த நகரத்தின் பகுதிகளை சிற்றூர்களைப் போலவே அமைந் திருந்தன. யந்திரத் தொழிற்சாலை, விரைவான போக்கு வரவு முதலியன இல்லாமையால், நாட்டிலுள்ள ஊர் களுக்குள் தொடர்பு இப்போது போல் நாள்தோறும் நாழிகைதோறும் பெரிய நகரங்களை எதிர்பார்த்து வாழ வில்லை. ஊர் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொருவகைத் தனிமையும் முழுமையும் அமைந்திருந்தன. ஆகையால் நகரங் களின் வாயிலில் சிற்றூர்கள் காத்து நிற்கவில்லை. சிற்றூர் களின் அடிப்படையின்மேல் சிற்சில நகரங்கள் அப்போது அமைந்திருந்தன. இப்போது உள்ள நிலைமையோ முற்றிலும் மாறானது. சிற்றூர்களின் அடிமை வாழ்வையும் திக்கற்ற நிலைமையையுமே இப்போது காண்கின்றோம். ஆகையால் இப்போது புகழ் என்பது நகரங்களில் வாழ்வோருக்கு, அல்லது நகரமக்களால் போற்றப்படுவோருக்கு உரியதாக உள்ளது. இதற்குத் துணையாகச் செய்தித்தாள்கள் என்ற நாகரிகக் கருவி ஒன்றும் உள்ளது. செய்தித்தாள்கள் நகரங் களில் நகரமக்களில் செல்வாக்குள்ளவர்களால் நடத்தப் படுவன. நடத்துவோரின் செல்வாக்குக்கு ஏற்றவாறு செய்தித்தாளின் பெருமையும் சிறப்பும் மிகுதியாக இருக்கும்

அந்தச் செய்தித்தாள்களில் எவர் பெயர் வரும்? செல்வாக்கு உள்ளவர்களின் பெயர்களே வரும். கட்சியமைப்பின் வாயிலாக அரசியல் செல்வாக்குப் பெற்றவர்கள், அல்லது பணப் பெருக்கத்தின் வாயிலாகக் கட்சிகளின் ஆதரவைப் பெற்றவர்கள் மட்டுமே செய்தித்தாளில் பெயர் வரக் கூடிய புகழ் நிலை பெறுவார்கள். அவர்களின் பெயர்களையே சிற்றூர்கள் படித்துப்பாராட்டும். செய்தித்தாள்கள் அவர்களைப் புகழ்ந்து எழுதும் புகழுரைகளையே சிற்றூர்களும் புகழ்ந்து சொல்லித் திரியும்.

இது புகழ் என்று கூறத் தக்கதா? பிறனில் விழைகின்றவன் எப்போதும் அழியாமல் நிற்கும் பழியை அடைவான் (145) என்று திருவள்ளுவர் கூறியுள்ளார். ஆனால் பிறனில் விழையும் குற்றம் உடையவர்கள் நகரங்களில் பழிக்கு ஆளாவதில்லை; அவர்களில் செல்வாக்குடையவர்கள் செய்தித்தாள்களால் புகழ் பெறுகின்றார்கள்; பழி மறைகின்றது. ஒறுத்தல் செய்யாமல் பொறுத்தவர்க்குப் பொன்றுந்துணையும் புகழ் உண்டு (156) என்று திருவள்ளுவர் அறிவுறுத்தியுள்ளார். எள்ளளவும் பொறுமை இல்லாதவர்கள் ஆயினும், பலரையும் ஒறுத்துத் துன்புறுத்துகின்றவர்கள் ஆயினும், செல்வமும் செல்வாக்கும் கொண்டு புகழ் தேடுகின்றவர்களுக்கே செய்தித்தாள்களின் துணையால் பெரும் புகழ் கிடைக்கக் காண்கின்றோம். பிறர்பொருளை வெளவிப் பழியான செயல்களைச் செய்யக்கூடாது என்றும், செய்தால் சிறந்த அறிவும் பயனற்றதாகும் என்றும் (172, 175) திருவள்ளுவர் அறிவுரை கூறியுள்ளார். எவருடைய பொருளையும் வெளவி எவ்வாறோ செல்வராய் முன்னேறிய பிறகு, உலகம் அவரைப் புகழ்ந்து பெருமைப்படுத்தவும் அவருடைய அறிவாற்றலைப் போற்றவும் காத்திருக்கின்றது. வறியார்க்கு



ஒன்று ஈவதே ஈகை (221) என்றும், அத்தகைய ஈகையால் வருவதே புகழ் (231, 232) என்றும் திருவள்ளுவர் கூறியுள்ளார். ஆனால் பசி அறிந்து வறியவர்க்கு உதவும் நல்ல செல்வர் மூலைமுடுக்குகளில் பெயர் அறியப்படாமல் ஒடுங்கி வாழ்கின்றார்கள். வறியவர்களை வீட்டுவாயிலிலும் அணுகவொட்டாமல் துரத்தியடித்துவிட்டுத் தமக்கு நிகரான செல்வர்கள் அணுகி அறத்தின் பெயராலோ ஆடம்பரத்தின் பெயராலோ நன்கொடை கேட்கும்போது பெருந் தொகைகளை வழங்குவோர்க்குப் பெரும்புகழ் கிடைக்கின்றது. மக்கள் ஒழுக்கத்தால் மேன்மை அடைவார்கள் என்றும், ஒழுக்கக் கேட்டால் பெரும்பழி அடைவார்கள் என்றும் (137) திருவள்ளுவர் கூறியுள்ளார். ஆனால் உண்மையாக ஒழுக்கம் உடையவர்களைப் பக்கத்து ஊராரும் அறிந்து புகழ வழி இல்லை; சிலரைப் பக்கத்துத் தெருவாரும் அறிவதில்லை. ஆனால் செல்வாக்கும் செல்வம் உடையவர்கள் எவ்வளவு ஒழுக்கக்கேடு உடையவர்களானாலும் அவர்கள் பெரும்புகழ் பெறுவதைக் காணலாம். திருவள்ளுவர் காலத்தில் நல்லொழுக்கம் மேன்மைக்கும் தீயொழுக்கம் பழிக்கும் காரணமாக இருந்த நிலைமை மாறி, இப்போது செல்வம் மேன்மைக்கும் வறுமை பழிக்கும் காரணமாக விளங்கும் நிலைமை வந்துள்ளதாக எண்ண வேண்டியிருக்கிறது.

இவ்வாறு நேர்ந்துள்ள மாறுதலையும் எண்ணினால் புகழை அண்மைப் புகழ் என்றும், சேய்மைப் புகழ் என்றும் இரு வகையாகப் பிரித்து உணரும் முறையின் சிறப்புத் தெளிவாகும். அண்மைப் புகழ் என்பது ஒருவனைச் சுற்றி வாழும் மக்கள் அவனுடைய நற்பண்புகளையும் நற்செயல்களையும் அறிந்து புகழ்வது, சேய்மைப் புகழ் என்பது ஒருவனைச் சுற்றியுள்ளவர்கள் வெறுத்தாலும் பழித்தாலும்,

தொலைவில் உள்ளவர்கள் அவனுடைய உண்மையான பண்புகளை அறியாமல் சிற்சில செயல்களை மட்டும் அறிந்து புகழ்வது. திருவள்ளுவர் காலத்தில் .சிறப்பாக விளங்கியது அண்மைப் புகழ் ஆகும். அக்காலத்தில் சேய்மைப்புகழ் விளங்குவதற்கு வேண்டிய வாய்ப்பு மிகக் குறைவு. இக் காலத்தில் போக்குவரவுப் பெருக்கமும், ஊர்களின் பிணைப்பும், செய்தித்தாள்களின் செல்வாக்கும் புது வகை யில் பெருகியிருத்தலால் சேய்மைப் புகழ் ஓங்க வழி அமைந்தது ; அண்மைப் புகழ் தேயக் காரணம் ஆயிற்று ; திருவள்ளுவர் கூறிய அறநெறியில் வாழ்கின்றவர்களுக்குப் புகழ் பெறும் வாய்ப்பு மிகக் குறைந்தது.

அண்மைப் புகழ் இன்றும் ஓரளவு உள்ளது. நற்பண்பும் நற்செயலும் உடையவராய்ச் சிற்றூர்களில் வாழ்வோரைச் சுற்றுப்பக்கத்தில் உள்ளவர்கள் ஓரளவு அறிந்து புகழ்கின்றார் கள். பேரூர்களில் அவர்களோடு நெருங்கிப் பழகுகின்றவர்கள் மட்டும் அறிந்து போற்றும் நிலைமை உள்ளது.

சேய்மைப் புகழ் உண்மையின் அடிப்படையில் அமைவதும் உண்டு ; உண்மையின் அடிப்படை இல்லாமல் அமைவதும் உண்டு. உண்மையாகவே நல்ல பண்புகளும் நல்ல செயல் களும் நிறைந்த ஒருவருடைய புகழ் அண்மையிலும் பரவி, செல்வாக்கின் காரணமாகச் சேய்மையிலும் பரவுதல் உண்டு. ஆனால் இது மிகச் சிறுபான்மை. பெரும்பான்மையும் தனிப் பட்ட வாழ்க்கையில் ஒழுக்கக்கேடு முதலிய குறைபாடு மிக்கவர்கள் அவற்றைச் எல்லாம் செல்வம் செல்வாக்கு வாயிலாக மறைத்துச் செய்தித்தாள்களைப் பயன்படுத்திக் கொண்டு புகழுடையவர்களாக விளங்க முடிகின்றது.

இத்தகைய சேய்மைப் புகழைப் புகழ் என்னும் தூய பெயரால் குறிப்பதும் பொருந்தவில்லை. ஆகையால் விளம்பரம் என்னும் பெயரால் குறிக்கலாம். ஏன் எனில்,



மருந்து முதலிய பொருள்களை விற்பவர் அவற்றை விளம்பரப் படுத்திப் பயன் அடைவது போல், இவர்களும் தம் பெயரை விளம்பரப்படுத்திப் பயன் அடைகின்றார்கள் ; அல்லது, அந்த விளம்பரத்தால் செய்தித்தாள்களோ கட்சி முதலிய அமைப்புகளோ பயன் அடைகின்றன. மருந்து முதலிய பொருள்களுக்கு வாணிக முறையில் விளம்பரம் செய்தலும் திருவள்ளுவர் காலத்தில் இல்லை ; மக்கள் பெயரைச் செய்தித் தாள்களால் விளம்பரப்படுத்தலும் அக்காலத்தில் இல்லை. ஒரு மருத்துவரிடத்தில் நல்ல யருந்து ஒன்று இருந்தால் அதனால் பயன் கண்டவர்கள் ஒருவர் மற்றொருவரிடமாக ஊர்முழுதும் சொல்வார்கள் ; அப்படியே சுற்றுப்புறத்திலும் மருந்தின் நல்ல பெயர் பரவிவிடும் ; இதுவே பழங்காலத்து மருத்துவர் கண்ட முறை. போலி மருந்துகள் அக்காலத்தில் வாழ முடியாது ; பெயரெடுக்க முடியாது ; தோன்றிய இடத்திலேயே பழிக்கப்பட்டுப் பரவாமல் அழிந்துபோகும். ஆனால் இக்காலத்திலோ பயனுள்ள நல்ல மருந்து மூலையில் முடங்கி ஒருவருக்கும் தெரியாமல் கிடப்பதும் உண்டு ; போலி மருந்து அளவற்ற விளம்பரம் காரணமாக நாடெங்கும் பரவி ஏராளமாக விற்பனை ஆவதும் உண்டு. காரணம் என்ன ? பயனுள்ள நல்ல மருந்து உடையவர் ஏழை மருத்துவராகச் சிற்றூரில் வாழ்வார். போலி மருந்து உடையவர் செல்வராய் நகரத்தில் வாழ்ந்து பல செய்தித்தாள்களிலும் சுவரொட்டி களிலும் படக்காட்சிகளிலும் பரக்க விளம்பரம் செய்யும் ஆற்றலுடையவராய் இருப்பார். இத்தகைய விளம்பரம் இல்லாத காரணத்தால் நற்பண்பும்நற்செயலும் உடையவரின் புகழ் பரவாமல் சிற்றூரில் ஒரு மூலையில் இருக்கலாம் ; ஒழுக்கமுடைய நல்ல செல்வர் செல்வாக்கு இல்லாமல் ஒடுங்கி

யிருக்கலாம் ; ஒழுக்கம் கெட்டவராய் அறத்தை மறந்த செல்வர் நகரத்தில் பலர் அறிய வாழ்ந்து செல்வாக்குப் பெற்று விளம்பரமாக வாழலாம். இந்த நிலைமை இருப்பதால் இக்காலத்தில் புகலைழ நாடி வாழ்வதும் குற்றமாகக் கருதப் படுகின்றது.

திருவள்ளுவர் இக்காலத்து விளம்பரத்தைப் புகழ் என்று கூறுவில்லை. ஒருவனுடைய அறவொழுக்கத்தின் அடிப்படை யாக எழுந்து விளங்குவதையே அவர் புகழ் என்னும் பெயரால் விளக்குகின்றார். அதனால் தான் பொது வாழ்க்கைப் பகுதி யாகிய அரசியல் பற்றிய பொருட்பாவில் அதைக் கூறாமல், அறத்துபாலில் கூறுகின்றார் ; அறத்தின் பகுதியாகவே கருதி விளக்குகின்றார் ; இல்வாழ்க்கை, ஒப்புரவு, ஈகை முதலிய வற்றை அறநெறியின் பகுதிகளாகக் கூறியவாறே அவற்றை அடுத்துப் புகழ் என்பதையும் கூறுகின்றார்.

வறியவர்க்குக் கொடுத்து உதவ வேண்டும் ; அதனால் புகழ்பட வாழ வேண்டும் ; இத்தகைய வாழ்வைத் தவிர உயிர்க்கு வேறு பயன் இல்லை. உலகத்தில் புகழ்ந்து சொல் பவர் சொல்வன எல்லாம், இரப்பவர்க்கு இயன்ற ஒரு பொருளைக் கொடுப்பவர்மேல் நிற்கும் புகழே ஆகும்.

**ஈதல் இசைபட வாழ்தல் அது அல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு. (231)**

**உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று**
**ஈவார்மேல் நிற்கும் புகழ். (232)**

வாழ்க்கையில் ஏதாவது ஒரு துறையில் முன்நின்று தோன்றுவதானால் புகழோடு விளங்க வேண்டும். அத்தகைய நிலைமை இல்லாதவர்கள் அந்தத் துறையில் ஈடுபட்டுத்



தோன்றுவதைவிட ஈடுபடாமல் அமைதியாக ஒதுங்கி யிருப்பதே நல்லது. புகழ் விளங்க வாழ முடியாதவர்கள் தம்மிடம் அதற்கு உரிய நல்ல பண்பும் நல்ல செயலும் இல்லையே என்று தம்மையே நொந்துகொள்ளவேண்டும் ; அவ்வாறு தம்மை நொந்துகொள்வதை விட்டு இகழ்ந்து கூறுகின்றவர்கள் மேல் நோவது ஏன் ?

**தேன்றின் புகழொடு தோன்றுக ; அஃதிலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று. (236)**

**புகழ்பட வாழாதார் தந்நோவார் தன்மை**
**இகழ்வாரை நோவது எவன் ? (237)**

## அருளுடைமை

ஒருவனுக்கு முதலில் தன் குழந்தைகளின்மேல் அன்பு இயற்கையாக ஏற்படும். அந்த அன்பிலே நெஞ்சம் பழகப் பழக, தான் பழகும் மற்றக் குழந்தைகளின்மேலும் படிப் படியாக அன்பு வளரும். அந்த அன்பிலும் நெஞ்சம் தோயத் தோய, உலகத்தில் உள்ள எல்லாக் குழந்தைகளின் மேலும் அன்பு செல்லும். இந்தப் பரந்த அன்பே அருள் என்று சொல்லப்படுவது. குழந்தைகளிடம் அன்பு பரவுவது போலவே, மற்ற எல்லோரிடத்திலும் பரவிப் பரவி அரு ளுணர்வு வளரும் ; மக்களிடத்தில் மட்டும் அல்லாமல் மற்ற உயிர்களிடத்திலும் அருளுணர்வு வளரும். தம் மக்கள் நன்றாக வாழ வேண்டும் என்றும், தம் சுற்றம் நன்றாக வாழ வேண்டும் என்றும் அன்பு வளர்ந்து வளர்ந்து, எல்லோரும் நன்றாக வாழ வேண்டும், எல்லா உயிரும் இன்புற்றிருக்க வேண்டும் என்ற அருள்நோக்கம் அமையும். இத்தகைய அருள் ஒருவனுக்கு அமைவதே மிக அருமை. சிறுது முயன்றவரிடத்திலும் பொருள் அமையும். முயலாதவ

ரிடத்திலும் அமையும், தக்கவரிடத்திலும், அமையும், தகாத
கீழ்மக்களிடத்திலும் அமையும். ஆகையால் பண்பட்டவர்
களிடத்தில் மட்டும் காணப்படும் அருட்செல்வம் செல்வத்தில்
சிறந்த செல்வமாகும் ; பொருட்செல்வம் கீழ்மக்களிடத்திலும்
இருப்பதால் அதற்கு அத்தகைய சிறப்பு இல்லை ;

**அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் ; பொருட்**
**செல்வம்**
**(241)**
**பூரியர் கண்ணும் உள.**

வாழ்க்கையில் நல்ல நெறியில் நின்று உண்மையை
ஆராய்ந்து அருளுடையவராக விளங்க வேண்டும். பல வகை
யில் ஆராய்ந்தாலும் அருளே வாழ்க்கைக்குத் துணையாக
இருக்கின்றது. அது தவிர வேறு துணை இல்லை, எல்லா
உயிர்களையும் போற்றி அருள் செலுத்துவோனுக்குத் தன்
உயிர் அஞ்சத்தக்க தீவ்னை இல்லை.

**நல்லாற்றான் நாடி அருளாள்க ; பல்லாற்றான் (242)**
**தேரினும் அஃதே துணை.**

**மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்என்ப (244)**
**தன்னுயிர் அஞ்சும் வினை.**

எல்லோரும் நன்றாக வாழ வேண்டும் என்பதே அருளாளர்
நோக்கமாக இருப்பதால், அவருடைய நெஞ்சம் தன்னலம்
அற்ற தூய நெஞ்சம் ஆகின்றது. மற்றவர்களின் துன்பமே
தம் துன்பமாகவும், மற்றவர்களின் இன்பமே தம் இன்ப
மாகவும் அவர்கள் உணர்வதால், அவர்களுடைய உயிர்க்கு
வரும் துன்பம் இல்லை. ஏதேனும் இடர் வந்தாலும், அது
அவர்களை வருத்துவதில்லை. அந்த இடரைத் தாம் தாங்கு
வதால் உலகம் இன்பமுறும் என்று எண்ணி மகிழ்ச்சியோடு
அந்த இடரை ஏற்பார்களே அல்லாமல், அதைக் கண்டு
கலங்கித் துன்பம் அடைவதில்லை.



பொருள் இல்லாதவர்களுக்குப் புறவுலக வாழ்க்கை இல்லாதது போல், அருள் இல்லாதவர்களுக்கு அகவுலக வாழ்க்கை இல்லை. பொருள் இல்லாத வறியவர்கள் உண்ணல் உடுத்தல் முதலியவற்றில் குறையுறுவார்கள் ; அருள் இல்லாதவர்கள் எண்ணலிலும் நினைத்தலிலும் இன்பம் இன்றி வருந்துவார்கள். புறவாழ்க்கையில் பொருள் இல்லாதவர்கள் ஒரு காலத்தில் திடீரென்று செல்வம் பெற்றுச் செழிப்பதும் உண்டு ; ஆனால் அருள் இல்லாதவர்கள் அகவாழ்க்கையில் அழிந்தவர்களே ; அவர்கள் செழித்து முன்னேறுவது அரிது :

**அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு**
**இவ்வுலகம் இல்லாகி யாங்கு (247)**

**பொருளற்றார் பூப்பர் ஒருகால் ; அருளற்றார்**
**அற்றார் ; மற்று ஆதல் அரிது (248)**

அருளில்லாதவன் திருந்துவதற்கு ஒரேவழி உள்ளது. அதாவது : தான் தன்னைவிட மெலிந்தவரைத் துன்பப்படுத்தச் செல்லும்போது , தன்னைவிட வலியவர் தன்னைத் துன்புறுத்த வரும்போது தான் படும் துன்பத்தை நினைக்க வேண்டும். அவ்வாறு நினைத்தால் நெஞ்சில் அருளுணர்வு பிறக்கும் :

**வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்**
**மெலியார்மேல் செல்லு மிடத்து. (250)**

### புலால் மறுத்தல்

அருளுடையவன், மக்கள் எல்லோரும் வாழ வேண்டும் என்று எண்ணுவதுடன் நில்லாமல், எல்லா உயிரும் வாழ வேண்டும் என்று எண்ணி, விலங்கு பறவை முதலிய மற்ற உயிர்க்கும் தீங்கு செய்யாமல் வாழக் கருதுவான். அத்தகையவன் தன் உடம்பு வாழ விரும்புவதுபோலவே

மற்ற எல்லா உயிர்களின் உடம்பும் வாழ வேண்டும் என்று
விரும்புவான். புலால் உண்டு உடல் உரம் பெறுவதை பற்றி
எண்ணநேர்ந்தால், ''அந்தப் புலாலும் ஓர் உயிரின் உடம்பு
தானே ! அதை அழித்து இந்த உடம்பை வளர்ப்பதா ?
அது தன்னலமான கொடுமை அன்றோ ?'' என்று எண்ணு
வான். அவ்வாறு எண்ணாமல், தன் ஊனைப் பெருக்குவதற்
காக மற்றோர் உயிரின் ஊனை உண்கின்றவன் எப்படி அரு
ளுடையவனாக இருக்க முடியும் ?

**தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன்உண்பான்**
**எங்ஙனம் ஆளும் அருள் ? (251)**

ஊன் உண்டாலும் நெஞ்சில் அருள் கெடாமல் வாழ
முடியாதா என்று கேட்கலாம். ஓர் உயிரின் உடம்பைக்
கொன்று தின்று சுவை கண்டபிறகு, அந்த மனம் மற்றோர்
உயிரைக் கண்டபோது அருளுணர்வோடு எண்ண முடியுமா ?
அதன் உடம்பையும் உண்ண வேண்டும் என்ற சுவை வேட்கை
தான் பிறக்கும். ஆகையால், அவ்வாறு உண்டவர் மனம் நல்ல
எண்ணம் எண்ணாது ; கொலைக் கருவியைக் கையில்
கொண்டவரின் மனம் கொலையை விட்டு நல்லதை எண்
ணுமா ? புலால் உண்டவரின் மனமும் அப்படிப் பட்டதே ;

**படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன்**
**உடல்சுவை உண்டார் மனம். (253)**

''ஓர் உயிரைக் கொல்வதுதான் மனத்தைக் கெடுப்பது.
புலால் தின்பது அவ்வாறு கெடுக்காது. யாரோ கொல்கின்
றார்கள், அதனால் தின்பது குற்றமன்று'' எனத் தடை கூற
லாம். ஊன் தின்பவர் இல்லையானால், கொல்வாரும் இருக்க
மாட்டார்கள் ; விலைக்கு விற்பவரும் இருக்கமாட்டார்கள் ;



ஆகவே ஊன் தின்பது கொலைக்குக் காரணம் ; அதுகுற்றமே
ஆகும். குற்றமற்ற அறிவு உடையவர், உயிர் நீங்கக் காரண
மாக இருந்த ஊனைத்தின்ன மாட்டார்கள் :

**தினற்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்**
**விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல். (256)**

**செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்**
**உயிரின் தலைப்பிரிந்த ஊன். (258)**

வேள்வி முதலியவற்றைச் செய்து வாழ்க்கையில் சிறப்புப்
பெறுவதைவிட, புலால் உண்ணாத நோன்பால், பெறும்
சிறப்பு மேலானது. நெய் முதலியவற்றைச் சொரிந்து ஆயிரம்
வேள்விகளைச் செய்வதைவிட, ஓர் உயிரையும் கொன்று
புலால் உண்ணாமல் வாழ்வது நல்லது. கொல்லாமல், புலால்
உண்ணாமல் வாழ்கின்றவன் எல்லா உயிரும் கைகூப்பித்
தொழக் கூடிய சிறப்பைப் பெறுவான் :

**அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர்செகுத்து உண்ணாமை நன்று. (259)**

**கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும். (260)**

### தவம்

தனக்கு வரும் துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளல்,
மற்ற உயிர்களுக்குத் துன்பம் செய்யாதிருத்தல் ஆகிய அவ்
வளவே தவத்திற்கு உருவம். அவ்வளவில் அமையாமல் சிலர்
தவக்கோலம் என்று தனியே தேடிக்கொள்கின்றார்கள்.
ஆனால் அந்தத் தவக்கோலம் மட்டும் இருந்தால் போதாது.
தவக் கோலமும் தவ ஒழுக்கம் உடையவர்களுக்கே பொருந்
தும் ; தவ ஒழுக்கம் இல்லாதவர்கள் அதை மேற்கொள்வது
வீண் :

உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு. (261)

தவமும் தவமுடையார்க்கு ஆகும் ; அவம்அதனை
அஃதிலார் மேற்கொள் வது. (262)

தவக்கோலம் கொண்டு துறவிகள் வாழ்வதைக் கண்டு, ''தவம் நமக்கு உரியது அன்று ; துறவிகளுக்கே அது இயலும்'' என்று இல்லறத்தார் விட்டுவிடுகின்றார்கள். அது தவறு. தவம் எல்லோருக்கும் பொதுவானது ; சிலர் குடும்ப வாழ்க்கையில் இருந்தே செய்ய முடியும் ; சிலர் குடும்ப வாழ்க்கையைத் துறந்தே செய்ய முடியும். உண்மை அவ்வாறு இருக்க, இல்லறத்தார் தவத்தை மறப்பதற்குக் காரணம் என்னவோ ? துறவிகளுக்கு உணவு முதலியவற்றை உதவுவதே நம் கடமை என்று தவத்தை அவர்களுக்கே உரிய தாக்கிவிட்டு மறந்தார்களோ ? இல்வாழ்க்கையில் பகைவரை அடக்கித் திருத்துவதற்கும் நண்பரை மதித்து உயர்த்துவதற்கும் ஆற்றல் வேண்டும் அன்றோ ? அந்த ஆற்றல் தவத்தால் கிடைக்கும். (தன் துன்பம் பொறுத்து, பிறஉயிர்க்குத் துன்பம் செய்யாமல் வாழ்வதால் தான் இல்வாழ்க்கைக்கு வேண்டிய இத்தகைய ஆற்றல்பிறக்கும்.) விரும்பியவற்றை விரும்பியவாறு பெறக் கூடிய தன்மை இருப்பதால், செய்வதற்கு உரிய தவத்தை இல் வாழ்க்கையிலும் முயல வேண்டும். இவ்வாறு தவம் செய்கின் றவர்களே தம் கடமையைச் செய்கின்றவர்கள் ; மற்றவர்கள் ஆசையாகிய வலையில் அகப்பட்டு வீணான செயல்செய்கின்ற வர்கள் ; (வாழ்க்கைக்கு) வேண்டாதவற்றை எல்லாம் செய்து வீணில் அலைகின்றவர்கள் :

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம் ? (263)



ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும் (264)

வேண்டிய வேண்டியாங்கு எய்தலான் செய்தவம்
ஈண்டும் முயலப் படும். (265)

தவம்செய்வார் தம்கருமம் செய்வார் ; மற்று அல்லார்
அவம் செய்வார் ஆசையுட் பட்டு. (266)

தனக்கு வரும் துன்பத்தை எல்லாம் பொறுப்பது தவம் என்றால், துன்பம் மேன்மேலும் வருமே, என்ன செய்வது என்று கேட்கலாம். துன்பம் மேன்மேலும் வந்து வருத்த வருத்தத் தவம் சிறந்து விளங்கும் ; அது சுடச் சுட மாசு நீங்கி ஒளிவிடும் பொன் போன்றது ஆகும், இவ்வாறு தவம் செய்வதால் ஆற்றல் பெற்றவர்களுக்கு யமனை (அழிவைக்) கடந்து போகவும் முடியும். இத்தகைய ஆற்றல் இல்லாதவர்களே உலகத்தில் பலராக இருக்கின்றார்கள் ; காரணம் தவம் செய்வர் சிலராகவும், செய்யாதவர் பல ராகவும் இருப்பதே ஆகும் :

சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு (267)

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. (269)

இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்.
சிலர் ; பலர் நோலா தவர். (270)

## கூடா ஒழுக்கம்

தவஒழுக்கம் உடையவர்களுக்கே தவக்கோலம் பொருந்தும். தீய ஒழுக்கம் உடையவர்கள் தவக்கோலத்தைக் கொண்டு வாழ்வது குற்றம் ; மிகுதியாகத் தீங்கு செய்வதற்கு அந்தக் கோலத்தைப் பயன்படுத்துவது வஞ்சம் ஆகும்.

இத்தகைய வஞ்சம் பொருந்திய மனத்தானுடைய பொய்யொழுக்கம் புறத்தாக்குத் தெரியாவிட்டாலும், அவன் உடம்பில் கலந்துள்ள பூதங்கள் ஐந்தும் அகத்தே சிரிக்கும் தன் நெஞ்சம் அறிந்த குற்றத்திற்கு ஆளானால், வெளியே வானம் போல் உயர்ந்த தவக்கோலம் கொள்வதால் பயன் என்ன? புறத்தாரை ஏய்க்க முடிந்தாலும் அகத்தே உள்ள மனச்சான்றை அடக்க முடியாது. அதுவே தன்னைக் குற்றவாளி யாக்கி வருத்தும் :

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும் (271)

வானுயிர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
தானறி குற்றப் படின்? (272)

மனத்தை வழிப்படுத்தும் ஆற்றல் இல்லாமல் தவக்கோலம் கொள்வதால், பிறரை வஞ்சிக்கும் தன்மை மிகுதியாகும். தவக்கோலத்தைக் கண்டு ஒரு தீங்கும் இல்லை என்று நம்பி மகளிரும் மற்றவரும் ஐயமின்றி நெருங்கி அன்புடன் பழகுவார்கள். அந்த வாய்ப்பைத் தன் தீயொழுக்கத்திற்குப் பயன்படுத்திக் கொள்வது எளிதாகும். ஆகையால் மன வலிமை இல்லாதவன் ஆற்றல் மிக்க தவக்கோலத்தைக் கொண்டு நம்பியவர்களை வஞ்சிப்பது, பசு புலித்தோலைப் போர்த்துப் பயிரை மேய்வதைப் போன்றது. பசு தன்வடிவில் அணுகினால் பயிரை மேய்ந்துவிடும் என்று காவலர் கடிவார்கள் : புலித்தோல் போர்த்து வந்தால், புலிபயிரை என்ன செய்யும் என்று எண்ணியும் புலிக்கு அஞ்சியும் வாளா இருப்பார்கள். அதுபோல் தீய ஒழுக்கத்தான் தீயவர்களைப் போல் வந்தால் மகளிரும் மற்றவர்களும் அவனைக் கடிந்து தம் ஒழுக்கத்தைக் காத்துக் கொள்வார்கள் ; ஆனால் அவனே தலக்கோலம் கொண்டு வந்தால், 'இவரால் நம் வாழ்வுக்குக்



கேடு இல்லை என்று எண்ணியும் அந்தத் தவக்கோலத்திற்கு மதிப்புக் கொடுத்துப் போற்றியும் இறுதியில் ஏமாற்றம் அடைவார்கள். ஆகையால், தவக்கோலத்தில் மறைந்து வாழ்ந்து குற்றங்களைச் செய்வது பொல்லாதது. அது வேடன் புதரில் மறைந்து நின்று கண்ணி வீசிப் பறவைகளைப் பிடிப்பதைப் போன்றது ;

வலிஇல் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று. (273)

தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. (274)

"வல்லுருவம் கோடற்குப் பயன் அன்ன காரணங்களான் உலகத்தார் அயிராமையாயிற்று. இவ்வாறு தனக்குரிய இல்லாளையும் துறந்து வலியும் இன்றிப் பிறர் அயிராத வல்லுருவமும் கொண்டு நின்றவன் மனவழிப்படுதலாவது தன் மனம் ஓடிய வழியே ஓடி மறைந்து பிறர்க்குரிய மகளிரை விழைதலாம்" என்று பரிமேலழகர் விளக்குவதும் காணலாம்.

"யாம் பற்றுக்களைத் துறந்தேம்" என்று பிறர் மதிப்பைக் கருதிச் சொல்பவருடைய பொய்யொழுக்கம் அப்போது வெற்றி தருவதுபோல் இருந்தாலும், பிறகு என்ன செய்தோம் என்ன செய்தோம் என்று எண்ணி வருந்தும் படியான துன்பம் பலவும் தரும் :

பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்று
ஏதம் பலவும் தரும் : (275)

நெஞ்சில் துறவுநிலை இல்லாமல் வெளியே துறந்தவர்களைப்போல் நடித்து நம்பியவர்களை வஞ்சித்து வாழ்வோரைப் போல் கொடியவர்கள் உலகத்தில் இல்லை. அவர்கள் குன்றிமணி போன்றவர்கள். வெளித்தோற்றத்தில் குன்றிமணியின் செந்நிறம் போல் தூயவராய்த் தோன்று

வார்கள் ; ஆனால் நெஞ்சமோ குன்றிமணியின் கருநிறம் போல் இருண்டிருக்கும். மனத்தில் மாசு நீங்காமல் நிற்க, தவத்தால் மாட்சிபெற்றவர்களைப் போல் புறத்தே நீராடித் தூய்மை காட்டித் தம் குற்றங்களை மறைத்து வாழ்வோர் பலர் உலகத்தில் இருக்கின்றார்கள். ஆகையால் உண்மையான வர்களைக் கண்டறிய வேண்டுமானால், வெறுந் தோற்றத் தைக் கண்டு அறிய முடியாது. அம்பு நேரான வடிவம் உடையதானாலும் கொடுமை செய்வது ; யாழின் கோடு வளைந்த வடிவம் உடையதானாலும் இனிய பயன் தருவது ; அது போலவே மக்களையும் தோற்றத்தால் அறியாமல் அவரவர் செய்யும் செயல்களின் நன்மை தீமையால் கண்டறிய வேண்டும். ஒழுக்கம் உடையவர்கள் தவத்திற் கென்று தனிக்கோலம் தேடி தலைமயிரை மழித்தலும் சடையாக்கி நீட்டலும் வேண்டா. உலகம் பழிக்கும் குற்றத்தை அவர்கள் செய்யாமல் விட்டு வாழ்ந்தால் அதுவே போதும் :

நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல். (276)

புறம்குன்றி கண்டனைய ரேனும் அகம்குன்றி
மூக்கின் கரியார் உடைத்து. (277)

மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகும் மாந்தர் பலர், (278)

கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலால் கொளல். (279)

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின். (280)

### கள்ளாமை

எல்லோரும் வாழவேண்டும் என்னும் அருள் நோக்கம் உடையவன் பிறருடைய பொருளை வஞ்சித்துக்கொள்ளக்



கூடாது. ஆதனால் அருள் நோக்கம் கெடும் ; பிறருடைய இகழ்ச்சிக்கும் ஆளாக நேரும். பிறரால் இகழப்படாமல் வாழ விருப்புகின்றவன், பிறருடைய எந்தப் பொருளையும் வஞ்சனையால் கொள்ளக் கருதாதவாறு தன்நெஞ்சைக் காக்க வேண்டும். குற்றம் எதுவானாலும், செய்வது மட்டும் அன்று, எண்ணுவதும் கூடாது ; உள்ளத்தில் எண்ணுவது முதல் படி ; செயல் அதன் இரண்டாம் படி ; ஆகையால் செயலளவில் குற்றம் இல்லாமல் வாழ வேண்டுமானால் உள்ளத்தில் எண்ணுவதும் தீமை என்று உணர்ந்து வாழ வேண்டும். அதனால் பிறர் பொருளைக் களவு வகையால் வஞ்சித்துக்கொள்வோம் என்று உள்ளத்தில் எண்ணக் கூடாது :

எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு. (281)

உள்ளத்தால் உள்ளலும் தீதே ; பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல். (282)

இங்கே குறிப்பது இராக்காலத்திலும் பகலிலும் சோர்ந் திருக்கும்போது திருடும் திருடு மட்டும் அன்று ; பிறர் அறி யாமல் அவர்களை வஞ்சித்துப் பொருள்கொள்ளும் எல்லாச் செயலும் திருடே ஆகும. அவ்வாறு சேர்ப்பதால் பொருள் மிகுவது போல் தோன்றும் ; ஆனால் களவினால் சேரும் செல் வம் வளர்வது போல் தோன்றி அளவுகடந்து கெடும், ஆகை யால் களவினால் பொருள் சேர்ப்பதில் உள்ள மிகுந்த ஆசை, பயன் விளைக்கும்போது தீராத துன்பத்தைக் கொடுக்கும் :

களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும். (283)

களவின் கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும். (284)

பிறருடைய பொருளை விரும்பி அதை வஞ்சித்துக் கொள்வதற்காக அவர்களின் சோர்ந்த நிலையை எதிர் பார்ப்பவரிடத்தில், அருளை விரும்பி அன்புடையவராக வாழும் தன்மை இல்லை :

**அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்**
**பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல். (285)**

வாழ்க்கையில் தேவைகளை மிகுதிப்படுத்திக்கொண்டால் மேன்மேலும் பொருளை நாடி அலைய வேண்டி நேரும்; வருவாயின் அளவிற்குமேல் செலவு செய்து பழகியபின் எவ்வாறேனும் பொருளைப் பெற வேண்டும் என்ற வேட்கை வளரும்; இவ்வாறு வாழ்கின்றவர்கள் பிறர்பொருளைக் கவரவும் தயங்காத நிலைமை அடைந்துவிடுவார்கள். இவர்கள் அப்போது செய்யும் களவு. வறுமையின் காரணத்தால் திருடுகின்றவர்களின் செயலைவிடப் பொல்லாதது ஆகும். ஆகையால் திருவள்ளுவர், பொதுவாகக் களவின் தீமையைக் கூறி முடித்த பிறகு. அளவு கடந்து செலவு செய்து பழகிப் பிறர்பொருளை நாடி' அலையும் வாழ்க்கையைக் கடிந்து கூறத் தொடங்குகின்றார்.

சிக்கனமாக (அளவாக) வாழும் முறை அறம் என்று அறிஞரால் போற்றப்படும். வாழ்க்கையின் தேவைகளை அளவு படுத்திக் கொண்டு வாழும் ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கை அறநெறிக்குத் துணைசெய்யும். ஆடம்பரத்தால் தேவைகளைப் பெருக்குதல் அறத்திற்கு மாறானதே ஆகும். தேவைக்கு மிகுதியாகப் பொருள் சேர்த்து வைத்தலும், அளவுக்கு மீறிச் செலவு செய்தலும் திருட்டுக்கு நிகரான குற்றங்களே என்பது டால்ஸ்டாய், காந்தியடிகள் முதலான சான்றோர்களின் கருத்து. திருவள்ளுவரின் பொன்மொழி களில் இதைக் காணலாம்.



வாழ்க்கையை அளவுபடுத்திக்கொண்டு அந்த அளவோடு நின்று வாழ முடியாதவர்கள் களவில் முதிர்ந்த வேட்கை உடையவர்கள் ஆவார்கள். அளவு அறிந்து வாழும் ஆற்றலை விரும்பி மேற்கொண்டவர்களிடத்தில் களவு என்னும் குற்றம் காணப்படாது. அளவு அறிந்து வாழ்கின்ற வர்களின் நெஞ்சில் அறம் விளங்குவது போல், களவு உடைய வர்களின் நெஞ்சில் வஞ்சம் நிற்கும். களவு தவிர மற்ற வழிகளை நம்பித் தெளியாதவர்கள் அளவு அல்லாதவற்றைச் செய்து அவ்வாறே அழிவார்கள் :

**அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் களவின்கண்**
**கன்றிய காத லவர். (286)**

**களவென்னும் காரறி வாண்மை அளவென்னும்**
**ஆற்றல் புரிந்தார்கண் இல். (287)**

**அளவறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும்**
**களவறிந்தார் நெஞ்சில் கரவு. (288)**

**அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல**
**மற்றைய தேற்றா தவர். (289)**

## வாய்மை

அருளுடையவர்கள் எக்காரணம் பற்றியும் மற்றவர்களை வஞ்சிக்க மாட்டார்கள். உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று கூறுவதும் வஞ்சிப்பதே ஆகும். ஆகையால் உள்ளத்தில் உள்ள உண்மையையே வாயால் கூற வேண்டும்; அதுவே வாய்மை எனப்படும். உள்ளத்தில் உள்ளதற்கும் வாயால் கூறுவதற்கும் பொருந்தியவாறே செயலிலும் ஒழுக வேண்டும்; அதுவே மெய்ம்மை எனப்படும். உள்ளத்தில் உண்மை, வாயில் வாய்மை, செயலில் (மெய்யளவில்— மெய்யால் செய்யும் செயலளவில்) மெய்ம்மை என வாழும்

வாழ்வே ஒருவருக்கும் தீங்கு இல்லாமல் எல்லோரிடத்திலும் அருள்கொண்டு வாழும் வாழ்க்கை ஆகும். ஆகையால் வாய்மை சிறந்த அறமாகும்.

மற்றவர்களுக்கு யாதொரு தீமையும் செய்யாத சொற்களைச் சொல்வது வாய்மை எனப்படுவதாகும். பொய்ச் சொற்களால் நன்மை விளைவது அரிது ; ஒருகால் நன்மை விளைந்தாலும் அதனோடு குற்றமும் கலந்திருக்கும். குற்றம் தீர்ந்த நன்மையைப் பயக்குமானால், அத்தகைய பொய்யும் வாய்மை போன்றதாகும் :

> **வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
> **தீமை இல்லாத சொலல். (291)**

> **பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த**
> **நன்மை பயக்கும் எனின். (292)**

ஆகவே நன்மை தீமை விளைவை ஆராய்ந்து அறிந்தே சொற்களைச் சொல்ல வேண்டும் ; ஒவ்வொரு வேளை பொய் கூறுவதால் தீமை அற்ற நன்மை விளையுமானால் அத்தகைய பொய் கூறலாம். மருத்துவர் நோயாளிகளிடம் அவ்வாறு பொய் சொல்லித் தேற்றி அவர்களுடைய மனக் கவலையைப் போக்கி நன்மை செய்ய முயல்கின்றார்கள். பெற்றோரும் சில வேளைகளில் குழந்தைகளிடம் பொய் கூறி நன்மை செய்ய முயல்கின்றார்கள்.

பொய் என்று தன் நெஞ்சு அறிந்த ஒன்றைப் பிறர் அறிய மாட்டார்கள் என்று எண்ணியும் சொல்லக்கூடாது ; பொய் சொன்ன பிறகு, பிறர் அறியாமல் தப்பினாலும், தன் நெஞ்சே தன்னைச் சுடும். ஆகையால், பிறர்க்கு அஞ்சி வாய்மை கடைப்பிடிப்பதைவிட, தன் உள்ளத்தின் உணர்வுக்கு (மனச்சான்றுக்கு) இயைந்து வாய்மையைப் போற்றுவதே கடமை. ஒருவன் தன் உள்ளம் அறியப் பொய்



இல்லாமல் வாழ்வானானால், அவன் உலகத்தாரின் உள்ளத்தில் எல்லாம் வாய்மையாளனாய் விளங்குவான். மனத்தோடு பொருந்த வாய்மை சொல்லுவோன் தவமும் தானமும் ஒருங்கே செய்வோரைவிடச் சிறந்தவன் :

> **தன்நெஞ்சு அறிவது பொய்யற்க ; பொய்த்தபின்**
> **தன்நெஞ்சே தன்னைச் சுடும். (293)**

> **உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்**
> **உள்ளத்துள் எல்லாம் உளன் (294)**

> **மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு**
> **தானம்செய் வாரின் தலை. (295)**

புறத்தே தூய்மை வேண்டுமானால், அது நீரால் ஏற்படும். அகம் தூய்மை பெறவேண்டுமானால், அது வாய்மையால் உண்டாகும். புறத்தில் ஒளி தருவதற்கு அமைந்த விளக்குகள் எல்லாம் சிறந்த விளக்குகள் அல்ல ; சான்றோர் வாழ்க்கையில் ஒப்பற்ற விளக்காக விளங்குவது பொய் யாமையாகிய விளக்கே ஆகும். ஏன் எனில், மற்ற விளக்குகள், புறத்தே உள்ள பொருளை மட்டும் காட்டும் ; பொய் யாமை என்னும் பண்பே அகத்தில் உள்ள மெய்ப்பொருளைக் காட்ட வல்லது :

> **புறந்தூய்மை நீரான் அமையும் ; அகந்தூய்மை**
> **வாய்மையான் காணப் படும். (298)**

> **எல்லா விளக்கும் விளக்கல்ல ; சான்றோர்க்குப்**
> **பொய்யா விளக்கே விளக்கு. (299)**

## வெகுளாமை

உள்ளத்தில் உள்ள வெறுப்பும் பகையுமே வெகுளியாய் வெளிப்படும். அது அருளுடைமைக்கு மாறானது. ஆகையால் அதற்கு இடம் இல்லாமல் காத்துக்கொள்ள வேண்டும்.

வலியார்மேல் சினம் பிறப்பதும் உண்டு ; ஆனால் அப்போது அது பலிக்காது ; வலியாரை ஒரு சிறிதும் துன்புறுத்தாது. மெலியார்மேல் சினம் பிறந்தால், அது அவர்களை வருத்த வல்லது. ஆகையால் சினம் பலிக்காத வலியாரிடத்தில் மட்டும் சினம் கொள்ளாமல் காத்துக் கொள்வது போதாது. அங்கே சினம் காப்பதும் காவாமையும் ஒன்றுதான். சினம் பலிக்குமிடத்தில் காத்துக் கொள்வோனே சினம் காப்பவன். இது அருளுடையவன் செயல். அருள் இல்லாமல் தன்னலம் உடையவனும் சினம் வராமல் காப்பதே கடமையாகும் ; ஏன் எனில், அவன் வலியார்மேல் சினம் கொண்டால், அவர்கள் அவனுக்கு உடனே தீமை செய்து அடக்க முற்படுவார்கள். மெலியார்மேல் சினம் கொண்டாலும் நாளடைவில் அவனைப் பலரும் பகைத்துத் தீமை செய்வார்கள். ஆகையால் பலிக்காத இடத்திலும் சினம் தீமையானது ; பலிக்கும் இடத்திலும் அதைவிடத் தீமையானது இல்லை. எவ்வாறேனும் சினத்தால் தீமை பிறப்பதால், அதை வலியார் மெலியார் எவரிடத்திலும் கொள்ளாமல் மறக்க வேண்டும். நெஞ்சிலே வெகுளியான நினைவு இல்லாமல் மறந்தால்தான், தப்பித்தவறியும் சினம் பிறக்காமல் காத்துக்கொள்ள முடியும் :

**செல்லிடத்துக் காப்பான் சினம்காப்பான்; அல்லிடத்துக்**
**காக்கினென் ? காவாக்கால் என் ?** (301)

**செல்லா இடத்துச் சினம்தீது ; செல்லிடத்தும்**
**இல்அதனின் தீய பிற.** (302)

**மறத்தல் வெகுளியை யார்மாட்டும் ; தீய**
**பிறத்தல் அதனான் வரும்.** (303)

அருள் முதலிய காரணம் நோக்காமல் பொதுவாக வாழ்க்கையை ஆராய்ந்தாலும் சினம் தீமையாகவே



இருக்கின்றது. முகம் மலர்ந்து நகைத்தலையும் அகம் உவந்து மகிழ்தலையும் சினம் கொல்லவல்லது ; ஆகையால் சினத்தைவிடப் பெரிய பகை வேறு இல்லை. பகையிடமிருந்து ஒருவன் தன்னைத் தான் காத்துக்கொள்ள விரும்பினால் சினம் வராமல் மனத்தைக் காத்துக் கொள்ளவேண்டும் ; காக்கத் தவறினால் சினம் தன்னையே கொன்றுவிடும். சினம் என்பது ஒரு நெருப்பு ; அது சேர்ந்துள்ள இடத்தையே அழிக்கும் நெருப்பு ; ஆகவே சினம் யாரிடம் உள்ளதோ அவர்களையே அழித்துவிடும் ; அதோடு நில்லாமல், அவர்களுக்கு இனமாக உள்ளவர்களையும் வாழ்க்கைக்கு இனிய புணையாக உள்ளவர்களையும் வருத்திவிடும் :

**நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்**
**பகையும் உளவோ பிற ?** (304)

**தன்னைத்தான் காக்கின் சினம்காக்க ; காவாக்கால்**
**தன்னையே கொல்லும் சினம்.** (305)

**சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்**
**ஏமப் புணையைச் சுடும்.** (306)

சினத்தை எக்காரணத்திற்காகவும் பயன்படுத்தக் கூடாது. ஒருவன் தன் ஆற்றலை உணர்த்துவதற்காகச் சினத்தைப் பயன் படுத்தினாலும், அவன் கெடுவது உறுதி ; நிலத்தில் அறைந்தவனுக்குக் கை நிலத்தில் படுதல் தவறாது ; அதுபோல் சினம் கொண்டவனுக்குக் கெடுதி நேர்வது தவறாமல் நிகழும். பெருநெருப்பில் தோய்வது போன்ற துன்பத்தை ஒருவன் செய்தபோதிலும் அப்போதும் கூடுமானால் சினம் கொள்ளாமையே நல்லது :

**சினத்தைப் பொருள் என்று கொண்டவன் கேடு**
**நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.** (307)

இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. (308)

சினத்தில் அளவுகடந்து சென்றவர் செத்தவர்க்கு நிகர்; சினத்தைத் துறந்தவர் துறவிகளுக்கு நிகர் :

இறந்தார் இறந்தார் அனையர் ; சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை, (310)

**இன்னா செய்யாமை**

எல்லா உயிரும் இன்புற்றிருக்க நினைத்து எல்லா உயிரிடத்திலும் அன்பு செலுத்தும் அருளுடைமைக்கு அடிப்படையாக வேண்டியது, ஓர் உயிர்க்கும் துன்பம் செய்யாமல் வாழும் நோன்பாகும். மற்ற உயிர்க்குத் துன்பம் செய்யாமல் வாழ்வோருக்கே இந்தப் பரந்த உலகம் நன்றாக இடம் தருகின்றது. இந்த உண்மையை அஃறிணை உயிர்களின் வாழ்க்கையில் தெளிவாகக் காணலாம். புலி முதலியவை மற்ற உயிர்களைக் கொன்று தின்பதே வாழ்வாக உள்ளவை. ஆனால் பகலில் பரந்த ஒளியில் திறந்தவெளியில் திரிந்து வாழும் பேறு அவைகளுக்கு இல்லை ; இராக்காலத்தில் இருளுக்கு இடையே செறிந்த புதர் ஓரங்களில் பதுங்கிச் செல்லும் வாழ்வே உள்ளது. மான் முதலியவை ஓர் உயிர்க்கும் தீமை செய்யாத விலங்குகள். அவைகள் பரந்த உலகத்தில் வெட்டவெளியில் காற்றிலும் ஒளியிலும் திரிந்து மேய்ந்து வாழ்கின்றன. அவைகளும் அஞ்சி வாழ்வது உண்டு என்றாலும் அது குறைவே; ஒளியுள்ள பகல் காலம் முழுவதும் தலைகாட்டாமல் குகைகளிலும் கல்பிளவுகளிலும் ஒளிந்து வாழும் புலி முதலிய கொடிய விலங்குகள் முழுநேரமும் அஞ்சி அஞ்சித் தற்காப்புத் தேடிக்கொள்கின்றன. இந்த அச்சம் பாம்பு தேள் முதலிய உயிர்களின் வாழ்க்கையிலும் மிகுதி. அவைகளும் பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யும்



கொன்றும் தின்றும் வாழும் இயல்பு உடையவை. ஆகையால் ஒளியில் வெளிவராமல் இருண்ட இடங்களைத் தேடி ஒளிந்து அஞ்சி வாழ்கின்றன. இந்த அச்சமே உடலில் உள்ள குருதியை நஞ்சாக்குவது. அஞ்சி அஞ்சி வாழும் மக்களின் உடம்பிலும் குருதி நஞ்சாக மாறிக் கெடும். அச்சத்தால்தான் பாம்பு தேள் முதலியவற்றின் உடலில் நஞ்சு சேர்ந்து அமைகின்றது. புலி பாம்பு முதலியவை தாமாக உழைத்து உண்ணாமல், உழைத்து உண்டு வளர்ந்துள்ள மற்ற உயிர்களைக் கொன்று தின்பவை ; ஆகையால் வஞ்சித்து வாழும் கள்ளவாழ்க்கை அவற்றிற்கு இயல்பாக அமைந்துள்ளது. மான் முயல் எறும்பு முதலியவை கரவும் வஞ்சமும் அறியாமல் உழைத்து வாழ்வன. உறைவிடம் அமைத்துக்கொள்வதிலும் பாம்பு புலி முதலியவை மற்றவர்கள் உழைத்து அமைத்த இடங்களையோ குகை முதலிய இயற்கை அமைப்புகளையோ பயன் படுத்திக் கொள்கின்றன. காக்கை குருவி எறும்பு முதலியவற்றைப் போல் தம் முயற்சியால் கூடு வளை முதலியவற்றை அமைக்கவும் இவைகளுக்குத் தெரியாது. கரந்துறையும் வாழ்க்கை உடைய இந்தக் கொடிய உயிர்கள் வலியவற்றைக் கண்டவுடன் விரைந்து ஓடி ஒளிய முயல்கின்றன. மெலிந்த வற்றைக் கண்டதும் வஞ்சித்துக் கொல்கின்றன. இவை விரைந்து ஓடி ஒளியும்போது கண்டால், தற்காப்பு எண்ணமே எந்நேரமும் கொண்டு அஞ்சி அஞ்சி வாழ்கின்ற இவற்றின் இயல்பு புலனாகும்.

எந்நேரமும் தற்காப்பைப் பற்றியே எண்ணி அஞ்சி வாழும் வாழ்க்கையே நரகம் என்று சொல்லத்தக்க வாழ்க்கையாகும் ; 'ஆரிருள்' (121) என்றும், 'இருள் சேர்ந்த இன்னா உலகம்' (243) என்றும் கூறத்தக்கது அதுவே. போர் முதலிய பொல்லாத காலங்களில்தான் மக்கள் எந்நேரமும் தற்

காப்பைப் பற்றி எண்ணிக் கவலைப்பட வேண்டியுள்ளது. அதனால்தான் அப்போது வாழ்க்கை நரகத் துன்பமாக உள்ளது. ஆனால் இத்தகைய நரக வாழ்க்கையே எந்த நாளும் எந்த நேரமும் இயல்பாக உடையவை, தீமைசெய்யும் கொடிய உயிர்கள். தீமை அற்ற மற்ற உயிர்கள் தற்காப்பைப் பற்றி எண்ணி அஞ்சும் நேரம் குறைவு ; அச்சமும் கவலையும் இல்லாமல் பரந்த உலகத்தில் பறந்தும் திரிந்தும் வாழும் இன்ப வாழ்க்கையையே அவைகளிடத்தில் மிகுதியாகக் காணலாம். காற்றையும் ஒளியையும் அவைகள் உரிமை யோடு நுகர்ந்து விளையாடி இன்புறுகின்றன. புலி முதலியவை இனப்பெருக்கம் இல்லாமல் குன்றிக் குறைவதுபோல் இவைகள் குறையாமல் நன்கு பெருகிச் செழிக்கின்றன ; ஆணும் பெண்ணுமாய் வாழும் வாழ்க்கையிலும் தீமை அற்ற பறவைகளும் விலங்குகளும் காதல் போன்ற இனிய உறவு கொண்டு வாழ்கின்றன. ஆனால் தீமை மிக்க விலங்குகளும் மற்றவைகளும் வாழும் ஆண் பெண் வாழ்க்கை, உறவாகவே தோன்றவில்லை ; உறுமலும் சீற்றமும் சினமும் பகையுமாகவே அவை ஒன்றை ஒன்றுநாடி உறவு கொள்கின்றன. காதல் துறையிலேயே இவை இப்படி வாழ்ந்தால், இனமாகக் கூடி வாழும் துறையில் எவ்வாறு இருக்கும் ? கொடிய உயிர்கள் உறுமாமல் வதைக்காமல் பகைக்காமல் அமைதியாகக் கூடி வாழ்வது அரிது. தீமை அற்ற நல்ல உயிர்களின் வாழ்க்கையில் இனிமை அமைதி ஒழுங்கு முதலான எல்லாச் சிறப்புகளையும் காணலாம்.

மக்கள் வாழ்க்கையிலும் பிறர்க்கு இன்னா செய்து வாழ்வோர், வெஃகாமையும் கள்ளாமையும் போற்ற முடியாது. கொடிய விலங்குகளைப்போல் அவர்களும் தந்திரமும் திறமையும் பெற்று மற்றவர்களின் உழைப்பை எல்லாம் விழுங்கி வாழலாம். ஆனால் பரந்த உலகத்தில் தற்காப்பை மறந்து



கவலையற்று அமைதியாக வாழும் பேறு அவர்களுக்கும் இல்லை. உறுமிச்சீறும் உறவு உண்டே அல்லாமல் காதல் முதலிய சிறப்பும் அவர்களுக்கு இல்லை. இனப் பெருக்கமும் இல்லை. அவர்களும் நஞ்சு உடைய உயிர்களைப் போல் கரந்துறைதலும் அஞ்சி அடங்குதலும் உடையவர்களே. அவர்கள் வாழ்க்கை நரக வாழ்க்கை. எல்லோரும் வாழ வேண்டும் என்னும் அருளுணர்வு நெஞ்சில் உள்ளவர்களுக்கு இந்த நரகம் இல்லை :

> **அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த**
> **இன்னா உலகம் புகல். (243)**

ஆகையால் திருவள்ளுவர் பிற உயிர்க்கு இன்னா செய்யாத நோன்பு வேண்டும் என்று தனியாக ஓர் அதிகாரத்தில் வலியுறுத்துகின்றார்.

சிறப்பைத் தருகின்ற செல்வம் பெறுவதாக இருந்தாலும் பிறர்க்கு இன்னா செய்யாமல் வாழ்வதே மாசற்றவர்களின் கொள்கையாகும். பிறர் பகைகொண்டு தமக்குத் தீமை செய்தபோதிலும் அவர்களுக்கு அதற்கு ஈடாக இன்னா செய்யாதிருப்பது மாசற்றவர்களின் கொள்கையாகும். ஆகவே, தமக்கு நன்மை வரும் காரணமாக இருந்தாலும், தற்காப்புக் காரணமாக இருந்தாலும், இன்னா செய்யாமை வேண்டும் :

> **சிறப்பீனும் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா**
> **செய்யாமை மாசற்றார் கோள். (311)**

> **கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா**
> **செய்யாமை மாசற்றார் கோள். (312)**

தாம் ஒன்றும் செய்யாதிருக்க தமக்கு வேண்டுமென்றே துன்பம் செய்தவர்களை அடக்குவதற்காகத் திருப்பி இன்னா செய்யலாம் என்று எண்ணக் கூடும். ஆனால் அவ்வாறு

இன்னா செய்தபின், அச்செயலும் அவர்களுக்கு நீங்காத துன்பத்தை விளைக்கும். ஆகையால் அதுவும் கூடாது. துன்பம் செய்தவர்களைத் தண்டிக்க வேண்டும் என்று சிலர் எண்ணலாம். அவர்களை ஒறுக்கும் வழி, அவர்களே நாணும்படியாக, அவர்களுக்கு இனிய நன்மையைச் செய்து அவர்கள் செய்ததும் தாம் செய்ததும் ஆகிய இரண்டையும் மறந்துவிடுவதே ஆகும். (மறக்காமல் இருந்தால் நெஞ்சில் பகையும் காழ்ப்பும் வளர இடம் ஏற்படும்; ஆகையால், மறந்து விடுவது கடமையாகும்):

செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும் (313)

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல். (314)

இன்னா செய்யாமல் இருப்பதற்கு வழி மற்ற உயிரின் துன்பத்தைத் தன் துன்பம் போல் உணர்வதாகும். இந்த உணர்வு இல்லாவிட்டால், அறிவால் ஆகும் பயன் ஒன்றும் இல்லை. ஆகையால்தான் துன்பம் என்று உணர்ந்தவைகளை மற்றவனுக்கும் செய்யாமல் விட வேண்டும். எவ்வளவு சிறியது ஆனாலும் எக்காலத்திலும் யார்க்கும் மனத்தால் எண்ணும் எண்ணத்தாலும் தீமை விளைக்காமல் இருப்பதே அறங்களில் தலையானது:

அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதினோய்
தன் நோய்போல் போற்றாக் கடை? (315)

இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல். (316)

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை. (317)

[மனத்தானும் – மணக்குடவர் பாடம்]



பிறர் இன்னா செய்யும்போது தன் உயிர்க்குத் துன்பம் விளைவதை அறிந்தவன் மற்ற உயிர்க்கு இன்னா செய்வது ஏனோ? முற்பகலில் பிறர்க்கு இன்னா செய்தால் பிற்பகலில் தமக்குத் துன்பம் வரும்; அவ்வாறு வரும் துன்பங்கள் தாமாகவே வரும். இது அறத்தின் ஆணை. துன்பம் எல்லாம் செய்தவர்களையே சாரும்; ஆகையால் துன்பம் இல்லாமல் வாழ விரும்புவோர் ஒருவர்க்கும் துன்பம் செய்ய மாட்டார்கள்:

தன்னுயிர்க்கு இன்னாமை தான் அறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னா செயல். (318)

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும். (319)

நோய்எல்லாம் நோய் செய்தார் மேலவாம்; நோய்செய்யார்
நோய்இன்மை வேண்டு பவர். (320)

மற்ற உயிர்க்குத் துன்பம் செய்யும்போது அந்த உயிர் துன்பப்படுவதாகத் தோன்றும். செய்த துன்பம் அந்த உயிரின் உடலளவில் சிறிது நேரம் தாக்கி நீங்கும். ஆனால் உண்மையாகத் துன்பம் உறுவது செய்தவர்களின் மனமே. செய்தவர்களின் உடலிலே துன்பம் தாக்காவிட்டாலும், அவர்களுடைய மனம் அந்தத் துன்பத்தைப் பட்டு வருந்தும். மனச்சான்று பண்பட, பண்பட, இந்த உண்மை தெளிவாக விளங்கும். இதையே திருவள்ளுவர், 'துன்பமெல்லாம் செய்யப்பட்டவர்களுக்கு அல்ல; செய்தவர்களுக்கே உரிமையாய்ச் சேரும்', 'நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம்' என்று அறத்தின் சட்டமாக விளக்குகின்றார். பந்து எறிந்தவுடன், எங்கோ சென்று தாக்குவது போல் சென்று தாக்கி, உடனே எறிந்தவனிடமே திரும்பி வரக் காண்கின்றோம்

ஒருவன் பிறனுக்குச் செய்யும் துன்பமும் அத்தகையதே. அது
பிறனைத் தாக்குவதைப் புறத்தே காண்கின்றோம் ; ஆனால்
துன்பச் செயலைவிடத் துன்ப எண்ணமே பொல்லாதது.
துன்பச் செயலின் அடிப்படையான துன்ப எண்ணம் பந்து
போன்றது ; பந்தைவிட ஆற்றலுடன் எண்ணியவனிடமே
திரும்பி வந்து தாக்க வல்லது. இதுவே அறத்தின் ஆணை ;
இதை உணர நுட்பமான அறிவுமட்டும் போதாது ; பண்
பட்ட மனச்சான்றும் வேண்டும். அத்தகைய மனச்சான்றுடன்
வாழ்ந்து உணர்ந்த திருவள்ளுவர் இங்குக் கூறுவது மிக
நுட்பமாக உணரத்தக்க உண்மையாகும்.

## கொல்லாமை

ஓர் உயிர் துன்பம் உறுமாறு இன்னா செய்வது தீது ;
அதுபோலவே உயிர் உடம்பை விட்டு நீங்குமாறு கொலை
செய்வதும் தீது. அறமான செய்கை எது என்றால் ஒருயிரை
யும் கொல்லாமல் இருப்பதே ஆகும். கொல்வது பாவச்
செயல் எல்லாவற்றையும் தருவதாகும் :

> அறவினை யாதெனில் கொல்லாமை ; கோறல்
> பிறவினை எல்லாம் தரும். (321)

கொலையைக் கடிந்து கூறப்புகுந்த திருவள்ளுவர்
கொலையின் காரணம் பலவற்றையும் எண்ணினார். போர்
களால் நடைபெறும் கொலைகளை எண்ணினார் ;
கொள்ளை முதலியவைகளால் நடக்கும் கொலைகளை
எண்ணினார் ; தனிப்பட்ட வகையில் மக்களுக்குள் பகை
மூண்டு அதனால் நடக்கும் கொலைகளையும் எண்ணினார் ;
வயிற்றுப் பசியைத் தணிக்க உணவு தேடி மற்ற உயிர்களைக்
கொல்லும் கொலைகளையும் எண்ணினார் ; உயிர் உடனே
நீங்காவிட்டாலும் அதற்கு நிகரான துன்பங்களைச் செய்து



வருத்தும் கொலை போன்ற கொடுஞ் செயல்களையும்
எண்ணினார். எல்லாக் கொலைகளுக்கும் அடிப்படையில்
ஒரு பெருங் குறை இருப்பதாக உணர்ந்தார். அது என்ன
குறை ? உயிர்களைப் படைத்த செம்பொருள் அவற்றின்
வாழ்க்கைக்கு வேண்டிய உணவு முதலியவற்றையும் குறை
வறப் படைத்திருக்கின்றது. அவற்றை எல்லாருக்கும் பொது
வாகக் கருதித் தம்தம் பசிக்கு வேண்டியவாறு பகுத்து உண்டு
வாழ மக்களால் முடியும். அவ்வாறு செய்வார்களானால்
எல்லோரும் வாழலாம் ; மக்கள் தாம் வாழ்வதுடன் மற்ற
உயிர்களையும் வாழ்விக்கலாம். அதனாலேயே எல்லா அற
நூல்களும் பகுத்துண்டு வாழ்வதை எடுத்துக்கூறி வற்புறுத்து
கின்றன. ஆனால் வாழ்வில் தன்னலம் வேரூன்றி யிருப்பதால்,
மக்கள் அவ்வாறு பகுத்துண்ணும் அறத்தைப் போற்றத் தவறு
கின்றார்கள். ஒரு நாட்டில் வாழ்விற்கு உரிய பொருள்கள்
மிகுதியாகக் கிடைக்கின்றன ; மற்றொரு நாட்டில் குறை
வாகக் கிடைக்கின்றன. ஆகையால் ஒரு நாடு மகிழ
மற்றொரு நாடு வருந்துகின்றது. இல்லாத நாடு இருக்கு
மிடத்திலிருந்து பெற்று வாழ முயல்கின்றது. முயற்சிக்குத்
தடை ஏற்படுகின்றது. தடையைக் கடக்க வேண்டும் என்ற
நெருக்கடி உண்டாகின்றது. அதுவே போருக்குக் காரண
மாகிப் போர் நடக்கின்றது. நூறாயிரக் கணக்கான
கொலைகள் நடைபெறுகின்றன. இவ்வாறே கொள்ளை
முதலியவற்றில் நிகழும் கொலைகளுக்கும் பொருட் குறை
யாகிய வறுமை காரணமாக நிற்கின்றது. மக்களுக்குள்,
தனிப்பட்ட வகையில் பகை மூள்வதற்கும் கொலை நிகழ்
வதற்கும் பெரும்பாலும் வறுமைத் துன்பம் அடிப்படைக்
காரணமாக இருக்கின்றது. காய் கனி கிழங்கு கூலம்
முதலியவற்றைப் போதிய அளவு பெற முடியாத குறை

வாழ்க்கை சில வேளைகளில் போராட்டமானதாகத் தோன்றும் ; மற்றோர் உயிரைப் போக்கினால் அல்லாமல் தன் உயிர் வாழ்க்கைக்கு இடம் இல்லாதது போல் தோன்றும். அந்த நிலையிலும், தன் உயிர் நீங்குவதானாலும் தான் வேறொன்றன் இனிய உயிரை நீக்கும் கொலையைச் செய்யலாகாது. கொலையால் ஏற்படும் நல்ல பயனாகிய ஆக்கம் பெரிது என்றாலும் சான்றோர் அந்த ஆக்கத்தைப் பொருட்படுத்த மாட்டார்கள் ; அந்த ஆக்கம் தீநெறியால் வருவது ஆகையால், அதைக் கடைப்பட்டதாகக் கருதுவார்கள் :

**தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது**
**இன்னுயிர் நீக்கும் வினை. (327)**

**நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்**
**கொன்றாகும் ஆக்கம் கடை (328)**

**நிலையாமை**

ஓர் ஊருக்கு நடந்து செல்கின்றவன் செல்ல வேண்டிய வழியின் தன்மையை உள்ளவாறு அறிந்துகொண்டு பிறகு நடந்து செல்வானானால் கலக்கமும் தயக்கமும் கொள்ளாமல் அஞ்சாமல் நடப்பான் ; வழியில் உள்ள இடர்களை முன்னே அறிந்திருப்பதால் இடர்வந்தபோது வருந்தவும் மாட்டான். நல்ல வழி என்று நம்பி நடந்தால் முள்ளும் கல்லும் கண்டபோது வருந்துவான் ; முன்னமே கல்வழி என்றும் முள்வழி என்றும் அறிந்திருந்தால் அவற்றைக் கண்டபோது கவலைப்பட மாட்டான். வாழ்க்கையும் அப்படிப்பட்டதே. வாழும் உலகம் இத்தன்மையானது, உடல் இத்தன்மையானது, உயிர் இத்தன்மையானது. செல்வம் இத்தன்மையானது என்று முன்னமே அவற்றின் நிலையாமை அறிந்து



கொண்டால், பிரிவோ மாறுதலோ நேர்ந்தபோது மனம் கலங்கி வருந்திச் சோர்வடைய நேராது. ஆகையால் நிலையாமை உணர்தல் வாழக்கையைக் கண்டு அஞ்சி ஓடுவதற்காக அன்று ; வாழ்க்கையின் தன்மையை உள்ளவாறு அறிந்து அஞ்சாமல் நின்று சோர்வற்று வாழ்க்கையை நடத்திச் செல்வதற்கே ஆகும்.

நிலையில்லாத செல்வம் உடம்பு முதலியவற்றை நிலையானவை அழியாதவை என்று உணரும் புன்மையான அறிவோடிருத்தல் கடைப்பட்ட நிலையாகும் ;

**நில்லா தவற்றை நிலையின என்றுணரும்**
**புல்லறி வாண்மை கடை. (331)**

பெருஞ் செல்வம் வந்து சேர்தல், கூத்தாடும் இடத்தில் மெல்ல மெல்லக் கூட்டம் வந்து சேர்வதைப் போன்றது. செல்வம் நில்லாமல் அழிதல், அந்தக் கூட்டம் கூத்து முடிந்தவுடனே சொல்லாமல் ஒரு சேரக் கலைந்து போவதைப் போன்றது. அதனால் செல்வம் சேரும்போதே அதைப் பயன்படுத்த வேண்டும். செல்வம் நில்லாத இயல்பை உடையது என்று அறிந்து, அதைக் கொண்டு நிலையான அறச் செயல்களை அப்போதே செய்ய வேண்டும். சேர்த்து வைத்துக் காக்க எண்ணி இழந்துவிட்டு வருந்தக் கூடாது;

**கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம் ;**
**போக்கும் அதுவிளிந் தற்று. (332)**

**அற்கா இயல் பிற்றுச் செல்வம் ; அதுபெற்றால்**
**அற்குப ஆங்கே செயல். (333)**

நாள் என்பது ஒரு கால வரையறை போல் தோன்றுகின்றது. அதனால் ஒவ்வொரு நாளும் கழிவதைக் கண்டு பலரும் மகிழ்கின்றார்கள். ஆனால் உண்மையில் ஒவ்வொரு

நாள் கழியும்போது, உயிர் வாழும் வாழ்நாள் ஒவ்வொன் றாகக் குறைகின்றது. அதை உணர்ந்தால் உண்மை விளங் கும். நாள் என்பது ஒரு கால வரையறை போல் காட்டினா லும், அது உயிரை உடம்பிலிருந்து பிரித்து ஈர்ந்து செல்கின்ற வாளாகும் என்பது விளங்கும். உடம்பிலிருந்து உயிர் பிரியும் போது, பேச முடியாதபடி நாக்கை அடக்கி விக்குள் மேலெழுந்து வரும். அந்த நிலை வந்து சொல்லும் செயலும் ஒடுங்குவதற்கு முன் செய்யத்தக்க நல்வினை எல்லாம் விரைந்து செய்ய வேண்டும். அந்த இறுதிநாள் என்று வரும் என்று அளவுபடுத்திச் சொல்வதற்கில்லை. நேற்று நன்றாக இருந்த ஒருவன் இன்று இல்லாமல் இறந்தான் என்று சொல்லும் பெருமை உடையது இந்த உலகம் :

நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாளது உணர்வார்ப் பெறின். (334)

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். (335)

நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு. (336)

ஒரு வேளையாவது தம் உடம்பும் உயிரும் சேர்ந்து வாழும் வாழ்வைப் பற்றி ஆராய்ந்து அறிய மாட்டார்கள்: ஆனால் அவர்கள் எண்ணும் வீண் எண்ணங்களோ கோடியும் அல்ல ; மிகப் பல. அவ்வாறன்றி வாழ்நாள் உள்ளபோதே பயனுள்ளவற்றை எண்ணி அறத்தைப் போற்ற வேண்டும். உயிர் உடம்பில் வாழும் இயல்பை உணர்ந்தால் இந்த அற நினைவு மாறாது. தான் கட்டிய கூட்டினுள் இருக்கும் வரை யில் இருந்து, வேறிடம் செல்லும்போது கூட்டைத் தனியே விட்டு வெளியேறிப் பறவை பறந்து போகவில்லையா? அந்தக்



கூட்டுக்கும் பறவைக்கும் உள்ள அவ்வளவு உறவுதான் உடம்புக்கும் உயிர்க்கும் இடையே உண்டு. ஆகையால் இந்த உயிரும் காலம் வந்தபோது உடம்பைத் தனியே விட்டுப் பிரிந்து போய்விடும். அத்தகைய சாக்காடு உறங்கு வதைப் போன்றது. பிறப்பு, உறங்கி விழிப்பதைப் போன்றது. விழிப்பு உள்ளபோது கடமைகளைச் செய்து முடிப்பது போல், வாழ்வு உள்ளபோதே அறத்தைப் போற்றி உயர வேண்டும் :

ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல. (337)

குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு. (338)

உறங்குவது போலும் சாக்காடு ; உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. (339)

[அறிஞர் வ.உ. சிதம்பரம் பிள்ளை குடம்பை என்ப தற்குக் கூடு என்றே பொருள் கொண்டு நாலடியாரின் முப்பதாம் செய்யுளை மேற்கோள் காட்டியுள்ளார்].

### துறவு

அருளுணர்வு மிகுந்து தன்னலம் தேய்ந்து அழிந்தபின், வாழ்க்கையில் பற்று எல்லாம் அற்றுப் போகும். அப்போதும் இல்லறத்தில் இருந்து பற்றற்ற வாழ்க்கை வாழ்ந்து கடமையைச் செய்வோர் உண்டு. அவர்களுடைய நிலை அகத் துறவு என்று கூறப்படும். சிலர் அப்போது இல்லறத்தை விட்டுத் தன் வீடு தன் பொருள் என்பவை இல்லாமல் வாழ்வார்கள்; அது புறத்துறவு என்று கூறப்படும்.

ஒருவன் எதனிடம் பற்றுக் கொண்டு வாழ்கின்றானோ அதனால் துன்பம் அடைவான். எதிலிருந்து எதிலிருந்து பற்று நீங்கி வாழ்கின்றானோ, அதனால் அதனால் அவனுக்குத் துன்பம் இல்லை. ஆகையால் துன்பமற்ற வாழ்வை விரும்பி னால், எல்லாம் உள்ளபோதே பற்றற்ற துறவு வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும்; துறந்த பிறகு இந்த வாழ்க்கையில் கைகூடும் இன்பங்கள் பல உண்டு :

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன். (341)

வேண்டின் உண்டாகத் துறக்க ; துறந்தபின்
ஈண்டியற் பால பல. (342)

பற்றற்ற வாழ்க்கை வாழ வேண்டுமானால், ஐந்து புலன் களையும் தன் வயப்படுத்தி வெல்ல வேண்டும் ; புலன்கள் விரும்பிய எல்லா இன்பங்களையும் ஒருங்கே விடவேண்டும். பற்றற்றுத் தவம் செய்வோர்க்கு ஒரு பொருளும் தமக்கு என்று இல்லாமல் வாழ்தல் இயல்பாகும் ; ஏதேனும் ஒன்று தமக்கு என்று இருந்தாலும், அதுவே பற்றை வளர்த்து மறுபடியும் மயங்குவதற்குக் காரணமாகும். பிறவித் துன்பத்தைப் போக்க முனைந்தவர்களுக்கு வாழ்க்கைக் கருவியாகிய உடம்பும் மிகையாகும் ; அவ்வாறு இருக்கும் போது, வேறு தொடர்புகள் ஏன் ?

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை ; விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு. (343)

இயல்பாகும் நோன்பிற்கொன்று இன்மை ; உடைமை
மயலாகும் மற்றும் பெயர்ந்து. (344)

மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் ? பிறப்பறுக்க
லுற்றார்க்கு உடம்பும் மிகை. (345)



குழந்தை உணர்ச்சியோடு அழுகின்றது. சிரிக்கின்றது. அறிவு கொண்டு சிற்சில பொருள்களைப் பகுத்தறியத் தொடங்கு கின்றது. தந்தையின் தொடர்பு அடுத்தபடியே வாய்க்கின் றது. அவராலும் குழந்தையின் மூளையும் இதயமும் வளர் கின்றன. பெரும்பாலும் மூளையே மிகுதியாக வளர்கின்றது. இவ்வாறே குடும்பத்தில் உள்ள மற்றவர்களாலும் வளர்ச்சி ஏற்படுகின்றது. குழந்தை, விளையாட்டில்பொழுது போக்கும் சிறுவன் (அல்லது சிறுமி) ஆகின்றது. உடன் விளையாடும் சிறுவர்களால் வளர்ச்சி மிகுகின்றது. அவர்களாலும் உணர்வு வளர்ச்சியே சிறப்படைகின்றது. அடுத்தபடி பள்ளிக்கூடத்து ஆசிரியரால் ஏற்படும் வளர்ச்சி உள்ளது. அவரால் மிகுதி யாக வளர்வதுமூளையே, அடுத்தநிலையில் நண்பர்களின் தொடர்பாலும், சுற்றுப்புறத்தின் காரணத்தாலும் பலவகை மாறுதல் நேர்கின்றது. வாழ்வுக்கு உரிய இளமை வருகின்றது. குழந்தையாக இருந்து, சிறுவனாக (அல்லது சிறுமியாக) வளர்ந்த அவன் (அல்லது அவள்) உற்ற வயது அடைந்து விளங்கும் நிலைமை அது. அப்போது அவனுக்கு (அல்லது, அவளுக்கு) அறிவு மிகுதியா ? அல்லது உணர்வுமிகுதியா ? கூட்டல் கழித்தல் கணக்கை முதலிலிருந்து பார்த்துமுடிவுகாண வல்லவர் யார்? பெரும்பான்மை பற்றியே ஒரு முடிவுக்கு வர லாம். சிறுபான்மை விதிவிலக்காக அமைந்திருப்பதும் உண்டு.

பெரும்பாலும், ஆண், இளமை நிரம்பியபோது அறிவு சிறந்து உணர்வும் வளர்ந்து விளங்குகின்றான். பெண், இளமை நிரம்பியபோது உணர்வு சிறந்து அறிவும் வளர்ந்து விளங்கு கிறாள். வளர்ச்சிக்கு உரிய வித்துகள் விளையாட்டுப் பருவத் திலேயே காணப்படுகின்றன. அமைதியாக இருந்து பெண் சிற்றில் இழைக்கும் பருவத்தில் ஆரவாரமாக இயங்கி ஆண் சிற்றில் சிதைக்கும் நிலையில் இருக்கின்றான். இவ்வாறே சிறுமியின் மனம் பெரிதும் ஆக்க வேலையில் முனைந்திருக்க,

சிறுவன் மனமோ அழிவு வேலையில் ஊக்கம் காட்டுகின்றது. அதனால் பெண் அமைதி மிக்கவளாக வளர்கின்றாள் ; ஆண் ஆற்றல் மிக்கவனாக வளர்கின்றான். இது இயற்கையின் வியக்கத்தக்க முறையாக அமைந்திருக்கின்றது.

ஆனால், அமைதி மட்டும் பெற்றிருப்பதோ, ஆற்றல் மட்டும் பெற்றிருப்பதோ வாழ்க்கைக்குப் போதாது. அமைதிக்கு ஆற்றல்வேண்டும் ; ஆற்றலுக்கு அமைதி வேண்டும். இயற்கையே இதற்கும் வழிவகுத்திருக்கிறது. ஆணின் இளமை பெண்ணைக் கவரவும், பெண்ணின் இளமை ஆணைக் கவரவும் கவர்ச்சி அமைந்துள்ளது. உடலில் உள்ள இளமை அழகு மட்டும் அல்லாமல், உள்ளத்தில் உள்ள இளமைப் பண்பும் ஒருவரை ஒருவர் கவருமாறு அமைந்துள்ளது. இத்தகைய தூய கவர்ச்சியே காதல் எனப்படுவது. காதல் உறவினால் ஆற்றல் மிக்கவன் அமைதியைக் கற்கின்றான்; அமைதி மிக்கவள் ஆற்றலைக் கற்கின்றாள்.

காதலன்" அறிவும் ஆற்றலும் மிக்கவன் ; ஆயினும் காதலால் நெகிழ்ந்து உருகுகின்றான் என்பதைத் திருவள்ளுவர் அங்கங்கே புலப்படுத்திச் செல்கின்றார். காதலியைக்கண்டு மயங்கிக் கண்வலைப்பட்டபோது, அவன் என்ன கூறுகின்றான் ? "போர்க்களத்தில் வந்து பொருத பகைவரும் என்னைக் கண்டு அஞ்சினார்கள். போர்க்களத்திற்கு வராத பகைவரும் என் வலிமையைப் பற்றிக் கேட்டறிந்து அஞ்சினார்கள். அத்தகைய என் வலிமை இவள்முன் அழிந்ததே" என்கின்றான்.

> ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
> நண்ணாரும் உட்குமென் பீடு. (1088)

பகைவர் அஞ்சுவதற்குக் காரணமான இவனுடைய வன்மை எல்லாம் காதலியின் மென்மைக்குமுன் நிற்க முடியவில்லை.



காதலியைக் காணமுடியாமல் வருந்தும்போது ஆற்றாமை காரணமாக அவன் கூறும் சொற்களிலும் காதலின் ஆற்றலையும் அவன் உணர்வுமிகுதலையும் அறியலாம். "என் உடம்பும் உயிரும் இந்தத் துன்பத்தைப் பொறுக்க முடியவில்லை. மடலேறித் தம்மை அழித்துக் கொள்ள முயல்கின்றன. நாணம் அந்த முயற்சியைத் தடுக்கின்றது : ஆண்மையெல்லாம் இழந்து ஒருத்தியின் பொருட்டாகப் பலரறிய இவ்வாறு அழிவதா என்று தடுக்கின்றது. ஆனால் நாணத்தின் இந்தத் தடையையும் பொருட்படுத்தாமல் நீக்கி உடம்பும் உயிரும் மடலேற முனைகின்றன. நாணமும் நல்ல ஆண்மையும் முன்னெல்லாம் என்னிடம் சிறந்திருந்தது. இப்போது காதலர் ஏறும் மடலே எனக்குத் துணையாக இருக்கின்றது. இவ்வாறு மடலேற வேண்டும் என்று இப்போது மட்டும் அல்ல. நடுயாமத்திலும் இதையே எண்ணுகின்றேன். ஏன் எனில் அந்த யாமத்திலும் காதலியை நினைந்து என் கண்கள் உறங்காமலிருக்கின்றன". என்கின்றான்.

> நோனா உடம்பும் உயிரும் மடலேறும்
> நாணினை நீக்கி நிறுத்து (1132)

> நாணொடு நல்லாண்மை பண்டுடையேன்; இன்றுடையேன்
> காமுற்றார் ஏறும் மடல். (1133)

> மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற;
> படல்ஒல்லா பேதைக்கென் கண்- (1136)

காதலனுடைய ஆற்றாமையை அறிந்த தோழி அவனை நோக்கி, "ஐயா உன் காதலி பொறுத்திருக்கும் வல்லமை உடையவளாக இருக்கும்போது நீ இவ்வாறு வருந்தலாமா ? பெண்ணைவிட அறிவும் ஆற்றலும் மிகுந்த ஆண் இவ்வாறு வருந்துவதா ? என்று கேட்டாள். அவளை நோக்கி, "கடல் போல் எல்லையற்ற காதல்துன்பத்தால்

எண்ணம் அறிவின் திட்பத்தையும் புலப்படுத்துகின்றது. "நெஞ்சே ! காதலருடைய நெஞ்சம் அவரை விட்டு நம்மிடம் வருகின்றதா ! இல்லையே ! அவரிடமே இருந்து அவர்க்கே துணையாக இருக்கின்றதே ! நீ மட்டும் என் நெஞ்சமாய் என்னிடம் நில்லாதது ஏன் ?" என்கின்றாள். "ஒருவர்க்குத் துன்பம் வந்தபோது அந்தத் துன்பத்தைப் போக்குவதற்கு அவருடைய நெஞ்சமே துணையாகாவிட்டால், வேறு யார் துணையாக முடியும் ? ஒருவர்க்கு உரிமையான நெஞ்சமே உறவாக நின்று உதவாதபோது, அயலார் உறவாவது எங்கே ?" என்று மெய்யுணர்வு பெற்றவர்போல் எண்ணுகின்றாள் :

**அவர்நெஞ்சு அவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே**
**நீஎமக்கு ஆகாதது ? (1291)**
**துன்பத்திற் கியாரே துணையாவார் தாம்உடைய**
**நெஞ்சம் துணையல் வழி ? (1299)**
**தஞ்சம் தமர் அல்லர் ஏதிலார் தாம்உடைய**
**நெஞ்சம் தமரல் வழி. (1300)**

இவ்வாறு அறிவும் உணர்வும் வளர்ந்து தக்கவாறு அமைந்து நிரம்புவதற்குக் காதல்வாழ்க்கை காரணமாக இருக்கின்றது.

காதல் : தொண்டு

சிலர் வாழ்க்கை வேறுபட அமைந்திருப்பது உண்டு. அதாவது அவர்கள் இளமையிலேயே ஆற்றலும் அமைதியும் ஒருங்கே நிரம்பியவர்களாக விளங்குகின்றார்கள். அறிவும் உணர்வும் ஒருங்கே வளர்ந்தவர்களாகத் திகழ்கின்றார்கள். மூளையும் இதயமும் ஒத்த நிலையில் வளர்ந்து அமைகின்றார்கள். அத்தகையவர் மிக மிகச் சிலரே. குழந்தையாயிருந்த காலம் முதல் அவர்களுக்குப் பெற்றோரும் மற்றோரும்



ஊட்டிய அறிவும் உணர்வும் எவ்வாறோ கலந்து ஒன்றுபட்டு ஒரு நிகராகச் சிறப்படைகின்றன. எடுத்துக்காட்டாக, திருநாவுக்கரசரின் நல்வாழ்க்கையைக் குறிப்பிடலாம்.

இவர்கள் காதல் இல்லாமலே வாழ்க்கை பண்பட்டவர்கள் ; காதல் வாழ்க்கையால் என்ன பண்பாடு பெற வேண்டுமோ அதை முன்னமே அமையப் பெற்றவர்கள் : இத்தகையவர் இல்வாழ்க்கையில் இருந்தாலும் சிறப்படையலாம் ; இல்லாமலும் சிறப்படையலாம். ஆனால் இவர்களை மற்றவர்கள் பின்பற்ற முடியாது. மற்றவர்களுக்கு அறிவும் உணர்வும் பண்படாத குறையே அதற்குக் காரணமாகும்.

பண்பட்ட அறிவும் உணர்வும் வாய்ந்தவர்களும் காதல் வாழ்க்கை இல்லையானாலும் அதற்கு நிகரான மற்றொரு துறையில் ஈடுபடுவதனால்தான் செம்மையாக வாழமுடிகின்றது. காதலுக்கு நிகரான மற்றொரு துறை தொண்டு என்பதே ஆகும். நாட்டுத்தொண்டு, கலைத்தொண்டு, சமயத்தொண்டு என்று பல பெயர் கூறலாம். மற்றவர்களின் வாழ்க்கைக்குப் பயனளிக்கத்தக்க நெறியில் செய்வதே தொண்டு. ஆகையால், எல்லாம் பிறர் நன்மைக்கான பொது நலத் தொண்டே ஆகும்.

தொண்டு வாழ்க்கை, மக்களைப் பண்படுத்தும் வகையில் காதல் வாழ்க்கைக்கு நிகரானது. அதனால் திருநாவுக்கரசர் போன்றவர்கள் துறவறத்திலேயே முழுமை காண முடிகின்றது. காரணம் ஒன்றே: தொண்டு காதல் இரண்டிற்கும் அடிப்படையில் விளங்குவது தியாகம் என்னும் அரும் பண்பே. தியாகமில்லாதவர் தொண்டர் அல்லர் ; நாட்டின் பெயராலும் கலையின் பெயராலும் சமயத்தின் பெயராலும் அவர்கள் எது செய்யினும் அது வாணிகமாகவே விளங்கும். தியாகம் உடையவர்கள் தன்னலம் இழந்து நாடு

கலை சமயம் என்னும் காரணங்களால் செய்வது எதுவோ அதுவே தொண்டு ஆகும். அது போலவே, தியாகம் இல்லா தவர் கணவன் மனைவி எனக்கூடிநடத்தும் வாழ்க்கை காமமே அன்றிக் காதல் என்று கூறமுடியாது. கணவன் மனைவிக்காகவும் மனைவி கணவனுக்காவும் தன்னலம் இழந்து வாழும் வாழ்க்கையே காதல் என்பது. ஆகையால் காதலுக்கு உள்ளசிறப்பெல்லாம் தொண்டுக்கும் உள்ளது. காதல் இல்லாதவர்கள் இல் வாழ்க்கையால் நன்மை அடையாமல் கெடுவது போல், தொண்டு செய்யாதவர்களும் பிரமசரியம் துறவறம் இவற்றைக் கைக்கொண்டாலும் பயனடையாமல் கெடுகின்றார்கள். திருநாவுக்கரசரின் பெருவாழ்வில் உழவாரத்திற்கு இருந்த சிறப்பை நினைக்குந் தோறும் நெஞ்சம் உருகுகின்றது. கலைச்செல்வராய்ச் சமயத் தலைவராய் விளங்கிய அவர் தொண்டு நெறிக்குத் திரும்பியதும் ஏடுகளையும் பிறவற்றையும் கைவிட்டு உழவாரத்தை ஏந்திய சிறப்பை நன்கு உணர்ந்து போற்ற வேண்டும். காந்தியடிகளின் பிரமசரிய வாழ்வில் ராட்டினத் திற்கு இருந்த சிறப்பும் இத்தகையதே ஆகும்.

தன்னலம் இழந்து தொண்டு செய்விக்கும் ஆற்றல் காதலுக்கு இருப்பதால், காதலர் பலர் தொண்டராக வாழ நேர்கின்றது. எடுத்துக்காட்டாகக் கூறத் தக்க வாழ்க்கை புத்தர் பெருமான் வாழ்க்கை, காதல் வாழ்க்கையில் பண்பட்ட அவர், பிற உயிர்களின் துன்பத்தைக் கண்டு வாளா இருக்க முடியவில்லை; உயிர்களின் துன்பத்தைப் போக்க ஏதேனும் வழி காணவேண்டும் என்று போராடினார். பல நாள் எண்ணிஎண்ணித் துணிந்தார். காதலை வெறுக் காமல், மனைவியையும் மகவையும் வெறுக்காமல் துறக்கத் துணிந்தார்; பல ஆண்டுகள் ஓயாமல் பாடுபட்டார்; தவம் கிடந்தார்; உண்மை கண்டார்: உலகறியத் தொண்டாற்றினார்.



உலகநிலை இப்படியே இருக்காது. படிப்படியாக மாறி அமையும். இன்று கண்மூடிகள் தொகை மிகுந்துள்ளது; அதனால் ஒளிகாட்டு வார் பலர் தொண்டு செய்யவேண்டிய தாக உள்ளது. இன்றுவயிற்றுக்கவலையால் நலிபவர் தொகை மிகுந்துள்ளது; அதனால் ஈகையும் ஒப்புரவும் உடையவர் பலர் தொண்டு செய்ய வேண்டியதாக உள்ளது. இன்று மெலிந்த மனமுடையவர்களாய்க் கொலை களவு கள் காமம் பொய் மேற்கொள்வோர் தொகை மிகுந்துள்ளது; அதனால் ஒழுக்கத்திற் சிறந்த பலர் தொண்டு செய்யவேண்டியதாக உள்ளது. இன்று அறிவற்ற பாமரர் தொகை மிகுதியாக உள்ளது; அதனால் அறிஞர் பலர் தொண்டு செய்ய வேண்டியதாக உள்ளது.

இன்று உள்ள உலகவாழ்க்கை மெய்யுணர்வு பெற்றவர் களையும் ஈரநெஞ்சு உடையவர்களையும் ஒழுக்கத்திற் சிறந்தவர்களையும் அறிவுமிக்கவர்களையும் தொண்டு செய்ய ஈர்க்கின்றது. சமயத்தொண்டு, ஈகை, அறத்தொண்டு, அறிவுத்தொண்டு என்ற பெயர்களால், அவர்களின் வாழ் நாளில் பெரும்பகுதி மற்றவர்களுக்காகச் செலவு ஆகின்றது. இல்வாழ்க்கை தொடங்குவதற்கு முன்னமே இந்தத் தொண்டு அவர்களின் உள்ளத்தைக் கவர்ந்திருந்தால், அவர்கள் தூய பற்றற்ற தொண்டு வாழ்க்கை வாழ்ந்து உலகத்தைக் காக்க நேர்கின்றது. அவ்வாறு அல்லாமல், இல்வாழ்க்கை தொடங்கிய பிறகு தொண்டு செய்யும் உணர்ச்சி மிகுந்தால், ஒரு பக்கம் இல்வாழ்க்கை ஈர்க்க, மற்றொரு பக்கம் உலகத் தொண்டு ஈர்க்க, போராட்டத்திற்கு ஆளாவது உண்டு; வாழ்நாள் வரைக்கும் போராடிப் போராடி இரண்டு நிலை யிலும் இருந்து, இருவகைக் கடமைகளையும் இயன்ற அளவு செய்வதும் உண்டு. இல்வாழ்க்கையைத் துறந்து உலகத் தொண்டே குறிக்கோளாகப் புத்தர்பெருமான் போல் வெளி வருவதும் உண்டு; இல்வாழ்க்கையை மாற்றி உலகத்தொண்

டாக அமைத்துக் கொண்டு காந்தியடிகள்போல் கடமையைச் செய்வதும் உண்டு. இத்தகைய வாழ்க்கைகளை எல்லாம் ஆராயும்போது இல்வாழ்க்கை அவ்வளவு சிறப்பில்லாதது போல் தோன்றலாம்.

ஆனால், ''வண்மை இல்லை ஓர் வறுமை இன்மையால்'' என்று கனவு காணும் நல்ல நிலை அமைந்த நாட்டில் ஈகைக்கு இடம் ஏது? ஒப்புரவிற்கு இடம் ஏது?

பிறர்க்கு உதவிசெய்யும் வாய்ப்புவேண்டும், உதவிசெய்ய வேண்டும் என்று விரும்பும் மனத்தில் அடிப்படைக் குறை ஒன்று உள்ளது. இந்த உலகத்தில் குறைகளும் துன்பங்களும் இன்றுபோல் என்றும் இருந்தால்தானே, பிறர்க்கு உதவி செய்யும் வாய்ப்பும் இருக்க முடியும்? ஆகவே, ஒரு சிலர் தொண்டர்களாக வாழ்வதற்காக, உலகம் குறையுடையதாக இருக்க வேண்டும் என்றும், மக்கள் வாழ்க்கையில் துன்பம் இருக்கவேண்டும் என்றும் மறைமுகமான கருத்துக் காணப்படவில்லையா? அவ்வாறு விரும்புவது அறமா? நான் வள்ளலாக விளங்கவேண்டும். அதற்காக மக்கள் பலர் வறுமையால் வாடவேண்டும் என்று எண்ணலாமா? நான் மருத்துவனாகச் சிறப்படைய வேண்டும், அதற்காக மக்களுக்கு நோய் மிக வேண்டும் என்று எண்ணலாமா? நான் ஒழுக்க விளக்காகப் புகழ்பெற வேண்டும், அதற்காக என்னைச் சுற்றி வாழும் மக்கள் ஒழுக்கம் கெட்டவர்களாக வாழ வேண்டும் என்று எண்ணலாமா? நான் பேரறிஞனாக விளங்க வேண்டும், அதற்காகப் பெரும்பாலோர் அறிவு குறைந்தவர்களாக இருக்க வேண்டும் என்று எண்ணலாமா? நான் மெய்யுணர்வு உடையவனாகச் சிறப்புற வேண்டும், அதற்காகப் பலர் கண்மூடிகளாக வாழ வேண்டும் என்று எண்ணலாமா? இவ்வாறு



எண்ணும் எண்ணங்களின் அடிப்படையில் நம்மை அறியாமல் ஒரு குறை இருக்கின்றது. அதனால்தான், உண்மை நெறியில் தலைப்பட்ட சான்றோர், உலகமே திருந்தி அமைய வேண்டும். பொருட்குறை முதலான எந்தக் குறையும் தலை காட்டாமல் எல்லோரும் இன்புற்று வாழும் நல்லுலகம் அமையவேண்டும் என்று விரும்பியிருக்கின்றார்கள்; அதுவரையில் தம்மால் இயன்ற தொண்டு செய்யவேண்டும் என்றே தொண்டில் ஈடுபட்டிருக்கின்றார்கள்.

இன்னொரு வகையாகக் கண்டால், எந்த நாட்டிலாவது எப்போதாவது வள்ளல் பலர் வாழ்ந்தனர் என்றால் அந்த நாட்டின் பொருளாதார அமைப்பின் குறைபாட்டை அது காட்டியது என்று கொள்ள வேண்டும். ஓர் ஊரில் மருத்துவர் மலிந்திருந்தால், அந்த ஊர் நல்வாழ்வு பெறாமல் நோயால் வாடும் சூழல் அமைந்த ஊர் என்று எண்ணி இரங்க வேண்டும். ஒரு நாட்டில் சீர்திருத்த இயக்கங்களும் தொண்டர்களும் பெருகிய நிலை இருந்தால், அந்த நாட்டு மக்கள் மூட நம்பிக்கை பலவற்றிற்கு ஆளாகி அல்லல்படுகின்றார்கள் என உணர்ந்து வருந்தவேண்டும்.

ஆகவே, தொண்டுகளில் தலையான தொண்டு, வறுமையும் பாவமும் அறியாமையும் மூடநம்பிக்கையும் நாடி உதவுவது அன்று; அவற்றிற்குக் காரணமான உலக அமைப்பை மாற்றுவதே ஆகும். வறுமை முதலியவற்றை ஈகை முதலியவற்றால் ஒழிக்க முனைந்தால், அந்தத் தொண்டு ஓரளவு பயன்படும்; ஒரு சிலர்க்கே பயன்படும்; உலக இருளை நீக்க ஒரு வீட்டில் அல்லது சில வீடுகளில் விளக்கு ஏற்றுவது போதுமா? இராக்காலத்தையே மாற்றிப் பொழுது விடியச் செய்து ஞாயிறு தோன்றிக் கதிர் பரப்ப வேண்டாவா? ஒரு சிலர் உயரவும் பலர் தாழவும் காரணமான அமைப்பு முறை

வினை மாற்றியமைக்கத் தொண்டு செய்வதே தலையான தொண்டு. மற்றத் தொண்டுகளும் தொண்டுகளே; ஆனால் இதுவே அடிப்படையான தொண்டு; நிலையான தொண்டு; உண்மைத் தொண்டு.

அந்த நல்லுலகம் அமைவதாக வைத்துக்கொண்டு அப்போது இல்வாழ்க்கையின் நிலைமை எவ்வாறு இருக்கும் என்று எண்ணிப் பார்ப்போம். காதலர் இருவர் கணவனும் மனைவியுமாக இல்லறம் மேற்கொண்டு அன்புவாழ்க்கை நடத்துவார்கள். நாடெங்கும் இப்படி இருவர் இருவராக இல்வாழ்க்கை நடத்துவோர் காணப்படுவார்கள். இவர்கள் பலர் சேர்ந்த அமைப்பே ஊராகவும், இப்படிப்பட்ட ஊர்கள் பல சேர்ந்த அமைப்பே நாடாகவும் விளங்கும். இவர்களுக்கு உறைவிடமும் உணவும் உடை முதலியனவும் பங்கிட்டு அளித்துக் காப்பாற்றும் முறைக்கே ஆட்சிமுறை என்று பெயர் இருக்கும். அந்த ஆட்சி முறையில் இவர்கள் எல்லோருக்குள் பொறுப்பும் பங்கும் இருக்கும். ஆகவே, மக்களின் இம் வாழ்க்கைக்குத் துணை செய்யும் நாட்டாட்சி நன்கு நடக்க வேண்டும் என்ற பொறுப்புணர்ச்சியே கல்வியின் முதல் நோக்கமாகவும் ஒழுக்கத்தின் முதல் படியாகவும் இருக்கும். அந்த நல்லுணர்ச்சியின்படி இவர்களில் ஒவ்வொருவரும் தம் தம்பங்குக்குரிய தொழிலைத் தவறாமல்செய்து முடிப்பார்கள்; அந்தத் தொழில் உடல்லுழைப்பாகவும் மூளையுழைப்பாகவும் இருக்கும்; எந்தக் கடமையானாலும் எத்தகைய தொழிலானாலும், உழைப்பை எல்லோருக்கும் பங்கிட்டளிக்கும் நல்ல முறை இருக்கும்; அதனால், பொறாமைக்கோ, போலியுயர்வுக்கோ, சோம்பலுக்கோ, பேராசைக்கோ இடமில்லாமல் உழைத்தல் கடமை, வாழ்தல் முறைமை என்ற பொது உணர்ச்சி நிலவும். அந்த நிலையில் காதலர்க்கு நாட்டிலும்



ஒரு தக்க இடம் இருக்கும்; வீட்டிலும் தக்க உரிமை இருக்கும். வீட்டில் வாழும் உரிமையை நினைந்து இன்புற்று, நாட்டுக்கடமையை ஊக்கத்துடன் செய்யும் வழக்கம் இயற்கையாகிவிடும்.

திருவள்ளுவர் கூறும் காமத்துப்பாலில் இத்தகைய நல்லுலகையும் அதில் வாழும் காதலரையும் காண்கின்றோம். அன்பை அடிப்படையாகக் கொண்ட உறவையே காதலரிடையே காண்கின்றோம். அன்பிற் சிறந்த காதலர் இருவரும் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரியாத வாழ்க்கைத் துணையாக அமைகின்றார்கள். ஒருவர் பிரிந்தால் மற்றொருவர்க்கு வாழ்க்கை இல்லை என்று உணரக் கூடிய அளவுக்கு உறவு வளர்கின்றது. ''உடம்புக்கும் உயிருக்கும் எவ்வளவுஉறவோ அவ்வளவு உறவு எனக்கும் என் காதலிக்கும்'' என்று காதலன் உணர்கின்றான். ஒரு கை விட்டுப்பிரிந்து நிற்பதாக எண்ணுவதே துன்பமாக இருக்கின்றது. இவ்வாறே மற்ற உறுப்புகளும் இன்றியமையாத பிணைப்பு உடையனவாக இருக்கின்றன. உடம்பு முழுதும் நீங்குவதோ வாழ்க்கையின் முடிவேதான். உடம்பு இல்லையானால் உயிர்க்கு வாழ்க்கை இல்லை. உயிர் இல்லையானால் உடம்புக்கு உணர்ச்சி இல்லை. காதலர் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரியும் பிரிவும் இப்படிப்பட்டதே. ''உயிர்க்கு வாழ்க்கை என்பது எத்தகையதோ அத்தகைய உறவு உடையவள் என் காதலி எனக்கு. அவள் பிரிவோ, உயிர்க்குச் சாக்காடு எப்படி இருக்குமோ அப்படித்தான் உள்ளது'' என்று காதலன் உணரும் உணர்வும் இதை விளக்குகின்றது :

உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு. (1122)

வாழ்தல் உயிரிக்கன்னள் ஆயிழை ; சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து. (1124)

## அன்பின் ஐந்திணை

உலகத்தில் நன்மை தீமைகளைப் பிரிக்க முடியாதது போல் காதலையும் காமத்தையும் பிரிப்பதும் அருமையே. நன்மையான செயலில் சிறு தீமையும் கலந்திருக்கிறது. தீமையில் சிறு நன்மையும் கலந்திருக்கிறது. அதுபோலவே, காமுகரானகணவன் மனைவி வாழ்க்கையிலும் சிறிதளவு காதல் காணலாம்; காதலர் வாழ்க்கையிலும் காமம் காணலாம்.

காமம் காதல் என்னும் சொற்களுக்குப் பழங்காலத்தில் ஒரே பொருள் இருந்துவந்தது. இன்று காமம் வேறு, காதல் வேறு என்று தெளிவாகிவிட்டது. காமம் தன்னலமானது. உடம்பே காரணமாக எழும் ஆசை. காதல் தன்னலம் அற்றது, உள்ளம் காரணமாக வளரும் அன்பு.

வாழ்க்கையைத் தொடங்கும் நிலையில் காமுகர் காதலர் என்று பிரித்தறிவது இயலாது. தொடக்கத்தில் ஒரே தன்மை காணப்படும். வளர்ச்சியிலேயே வேறுபாடு உண்டு. ஆண் பெண் உறவு என்பது தொடக்கத்தில் ஒரு செடியாய் முளைத்து எழுவது. அப்போதே அதனிடத்தில் இரண்டு கிளைகள் உண்டு. ஒரு கிளை காமம், உடல் பற்றிய கவர்ச்சி; மற்றொரு கிளை காதல்; உள்ளம் பற்றிய கவர்ச்சி. இந்த இரு கவடுகளும் எல்லோருடைய வாழ்க்கையிலும் உண்டு.

வளர வளர இந்த இரு கிளைகளுள் ஒன்று மட்டும் செழித்து ஓங்க, மற்றொன்று வளர்ச்சியின்றி மெலிந்து நின்று பட்டுப்போகும். நல்ல பண்புகள் நிறைந்த கணவனும் மனைவியுமாயின், காதல்கிளை செழித்து வளரும்; காமக்கிளை செழிக்காமல் போகும்; பண்பாடு இல்லாதவர்களாயின், காமக்கிளையே வளர்ந்தோங்கும்; காதல் பட்டுப்போகும்.

பண்பாடு இல்லாதவர்களின் வாழ்க்கையில் காதல் செழிக்காதகுறையால் அன்புவாழ்க்கைதன்னலமற்ற தியாக



வாழ்க்கை, ஒருவன் ஒருத்தி என்ற கற்புவாழ்க்கை இவற்றைக் காண முடியாது. அவர்கள் ஒருவரை ஒருவர் வெறுத்துப் பிரிவர்; பிரியாவிடினும் வெறுத்து வாழ்வர். வேறு ஆணிடத்திலோ பெண்ணிடத்திலோ உறவு கொள்ளவும் முயல்வர்; அந்த உறவில் இருவகை உண்டு. தம்மை விரும்பாதவரிடத்திலும் தாமே வலிந்து உறவு கொள்வது; அதனை ஒரு தலைக் காமம் அல்லது கைக்கிளை என்று சான்றோர் ஒதுக்கினர். மற்றொன்று: தம்மை ஒரு சிறிது விரும்புவாரிடத்தில் உறவு கொள்வது, அது ஒத்த அன்பு அன்று. ஆகையால், அதனைப் பொருந்தாக் காமம் அல்லது பெருந்திணை என்று சான்றோர் ஒதுக்கினர்.

திருவள்ளுவர் காமத்துப்பாலில் ஒருதலைக் காமத்தையோ பொருந்தாக் காமத்தையோ கூறவில்லை, 'அன்பின் ஐந்திணை' என்று சான்றோர் புகழ்ந்த ஒத்த அன்புடைய காதலரின் வாழ்க்கையையே கூறுகின்றார்.

அத்தகைய காதலரின் வாழ்க்கையில் பிரிவு நேரும்போதும் மீண்டும் மீண்டும் அந்த ஒத்த அன்பே எதிர்பார்க்கப்படுகின்றது. இதைப் பிரிவாற்றாமல் வருந்தும் காதலியின் சொற்களால் அறியலாம். "காதலர் பிரிந்தாலும் பிரியலாம்; பிரிவால் வருந்துவதாயினும் வருந்தலாம். ஆனால் தாம் காதலரை விரும்புவதுபோலவே, காதலரும் தம்மை விரும்ப வேண்டும். அத்தகைய ஒத்த அன்பு வாய்க்கப்பெற்றவர்கள், காதலர் பிரிந்தாலும் மீண்டுவருவர் என்று செருக்கொடு வாழும் பேறு உடையவர்கள். அவ்வாறு அல்லாமல், நாம் மட்டும் அவரைக் காதலிக்க; அவர் நம்மேல் காதல் கொள்ளாதபோது, பயன் என்ன? காதல் என்பது ஒரு சார்பாக இருப்பது துன்பமே, காவடி தாங்கும் இருபுறம் போல, இரு சார்பிலும் ஒத்த வேட்கை இருந்தால்தான்

காதலும் சிறப்புறும். தாம் விரும்பும் காதலரிடமிருந்து ஓர் இன்சொல்லாவது பெற்றால்தான் பிரிவாற்றாமல் வருந்தினாலும் உயிர் வாழ முடியும். ஓர் இன்சொல்லும் பெறாமல் உயிர் வாழ்கின்றவர்களைப் போல் கல்நெஞ்சம் உடையவர்கள் உலகத்தில் இல்லை. பிரிவால் வருந்தும் துணைவியரை நினைந்து உணர்ந்து காதலர் மீண்டு வந்து அன்பு செய்வாரானால், அவருடைய அன்புக்கு ஈடு உண்டோ? மழையையே நோக்கி வாழ்கின்றவர்களுக்கு மழை பெய்து காக்கும் அருளைத்தான் அதற்கு ஒப்பாகச் சொல்ல வேண்டும்'' என்று காதலி கூறும் மொழிகளில், காதல் வாழ்க்கையில் பிரிவின்போது ஒத்த அன்பே வேண்டும் என்று ஏங்கும் ஏக்கத்தைக் காணலாம் :

**வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே**
**வாழுநம் என்னும் செருக்கு. (1193)**

**நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ**
**தாம்காதல் கொள்ளாக் கடை. (1195)**

**ஒருதலையான் இன்னாது காமம்; காப் போல**
**இருதலை யானும் இனிது. (1196)**

**வீழ்வாரின் இன்சொல் பெறாஅது உலகத்து**
**வாழ்வாரின் வன்கணார் இல். (1198)**

**வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு**
**வீழ்வார் அளிக்கும் அளி. (1192)**

ஒத்த உருவும் திருவும் பருவமும் பண்பும் உடைய ஒருவனும் ஒருத்தியும் தம்முள் கண்டு மயங்குகின்றனர். அந்த மயங்கிய உள்ளநிலையைத் தலைவனே புலப்படுத்துகின்றான். ''அணங்கோ, மயிலோ, மங்கையோ'' என்று அவன் நெஞ்சம் மயங்குகின்றது :

**அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு. (1081)**



தலைவியின் அழகுமட்டும் அவனுடைய நெஞ்சைக் கவரவில்லை. உடலழகு மட்டும் கவரும் கவர்ச்சி உயர்ந்த கவர்ச்சி அன்று ; விலங்கு பறவைகளைவிட உயர்ந்து நிற்பவர்கள் மக்கள் ஆகையால், உடலின் கவர்ச்சியோடு நிற்பது இல்லை. உள்ளம் கவரும் கவர்ச்சியே சிறப்பைத் தருவது, முதலில் தலைவன் தலைவியின் உடல் வனப்பைக் கண்டு மயங்கினான் என்றாலும், அவளுடைய உளத்துக் கவர்ச்சியையே எதிர் பார்த்து நிற்கின்றான் ; அதையும் பெறுகின்றான். ''அந்த அழகி என் பார்வைக்கு எதிரே பார்க்கின்றாள் ; அதுதான் என் வருத்தத்தை வளர்க்கின்றது. அந்த வருத்தம் எவ்வளவு ? கூற்று என்று சொல்கின்றார்களே, அதன் செயல் போல் உள்ளது. பெண் தன்மையோடு அவளுடைய கண்கள் வருத்தும் வருத்தத்தில் அதை உணர்கின்றேன். அந்தக் கண்கள் கண்டவரின் உயிரை உண்ணும் தன்மை பெற்றிருக்கின்றன'' என்கின்றான் :

**நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு**
**தானைக்கொண் டன்னது உடைத்து. (1082)**

**பண்டறியேன் கூற்றென் பதனை இனி அறிந்தேன்**
**பெண்தகையான் பேரமர்க் கட்டு. (1083)**

**கண்டார் உயிர்உண்ணும் தோற்றத்தான் பெண்தகைப்**
**பேதைக்கு அமர்த்தன கண். (1084)**

பார்வையின் கொடுமையை மட்டும் தலைவன் கண்டு நிற்கவில்லை, அதன் அழகையும் காண்கின்றான். அதனோடு பெண்தன்மையை எடுத்துக்காட்டும் நாணம் என்னும் பண்பையும் காண்கின்றான் ; கண்ணழகும் நாணழகும் உள்ளபோது, வேறு அணிகலன்களை அணிவது ஏன் என்று வியந்து எண்ணுகின்றான் :

**பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு**
**அணிஎவனோ ஏதில தந்து ? (1089)**

இவ்வாறு தலைவன் காணும் கண்களில் வெறும் புறத் தோற்றத்தை மட்டும் கண்டு நிற்கவில்லை; கருமணியும் செவ்வரியும் காண்பதாகத் தலைவன் கூறவில்லை. அந்தப் பார்வையையே கண்டு வருந்துகின்றான்; வியக்கின்றான். கண்ணின் புறந்தோற்றத்தில் தலைவியின் உள்ளம் வெளிப் படுவதில்லை; கண் நோக்கும் நோக்கில்தான் அவளுடைய உள்ளம் வெளிப்படுகின்றது; அதனால்தான் கண்பார்வை யோடு பெண் தன்மையும் கலந்து வருத்துவதாகக் கூறுகின் றான்; கண்பார்வையோடு நாணமும் கலந்து அழகு விருந்து அளிப்பதாகக் கூறுகின்றான். இவ்வாறு அவன் தலைவியின் கண்களில் காண்பது அவளுடைய உள்ளத்தையே; உள்ளத்தின் கவர்ச்சியையே.

திருக்குறளில் இருமுறை வரும் அதிகாரப் பெயர் ஒன்று உள்ளது. அதுவே குறிப்பறிதல் என்பது. பொருட் பாலில் அங்கவியலிலும் குறிப்பறிதல் உண்டு. காமத்துப் பாலில் களவியலிலும் அது உண்டு. பொருட்பாலில் குறிப் பறிதலை விளக்கும் திருவள்ளுவர், நெஞ்சம் கடுத்ததைக் காட்டுவது முகமே என்றும், அந்த நெஞ்சக் குறிப்பை அளந்தறிவது கண்ணே என்றும் கூறுகின்றார் :

**அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்**
**கடுத்தது காட்டும் முகம். (706)**

**குறிப்பின் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்**
**என்ன பயத்தவோ கண் ? (705)**

அந்த அதிகாரத்தில் இறுதியாக இரண்டு குறளில், உள்ளத்தில் உள்ள பகையையும் நட்பையும் (வெறுப்பையும் விருப்பையும்) கண்ணே சொல்லிவிடும் என்றும், உள்ளக் கருத்தை நுட்பமாக அளந்தறியும் கருவியாகப் பயன்படுவது கண்ணே என்றும் தெளிவாக்குகின்றார் :



**பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் கண்ணின்**
**வகைமை உணர்வார்ப் பெறின். (709)**

**நுண்ணியம் என்பார் அளக்கும் கோல் காணுங்கால்**
**கண்ணல்லது இல்லை பிற. (710)**

பிறனுக்கு உரியவளைத் தான் பெற விரும்புவது கொடுமை; தன்னை விரும்பாத ஒருத்தியைத் தான் விரும்பு வது கயமை; தன்னைப்பற்றி அறியாத ஒருத்தியைத் தான் அறிந்து நாடுவது குற்றம்; தன்னைப் புறக்கணிக்கும் ஒருத்தி யைத் தான் நாடி நிற்பது பேதைமை; தன்னை வெறுத்து ஒதுக்கும் ஒருத்தியைத் தான் நினைந்து வருந்தி உடைவது ஆண்மைக்கு இழுக்கான கோழைத்தன்மை; இவற்றை நன்கு உணர்ந்தவன் தலைவன். ஆகையால் தொடக்கத்தில் 'அணங்கோ்மயிலோ மங்கையோ' என்னும் அளவில் உடல் கவர்ச்சியால் மயங்கினாலும், அதன் பிறகு தலைவியின் கண் களின் வாயிலாக உள்ளக் கவர்ச்சியும் பெற்ற பிறகே வருந் தத் தொடங்கினான்; அவளும் தன்னை விரும்புகின்றாள் என்று அறிந்த பிறகே தன் உள்ளத்தைப் பறி கொடுக் கின்றான். இதை அறிவிப்பதே காமத்துப்பாலில் அமைந்த குறிப்பறிதல் என்னும் பகுதி. தலைவி விரும்புவதை அறிந்தே தலைவனும் விரும்புகின்றான் என்னும் ஒத்த அன்பை இந்தப் பகுதி விளக்குகின்றது.

"இவளிடம் உள்ள நோக்கு இருவகை; ஒன்று எனக்குத் துன்பம் தருகின்றது; மற்றொன்று அதற்கு மருந்தாக நின்று அந்தத் துன்பத்தைத் தீர்க்கின்றது. யான் காணாத போது என்னைக் கண்டு களவு கொள்கின்ற சிறு நோக்கம் இவளிடம் உள்ளது. யான் காணாதபோது கண்டு, ஏதோ கருத்தை உட்கொண்டு நாணி இறைஞ்சுகின்றாள்; அது தான் எங்களிடையே அன்பை வளர்க்கும் நீராகின்றது. யான்

நோக்கும்போது தான் எதிர்நோக்காமல் நாணித் தலை குனிந்து நிலத்தை நோக்குகின்றாள். யான் நோக்காத போது என்னை நோக்கித் தனக்குள் மகிழ்கின்றாள்'' என்று அவளுடைய உள்ளக்குறிப்பைக் கண் வாயிலாக அளந்தறிகின்றான் :

இருநோக்கு இவள்உண்கண் உள்ளது; ஒருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. (1091)

கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று; பெரிது. (1092)

நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர். (1093)

யானோக்குங் காலை நிலன்நோக்கும்; நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும். (1094)

ஒருவனுக்கும் ஒரு பொருளுக்கும் உள்ள உறவு ஐந்து வகைப்படும் : அவன் அந்தப் பொருளைப் பெற்று மகிழ்தல்; அந்தப் பொருளைப் பிரிந்து வருந்துதல் ; இழந்த பொருளை மீண்டும் பெறமுடியும் என்று நம்பிக்கையோடு இருத்தல் ; மீண்டும் பெற முடியாது என்று நம்பிக்கை இழந்து துயருறுதல் ; அந்தப் பொருள் தன் கருத்திற்கு இசையத் தன்னிடம் அமையாதபோது அதனோடு உரிமை கொண்டு போராடுதல். இந்த ஐவகை உறவே காதலர் இருவர்க்கும் உள்ள காதலிலும் உண்டு. அவையாவன: காதலர் கூடியிருந்து மகிழ்தல் அல்லது குறிஞ்சி ; பிரிந்து வருந்துதல் அல்லது பாலை ; பிரிந்த பிறகு மீண்டும் கூடுவோம் என்று நம்பிக்கையோடு இருத்தல் அல்லது முல்லை ; பிரிந்த பிறகு மீண்டும் காணும் நம்பிக்கை இழந்து சோர்ந்து துயருறுதல் அல்லது நெய்தல் ; அன்பு மறந்து பிரிந்து மீண்டும் வந்த போது உரிமையோடு ஊடுதல் அல்லது மருதம்.



இந்த ஐவகை உறவையே இருவகையாக அடக்கிக் கூறலாம். கூடுதல் அல்லது குறிஞ்சி, பிரிதல் அல்லது பாலை என இரு பெரும் பிரிவாக்கலாம். இந்த இரண்டையுமே திருவள்ளுவர் விளக்கமாகக் கூறிச்செல்கின்றார். களவியலில் காதலர் கூடும் ஒழுக்கத்திற்கு உரிய பகுதிகளைக் கூறுகின்றார். கற்பியலில் காதலர் பிரிவாற்றாது வருந்தும் வருத்தத்தைக் கூறுகின்றார். நம்பிக்கையோடு இருத்தலாகிய முல்லையும், நம்பிக்கை இழந்த இரங்குதலாகிய நெய்தல் பற்றியும் திருவள்ளுவர் தனித்தனியே விளக்காமல். பாலையாகிய பிரிவிலேயே அடக்கிக் கூறுகின்றார். பிரிந்து மீண்டபோது ஊடுதலாகிய மருதம்பற்றி இறுதியில் கூறுகின்றார் ; அந்தப் பகுதியில் அவர் பெரிய சீர்த்திருத்தமும் செய்துள்ளார்.

காதலர் ஒருவரை ஒருவர் பெற விழைந்த வேட்கையில் உள்ள தூய்மையைக் காட்டுவதே களவியலில் திருவள்ளுவர் நோக்கம். காதலர் ஒருவர்க்கு ஒருவர் இன்றியமையாதவராய் அன்பால் பிணைப்புண்டிருத்தலை விளக்குவதே கற்பியலில் திருவள்ளுவர் நோக்கம். அதனால் களவியலில் குறிஞ்சித்திணை கூறுகின்றார் : கற்பியலில் பெரும்பாலும் பாலைத்திணை கூறுகின்றார் ; சிறுபான்மை மற்றத்திணையும் உடன் கூறுகின்றார்,

## மருதத்திணை

மருதத்திணையைச் சங்கநூல்களாகிய அகநானூறு முதலியவை கூறும் முறைவேறு ; திருவள்ளுவரின் நூல் கூறும் முறை வேறு. திருவள்ளுவர் கூறும் மருதத்தில் பரத்தை என ஒருத்தி இல்லை ; தலைவன் பரத்தையைநாடிச் செல்வதும் இல்லை. மற்ற நூல்களில் பரத்தையும் உண்டு ; பரத்தையோடு தலைவன் களிப்பதும் உண்டு. பொருள் காரணமாக மகளிர் சிலர் ஒழுக்கத்தை விற்பதும் கூடாது. ஒழுக்கமற்ற

அந்த மகளிரை ஆடவர் நாடுவதும் கூடாது என்று பொருட்பாலில் வன்மையாகக் கடிந்தவர் திருவள்ளுவர்; வரைவின் மகளிர் என்ற அதிகாரம் திருவள்ளுவரின் சீர்திருத்தத்தை விளக்குவது. அக்காலத்து நூல்களில் எல்லாம் இடம் பெற்று வந்த பரத்தையர்க்குத் திருக்குறளில் நல்ல இடம் இல்லை; வேண்டா என்று கடியப்படும் இடமே கிடைத்தது. ஆதலின், திருவள்ளுவர், மருதத்திணைக்கு முன்னோர் வகுத்தோதிய இலக்கணத்தையும் புறக்கணித்துப் பரத்தையர்க்குக் காமத்துப்பாலில் இடம் இல்லாமல் செய்தார்; நூலோர் மரபையே கடந்து புது வழி வகுத்தார்.

காமத்துப்பாலில் திருவள்ளுவர் கூறும் காதலரிடையே ஊடல் உள்ளது. காதலி ஊடுகின்றாள்; காதலன் தவறு செய்ததாகக் கற்பனை செய்துகொண்டு விளையாட்டாக ஊடுகின்றாள்.

காதலி காதலனை நோக்கி, ''எல்லாப் பெண்களும் கண்ணால் உன்னைக் கண்டு உன் அழகை நுகர்கின்றார்கள். ஆகையால் நீ கற்பு இல்லாதவன், உன்னை நான் நெருங்க மட்டேன்'' என்கின்றாள்:

**பெண்ணியலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்;**
**நண்ணேன் பரத்தநின் மார்பு. (1311)**

காதலன் ஒரு மாலையைச் சூடிச் சென்றான். அந்த மாலை வேற்று நிலத்துக் கோட்டுப் பூக்களால் ஆகியது. அதைக் காதலி கண்டதும் ஊடுகின்றாள்: ''உம் காதலி யாரோ ஒருத்திக்கு இந்த அழகைக் காட்ட வேண்டும் என்றுதான் சூடியிருக்கின்றீர்'' என்று ஊடுகின்றாள்.

**கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்**
**காட்டிய சூடினீர் என்று. (1313)**



காதலன் அன்பு மிகுதியால், ''காதலர் யாரையும்விட நாம் காதல் மிகுந்தவர்களாக இருக்கின்றோம்'' என்றான். ''நீர் பல மகளிரைக் காதலிக்கின்றீரோ? அவருள் என்னிடம் அன்பு மிகுதியோ? என்னைப் போன்ற காதலியர் பலர் உளரோ? அதனால்தான் யாரையும்விடக் காதல் மிகுதி என்றீரோ? அவர்கள் யார்? யாரைவிட? யாரைவிட?'' என்று கேட்டு ஊடுகின்றாள்:

**யாரினும் காதலம் என்றேனா; ஊடினாள்**
**யாரினும் யாரினும் என்று. (1314)**

''இந்தப் பிறப்பில் நாம் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிய மாட்டோம்'' என்றான் காதலன். ''அப்படியா? இந்த ஒரு பிறப்புத்தானா? மறுபிறப்பில் பிரியக் கருதிவிட்டீரோ?'' என்று ஊடிக்கொண்டே காதலி கண்ணீர் கலங்குகின்றாள்;

**இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்**
**கண்நிறை நீர்கொண் டனள். (1315)**

''பிரிந்து சென்றிருந்தபோது உன்னை அடிக்கடி நினைந்தேன்'' என்றான் காதலன். ''பிரிந்தவுடன் என்னை மறந்துவிட்டீரோ? மறந்ததால்தான் மீண்டும் நினைத்தீர். இவ்வாறு என்னை ஏன் மறந்துவிட்டீர்?'' என்று சொல்லிக் காதலி ஊடுகின்றாள்:

**உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றென்னைப்**
**புல்லாள் புலத்தக் கனள். (1316)**

ஊடல் நீடிக்கின்றது. காதலனுக்குத் தும்மல் வருகின்றது; தும்முகின்றான். வழக்கம்போல் காதலி ''நூறு ஆண்டு வாழ்க'' என்று தும்மல் கேட்டு வாழ்த்துகின்றாள். ஆனால் இவ்வாறு தன் வாயால் வாழ்த்துப்பெறவேண்டும் என்றும், ஊட்லை முடிக்க வேண்டும் என்றும் வேண்டுமென்றே

காதலன் செயற்கையாகத் தும்மியதாக எண்ணுகின்றாள். ஊடல் முடிவது போய் மிகுவதாயிற்று. அடுத்த நொடியில் அவளுடைய மனத்தின் வேறோர் எண்ணம் தோன்றியது. ''யாராவது நினைத்தால்தான் ஒருவர்க்குத் தும்மல் வரும் என்று சொல்வார்கள். இப்போது இவரை யார் நினைத்திருப்பார்கள் ? நினைக்கும் உரிமை உடையவள் நான் ஒருத்தி தான் என்று எண்ணியிருந்தேனே ! இன்னும் யாரோ ஒருத்தி இவருக்குக் காதலியாக இருக்க வேண்டும். அவள் நினைத்த தால்தான் இவருக்குத் தும்மல் வந்தது'' என்று எண்ணி, காதலனை நோக்கி, ''யார் நினைக்கத் தும்மல் வந்தது ?'' என்று கேட்டு ஊடுகின்றாள். இதை உணர்ந்த காதலன் அடுத்த தும்மலை வெளிப்படுத்தாமல் அடக்கிவிட முயல் கின்றான். அதை அறிந்த காதலி ''தெரிந்துவிட்டது, தெரிந்துவிட்டது. உம் காதலி நினைக்கின்றாள் என்பது எனக்குப் புலப்படாத படி மறைக்கின்றீர், அதனால்தான் தும்மலை அடக்குகின்றீர்'' என்று சொல்லி அழுகின்றாள் :

**ஊடி இருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை**
**நீடுவாழ் கென்பாக்கு அறிந்து. (1312)**

**வழுத்தினாள் தும்மினேன் ஆக அழித்தழுதாள்**
**யார்உள்ளித் தும்மினீர் என்று. (1317)**

**தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்**
**எம்மை மறைத்திரோ என்று. (1318)**

காதலனிடத்தில் தவறு கண்டுதான் இவ்வாறு காதலி ஊடுகின்றாளோ ? அவளே கூறுகின்றாள் : ''அவரிடத்தில் தவறு இல்லை. ஆயினும் அவர்மேன்மேலும் செய்கின்ற அன்பை விரும்பியே ஊடுகின்றேன், நிலமும் நீரும் போல் ஒன்றுபட்டகாதலர் வாழ்க்கையில் ஊடுவது தனி இன்பமாக



இருக்கின்றது. தேவருலகம் அத்தகைய இன்பம் தருமோ?'' என்கின்றான் :

**இல்லை தவறவர்க்கு ஆயினும் ஊடுதல்**
**வல்லது அவர் அளிக்கு மாறு. (1321)**

**புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு**
**நீரியைந் தன்னா ரகத்து. (1323)**

இந்த உடலுக்கு இயைந்து ஒழுகுகின்ற காதலனைக் கேட்போம். ''தவறு ஒன்றும் இல்லாதபோதும் ஊடலுக்கு ஆளாகிக் காதலியை நெருங்கமுடியமல் சிறிது அகன்று நிற்கும்போது, ஒரு தனிச் சிறப்புடைய இன்பம் உள்ளது'' என்கின்றான். ''அவன் இன்னும் ஊடுவாளாக; ஊடும் போது யான் அவளுடைய அன்பை வேண்டி இரப்பேனாக ; அவ்வாறு நீண்ட நேரம் இரக்குமாறு இராக்காலம் நீடிப்ப தாக'' என்கின்றான் :

**தவறிலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்றோள்**
**அகறலின் ஆங்கொன்று உடைத்து. (1325)**

**ஊடுக மன்னோ ஒளியிழை; யாம்இரப்ப**
**நீடுக மன்னோ இரா. (1329)**

தவறு கண்டு ஊடும் பகுதியும் திருவள்ளுவர் கூறுகின் றார். ஆனால் அது என்ன தவறு என்பதைக் கூறவில்லை. அது பரத்தையரிடம் காதலன் தங்கிவந்த காரணத்தால் நிகழ்ந்த ஊடல் என்று கூறுவதற்கு இடம் இல்லை. வெளி யுலக வாழ்க்கையில் பல கடமைகளை மேற்கொள்ளும் காதலன் காதலியை மறக்காவிட்டாலும் மறந்தது போல் வாழ நேரும் நாட்கள் சில உண்டு. அத்தகைய நாட்களில் அவனுடைய அன்பு மாறியதாக எண்ணிக்கொண்டு காதலி ஊடுகின்றாள்.

இத்தகைய ஊடலில் காதலியின் மன உறுதியைக் காண் கின்றோம். ஆனால் அந்த மன உறுதியும் ஓராளவாகவே இருக்கின்றது. அன்புக்கு மாறான வகையில் தவறு செய்த போதிலும் காதலனைக் காண வேண்டும் என்றே காதலியின் கண்கள் நாடுகின்றன :

**பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்**
**காணாது அமையல கண். (1283)**

காதலனுடைய தவற்றை நினைந்து ஊட வேண்டும் என்று சென்றாள். ஆனால் அவளுடைய நெஞ்சு அதை மறந்து கூடவேண்டும் என்று சென்றதாம். அவளை நேரில் காணாத போது தவறுகளே நினைவுக்கு வருகின்றனவாம். கண்டபோது அந்தத் தவறுகள் நினைவிலே நிற்பதில்லை யாம். காதலிக்கு ஓர் உவமையும் நினைவுக்கு வருகின்றது. மை தீட்டுமுன் அஞ்சனக்கோலின் தன்மை நன்றாகக் கண் ணுக்குத் தெரிகின்றது. ஆனால் மைத்தீட்டும் நேரத்தில் கண் அந்த அஞ்சனக் கோலைக் காண முடிவதில்லை. அது போல், காதலனைக் காணதபோது அவனுடைய தவறு கள் தெரிகின்றனவாம். கண்டபோது அவை தெரிவ தில்லையாம் :

**ஊடற்கண் சென்றேன்மன் தோழி; அதுமறந்து**
**கூடற்கண் சென்றதென் நெஞ்சு. (1284)**

**காணுங்கால் காணேன் தவறாய ; காணாக்கால்**
**காணேன் தவறல் லவை. (1286)**

**எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்**
**பழிகாணேன் கண்ட இடத்து. (1285)**

காதலி தன் நிலைமையை எண்ணுகின்றாள். வெள்ளத் தின் ஆற்றலை அறிந்தும் அதில் பாய்ந்து அதை எதிர்க்க முடியாமல் அதோடு செல்பவரைப்போல் காதலின் ஆற்றலை



அறிந்தும் ஊட முயன்று தோற்கின்றேனே'' என்று எண்ணுகின்றாள். காதலனை நோக்கி, ''கள்வ ! கள் இழிவும் தீமையும் விளைவிப்பது தெரிந்தும், குடிகாரர் மீண்டும் மீண்டும் கள்ளையே விரும்புவது போல், உன் தவறு அறிந் திருந்தும் மீண்டும் மீண்டும் உன்னையே விரும்புகின்றேன்'' என்கின்றாள் :

**உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்**
**பொய்த்தல் அறிந்தென் புலந்து. (1287)**

**இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்**
**கள்ளற்றே கள்வநின் மார்பு. (1288)**

அவள் ஊட எண்ணுவதையும் பிறகு அதை மறந்து கூட விரும்புவதையும் காதலன் கண்டு அவளுடைய அறிவுக்கும் உணர்வுக்கும் உள்ள போரட்டத்தை உணர் கின்றான். ''கண்ணளவில் ஊடினவளாய்த் தோன்றி, என்னைவிட வேட்கை மிகுந்து கூட விரும்பிக் கலங்கு கின்றாள்'' என்கின்றான் :

**கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்**
**என்னினும் தான் விதுப் புற்று. (1290)**

காதலி உறுதியோடு இருந்து ஊடுகின்ற நிலைமையும் உண்டு. அப்போதும் காதலர்உள்ளம் எல்லை கடவாமல் காத்து நலம் புரியும். ''உறுதியாக ஊடுகின்ற ஊடலிலேயே என் உள்ளத்தை நெக்குருகச் செய்ய வல்ல தன்மையும் இருக்கின்றது'' என்று காதலி கூறுகின்றாள் :

**புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்என்**
**உள்ளம் உடைக்கும் படை. (1324)**

காதலனும் அவளிடம் இத்தைகைய உறுதியையும் பிறகு நெஞ்ச நெகிழ்ச்சியையும் கண்டு வியப்படைகின்றான். காத லின்பம் மலரைவிட மென்மையானது என்றும் இந்த

உண்மையை உணர்ந்து பயனடைய வல்லார் சிலரே என்றும் கூறுகின்றான் :

மலரினும் மெல்லிது காமம் சிலர் அதன்
செவ்வி தலைப்படு வார். (1289)

திருவள்ளுவர் இவ்வாறு ஊடலைக் கூறியும், பரத்தையர் சேரி, பரத்தையர் வாழ்க்கை. தலைவன் புறத்தே செல்லுதல், புனல் விளையாட்டு, ஆடல்பாடல், களியாட்டம் விழா, மணம் முதலியவற்றைக் கூறாமல் விடுத்தது ஏன்? மருதத்திணை கூற வந்தவர், மரபாகக் கூறத்தக்கவைகளுள் பலவற்றைக் கூறாமல் விட்டது ஏன்? அதுதான் திருவள்ளுவரின் உயர்ந்த மனப்பான்மையைத் தெரிவிப்பது.

ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல். (139)

தன்னை மறந்தும் தீய சொல் வாயில் பிறக்காமல் காக்க வேண்டும் என்று ஒழுக்கக் கடமையை வற்புறுத்துகின்றவர் திருவள்ளுவர். வரைவின் மகளிரோடு உறவுகொள்வது தீது என்று கடிந்தவர், அவை விளக்கி எழுத மனங் கொள்வாரோ?

நன்மைதீமை இரண்டையும் ஆராயவேண்டும், ஆராய்ந்து நல்லவை கொண்டு தீயவை தள்ள வேண்டும் என்பது ஆராய்ச்சியாளர் கொள்கை. ஆனால் அறவோர் இதற்கு உடன்படுவதில்லை. நன்மை தீமை என்று பகுத்தறிவதே போதும்; நன்மையை மட்டும் போற்றிப் பாராட்டித் தீமையைத் திரும்பப்பேசாமல் விடவேண்டும் என்பதே அறவோரின் கொள்கை. தீமையைச்காண்பது, கேட்பது, ஆராய்வது இவற்றை அறிவுவளர்ச்சிக்காகவும் மேற்கொள்ளக் கூடாது என்று அவர் கடிவது வழக்கம். ஏன்? புலன்கள் கீழ்ப்



படியிலிருந்து படிப்படியாக முன்னேறி மேல் நிலைக்கு வருபவை ; விலங்குநிலையிலிருந்து மக்கள் நிலையை எட்டி உயர்பவை. ஆகையால், அவைகள் தீமையோடு பழகிய பழக்கம் உள்ளவை ; நன்மையை அடைய முயல்பவை, அதனால் தீமையை எளிதில் கற்றுக்கொள்வது போல் நன்மையைக் கற்பதில்லை. தீமையைக் கற்றபின் மறப்பது முடியாது. நன்மையைக் கற்றாலும் எளிதில் மறந்துவிடலாம். பரத்தையரின் நட்பு முதலியவற்றை ஆராய்ச்சி என்னும் காரணத்திற்காகக் கற்பதும் புலன்களைக் கெடுப்பதற்கே தூண்டுதலாகும். இந்த உண்மையை அறிந்தே, நாடகம் முதலிய கலைகளில் தீய காட்சிகளை நீக்கி அமைக்க வேண்டும் என்று சான்றோர் வற்புறுத்தி வருகின்றனர். ஆனால் நாடகம் முதலிய கலைகளில் தீமையை அறவே விலக்க முடியாது. இலக்கியம் என்னும் அருங்கலை ஒன்றுதான் தீமையை அடியோடு விலக்கி நன்மையை வற்புறுத்த வல்லது. அன்றியும், நாடகம் முதலிய கலைகளில் புலன்களுக்கு வேலை மிகுதி ; அறிவைவிட உணர்வுக்கு இடம் மிகுதி. ஆனால் இலக்கியக் கலையிலோ புலன்களுக்கு வேலை குறைவு ; அகக்கண்ணாகிய மனத்திற்கு வேலை மிகுதி ; உணர்வைப் போலவே அறிவுக்கும் இடம் உண்டு. அதனால் இலக்கியக்கலையைப் பொறுத்தவரையில் ஒழுக்கக் கேட்டிற்கு இடம் இல்லை. எழுதும் ஆசிரியரும் தூய்மையைக் காக்கின்றார் ; கற்கும் மாணவரும் தூய்மையைப் பெறுகின்றார்; திருவள்ளுவர் மருதத் திணையைக் காமத்துப் பாலில் அமைக்க முன்வந்த போது இந்த உண்மையை உணர்ந்து, தீமையை விளக்காமல் விலக்கி, நன்மையை மட்டும் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளார் ; பரத்தையர் உறவைக் கூறாமல் விட்டு, காதலியின் ஊடலால் விளங்கும் உரிமையை மட்டும் எடுத்துரைத்திருக்கின்றார்.

## இன்ப துன்பம்

பெற்ற தாயின் நோயைக் கண்டு ஒருவன் படும் துன்
பத்தைவிட, தன் மனைவியின் நோயைக் கண்டு அவன்படும்
துன்பம் மிகுதியாகும். தன் நண்பன் உற்ற இன்னலைக் கண்டு
உறும் துயரத்தைவிட, மனைவி உற்ற இன்னலைக் கண்டு
துயருறுவது பல மடங்கு மிகுதியாகும். உடன் பிறந்தார்க்கு
இடுக்கண் உற்றபோது மனம் உருகுவதைவிடப் பல மடங்கு
மிகுதியாக மனைவிக்கு இடுக்கண்உற்றபோது உருகுகின்றான்.
சுருங்கக் கூறினால், உலகத்தில் ஒருவன் மற்றவர்களுக்காக
விடும் கண்ணீர் குறைவு ; ஆனால் தன் துணைவிக்காக விடும்
கண்ணீரே மிகுதி. அதுபோலவே, ஒருத்தி தன் கணவனுக்
காக உருகி விடும் கண்ணீருக்கு நிகர் இல்லை. பெற்ற மக்க
ளுக்காக அவனும் அவளும் சொரியும் கண்ணீரும் அவற்
றிற்கு அடுத்த நிலையிலேயே வைத்து எண்ணப்படும். பெற்ற
மக்களிடத்தில் இவ்வளவு உருக்கம் இருப்பதற்குக் காரணம்
தாம் ஒருவர் மற்றொருவரிடத்தில் செலுத்திவந்த அன்பின்
விளைவே எனலாம் ; ஏன்எனில், பெற்ற மக்களிடத்தில் கண
வனும் மனைவியும் தம்மையே காண்கின்றார்கள் ; அவர்
களைத் தம் உடலின் பகுதிகளாகவும் தம் உயிரின் பகுதிகளா
கவும் உணர்கின்றார்கள். அத்தகைய உணர்வால் வளர்ந்த
அன்பும் மக்கள் வயது ஏறி வளர வளர ஒருவாறு குறை
கின்றது. ஆனால் காதல் வாழ்க்கையில் என்றும் குன்றாத
அன்பும் நெகிழ்ச்சியுமே காணப்படும்.

இத்தகைய சிறப்புக்குக் காரணம் என்ன? காதலர் உற
வில் தான் முழுமனமும் அன்புருவாய் நின்று உருகிப் பயில்
கின்றது. மனம் என்பது என்ன ? கண்டு கேட்டு உண்டு
உயிர்த்து உற்று அறியும் ஐம்புலன்களின் தலைமை நிலையம்
அன்றோ ? மற்றவர்களிடம் பழகும்போது ஐம்புலன்களும்



ஒருங்கே உணர்வது இல்லை. சிலரிடம் கண்ணும் சிலரிடம்
காதுமாகப் பயின்றபயிற்சியாகவே பெரும்பாலும் நிற்கின்றது.
பெற்ற மக்களிடத்தில் இந்தப் பயிற்சி மிகுதியாக உள்ளது.
அதனால் மற்றவர்களிடம் செலுத்தும் அன்பைவிட
மக்களிடத்தில் செலுத்தும் அன்பு மிகுதியாக உள்ளது.
ஆயினும் ஐம்புலன் உணர்வாய் மனம் முழுதும் ஒருங்கே
பாயும் அன்பு காதலரின் காதலில்தான் உள்ளது. காதல்
ஒன்றே முழுமனப் பயிற்சி நல்குவது. அதனால் காதலர் நெக்
குருகும் நெகிழ்ச்சிக்கு ஈடும் இல்லை ; எடுப்பும் இல்லை.

கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையாரிடம் கொண்ட
பேரன்பின் முதிர்ந்த நிலைமையைக் குறிக்க நேர்ந்தபோது
'காதல் கிழமை' என்றே குறிப்பிட்டான். கடவுளன்பர்களும்
இறைவனிடத்தில் கொண்ட பேரன்பைக் குறிக்க நேர்ந்த
போது ''காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி'' என்று விளக்கி
யுள்ளனர். மாணிக்கவாசகர், நம்மாழ்வார் முதலானவர்கள்
தம் பக்தியைப் புலப்படுத்த வேறு சொற்கள் இல்லையா
தலின்; காதலுலகத்துச் சொற்களையே பயன்படுத்தியுள்ள
னர். தாயுமானவர் முதலிய மெய்யுணர்வாளரும் தம் வேட்
கையைப் புலப்படுத்த உவமை நாடியபோது, ''காதல் மிகும்
அணியிழையார் என வாடுற்றேன்'' என்று காதலுலகத்
தையே உவமையாக்கிக் கூறியுள்ளனர்.

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்.
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை
தன்னை மறந்தாள்தன் நாமம் கெட்டாள்
தலைப்பட் டாள் நங்கை தலைவன் தாளே.

(திருநாவுக்கரசர்-தேவாரம்)

வாயும் திரைஉகளும் கானல் மடநாராய்
ஆயும் அமருலகும் துஞ்சினும்நீ;துஞ்சாயால்
நோயும் பயலைமையும் மீதூர எம்மேபோல்
நீயும் திருமாலால் நெஞ்சம்கோட் பட்டாயோ ?

(நம்மாழ்வார்-திருவாய்மொழி)

மண்ணுறங்கும் விண்ணுறங்கும் மற்றுளஎலாம் உறங்கும்
கண்ணுறங்கேன் எம்இறைவர் காதலால் பைங்கிளியே.

(தாயுமானவர்-பைங்கிளிக்கண்ணி)

இந்த அருள்மொழிகளை ஓதி உணர உணர, காதலுள்ளத்தின் தூய்மையும் அதைக் கொண்டு கடவுளன்பை அளந்தறியும் பெருமையும் இரண்டிற்கும் உள்ள ஒற்றுமையும் நன்கு புலப்படும்.

காதல் இவ்வாறு மற்றத் துறைகளுக்கும் எடுத்துக் காட்டாக இருக்கும் சிறப்புக்குக் காரணம், காதலர்வாழ்வில் உள்ள முழுமன உணர்வே என்று கண்டோம். காதலர் கூடும் போது உணர்வது முழுமன இன்பமாகும். காதலர் பிரியும் போது உணர்வது முழு மனத் துன்பமாகும். திருவள்ளுவர் களவியலில் முன்னதை விளக்கியுள்ளார். ''கண்டும் கேட்டும் உண்டும் முகர்ந்தும் உற்றும் நுகரும் ஐம்புலனும் காதலியிடத்து உள்ளன. அவளைப் பெறாமல் வாடிய என் உயிர் பிறகு பெற்று உறும்போதெல்லாம் தளிர்க்குமாறு செய்ய வல்லன அவளுடைய தோள்கள். அவை அமிழ்தால் ஆக்கப் பட்டன. அறிவு வளர வளரப் பழைய அறியாமை காணப் படுவதுபோல், காதலியுடன் மகிழ மகிழக் காதல் காணப்படுகின்றது. உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு எத்தன்மையானதோ, அத்தன்மையானது காதலிக்கும் எனக்கும் உள்ள நட்பு. அவளோடு வாழ்வது உயிர் உடம் பொடு கூடி வாழ்வதைப் போன்றது. அவளைப் பிரிவது